ஸ்ரீ:

ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ந ஸமேத

ஸ்ரீ ர கு ந ந் த ந ப ர ப் ர ஹ் ம ணே ந ம:

ஸ்ரீமத் வால்மீகிராமாயணவசனம்

# உத்தரகாண்டம்.

ஸ்ரீ மஹா மஹோபாத்யாய

ஸகலதந்த்ரபாராவாரபாரீண-ஸ்ரீ காஞ்சிமண்டல மண்டன

ஏடூரிம்மடி திருமலை - லக்ஷ்மீ குமார

ஸ்ரீக்ருஷ்ணதாதயார்யமஹாதேசிகன் திருவடி தூளியான

வி த் வா ன்

கொண்டங்கி - கந்தாடை - ஸ்ரீநிவாஸராகவாசாரியர்

வடமொழி வால்மீகிராமாயணத்திற் கிணங்கத்

தமிழில் மொழிபெயர்த்த இதனை

இராயவேலூர் - கன்னையநாயுடு அவர்களும்,

இராயவேலூர் - நா - இராமசாமிநாயுடு அவர்களும்,

சென்னை மவுண்டுரோடு வைஜயந்தி முத்திராக்ஷரசாலையில்

ப தி ப் பி த் த ன ர்.

கலி ௫௦௦௫ - சோபகிருது வரு கார்த்திகை மீ.

1903.

Registered Copy Right.



ஸ்ரீரகுநந்தனபரப்ரஹ்மணேநமஃ.

## உத்தர ஸ்ரீமத்ராமாயண ஸர்க்கங்களின்

# விஷயக்குறிப்பு.



**உத்தரகாண்ட ஸர்க்கங்களின் விஷயக்குறிப்பு**

**முற்றிற்று.**

# உத்தர ஸ்ரீமத் ராமாயண வசனத்திலுள்ள படங்களின் விவரம்.

NO.1. பட்டாபிஷேகம் கண்டருளிய ஸ்ரீராமனை பலமுனிவர்கள் காணவந்தது. 



పట్టాభిషేకము అయిన తరువాత శ్రీరాములవారిని అనేక మునులు వచ్చి చూచుట.

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீஸீதாலக்ஷ்மணபரதசத்துருக்னஸமேத ஸ்ரீரகுநந்தந பரப்பிரம்மணேநம:

# உத்தர ஸ்ரீமத்ராமாயணவசனம்.

பட்டாபிஷேகங் கண்டருளிய ஸ்ரீராமனைப் பலமுனிவர்கள் காணவந்து அவர் இராக்ஷஸ ஸம்ஹாரஞ்செய்த ஸாமர்த்தியத்தைக் கொண்டாடியதும், அவ்விராக்கதர் பெருமையையெடுத்துரைக்குமாறு ஸ்ரீராமன் அவர்களை வினவியதும்.

ஸ்ரீராமபிரான் இராவணாதி ஸகல ராக்ஷஸர்களையும் ஸம்ஹாரஞ்செய்து திருவயோத்தியிற் பட்டாபிஷேகங்கண்டருளிய வளவில், முனிவர்கள் அனைவரும் இளஞ்சிங்கமான * இலக்குமணனைக் கொண்டாடுதற்பொருட்டு ஸ்ரீராமசந்திரனது சபைக்கு வரலாயினர். அம்முனிவர்கள் யாவரெனில், கீழ்த்திசையிலுள்ளவர்களான கௌசிகர், யவக்கிரீதர், கார்க்கியர், காலவர், தோவதிதியின்குமாரர் கண்வர்;—தென்றிசையிலுள்ளவர்களான ஆத்ரேயர், நமுசி, பிரமுசி, அகஸ்தியர், அத்திரி, சுமுகர், விமுகர்;—மேலைத்திசையிலுள்ளவர்களான ந்ருகண்டு, கவஷி, தவுமியர், கௌஷீயர்;—வடதிசையிலுள்ள ஸப்தரிஷிகளான வஸிஷ்டர், காச்யபர், அத்திரி, விச்வாமித்திரர், கௌதமர், ஜமதக்னி, பரத்துவாஜர் ஆகிய பலருமாம். இவர்கள் அனைவரும் தம்சிஷ்யர்களுடனே ஸ்ரீராகவனைக் கண்டு கொண்டாடப்புறப்பட்டுவந்தனர். வேதங்களையும் வேதாந்தங்களையும் ஓதியுணர்ந்து, எல்லாக் கலைகளையும் கற்றுத்தேர்ந்து அக்கினிபோலச் சொலிக்கின்ற மஹாநுபாவர்களான இம்முனிவர்களெல்லோரும் ஸ்ரீராமபிரானது அரண்மனைவாயிலை யடைந்து, துவாரபாலகர் வழியாகத் தமது வரவை ரகுநந்தனனுக்கு முன்னதாயறிவிக்கவேண்டி ஆங்கு நின்றனர். அவர்களுள் அகஸ்தியமாமுனிவர் வாயில்காப்போனை நோக்கி, முனிவர்களாகிய யாங்கள் இங்கு வந்திருப்பதாக நீ ஸ்ரீராகவன் ஸன்னிதியில் தெரிவிக்க என உரைக்க, அதுகேட்டு நீதியும் இங்கிதமு முணர்ந்தவனும் நல்லொழுக்கமுள்ள நிபுணனுமான வாயிலோன் வெகு தீவிரத்துடன், முழுமதி போன்ற திருமுகமண்டலமுடையரான சக்கரவர்த்தித் திருமகன் ஸன்னிதி சென்று முனிவர்குழாம்புடைசூழ அகஸ்தியமுனிவர் வாயிலிலேவந்து நிற்கின்றனரென விண்ணப்பஞ்செய்தனன். இளஞ்சூரியனுக்கொப்பான சோதியுடையவர்களாகிய முனிபுங்கவர்கள் வந்திருப்பது கேட்டு தாசரதி உடனே அவர்களை யழைத்து வரும்படி நியமித்தருள, துவாரபாலகன் அங்ஙனமே சென்று சொன்னது கேட்டு அவர்களனைவரும் ஸ்ரீரகுவீரன் ஸன்னிதி சேர்ந்தனர்கள்.

முனிவர்குழாம் வருவதுகண்டு ஸ்ரீராமபத்திரன் ஆஸநத்தினின்றுமெழுந்து அஞ்சலிஹஸ்தராய் நல்வரவுகொண்டாடி, மிகுந்த ஆநந்தத்துடனே அர்க்கிய

* எவராலும் வெல்வதற்கரிய சூரனான இந்திரஜித்தை வென்றமைபற்றி, முனிவர்கள் இலக்குமணனை மேலாகக் கொண்டாடியது.

பாத்தியாதி உபசாரங்கள்செய்து அவர்களை யடிபணிந்து அபிவாதனம் பண்ணி, அவரவர்க்கேற்றபடி சுவர்ணமயமாகிய விசித்திரமான சிறந்த ஆஸநங்கள் அளித்தனர். தர்ப்பாஸநங்கள் கிருஷ்ணாஜிநங்கள் முதலியவற்றால் மேலே மூடப்பெற்ற மிகப்பரிசுத்தமான அவ்வாஸநங்களில் அவர்கள் வீற்றிருந்தனர்.

அப்பால் ஸ்ரீரகுநாதன் அவர்களைக் குசலம் வினவ, அம்முனிவர் உத்தர முரைக்கலாயினர்: "மஹாபாஹோ, ரகுநந்தன! தேவரீர் மஹாராஜாவாய் ஆட்சி செலுத்துகையில் உமது குடைநிழலிற்றங்கிய எமக்குக் குறையுமுண்டோ? யாங்கள் அனைவரும் குசலமே. தேவரீர் சத்துருஸம்ஹாரஞ்செய்து மீண்டு சுகமாயெழுந்தருளக் காணப்பெற்றதல்லவோ எமது பெரும்பாக்கியம்! எல்லாவுலகங்களையும் அச்சுறுத்திய இராவணன் தெய்வாதீனமாகத் தேவரீரால் வதையுண்டு மாண்டனன். ஆலோசிக்குமளவில், புத்திர பௌத்திராதிகளுடன் இராவணனைச் சங்கரிப்பது தேவரீருக்கு ஒரு பெரியகாரியமன்று. தேவரீர் கோதண்டங் கைக்கொண்டால், மூவுலகங்களையும் வெல்ல வல்லீரென்பதில் ஐயமுளதோ? ஆயினும், யாம் அவராற்பட்டபாட்டை நினைக்க, அந்த ராக்ஷஸராஜனைத் தேவரீர் வதைத்தது எங்களுக்கு ஒரு பெரிய வியப்பாகத் தோற்றுகின்றது. இராவணஸம்ஹாரஞ்செய்து ஜயசீலராகி, பிராட்டியுடனும் இளையபெருமாளுடனும் தேவரீர் எழுந்தருளக் காணப்பெற்றது எமது பாக்கியவிசேஷமே. இங்ஙனம் மாதாக்களுடனும் பிராதாக்களுடனும் ஒருசேர மறுபடி தேவரீரை யென்றுகாண்போமென யாங்கள் பேராவல் கொண்டிருந்தோம். பிரஹஸ்தன், விகடன், விரூபாக்ஷன், மஹோதரன், அகம்பநன் முதலான பல அரக்கர்கள் தேவரீர்கையி லடிபட்டு மாண்டனர்; பிரமாணத்தில் ஒப்புயர்வில்லாத மிகப் பெரியதேகம் படைத்த கும்பகர்ணனும் கொலையுண்டனன்; திரிசிரன், அதிகாயன், தேவாந்தகன், நராந்தகன் முதலாய மஹாவீரியவந்தர்களான இராக்கதர்களும் அதமாயினர்; மிகப் பயங்கரமான தோற்றமுடையவர்களான கும்பன், நிகும்பன் என்னும் கும்பகர்ணனது மக்களிருவரும் மரணமடைந்தனர்; பிரளயகால யமனுக்கொப்பாகிய யுத்தோன்மத்தன், மத்தன், யஞ்ஞகோபன், தூம்ராக்ஷன் என்னும் இராக்கதர்கள் அஸ்திரசஸ்திரவித்தைகளைக் கரைகண் டுணர்ந்தவர்களாயினும், கடும்போர்புரிந்து, தேவரீரது பாணங்களுக்கு இரையாகிப் பிராணனை யொழித்தனர்; தேவர்களாலும் வெல்வதற்கரியனான இராக்ஷஸராஜனுடனே யெதிர்த்து யுத்தஞ்செய்து தேவரீர் ஜயமடைந்தீர்; இராவணனென்றால் எளியனோ? அவன் எந்நாளும் அமரில் அணுவளவும் அபஜயமடைந்தவனல்லன். இவையாவும் ஒருபுறமிருக்க, காலாந்தகனுக்கொப்பான இந்திரஜித்தையெதிர்த்து வெற்றிகொண்டதே பெரு வியப்பாகத்தோற்றுகின்றது; அவன்விடுத்த அஸ்திரபந்தங்களினின்று விடுபட்டு ஜயம்பெற்றது பெரியபாக்கியம்; இந்திரஜித்தினது வதத்தைக்கேட்டு யாங்களனைவரும் மிகக் கொண்டாடலானோம்; பெரிய மாயாவியான அவன் யுத்தத்தில் எவராலும் வெல்வதற்கரியனும்; அத்தன்மையனான வீரன் வதையுண்ட வரலாற்றைக்

கேட்கையிலேதான் எமக்கு அதிகமான ஆச்சரியமுண்டாகின்றது. இவர்களையும், இவர்கள்போன்ற காமரூபிகளான பின்னும் பல இராக்கதர்களையும் கொலைபுரிந்து அனைவருக்கும் அபயமளித்து ரகுகுலதிலகரான தேவரீர் வெற்றிவீரராக விளங்குவது யாம்பெற்ற பெரும்பாக்கியமேயன்றி வேறல்ல" என்று கூறினர்.

மஹாப்பிரபாவசாலிகளான முனிபுங்கவர்கள் இவ்வாறு கூறியதுகேட்டுக் காகுஸ்தன் பேருவகைகொண்டு அஞ்சலிஹஸ்தராய் அவர்களை நோக்கி யுரைசெய்கின்றனர். "ஸ்வாமிகாள்! மஹா வீரியவந்தர்களான கும்பகர்ணனும் இராவணனுமிருக்க, அவர்களைவிட்டு நீவிர் இந்திரஜித்தைப் பிரசம்ஸிப்பது யாது காரணம்? மஹோதரன், பிரஹஸ்தன், விரூபாக்ஷன், மத்தன், உன்மத்தன், தேவாந்தகன், நராந்தகன் ஆகிய மஹாப்பிரபாவசாலிகளான இராக்கதர்களிருக்க, அவர்களைவிட்டு இராவணன்மகனை யேற்றமாகக் கூறுவது யாது பெருமைபற்றி? மஹா பராக்ரமசாலிகளான அதிகாயன், திரிசிரன், தூம்ராக்ஷன், முதலான ராக்ஷதர்கள் அநேகர் இல்லையோ? அவர்களை யொழித்து இந்திரஜித்தை யிங்ஙனம் கொண்டாடக் காரணமென்ன? அவனது பிரபாவ மெத்தன்மையது? வலி யெவ்வளவாயது? பராக்கிரமம் எப்படிப்பட்டது? இராவணனிலும் அவன் ஏற்றமுடையனானது எதனால்? அடியேன் அவற்றைக் கேட்கலாகுமோ? தேவரீர்களுக்கு அடியேன் விதிக்கின்றேனில்லை. அஃது இரஹஸியமன்றி அடியேன் கேட்கக் கூடியதேயாயின், செவிக்கொள்ள விரும்புகின்றேன். அவன் தேவேந்திரனையும் ஜயித்தனனன்றோ? அங்ஙனம் அவன் எவ்வாறு வரம் பெற்றனன்? அவன் அவ்வளவு பலிஷ்டனானதெதனால்? அவனது தந்தைக்கு அந்த வலி யில்லாமற்போனதேன்? தந்தையினும் மேம்பட்டவனாகி அவன் தேவேந்திரனையும் வெல்ல வல்லவனானது எங்ஙனம்? வரங்கள் பெற்றது எங்ஙனம்? இவை யாவும் அடியேனுக்கு விளங்க அருளிச்செய்ய வேண்டுகின்றேன்" என்று கூறினர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் முதல் ஸர்க்கம் முற்றிற்று.

---

## இரண்டாவது ஸர்க்கம்.

அகஸ்தியமுனிவர் இராக்ஷஸவம்ச வரலாறு கூறத்தொடங்கி, புலஸ்தியரது தவப்பெருமையையும், அவருக்கு விச்சிரவஸனென்னும் புதல்வன் பிறந்ததும் கூறியது.

---

ஸ்ரீராகவன் இவ்வாறு வினவியது கேட்டு அகஸ்தியமாமுனிவர் அவருக்கு உத்தரம் அருளிச் செய்யலாயினர்: "ஸ்வாமி, ரகுகுலதிலகரே! இந்திரஜித்து சத்துருக்களனைவரையும் வென்றமைக்கும், தான் எவராலும் வெல்லப் படாமைக்கும் காரணமாக அவன் பலமும் பராக்கிரமங்களும் பெற்ற வரலாறு கூறுகின்றேன்; கேட்டருள்க. அதற்குமுன்னர் இராவணனது குலம்,

பிறப்பு, அவன் பெற்ற வரங்கள் இவைகளை யுரைசெய்கின்றேன், திருச்செவி சார்த்துக :—

“பூர்வம் கிருதயுகத்தில் பிரமதேவருக்குப் புதல்வராகப் புலஸ்தியர் என்கிற பிரம்மரிஷி ஒருவர் உற்பவித்தனர். அவர் தம் பிதாவான பிரமதேவருக்கு ஒப்பாகிய மகிமைபெற்றவர்; தருமத்திலும் சீலத்திலும் அவருடைய குணங்கள் இத்தன்மையனவென எடுத்துரைக்கற்பாலனவல்ல; பிரமதேவரது புத்திரரென்பதினாலேயே அவை தாமே விளங்குமன்றோ? பிரமபுத்திரராதலின் அவர் தேவர்கள் அனைவரிலும் ஏற்றம் பெற்றவராயினார். மஹா புத்திசாலியான அவர் தமது நற்குண நற்செய்கைகளால் அனைவர்க்கும் விரும்பத்தக்கவராயினார். அவர் தவம்புரிய விருப்பமுற்று மேருமலைச் சாரலில் திருணபிந்து வென்னும் முனிவரது ஆச்சிரமத்தருகே குடிபுகுந்து ஐம்பொறிகளையுமடக்கி வேதமோதுதலே தொழிலாக்கொண்டு தவம்புரியலாயினார்.

அக்காலையில், தேவகன்னிகைகள், நாககன்னிகைகள், ராஜரிஷிகன்னிகைகள் ஆகிய பலர் அவ்வாச்சிரமத்தருகே சென்று அவரது தவத்திற்கு இடையூறு செய்யலாயினார்; தேவலோகத்து அப்ஸரஸ்திரீகளும் பலர் ஆங்கு விளையாடுதற்பொருட்டு வரலாயினார். அவ்விடம் எல்லாப் பருவங்களினும் மிக்க மநோஹரமாயும், அழகான வநங்கள் சூழ்ந்ததாயு மிருந்ததனால், பிரதிதினம் அப்பெண்கள் அவ்விடம்சென்று ஆடுவதும் பாடுவதும், வீணை முதலாய வாத்தியங்கள் வாசிப்பதுமா யம்முனிவரது தவத்திற்கு விக்கினம் விளைவிப்பவராயினார். அதுகண்டு புலஸ்தியமுனிவர் சினமூண்டு, ‘இவ்விடத்து யாவரேனும் இனி எனக்குக் கட்புலனாவார்களாயின், அவர்களுடனே கருவுற்றவராவார்கள்’ எனச் சபித்தனர். அதுகேட்ட அப்பெண்மணிகள் அனைவரும் பிரம்மசாபத்திற்குப் பயந்தவர்களாகிப் பிறகு அவ்விடம் செல்லாது ஒழிந்தனர்கள்.

அங்குள்ள திருணபிந்துவினது மகளோ, இச்சாபத்தைக் கேட்டிலள். அதனால் அம்மகள் அச்சமற்றவளாகிப் பிரதிதினம்போல மறுத்தும் அவ்வாச்சிரமம் சென்று விளையாடலாயினாள். அப்பொழுது ஆங்கு அவளது தோழிமார் ஒருவரும் காணப்படவில்லை; பிரமபுத்திரரான புலஸ்தியமுனிவர் தவநிஷ்டைபூண்டவராகி வேதமோதலாயினார். திருணபிந்துவின்மகள் அந்த வேதகோஷத்தைச் செவியுற்று அம்முனிவரையும் கண்ணுற்றனள். உடனே அவள் கருத்தரித்து, அஃது வெளியே விளங்கத் தேகம் வெளுத்தவளாயினாள். அது கண்டு அக்கன்னிகை இஃது என்னகுற்றமோ வென நடுங்கினவளாகி, அஃது இன்ன காரணமென விளங்காது, அப்பொழுதே தந்தையினது ஆச்சிரமஞ் சென்று நின்றனள். அம்முனிவர் மகளைநோக்கி அவளது மேனியிலுண்டாகிய வேறுபாட்டைக் கண்டு, குழந்தாய்! இப்பொழுது உனது நிலைமைக்குத் தகாதவாறு உன் உடம்பு தோற்றுவது யாது காரணம்? என வினவ, அக்கன்னிகை கைகூப்பிக்கொண்டு, தாத! என்னுருவம் எனிங்ஙனமாயதோ, யான் அறியேன்; ஆயின் ஒன்று; முன்பு ஒருநாள் யான் தனியே மஹாநுபாவரான புலஸ்தியமுனிவரது ஆச்சிரமத்திற்கு என் ஸகிகளைத் தேடிக்கொண்டு சென்றேன்; சென்றவளவில் ஆங்கு ஒருத்தியும் காணப்பட

வில்லை; என் மேனிமாத்திரமே இங்ஙனம் மாறுபட்டது; அதனால் பயந்து தேவரீரிடம் ஓடிவந்தேன்-என்று கூறினாள்.

அதனைச் செவியுற்றுத் தவப்பெருமைபெற்ற திருணபிந்துமுனிவர் உடனே யோகதிருஷ்டியாற் கண்டு அஃது அம்மகரிஷியினது சாபத்தினால் விளைந்த விபரீதமெனத் தேர்ந்து, அப்பொழுதே அம்மகளைப் புலஸ்தியமுனிவரது ஆச்சிரமத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அவரை நோக்கி, 'ஸ்வாமி, இம்மகள் தனக்கு நற்குணமே யணியாகக் கொண்டவள்; இவள் தானே தேவரீருக்குப் பணிவிடைசெய்ய விருப்பமுற்று வந்திருக்கின்றனள்; இந்திரியங்களை யடக்கித் தவம்புரிதலே தொழிலாகக்கொண்ட தேவரீருக்கு இவள் எப்பொழுதும் ஏற்றவண்ணம் உபசாரம்செய்ய வல்லவளாவாள், இதில் ஐயமின்று; ஆதலின் இவளை பிக்ஷையாகத் திருவுள்ளம்பற்ற வேண்டுகிறேன்' எனப் பிரார்த்தித்தனர்.

திருணபிந்துமுனிவர் சொன்ன தருமயுக்தமான வார்த்தையைக் கேட்டுப் புலஸ்தியமுனிவர் அங்ஙனமே யாகுகவென்று உடன்பட்டனர். பின்பு திருணபிந்து விதிமுறைப்படி தம்மகளை அவருக்குப் பாணிக்கிரஹணஞ் செய்துகொடுத்துத் தம் மாச்சிரமஞ் சேர்ந்தனர். அப்பெண்மணியும் தனது நற்குணங்களால் புலஸ்தியமுனிவர்க்குப் பிரீதியுண்டாகுமாறு செய்துகொண்டு அவரது ஆச்சிரமத்தே வஸித்திருந்தனள். அவளது சீலத்தினாலும் சரியைகளாலும் ஸந்தோஷமடைந்தவராகி அம்முனிவர் அவளை நோக்கி, 'ஓ சுந்தரி, உனது சற்குணங்களைக் கண்டு யான் ஸந்துஷ்டி யடைந்தவனாயினேன்; ஆதலின் இரண்டுகுலத்தையும் விளங்கச்செய்பவனாய் எனக்கு இணையானபெருமையுடையோனாகிய பௌலஸ்தியனென்னும் பெயர்படைத்த புத்திரனொருவன் பிறக்குமாறு யான் உனக்கு அநுக்கிரகஞ்செய்கின்றேன். யான் வேதாத்தியயனஞ்செய்தது கேட்டது காரணமாக உன் உதரத்திற்றோன்றியவனாதலின் அப்புதல்வனுக்கு விச்சிரவஸன் என்றுபெயர் பிரசித்தமாகக் கடவது' என்று கூறினார். அவரது தேவியும் அதனைக்கேட்டு மிகவும் மனமகிழ்ந்திருந்தனள். சீக்கிரமே அப்பெண்மணி மூவுலகங்களிலும் பேரும் புகழும் பெற்ற மஹா தருமிஷ்டனான விச்சிரவஸனென்னும் புதல்வனைப் பெற்றனள். இந்தவிச்சிரவஸனும் வேதமோதி ஸமதர்சியாய், விரதங்களிலும் ஆசாரங்களிலும் ஆஸ்தையுடையோனாகி, தந்தைபோலவே தவத்தில் நோக்கமுடையவனாயினன்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## மூன்றுவது ஸர்க்கம்.

விச்சிரவஸனுக்கு வைச்சிரவணனென்னும் புத்திரன் பிறந்ததும்,
அவன் தவப்பெருமையால் தனதிபதியானதும்.

---

புலஸ்தியரது புத்திரரான விச்சிரவஸமுனிவர் ஸத்தியமும் சீலமும் சாந்தியு முடையராகி, வேதாத்தியயனமே காரியமாகக் கொண்டு மிகப் பரிசுத்த

ராய், அற்பமான போகங்களில் ஆசையையொழித்துத் தருமாநுஷ்டாநபராராகி வெகு சீக்கிரமே தந்தை போலத் தவத்தில் நிலைபூண்டனர். அதுகண்டு பரத்து வாஜமுனிவர் தெய்வப் பெண்போன்ற வடிவழகுவாய்ந்த தம்மகளை அவருக் குக் கன்னிகாதானஞ்செய்தனர். விச்சிரவஸ்முனிவரும் பிரஜாவிருத்தி செய்ய வேண்டுமென்ற கருத்துடனே விதிமுறைப்படி அப்பெண்மணியைப் பாணிக் கிரஹணஞ்செய்து கொண்டு மிக்க மகிழ்ச்சியுடனே அவளுடன் கூடி வாழ்ந் தனர். அக்காலையில் அவர்க்கு அப்பெண்மணியினிடத்தில் மஹாபராக்கிரம சாலியான அற்புதனாகிய புத்திரனொருவன் உற்பவித்தனன். அவன் உத்தம குணங்கள் பலவும் அமைந்தவனாயிருப்பதுகண்டு அவனது * பிதாமஹரான புலஸ்தியமுனிவர் மிக்க மகிழ்ச்சிகொண்டவராகி, அவனது ஜநநகாலத்துக் கிரகஸ்திதியைச் சோதிடநூன்முறைப்படி நன்கு ஆய்ந்துணர்ந்து, இவன் பிற்காலத்துத் தனாதிபதியாகித் தனாத்தியக்ஷன் எனப் பெயர்பெறுவானெனத் தேர்ந்து, மிகுந்த ஸந்தோஷத்துடனே தேவரிஷிகளோடுகூடி யவனுக்குத் தற்காலம் வைச்சிரவணனென நாமகரணம் செய்தனர். அவன் எல்லாவற் றிலும் தந்தைக்கொப்பானவனா யிருந்தமைபற்றி விச்சிரவஸன் என்னும் தந்தையின் பெயரையே கொண்டு அங்ஙனம் நாமகரணம் செய்யப்பட்டது. அந்த வைச்சிரவணன் அத்தபோவனத்திலேயே, ஆஜ்யாவுதிபெய்த அக்கினி யென வளர்ந்து வந்தனன்.

பிறகு வைச்சிரவணன், தருமாநுஷ்டானஞ்செய்தலே கடைத்தேறு முபாயமாதலின் தருமமே புரிதல்வேண்டுமென உறுதிகொண்டு, உக்கிரமான நியமம் பூண்டவனாகி அவ்வனத்திலேயே ஆயிரம் ஆண்டு அருந்தவம் புரிந்த னன். ஆயிரமாண்டுகள் கழிந்தபின்னர் அதிகமான நியமமுடையோனாகி, சிலகாலம் நீரே ஆஹாரமாகவும் சிலகாலம் வாயுவே பக்ஷணமாகவுங்கொண்டு தவஞ்செய்து பின்னர் நிராஹாரமாகத் தவஞ்செய்யலாயினான். இங்ஙனம் இன்னும் ஆயிரமாண்டுகள் ஓராண்டுபோல எளிதிற் சென்றன.

வைச்சிரவணன் செய்யும் கொடியதவத்தைக் கண்ட பிரமதேவர் பிரீதி யடைந்தவராகி, இந்திரனை யுள்ளிட எல்லாத்தேவர்களுடனும் அவ்வாச்சிர மத்திற்கு வந்து வைச்சிரவணனை நோக்கி, 'வத்ஸ! நீ விரதம் பூண்டு இயற் றிய அருந்தவத்தினால் யான் மிக்க மகிழ்ச்சி கொண்டவனாயினேன்; உனக்கு மங்களமுண்டாகுக; நீ கோரிய வரத்தைவேண்டுக, நீ கேட்டவரந்தருவேன்' என்றனர். பிரமதேவர் வரமளிக்க வந்து நிற்பதுகண்ட வைச்சிரவணன், 'ஸ்வாமி, அடியேன் லோகபாலகர்களுள் ஒருவனாகித் தனரக்ஷகனாக வரம் வேண்டுகின்றேன்' என விண்ணப்பஞ்செய்ய, பிரமதேவர் அதுகேட்டுத் தேவர்களுடனே உவப்புற்ற மனமுடையராகி, 'வத்ஸ, அங்ஙனமேயாகுக; யான் இப்பொழுது நான்காவது திக்குப்பாலகன் ஒருவனைப் படைக்கவெண் ணினேன்; நீ திக்குப்பாலகர்களுடைய பதவியை வேண்டுகின்றமையால், இந்திரன், யமன், வருணன் ஆகிய மூவருடன் நீ நான்காவது திக்குப்பாலக

* பிதாமஹரென்பதற்குப் பிரம்மாவென்றும் பொருள் கூறலாம்.

னாகி, நிதிகளுக்கு ஈசனாகுக; இதோ புஷ்பகமென்கிற அற்புதமான விமானமொன்று இருக்கின்றது; இதனை நீ வாகனமாகப் பெற்றுத் தேவர்களுடைய ஸாம்மியத்தையடைக; உனக்கு மங்கள முண்டாகுக; உனக்கு இந்த இரண்டு வரங்கள் அளித்துக் கிருதகிருத்தியர்களாகி நாங்கள் அனைவரும் எம்மிடஞ் செல்லுகின்றோம்' என்று கூறி, பிரமதேவர் தேவதைகளுடனே தம்மிடஞ் சென்றனர்.

தேவர்களுடனே பிரமதேவர் விண்ணுலகஞ் சென்றபிறகு வைச்சிரவணன் மிகப்பரிசுத்தனாகி அவ்வனத்தில் தந்தையினிடஞ்சென்று கைகூப்பிக் கொண்டு, 'ஸ்வாமி! அடியேன் அருந்தவம் புரிந்து பிரமதேவரிடம் இஷ்டமானவரம் பெற்றேன்; ஆயினும் அடியேனுக்கு இருப்பிடமின்னதெனப் பிரமதேவர் கற்பிக்கவில்லை; ஆதலின் தேவரீரே அடியேனுக்கு ஏற்ற நல்ல வாஸஸ்தான மின்னதென எடுத்துரைக்க வேண்டுகிறேன்; அஃது எந்தப் பிராணிக்கும் எவ்விதமான பீடையும் உண்டாகாத விடமாயிருத்தல்வேண்டும்' எனப்பிரார்த்தித்தனன். புத்திரன் இங்ஙனம் புகன்றதுகேட்டு விச்சிரவஸ முனிவர் கூறுகின்றனர்: 'வத்ஸ! விளம்புகிறேன் கேள்: தென் கடற்கரையில் திரிகூட மென்னும் பருவதமொன்று உண்டு; அம்மலையினுச்சியில் தேவேந்திரனது அமராவதி பட்டணம் போன்ற விசாலமான நகரமொன்று உளது; அஃது இலங்கை யெனப்பெயர்பெற்றது; தேவேந்திர நகரத்திற்கு ஒப்பாக, இராக்கதர்கள் வஸிக்கும்பொருட்டு அஃது விச்வகர்மாவினால் வெகு அழகாய் நிருமிக்கப்பட்டது. அந்த இலங்காபுரி சேர்ந்து ஆங்கு நீ சுகமாக வசிக்கலாம். பொன்மதில் சூழ்ந்து, வைரியம் முதலிய ரத்தினங்களிழைத்த தோரணவாயிலையுடையதாய், யந்திர ரூபங்களான சஸ்திரங்கள் நிறைந்த ரமணீயமான அந்நகரத்தை இராக்கதர்கள் முன்பு விஷ்ணுவினிடம் அஞ்சி யகங்குலைந்தவராகி விட்டு ஓடிப்போயினர். இராக்ஷஸர் அனைவரும் பாதாளலோகம் போய்ச்சேர்ந்தமையால் இப்பொழுது இலங்காபுரி சூன்னியமாயிருக்கின்றது; அதற்கு இப்போது நாதனெவனுமில்லை; அவ்விடம் சென்று நீ சுகமாக வாழ்க; அங்கு வசிக்குமளவில் உனக்கு ஒரு வருத்தமு முண்டாகாது; ஆங்கு எவர்க்கும் எவ்விதமான உபத்திரவமும் உண்டாக இடமில்லை' என்று கூறினர்.

இவ்வாறு தந்தை யருளிச்செய்த வார்த்தையைக் கேட்டு வைச்சிரவணன், மிக்க மகிழ்ச்சி கொண்டவர்களான அநேகமாயிரம் நைரிதர்களுடனே, திரிகூடசிகரத்திலுள்ள இலங்காபுரியிற் குடிபுகுந்து வஸிக்கலாயினான். சீக்கிரமே அவனுக்கு அவ்விடத்தில் ஸகலமான ஸம்பத்துக்களும் ஸம்பூர்ணமாக உண்டாயின. தநேச்வரனான வைச்சிரவணன் இங்ஙனம் கடலாற் சூழப்பெற்ற இலங்காபுரியில் நைரிதர்கள் அனைவர்க்கும் அதிபதியாய்க்களிப்புற்று வாழ்ந்து வருகையில், அடிக்கடி புஷ்பகவிமானத்திலேறித் தேவர்களும் கந்தர்வர்களும் போற்றிப் புகழவும், அப்ஸரஸ்திரீகள் ஆடிப் பாடி அழகு செய்யவும், கிரணங்கள் சூழப்பெற்ற கதிரவனென விளங்கு

கின்றவணுகி, மிகுந்த வினயத்துடனே தாய் தந்தையர் ஸன்னிதிக்குச்சென்று அவர்களை யடிபணிந்து அகமகிழச் செய்துகொண்டு சுகமாயிருந்தனன்" என்று கூறினர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நான்காவது ஸர்க்கம்.

அகஸ்தியமுனிவர் பூர்விக ராக்ஷஸர் உற்பத்தி கூறத்தொடங்கி, வித்யுத்கேசனும், அவனுக்கு சுகேசனென்கிற புத்திரனும் பிறந்த வரலாறு கூறல்.

---

இவ்வண்ணம் அகஸ்தியமுனிவர் மொழிந்தது கேட்டு தசரதநந்தனன், ஆ! இலங்கையில் இராக்கதர்கள் முற்காலத்திலும் வஸித்திருந்தனரோ? எனவியப்புற்றவராகித்தலையசைத்து, திரேதாக்கினியென விளங்கும் அகஸ்தியமுனிவரைப் பலதரம் நோக்கிப் புன்னகை கொண்டவராகிப் புகல்கின்றனர். "ஸ்வாமி! இலங்காபுரி முற்காலத்திலேயே அரக்கர்களுக்கு இருப்பிடமாயிருந்ததெனத் தேவரீர் புகன்றதைக்கேட்க அடியேனுக்கு அதிகமான ஆச்சரியமுண்டாகின்றது. புலஸ்தியவமிசத்தினின்றுமே பிசிதாசனர்கள் உற்பவித்தனர்களெனக் கேள்வியுற்றிருக்கின்ரும்; இப்பொழுது வேறுவிதமாகவும் இராக்கதர்கள் உண்டாயினரெனத் தேவரீர் அருளிச்செய்கின்றதே. இராவணன், கும்பகர்ணன், பிரஹஸ்தன், விகடன், இராவணனது மைந்தர்கள் இவர்களினும் அவ்விராக்ஷஸர்கள், அதிகமான ஆற்றலுடையவர்களோ? அவர்கள் அனைவர்க்கும் மூலபுருஷன் யாவன்? அவன் பெயர் யாது? அவனது ஆற்றல் எத்தன்மைத்து? என்ன அபராதஞ்செய்து அவர்கள் விஷ்ணுவினல் ஓட்டப்பட்டனர்? எவ்வண்ணம் ஓட்டப்பட்டனர்? இவற்றைக் கேட்க அடியேனுக்கு அதிகமான உற்சாஹமுண்டாகின்றது. அந்தணர் பெருமானே! இவை யெல்லாவற்றையும் அடியேனுக்கு விவரமாக எடுத்துரைத்து, சூரியன் இருளைப்போக்குவது போல, தேவரீர் அடியேனது ஆவலைத்தணிக்க வேண்டுகின்றேன்" எனப் பிரார்த்தித்தனர்.

அயோத்திமன்னன் இவ்வாறு வெகுசமத்காரமாயும் அழகாயும் வினவியது கண்டு, இவர்யாவும் உணர்ந்தும் ஒன்றுமறியாதவரென வினவுகின்றனரேயெனப் புன்னகைகொண்டவராகி அகஸ்தியர் அவ்வுத்தமனுக்கு உத்தரம்உரைக்கலாயினர்: "ஸ்ரீராமா! சொல்லுகிறேன் கேளும். ஆதிகாலத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணுவினது நாபீகமலத்தினின்றுமுண்டான பிரம்மதேவர் முதலில் தண்ணீரைப் படைத்து, அதைப் பாதுகாத்தற்பொருட்டு அநேகம் பிராணிகளைப் படைத்தனர். அங்ஙனம் படைக்கப்பட்ட பிராணிகள் மிகுந்த பசிதாகமுடையோராகித் தம்மைப்படைத்த பிதாமஹனிடம்மிகுந்தவணக்கத்துடனே சென்று, யாங்கள் செய்யவேண்டிய தொழில் யாதென வினவினர். பிரமதேவர் அவர்களை நோக்கிப் புன்னகையுடனே, 'பிராணிகாள், நீவிர் இந்த

ஜலத்தை ரக்ஷிக்கக்கடவீர்' என்று கூறினர். அது கேட்டு அவர்களில் பசியில்லாத சிலர், ரக்ஷிக்கின்றோமென்று கூறினர்; பசிகொண்ட சிலர், பக்ஷிக்கின்றோம் என்று கூறினர். அதனைச் செவியுற்ற சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவர், 'உங்களில் யாவர் ரக்ஷிக்கின்றோ மென்றனரோ, அவர்கள் ராக்ஷஸராகுக; யாவர் பக்ஷிக்கின்றோ மென்றனரோ, அவர்கள் யக்ஷராகுக' என மொழிந்தனர். அவர்களும் அங்ஙனமே யாயினர்.

அந்தராக்ஷஸர்களில் ஹேதி, பிரஹேதி யென இரண்டு பிராதாக்களிருந்தனர். அவர்கள் மதுகைடபர்களுக் கொப்பானவர்களாய் மிகுந்த ஆற்றலுடையவர்களாயினர். அவர்களில் பிரஹேதி யென்பவன் மஹாதருமிஷ்டனாகித்தபோவனம் புகுந்து தவம் புரியலாயினன். ஹேதியென்பவனோ, இல்வாழ்க்கையி லிருக்க விருப்புடையோ னாகி விவாஹம் செய்துகொள்ள முயற்சிசெய்து, யமனது சோதரியாகிய மிகப்பயங்கரையான பயையென்கிற கன்னிகையைத் தானேபாணிக்கிரஹணஞ்செய்துகொண்டனன். அந்தஹேதி யென்கிற ராக்ஷஸராஜனுக்குப் பயையினிடத்தில் வித்யுத்கேச னென்கிற புத்திரன் பிறந்தனன். ஹேதியின் மகனான வித்யுத்கேசன் மிகப்பிரகாசமான சூரியன் போன்ற சோதியுடையனாகி, தடாகத்தினிடையே தாமரைமலர்போல மேன்மேலும் விருத்தி யடைந்துவளர்ந்தனன். அவனுக்கு யௌவனவயது வந்தவளவில் அவனதுபிதா அவனுக்கு மணம்புரிவிக்க மதி கொண்டவனாகி, சந்தியின் மகளை மருமகளாக வேண்டினான். பெண்ணாகப் பிறந்தவளை யென்றேனும் பிறர்க்கே பாணிக்கிரஹணஞ் செய்துகொடுக்க வேண்டுவது அவசியமல்லவா? அதனால் சந்தி தன்மகளை வித்யுத்கேசனுக்கு விவாகம்செய்து கொடுத்தனள். அம்மகளை வித்யுத்கேசன் தனக்கு இல்வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று, இந்திராணியுடனே தேவேந்திரனென, அவளுடனே வினோதமாகச்சிலகாலம் விஹரித்துக்கொண் டிருந்தான். அங்ஙனஞ் சிலநாள்செல்லுகையில், ஸாலகடங்கடையெனப் பெயர்பெற்ற அப்பெண்மணி, கடலிடஞ்சேர்ந்த காளமேகமென, வித்யுத்கேசனது ஸம்போகத்தினால் கர்ப்பவதியாயினாள். பிறகு அந்த ராக்ஷஸி மந்தரமலைக்குச்சென்று, அக்கினியினா லளிக்கப்பெற்ற மஹேச்வர ஸம்பந்தமான கருவைக் கங்காநதி யீன்றவண்ணம், மின்னல்போன்ற மேனியுள்ள ஒருபுதல்வனைப் பெற்றெடுத்தாள்.

இங்ஙனம் பிள்ளைபெற்ற பின்னர் அவள் வித்யுத்கேசனுடனே விஹரிக்க விருப்பமுடையளாகி, அக்குழந்தையை அவ்விடத்தேவிட்டு மறந்துகணவனுடனே கூடி விநோதமாகக்காலங்கழித்தனள். மந்தரமலையில் அவ்வரக்கியால் விடப்பட்ட சிசுவோ, சரத்கால மேகம்போன்ற சோதியுடையதாகி, வாயில் விரலைவைத்துக் கொண்டு அழத்தொடங்கியது. அக்காலையில், விருஷபாரூடராகிப் பார்வதி தேவியுடனே ஆகாய மார்க்கமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்த பரமசிவன் இடிமுழக்கம்போன்ற அழுகுரலைக் கேட்டு, இஃது என்ன கூச்சலென உமாதேவியுடன் அவ்விடஞ்சென்று பார்த்தனர். ஆங்கு அரக்கர் குழந்தை யொன்று கேட்பாரின்றிக் கதறுவதுகண்டு அதனிடத்திற் கருணைகூர்ந்து, அக்குழந்தையின் தாயாருக்கு அப்பொழுது

என்னவயதோ, அதேவயது அக்குழந்தைக்கு அந்த நிமிஷமே வருமாறும், தேவர்கள் போன்று அம்மகன் என்றும் மரணமில்லா திருக்குமாறும் அநுக்கிரகித்து, பார்வதியினது பிரீதிநிமித்தமாக ஆகாயத்தில் எழுந்து செல்லவல்ல பட்டணமும் ஒன்று அளித்தனர். அப்பொழுது இராக்கதர்களுடைய தன்மையை யுணர்ந்த பார்வதிதேவியும், இராக்ஷஸ ஸ்திரிகள் கருத்தரித்தவுடனே கர்ப்பம்முற்றிப் பிரஸவமுண்டாகவும், பிரஸவித்த போழ்தே குழந்தை தாயினது வயதுக்குச்சரியான வயதுள்ளதாகவும் வேண்டுமென அரக்கர்கட்கு வரமீந்தனள். சுகேசனெனப் பெயர்பெற்ற அவ்விராக்கதன் சிவபிரானிடம் இங்ஙனம் அநுக்கிரகம்பெற்று அதனால் அகங்கரித்தவனாகி,வானவீதியிலெழுந்துசெல்லும் தனது நகரத்துடனே தேவராஜனென யதேச்சையாயெங்கும் ஸஞ்சரிக்கலாயினான்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐந்தாவது ஸர்க்கம்.

சுகேசனுக்கு மாலியவான், மாலி, சுமாலியென மூன்று பிள்ளைகள் பிறந்ததும், அவர்கள் தவம்புரிந்து பெருமைபெற்று இலங்கையில் குடிபுகுந்து விவாஹஞ்செய்துகொண்டு பலமக்களைப் பெற்று மகிழ்ந்ததும்.

---

"சுகேசனென்னும் இராக்கதன் சிவ பெருமானிடம் இவ்வாறு விசேஷமானவரம்பெற்று மகாதருமிஷ்டனாக விளங்குவதைக் கிராமணியென்கிற கந்தருவன்கண்டனன். அந்தக் கந்தருவன் விசுவாவசுவுக்கொப்பான மகிமைபெற்றவன். அவனுக்கு இரண்டாவது மஹாலக்ஷ்மி போன்ற தேவவதியென்னும் ஒருமகள் இருந்தாள். அவள் மிக்க ரூபவதியென மூவுலகத்திலும் பிரசித்திபெற்றவள். அம்மகள் விவாஹஞ்செய்து கொள்வதற்கேற்ற யௌவனப்பருவமடைந்திருத்தல் கண்டு அவன் அவளை இராக்ஷஸர்களுக்கோர் அருஞ்செல்வமெனச்சுகேசனுக்குவிதிமுறைப்படிவிவாகஞ்செய்துகொடுத்தனன். தேவவதி அவ்விராக்கதனை மணம்புரிந்துகொண்டு, பொருளில்லாத வறிஞன் பெருஞ்செல்வம் பெற்றாலன்ன மிக்க மகிழ்ச்சிகொண்டனள். தேவவதியோடுகூடி அவ்யாதுதானன், பெண்யானையுடன்கூடிய மதயானையென, மிகப்பெருமைபெற்று விளங்கினான். ஓ ராகவ! அந்த சுகேசனுக்கு தேவவதியி னிடத்தில் மூன்று நேத்திரங்கள்போல மூன்று புத்திரர்கள் உண்டாயினர். அம்மூவரும் மாலியவான், சுமாலி, மாலியெனப் பெயர்பெற்றவர்களாகி, * திரேதாக்கினிகள் போன்ற வடிவமும், மூன்றுலோகங்கள் போன்ற பெருமையும், மூன்று மந்திரங்கள் போன்ற மகிமையும், மூன்று நாடிகள்போன்ற உக்கிரமும் உடையவர்களாகி, உபேக்ஷை செய்யப்பட்ட வியாதிகளென மேன்மேலும் விருத்தியடையலாயினர்.

---

* திரேதாக்கினிகள் இவையென்பதை யுத்தகாண்டம் ௬௯௪-ம் பக்கத்தில் காண்க.

"பின்பு அவர்கள், தமதுதந்தை தவம்புரிந்து வரங்கள்பெற்று விளங்குவதுகண்டு, தாமும் அங்ஙனமே தவம்புரிய வேண்டுமென மனவுறுதிகொண்டு மேருமலைக்குச் சென்று நியமநிஷ்டைகளுடனே கொடியதவஞ் செய்யலாயினர். ஸத்தியம், சமம், தபம்முதலான சற்குணங்களை மேற்கொண்டு, தேவர் அசுரர் மானிடர் ஆகிய அனைவருடனும் மூவுலகங்களும் அஞ்சி நடுங்குமாறு, அண்ணன் தம்பிகளான அவ்வரக்கர்கள் மூவரும் அருந்தவம் புரிதல்கண்டு நான்முகக் கடவுள் விமானத்தின்மீ தேறிவந்து தேவர்கள் அனைவருடனும் அவர்கட்குப் பிரத்தியக்ஷமாகி 'நான் உங்களது தவப்பெருமையைப்பார்த்து வியந்து உங்களுக்கு வரமளிக்க வந்து தோன்றினேன்; அவரவர்க்கு இஷ்டமானவரம்வேண்டுக' என அறிவித்தனர். தேவகணங்களோடும் தேவேந்திரனோடும் பிரம்மதேவர் தமக்கு வரமளிக்க வந்திருப்பது கண்டு சுகேசனது புத்திரர்கள் மூவரும் அதிகமான பக்தியுடன், அசைகின்ற விருக்ஷங்களென நடுங்கிக்கொண்டு, அஞ்சலிஹஸ்தராகிப் பிரமதேவரைநோக்கி, 'ஸ்வாமி, யாங்கள் செய்த தவத்தினால் திருப்தியடைந்து தேவரீர் எமக்கு வரமளிக்க வந்தவராயின், நாங்கள் எவராலும் வெல்வதற்கரியராயும், பகைவரை வெல்ல வல்லவராயும், சிரஞ்சீவிகளாயும், மிகுந்த பராக்கிரமமுடையோராயும், ஒருவர்க்கொருவர் அன்பு மாறாதவராயும் விளங்க வரமளிக்க' என வேண்டினர். அவ்வாறே யாகுகவெனப் பிரமதேவர் சுகேசனது புதல்வருக்கு அநுக்கிரகித்துத் தம் உலகஞ் சென்றனர்.

"ஓ ராம! அந்தநிசாசரர்கள் அனைவரும் இவ்வாறு வரம்பெற்றபின்னர், எவரிடத்தும் அச்சமொழிந்தவராகி, தேவர்கள் அசுரர்கள் ஆகிய அனைவரையும் இம்சிக்கத் தொடங்கினர்கள். அவர்களால் வதையுண்ட தேவர்கள், சாரணர்கள், முனிவர்கள் ஆகிய அனைவரும், கைகொடுத்துக் காப்பவர் எவரையும் காணாது மிக வருந்தலாயினர்.

"ஓ ரகுவீர! பின்னர் அப்பிசிதாசனர்கள் மிக்க மகிழ்ச்சிகொண்டவர்களாகிச் சிற்பிகளிற் சிறந்தோனான விச்வகர்மாவை விளித்து, 'பல பராக்கிரமங்களிற் சிறப்புற்ற மஹாத்துமாக்களாகிய தேவர்களுக்கு அவரவர் விரும்பியவாறு விசித்திரமான மாளிகைகள் நிருமிக்கவல்ல சிற்பி நீயே யன்றோ? ஆதலின் எங்களுக்கும் நீ இமயமலையிலோ, மேருமலையிலோ, மந்தரமலையிலோ, மஹேச்வரனது மாளிகைக்கொப்பாகிய அழகான மாளிகை யொன்று மதியினால் ஊகித் துணர்ந்து எமக்கு நிருமிக்க' வென விதித்தனர். அதனைச் செவியுற்ற கைத்திறமுடையனான விச்வகர்மாவானவன் அவ்வரக்கர்கட்கு வாஸ்ஸ்தான மொன்று கூறினன்: அஃதாவது, 'இராக்கதர்காள்! தென்கடற்கரையில் திரிகூடமென்கிற பருவதமொன்று உளது; அவ்விடத்து சுவேல மென்கிற மற்றொரு மலையுமுண்டு. அந்தத் திரிகூட மலையினது மேகமண்டலத்திற்கொப்பான மத்தியம சிகரத்தில் தேவேந்திரனது கட்டளையினால் இலங்கையென்னும் அற்புதமான நகரமொன்று யான் நிருமித்திருக்கின்றேன். அஃது தேவேந்திரனது அமராவதி நகரம்போன்றது; பறவைகளும் உட்புகுதற்கு அரியதாகச் சுற்றிலும் ஈட்டிகள் நாட்டப் பெற்றது; முப்பதுயோஜனை

அகலமும் நூறுயோஜனை நீளமுமுள்ளது. பொன்மயமான மதில் சூழ்ந்தது; சுவர்ணமயமான தோரண வாயிலினையுடையது. அமராவதி பட்டணத்தில் ஸகல தேவர்களுடனும் தேவேந்திரன் வஸிக்குமாறு அவ் விலங்காபுரியிலே இராக்கதர்களுடனே நீங்கள் வாசஞ்செய்க; இலங்காபுரமாகிய துர்க்கத்திற் புகுந்த நீவிர் பகைவர்களால் அண்டுதற்கும் அரியராவீர்கள்' என்று கூறினான். விச்வகர்மா இவ்வண்ணம் உரைசெய்தது கேட்டு அவ்விராக்கதத்தலைவர்கள், மிகப்பெரிய மதிலும் அகழுமுடையதாகிச் சுவர்ணமயமான மாளிகைகள் நிரை நிரையாக நிறைந்த இலங்காபுரியைப் பெற்று மிக்க மகிழ்ச்சி கொண்டவர்களாகி, ஆயிரம் பரிவாரங்களுடனே அதிற் குடிபுகுந்து வஸிக்கலாயினர்."

இஃது இங்ஙனமாக, ஓ ரகுநந்தன, ராமா! நர்மதை யென்கிற கந்தர்வ ஸ்திரீ ஒருத்தியிருந்தனள். அவளுக்கு மூன்று பெண்கள் பிறந்தனர். அம் மூன்று கன்னியரும் தைரியலக்ஷ்மி, தனலக்ஷ்மி, கீர்த்திலக்ஷ்மி யெனக் கொண்டாடத் தக்கவர்களாகி மிக்க மேன்மைபெற்று விளங்கினர். அரக்கர் குலத்திற் றோன்றாதவளாயினும் அந்த நர்மதை தனது மகளிர் மூவரையும், முறையே மூத்தவனுக்கு மூத்தவளென, இம்மூன்று ராஸக்ஷர்களுக்கும் கன்னிகாதானஞ் செய்து கொடுத்தனள். முழுமதிக்கொப்பான முகமண்டலமுடையோர்களான அந்தக்கந்தர்வ கன்னிகைகள் மூவரும் உத்திர நக்ஷத்திரத்தில் இம்மூன்று இராக்கதர்களையும் முறையே மணம்புரிந்துகொண்டு, மிகவும் மனமகிழ்ந்திருந்தனர். ராம! சுகேசனுடைய மக்களான மூன்று இராக்கதர்களும் இம்மூன்று கந்தர்வ கன்னிகைகளை மணம்புரிந்துகொண்டு, அப்ஸர ஸ்திரீகளுடனே தேவர்களென, தம் தம்வாழ்க்கைத் துணைவியுடனே கூடிக் களித்து விளையாடலாயினர்.

இவ்வா றிருக்கையில் மாலியவான் என்னும் மூத்த ராக்ஷஸனுக்கு அவனுடைய மனையாட்டியான சுந்தரி யென்பவ ளிடத்தில் பல புத்திரர்கள் பிறந்தனர். அவர்கள் யாவரெனில் வஜ்ரமுஷ்டி, விரூபாக்ஷன், துர்முகன், சுப்தக்னன், யஞ்ஞகோபன், மத்தன், உன்மத்தன் என்பவர்களாம். இவர்களுடன் சிறந்த சௌந்தரிய முடையவளான அநலை யென்னு மொரு மகளும் உற்பவித்தனள்.

சுமாலியினுடையபாரியை கேதுமதியெனப் பெயர்பெற்றவள்; அவள் அவனுக்குப் பிராணனிலும் பிரியமானவளா யிருந்தனள். ஹே மகாராஜ! அந்தக்கேதுமதியி னிடத்தில் சுமாலிக்கு உண்டான பிள்ளைகளை முறையே கூறுகின்றேன், கேளும்: பிரஹஸ்தன், அகம்பனன், விகடன், காலகார்முகன், தூம்ராக்ஷன், தண்டன், சுபார்சன், ஸங்கிராதி, பிரகஸன், பாஸகர்ணன், என்பவர்களாம்; ராகை, புஷ்போத்கடை, நகைமுக முடையளான கைகஸீ, கும்பீநஸி யென்னும் குமாரிகளும் பிறந்தனர்.

மாலியினது மனையாட்டி வசுதை யெனப் பெயர் பூண்ட வடிவழகியாம்; தாமரை யிதழ்போன்ற கண்களை யுடையவளாகி அவள் தேவ மகளிரென விளங்கினாள். ஓ ராகவ! சுமாலியினது அநுஜனான மாலிக்கு அவ்வணங்கி

னிடம் பிறந்த புதல்வரைப் புகல்கின்றேன், கேளும்: அநிலன், அனலன், ஹரன், ஸம்பாதி யென்னும் நால்வர் மாலிக்கு மக்களாகப் பிறந்தனர்; இந்த நால்வரே விபீஷணருடைய அமைச்சர்களாம்.

இவ்வாறு பலமக்களைப் பெற்ற பின்னர் அந்த ராக்ஷஸர்கள் மூவரும் தமக்குள்ள சவுரியத்தினால் செருக்குற்றவர்களாகி, தம் குமாரர்களுடனே கூடித் தேவர்களையும் தேவேந்திரனையும், மஹரிஷிகள் நாகர் யக்ஷர் ஆகிய மற்றும் பலரையும் பலவாறு துன்புறுத்த லாயினர்; உலக மெங்கும் ஸஞ்சரிக்கின்றவர்களாகி, வாயுதேவனென எவருக்கும் அகப்படாதவர்களாய், யுத்தத்தில் யமனுக் கொப்பான உக்கிரமுடையவர்களாய், தாம் பெற்ற வரத்தின் பெருமையால் அகங்கார மதிகரித்து யாகங்கள் முதலான நற்காரியங்களுக்கு அநேகமாய் இடையூறுகள் செய்ய லாயினர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஆறாவது ஸர்க்கம்.

தேவர்கள் சிவபெருமானை அடைக்கலம் புகுந்து அவர் சொன்ன உபாயத்தினால் ஸ்ரீமந் நாராயணனைச் சரண மடைந்ததும், அவர் அவர்களுக்கு அபய மளித்ததும், அது தெரிந்து ராக்ஷஸர்கள் கோபங்கொண்டு படையெடுத்துத் தேவலோகஞ் சென்றதும், அப்பொழுது கருடவாஹனா ரூடராய்க் கேசவன் அங்குவந்து தோன்ற அவரைச்சூழ்ந்து அரக்கர் அம்புமாரி பொழியப் புகுந்ததும்.

---

"ஓ ராம! இங்ஙனம் இராக்கதர்களால் துன்புறுத்தப்பட்ட தேவர்களும், தபோதனர்களான முனிவர்களும் மிகவும் அச்சங்கொண்டவர்களாகி, திரிபுராரியான முக்கண் படைத்த பரமசிவனைச் சரணமடைந்தனர். சிவபிரானிடஞ் சென்ற தேவர்கள் அச்சத்தினால் பேச நாவெழாது கைகூப்பிக்கொண்டு தட்டித்தடுமாறுகின்ற குரலுடனே விண்ணப்பஞ் செய்கின்றனர்: 'ஸ்வாமி! சுகேசனது புத்திரர்கள் பிரமதேவர் கொடுத்த வரத்தினால் கர்வ மதிகரித்தவர்களாகி, எல்லாப்பிராணிகளையும் பலவாறு துன்புறுத்துகின்றனர். எல்லாப்பிராணிகளுக்கும் புகலிடமாயிருந்த எங்கள் ஆச்சிரமங்கள் பலவும் அழிக்கப்பட்டன; சுவர்க்கலோகத்தினின்று தேவர்களை யடித்தோட்டி ஆங்கு தாமே தேவர்களென இன்புற்று வாழ்கின்றனர்; விஷ்ணுவும் யானே, ருத்திரனும் யானே, பிரமனும் யானே, தேவேந்திரனும் யானே, யமனும் யானே, வருணனும் யானே, சந்திரனும் யானே, சூரியனும் யானே-என இவ்வாறு அறைந்துகொண்டு மாலி, சுமாலி, மாலியவான் என்னும் மூவரும் அவர்களைச் சேர்ந்த மற்றும் பலரும் போர்புரியப் பேராவல் கொண்டவர்களாய் எல்லோரையும் உபத்திரவப் படுத்துகின்றனர். ஹே தேவ! அவ்வரக்கரிடம் பயந்து வருத்தப்படுகின்ற எங்களைத் தேவரீர் அபயமளித்துக் காப்

பாற்றுக; மிகப்பயங்கரமான வடிவமெடுத்துத் தேவரீர் தேவசத்துருக்களான அக்கொடியர்களைக் கொலை செய்க' எனப் பிரார்த்தித்தனர்.

தேவர்கள் இவ்வாறு கூறியதுகேட்டுச் சிவபெருமான் சுகேசனிடமபிமான முடையனாகி அவர்களை நோக்கி, 'தேவர்காள்! அவ்வரக்கர்களை வதைப்பது என்னாலாகின்ற காரியமன்று, அவர்களை வெல்ல யான் வல்லவனல்லன்; ஆயின், யான் அதற்கு ஒரு உபாயம் சொல்லுகின்றேன்; அவர்களைக் கொல்ல வல்லவரு மின்னாரென உங்களுக்கு எடுத்துக் கூறுகின்றேன்: ஓ மகரிஷிகாள்! நீவிர் இம்முயற்சியைக் கைவிடாது இங்ஙனமே நேராகச் சென்று ஸ்ரீமஹா விஷ்ணுவைச் சரணமடைக; எனக்கும் பிரபுவான அவரே அவ்விராக்கதர்களை வெல்லவல்லர்' என்று கூறினர்.

அதனைச் செவியுற்ற தேவர்கள் சங்கரனை வாழ்த்தி விடைபெற்று, இராக்கதர்களிடம் அஞ்சி நடுங்கியவர்களாகி ஸ்ரீமஹா விஷ்ணுவினது ஸந்நிதானத்திற்குச் சென்று, சங்கசக்கரம் முதலான பஞ்சாயுதங்கள் அணிந்த அத்தேவனை அடிபணிந்து, போற்றி, சுகேசனது தனயர்களால் தமக் குண்டான துன்பத்தை அச்சத்தினால் நடுக்கமுற்றவர்களாகி விளங்கக் கூறலாயினர்: எங்ஙன மெனில், 'ஆண்டவனே! சுகேசனது மக்கள் மூன்று பேர்: அவர்கள் திரேதாக்கினிக் கொப்பான வீரியமுடையவர்கள்; அவர்கள் பிரமதேவனிடம் வரம்பெற்று வீரிய மதிகரித்தவர்களாகி, எமது இருப்பிடங்கள் அனைத்தையும் அபஹரித்துக் கொண்டனர். திரிகூட பருவதத்தினுச்சியிலுள்ள துர்க்கமான இலங்காபுரியைத் தமக்கிருப்பிடமாகக் கொண்டு எங்களை அதிகமாக உபத்திரவப் படுத்துகின்றனர். புகலிடமேதுமின்றி யாங்கள் தேவரீரைச் சரண மடைந்தோம்; எல்லாத் தேவர்களுக்கும் ஈசனான தேவரீரே எமக்கு அடைக்கல மாகுக. ஓ மதுசூதன! எங்களுடைய நன்மையைக் கருதி இவ்விராக்கதர்களை வதைக்க வேண்டுகின்றோம்; அவர்களது முகத் தாமரைகளைச் சக்கராயுதத்தினால் அரிந்து யமனுக்கு அவர்களை விருந்தளிக்க; மதங்கொண்டு செருக்குற்றுத் திரிகின்ற துஷ்டர்களான அந்த ராக்ஷஸர்களைச் சகலமான பரிவாரங்களுடனும் அதஞ்செய்க; ஆபத்து நேருமளவில் அபய மளித்து எம்மைக் காப்பவர் தேவரீரை யொழிய வேறொருவர் உளரோ? ஆதலின், பனியைப் பகலவன் ஒழிப்பது போல, எங்களுக்கு உண்டாகிய அச்சத்தைத் தேவரீர் ஒழித்தருள்க' என வேண்டினர்.

தேவர்கள் இவ்வண்ணம் விண்ணப்பஞ் செய்ததுகேட்டு, சத்துருக்களனைவரையும் சிந்தைகலங்கச் செய்பவனாகிய தேவ தேவனான ஜநார்த்தனன், அத்தேவர்களுக்கு அஞ்சலென்று அபயமளித்து, அவர்களை நோக்கி யருளிச்செய்கின்றனன்: 'தேவர்காள்! சுகேசனென்னும் இராக்கதனை யானறிவேன், அவன் சிவனளித்த வரத்தினால் செருக்குற்றுத் திரிவதும் அறிவேன்; அவனுடைய மக்களையும் யானறிவேன், அவர்களில் மாலியவானல்லவோ மூத்தவன். அரக்கர்களுள் அதமமான அக்கொடியர்கள் மதித்து மரியாதைதப்பித்திரிகின்றனர். அவர்களைக் காண எனக்கும் கோபமுண்டாகின்றது; யான் அவர்களை யதஞ்செய்து விடுகின்றேன்; நீவிர் இனி இக்கவலையொழிக'-என அருளிச்

தேவர்கள்சிவபெருமானைஅடைக்கலம்புக அவர் ஸ்ரீமந்நாராயணனைச்சரணமடையும்படி அவர்களுக்குச் சொல்லியது.

NO2. PAGE NO. 14.



దేవతులు శివునివద్ద మొరపెట్ట అయన శ్రీమన్నారాయణుని శరణాపొంద్దునట్లు వారికి చెప్పినది.

செய்தனர். எல்லாம் வல்லவரான விஷ்ணுமூர்த்தி இவ்வாறு மொழிந்தது கேட்டுத் தேவர்கள் அனைவரும் அகமகிழ்ந்து அவரைப்போற்றிப் புகழ்ந்து தம்மிடஞ் சென்றனர்.

தேவர்கள் இவ்வாறு அரக்கர்களை யொழிக்க முயற்சிசெய்கின்ற வரலாறு மாலியவானுக்குத்தெரியவந்தது. அச்செய்தி காதிற்கேட்டவளவில் அவன் தம்பிமார்களைநோக்கிப்பின்வருமாறுபுகலலுற்றனன்“ தம்பிகாள்கேட்டீரோதேவர்களது முயற்சியை; தேவரும் முனிவரும் ஒன்று கூடி நம்மை வதைக்க விருப்பங்கொண்டவர்களாகிச் சங்கரனிடஞ் சென்று முறையிட்டுக்கொள்ளலாயினர். எங்ஙனமெனில்: ‘ஹே தேவ! சுகேசனது புத்திரர்கள் வரம்பெற்று வீரிய மதிகரித்தவர்களாகிச் செருக்குற்று எம்மை யடிக்கடி கொடுமையாகத் துன்புறுத்துகின்றனர்; துஷ்ட ராக்ஷஸர்களால் அவமானமடைந்த யாங்கள் அவர்களிடம் அஞ்சினவர்களாகி, தத்தம் வீடுகளில் வஸிக்கமுடியாது ஓடியல்லாடுகின்றோம்; முக்கண் படைத்த மஹேச்வர! எங்களுடைய நன்மையைக் கருதி அவ்வரக்கர்களை வதைக்க வேண்டுகின்றோம்; உங்காரத்தினாலேயே தேவரீர் அவ்வரக்கர்களை வதைக்க வல்லவராகின்றீர்’ என வேண்டினார்கள்.

தேவதைகள் இவ்வண்ணம் வேண்டிக்கொண்டது கேட்டுச் சிவபெருமான் மனந்தாளாது தலையசைத்துக் கைகளை யுதறி அத்தேவர்களை நோக்கி, ‘தேவர்காள்! சுகேசனது புத்திரர்களைப் போர்க்களத்தில் வதைப்பது என்னாலாவதன்று; ஆயின், அதற்கு யான் உபாயமொன்று உங்களுக்கு உரை செய்கின்றேன்: சங்கொடு சக்கர மேந்துந் தடக்கையனை பீதகவாடைப் பிரானாகிய ஸ்ரீமந்நாராயணனே விரோதிகளை வதைக்க வல்லவர்; அவரைச் சரணமடைக; அவர் அவ்விராக்கதர்களை அதஞ் செய்யத் தடையில்லை’ எனக் கூறினர். சிவபெருமான் சொன்ன இவ்வுபாயத்தைச் செவியுற்ற தேவர்கள் அவரிடம் வணங்கி விடைபெற்று, ஸ்ரீமந் நாராயணனது ஸன்னிதானத்திற்குச் சென்று நடந்த வரலாறுக ளனைத்தையும் அவரிடம் விண்ணப்பஞ் செய்தனர். ராக்ஷஸ வீரர்காள்! அங்ஙனம் கூறிய அத்தேவர்களைக் கண்டு அந்த நாராயணமூர்த்தி, இந்திராதிதேவர்களே! உங்களுடைய சத்துருக்களான அவ்விராக்கதர்களை யான் அதஞ்செய்துவிடுகிறேன்; நீவிர் மனக்கவலை யொழிந்து சுகமாயிருக்க வென அவர்களுக்கு அபய மளித்து, நம்மை வதைக்கப் பிரதிஞ்ஞை பண்ணி யிருக்கின்றான்; ஆதலின் இப்பொழுது யாம் செய்யத் தகுவது யாதோ, அதனை ஆலோசிக்கக் கடவீர். இந்த நாராயணனோ, சாமானியனல்லன்; ஹிரணியகசிபுவுக்கு மிருத்தியுவானவ னிவன்; தேவ சத்துருக்களான மற்றவர்களையும் மாளச்செய்தவ னிவன்; நமுசி, காலநேமி, மஹாவீரனான ஸங்கிராதன், மஹாமாயாவியான ராதேயன், தார்மிகனான லோகபாலன், யமளார்ச்சுனர்கள், ஹார்திக்கியன், சும்பன், நிசும்பன் ஆகிய இவர்களும் ஸத்துவவந்தரும் பலிஷ்டர்களுமான மற்றுமுள்ள தைத்தியர்களும் தானவர்களுமாகிய அனைவரும் போர்தொடுத்துப் பராஜய மடைந்தனர்; இப்பொழுது இவர்க ளுள்ளவிடமுந் தெரியவில்லை; இவர்கள் அனைவரும் நூறு யாகஞ் செய்தவர்கள், அனைவரும் மாயையுணர்ந்த சூரர்கள், அனைவரும்

எல்லா அஸ்திரங்களிலும் வல்லமை பெற்றவர்கள், அனைவரும் எதிரிகள் அஞ்சத்தக்க ஆற்றலுடையவர்கள்; அங்ஙனமாகவும், இவர்கள் யாவருமே நாராயணனால் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் அதஞ்செய்யப் பட்டனர். நாராயணனை ஜயிப்பது மிகவும் அருமையான காரியம்; அவனே நம்மை வதைக்க விருப்புற்றிருக்கிறான். ஆதலின் இதனை யாய்ந்துணர்ந்து, இப்பொழுது யாம் செய்யத்தகுவது இன்னதெனச் சிந்தித்துத் தெளிக'' எனக்கூறினான்.

மாலியவான் இவ்வண்ணம் மொழிந்ததுகேட்டு மாலியும் சுமாலியுமாகிய இருவரும், அச்வினீதேவர்கள் தேவேந்திரனுக்கு உரைக்குமாறு தமது ஜ்யேஷ்ட பிராதாவான மாலியவானிடம் உரைசெய்யலாயினர்: "அண்ணா! நாம் எல்லாவேதங்களையும் ஓதியுணர்ந்தவர்கள், வேண்டியவரங்கள் பெற்ற வர்கள்; அளவற்ற ஐசுவரியமும் பாதுகாத்து வைத்திருக்கின்றோம்! அழியாத ஆயுளும் பெற்றிருக்கின்றோம்; நல்வழியால் நல்ல தருமமும் செய்திருக் கின்றோம்; எவராலும் கலக்கொண்ணாத தேவசேனையாகிய ஸாகரத்தினுள் சஸ்திரங் கைக்கொண்டு புகுந்து, நிகரற்ற வீரரான விரோதிகளை வென்றி ருக்கின்றோம்; ஆதலின் அத்தன்மையரான நமக்கும் மரண பயமுண்டா குமோ? அந்த நாராயணனோ, ருத்திரனோ, சக்கரனோ, யமனோ—எல்லோரும் எப்பொழுதும் நம்மையெதிர்த்து எதிரே நிற்க அஞ்சுவார்களே! ஓராக்ஷஸேச் வர! விஷ்ணுவுக்கு நம்மிடம் துவேஷமுண்டாக ஒரு காரணமும் காணப்பட வில்லை; தேவதைகளுடைய தோஷத்தினாலேயே விஷ்ணுவினது மனம் மாறு பட்டிருக்கின்றது; ஆதலின் இப்பொழுது யாம் யுத்தஸன்னாஹஞ் செய்து ஸகல ஸேனைகளுடனும் புறப்பட்டு, இந்தக்குற்ற மெவரிடத்தினின்று முண் டாயதோ, அத்தேவர்களையே வதைசெய்யப் பாடுபடுவோம்'' என்று கூறி னார்கள்.

இவ்வண்ணம் ஆலோசனை செய்துகொண்டு மஹாபலிஷ்டர்களான அவ்விராக்கதர்கள் போர்க்குப் பறையறைந்து ஸகலசேனைகளும் சூழப்புறப் பட்டு ஜம்பன், விருத்திரன், வலன் என்னும் அசுரர்களென அதிக கோபத் துடனே சென்றனர். ஓ ராமா! அந்த ராக்ஷஸர்கள் அனைவரும் தமக்குள்ள பராக்கிரமத்தினால் செருக்குற்றவர்களாகி இங்ஙனம் போர் முயற்சிகொண்டு ரதங்களிலும், யானைகளிலும், மலைகள்போன்ற மிகப்பெரிய பரிமாக்களிலும், கோவேறு கழுதைகளிலும், விருஷபங்களிலும், ஒட்டைகளிலும், சிம்சுமா ரங்களிலும், நாகங்களிலும், முதலைகளிலும், மிகப்பெரிய மச்சங்களிலும், கருடனுக் கொப்பான பக்ஷிகளிலும், சிம்மங்களிலும், வேங்கைகளிலும், வராஹங்களிலும், க்வய மிருகங்களிலும், சமர மிருகங்களிலும் ஏறிக்கொண்டு இலங்காபுரியை விட்டுப் புறப்பட்டுத் தேவலோகத்திற்குச் சென்றனர்.

இராக்கதர்கள் வாஹனங்களிலேறி ஆயிரக்கணக்காகத் தேவலோகஞ் சென்றது கண்டு, இலங்காபுரியிலுள்ள தேவதைகள் யாவும் மனக்கிலேச மடைந்து இராக்கதர்களுக்கு அபாயம் வந்துவிட்டதென வுணர்ந்து, இவ்விராக் கதர் சென்ற வழியே அந்நகரத்தை விட்டு வெளிச்சென்றன; மற்றப் பூதங்கள்

யாவும் எவ்விடத்தும் அஞ்சி நடுக்கமுற்றன; காலமூர்த்தியினால் கட்டளையிடப் பட்டவையெனப் பூமியிலும் ஆகாயத்திலும் அக்காலையில் அரக்கர்கட்கு விநாசம் விளைவதற்கு அறிகுறியாய் அநேக உற்பாதங்கள் உண்டாகத்தொடங்கின: மேகங்கள் எலும்புகளையும் உஷ்ணமான உதிரங்களையும் வருஷிக்கலாயின; கடல் கரைபுரண்டு பெருக்கெடுக்கலாயிற்று; மிகப்பெரிய மலைகள் சலிக்கலாயின; குள்ளநரிகள் மிகக்கொடிய தோற்றமுள்ளனவாகி இடிமுழக்கமென இரைந்துகொண்டு அனைவரும் அஞ்சுமாறு ஊளையிடலாயின; ஆகாயத்தினின்று பயங்கரமான பூதங்கள் பூமியில்வந்து வீழ்ந்தன; புதிதாகப் பல உக்கிரமான உருவங்கள்தோற்றின; வானத்தில் பலகழுகுகள் கொள்ளியை வாயினால் உமிழ்ந்துகொண்டு, அரக்கர்களின் தலைக்கு நேராக, எரியினாலாகிய சக்கரமென வானத்தில் வட்டமிட்டுப்பறந்தன; புறாக்களும், செங்காலுள்ள சாரிகைகளும் கொடுமையாகக் கூச்சலிட்டுக்கொண்டு சென்றன; காகங்கள் கோரமாகக்கூவின; பூனைகள் குறுக்கிட்டன.

இவ்வண்ணம் அநேகமான அபசகுனங்கள் உண்டாகையிலும் அவ்விராக்கதர்கள் சவுரியத்தினால்செருக்குற்று, அவற்றை யொருபொருட்டாக மதியாது, மிருத்தியுபாசத்தினால் கட்டியிழுக்கப்பட்டவராகித் திரும்பாமலே நேராகச்சென்றனர். அவர்களுள் மிக்க பலிஷ்டர்களான மாலியவான், சுமாலி, மாலியென்னும் மூவரும், யாகத்திற்கு அக்கினிபோல, முன் செல்பவராயினர். அம்மூவரினும் மாலியவானென்னும் மலைபோல எதற்கும் சலியாதவனான மாலியவானையே மற்றஇராக்கதர்கள் அனைவரும், பிரமதேவனைத் தேவதைகளென, முதன்மையாகப்பற்றி நின்றனர். இத்தன்மையதாகிய அவ்விராக்கதசேனை மாலியினால் நடத்தப்பட்டு வெற்றியைவேண்டி மேககர்ஜனைபோன்ற பெரியகோஷத்துடனே தேவலோகஞ்சென்றது.

இராக்கதர்கள் இவ்வாறு போர்புரியப் பெருமுயற்சிகொண்டதைச் சகலலோகேச்வரனான நாராயணன் தேவதூதர்களால் கேட்டுணர்ந்து தாமவர்களை யெதிர்க்கத் திருவுள்ளங்கொண்டவராகி, கோடிசூரியப்பிரகாசமான திவ்விய கவசமணிந்து, அளவற்ற அம்புகள்நிறைந்துள்ள அம்பறாத்தூணிகளைத் தரித்து, அரைக்கச்சைகட்டி, சங்கம் சக்கரம் கதை சார்ங்கம் கட்கமென்னும் பஞ்சாயுதங்களும்பூண்டு, சுவர்ணமலைபோலவிளங்கும் வைனதேயன்மீது ஏறியருளினர். அரக்கர்களை அதஞ்செய்யுமாறு பீதகவாடையுடுத்த காயாம்பூவண்ணன் காஞ்சனவடிவமான ககபதியின்மீதேறியவளவில், மேருமலையின் மீதமைந்த மின்னலோடுகூடியநீலமேகமென விளங்கினர். இங்ஙனம் நாராயணமூர்த்தி சங்கசக்கரம் முதலிய பஞ்சாயுதங்களுடனே புள்ளரசை வாகனமாகக்கொண்டு, ஸித்தர்கள், தேவர்கள், ரிஷிகள், உரகர்கள், கந்தர்வர், யக்ஷர் முதலானபலரும் புகழ்ந்து போற்ற, வெகுவிரைவாக அரக்கர் சேனையினருகே சென்றனர். செல்லுகையில், சுபர்ணன் சிறகுவீசியவேகத்தினாலுண்டாய வாயு தாக்கி அவ்வரக்கர்படை, நாற்புறமும் சிலைகள்சிதறிய மிகப்பெரிய கரியவரையென, பக்கங்கள் பிளக்கவும், சஸ்திரங்கள் சிதறவும் சற்றுச்சலனமுற்றது. ஆயினும் உடனே அந்நிசாசரர்கள் உற்சாக

மடைந்து, பற்பலவிதமான பகழிகளாலும், உதிரமாமிசங்கள்படிந்து ஊழிக் காலத்து எரிக்கொப்பான உக்கிரவடிவமுள்ளனவாகிய மிகச்சிறந்த பல படைக்கலங்களாலும் மாதவனைச் சூழ்ந்துகொண்டு பலவாறு துன்புறுத்த லாயினர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஏழாவது ஸர்க்கம்.

அரக்கர்கட்கும் திருமாலுக்கும் நடந்த யுத்தமும்,
அதில் மாலி மரணமடைந்ததும்.

---

"மேகங்கள் மிகப் பெரிய மலைமீது மழை பொழியுமாறு, இராக்கதர்க ளாகிய மேகங்கள் இங்ஙனம் கொடிய கர்ஜனையுடனேகூடி, நாராயணனாகிய நீல மலைமீது சரவருஷம் வருஷிக்க லாயினர். நிர்மலமான நீலமேனி யுடையனா கிய விஷ்ணுமூர்த்தியைக் கருநிறத்தவரான இராக்கதர்கள் சுற்றிக் கொண்ட வளவில், மேகங்கள் சூழ்ந்து மழை பொழியப் பெற்ற அஞ்ஜனமலை யென விளங்கினார் அவ்விஷ்ணு. இராக்கதர்கள் வில்லில் தொடுத்து விட்ட வாளிகள், வச்ராயுதத்திற் கொப்பான வீரியமும், வாயு வேகமும் மனோவேகமு முடை யனவாகி, நெல்வயலை வெட்டுக் கிளிகள் போலவும், மலையை மசகங்கள் போலவும், தேன் குடத்தை ஈக்கள் போலவும், கடலை மீன்கள் போலவும், ஸ்ரீமந் நாராயணனைச் சூழ்ந்து கொண்டன. அப் பகழிகள் பரமபுருஷ னிடம் புகுந்தது, பிரளய காலத்தில் பிராணிகள் அவர் திருமேனியில் புகுதல் போலத் தோற்றியது. ரதங்களிற் சென்றவர் ரதங்களிலும், கஜங்களிற் சென்றவர் கஜங்களிலும், துரகங்களிற் சென்றவர் துரகங்களிலும், காலாட்க ளாகச் சென்றவர் விண்ணிடையிலும் நின்று, பெரிய பருவதங்க ளென விளங் கும் அவ்விராக்கதர்கள் விஷ்ணுவின் மீது சரங்களையும், சக்தி, கட்கம், தோ மர மென்னும் ஆயுதங்களையும் விடுத்து, பிராணயாமஞ் செய்யும் பிராமணர்க ளென, விஷ்ணுவை மூச்சுவிட விட்டாது தடுத்தனர்.

மச்சங்களால் மகோததியென அவ்விராக்கதர்களால் இங்ஙனம் அடி யுண்ட அச்சுதன், சரேலெனச் சார்ங்க மென்னும் தமது வில்லை யெடுத்து வளைத்து அவ்விராக்கதர்களை நோக்கி அமோகமாக அம்புகளைத் தொடுத் தனர். காதள விழுத்து விடுக்கப் பட்ட, வஜ்ரா யுதத்திற் கொப்பான முக மும் மனோவேகமு முடையனவாய், கூரிய கணைகளால் அவ்விராக்கதர்கள் நூறு நூறாகவும், ஆயிரமாயிர மாகவும் அடியுண்டு ஓடிப்போயினர். மேலெழுந்த மழையைப் பெருங்காற்று போல, அவ்விராக்கதர்களைப் புரு ஷோத்தமன் பல பகழிகளைப் பொழிந்து பறக்கடித்து, பாஞ்சஜன்னிய மென்கிற தமது சங்கத்தை யெடுத்துப் பூரித்து பெருங்கோஷமுண்டாக்கி னார். ஸ்ரீமகாவிஷ்ணுவினால் எடுத்து ஊதப்பெற்ற பாஞ்சஜன்னியமானது தனது பெருங் கோஷத்தினால் மூவுலக்ங்களையும் மாய்ப்பதென விளங்கியது.

பாஞ்சஜன்னியத்தினது பெருங்கோஷத்தைக் கேட்ட இராக்கதர்கள், அரணியத்தில் சிங்கத்தினது கர்ஜனையைக்கேட்டமதயானைகளென அஞ்சி நடுங்கினர். சங்கநாதத்தைக் கேட்ட குதிரைகள் கதியற்றுத் தவித்தன; யானைகள் உற்சாக மழிந்து ஒய்ச்சலடைந்தன; தேர்மீதேறி நின்ற போர்வீரர்கள் பராக்கிரம மொழிந்து அத்தேர்களினின்று தரையில் வீழ்ந்தனர்.

சார்ங்கபாணியினது சார்ங்கமென்னும் சாபத்தினின்று மெழுந்த வஜ்ராயுதத்திற் கொப்பான வாளிகள் அவ்விராக்கதர்களைப் பலவாறு பிளந்து பூமியிற் புகுந்தன. நாராயணனது கைகளினின்று கிளம்பிய கணைகளால் பிளப்புண்ட பிசிதாசனர்கள், வஜ்ராயுதத்தினால் வெட்டுண்ட வரைகளெனப் பூமியில் வீழ்ந்தனர். அங்ஙனம் பிளப்புண்ட அப்பகைவரது சரீரங்களில் விஷ்ணுவின் சக்கரத்தினாலுண்டான பற்பல விரணங்களினின்றும், பருவதங்களிலுண்டாகும் சுவர்ணதாரைகள்போல உதிரம் தாரைதரையாக ஒழுகலாயிற்று. அக்காலையில் ஸ்ரீமந்நாராயணனது பாஞ்சஜன்னியத்தினின்று முண்டாகிய பேரொலியும், சார்ங்கமென்னும் வில்லோசையும், ஸ்ரீமகாவிஷ்ணுவின் அட்டஹாசமுமொன்றுகூடி அரக்கர்களின் கூச்சலினாலுண்டான பெருங்கோஷத்தை யடக்கிவிட்டன. ஸ்ரீமந்நாராயணன் சரங்களைத்தொடுத்து இராக்கதர்களது சிரங்களையும், கரங்களையும், கொடிகளையும், கார்முகங்களையும், தேர்களையும், தூணிரங்களையும் அறுத்துத் தள்ளினர். சூரியனிடத்தினின்று கிரணங்கள் போலவும், கடலினின்றும் அலைகள்போலவும், பருவதத்தினின்று பாம்புகள் போலவும், மேகத்தினின்று மழைத்தாரைகள் போலவும், நாராயணனது சார்ங்கத்தினின்றும் சரங்கள் வெகுவிரைவாய் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கிளம்பலாயின.

அங்ஙனம் அம்புகளை விடுத்த விஷ்ணு மூர்த்தியினால் அவ் விராக்கதர்கள், சரப மிருகத்தினால் சிங்கங்க ளெனவும், சிங்கத்தினால் யானைக ளெனவும், யானையினால் வேங்கைக ளெனவும், வேங்கையினால் சிறுபுலிக ளெனவும், சிறுபுலியினால் நாய்க ளெனவும், நாயினால் பூனைக ளெனவும், பூனையினால் பாம்புக ளெனவும், பாம்பினால் எலிக ளெனவும் வெருட்டப் பட்டவர்களாகி யெப்புறமும் அஞ்சியோட லாயினர்; அநேகர் அடியுண்டு அங்ஙனமே மண்மீது மடிந்தனர். இவ்வண்ணம் அநேகமாக இராக்கதர்களை மடித்து மதுசூதனன், தேவேந்திரன் சங்கநாதம் செய்வது போலத், தமது பாஞ்சஜன்னியத்தை யெடுத்துப் பூரித்தனர். நாராயணனது அம்புகளின் அடிக்குப் பயந்து, சங்கநாதத்தைக் கேட்டு நடுநடுங்கி, ஒழிந்தவைபோக மிகுந்த அரக்கர்படை அகங்குலைந்து இலங்காபுரியை நோக்கி யெழுந்து செல்ல லாகியது.

இராக்கதர் படை இங்ஙனம் பங்கமடைந்தது கண்டு அச்சேனைக்குத் தலைவனான சுமாலி, சூரியனைப் பனி தடுப்பது போல, பாணவருஷம் வருஷித்து விஷ்ணுவைத் தடுக்க லாயினன். அதுகண்டு ஸத்துவ முடையோரான சில ராக்ஷஸர்கள் மறுத்தும் தைரியங் கொண்டவர்க ளாயினர். சுமாலிமிகக் கோபங் கொண்டவனாகிச் சவுரியத்தினால் செருக்குற்று, இறந்த இராக்கதர்

களை மறுபடி பிழைப்பூட்டுவா னெனப் பெருங் கோஷஞ் செய்து கொண்டு எதிர்த்து வந்தனன். அவன் கடக மணிந்த தனது கையை யானைபோல உயர வெடுத்துக் கொண்டு ஆநந்தத்தினால், மின்னலோடு கூடிய மேகமென முழங்கினான். சுமாலி யிவ்வண்ணம் இரைந்துகொண்டு ஓடிவருவது கண்டு விஷ்ணுவானவர், அவனது தேர்ப்பாகனுடைய சொலிக்கின்ற குண்டலங்களோடுகூடிய முடியை அறுத்துத் தள்ளினார். சுமாலியினது சாரதியற்ற தேர்க் குதிரைகள் திக்குத்திசை தெரியாதனவாகித் தவிக்கலாயின; அல்லாடுகின்ற இந்திரியங்களாகிய அச்வங்களின் வழிப்பட்டுத் தைரிய மற்ற புருஷன் அல்லலுறுதல்போல, தேரோட்டியில்லாத தேர்க்குதிரைகளுடனே சுமாலி யாதுந் தோற்றாது மயங்கிநின்றனன்.

சுமாலி சாரதியற்று இவ்வாறு தவிப்பது கண்டு மாலி யென்பவன் தேர் மீதேறிக் கார்முகமும் கணையுங் கைக்கொண்டு போர்க் களத்தில் விஷ்ணுவை நோக்கி யெதிர்த்து வந்தனன். மாலி வில்லில் தொடுத்து விடுத்த வாளிகள் பொன்னணிகள் பூண்டனவாகி விசையாகச் சென்று கிரௌஞ்ச பருவதத்திற் புகுந்த பறவைகள் போலப் பரம புருஷனிடத்தில் புகுந்தன. மாலி ஆயிரமாயிரமாக அம்புகளைப் பொழிகையிலும், ஜிதேந்திரியன் துன்பங்களால் சிறிதும் சலியாமைபோல, விஷ்ணு மூர்த்தி அவற்றால் சற்றேனும் கலக்க முற்றனரல்லர். எல்லாப் பூதங்களுக்கும் பிறப்பிடமும் எதிரிகளை யதஞ்செய்பவருமான பகவான் மாலியினது நாணோசை கேட்டு அவன் மீது அமோகமாக அம்புகளைப் பொழிய லாயினர். வஜ்ராயுதமும் மின்னலுமென விளங்கும் அப்பகழிகள் மாலியினது சரீரத்திற் படிந்து, பாம்புகள் பாலைப் பருகுதல்போல, அவனது உதிரத்தைப் பருகலாயின. சங்க சக்கர கதா பாணியான நாராயணன் இவ்வாறு மாலியை மயங்கச் செய்து, அவனது மகுடம் கொடி கார்முகம் குதிரை முதலியவற்றை யறுத்துத் தள்ளினர். அரக்கர் தலைவனான மாலி உடனே தேரைவிட்டு இழிந்து கதையொன்று கைக்கொண்டு, மலைமுடியினின்று வரும் மிருகேந்திரனென விரைவாக விஷ்ணுவை யெதிர்த்து வந்தனன். விஷ்ணுவை யணுகியதும் அவ்விராக்கதன், சிவபிரானை யமன் போலவும், வரையை வஜ்ராயுதத்தினால் வாஸவன்போலவும், விஷ்ணு வாஹனமான கருடனைத் தனது கதையினால் முகத்தில் மோதினான்.

மாலியினால் இங்ஙனம் புடைபட்ட பக்ஷிராஜன் மிகத்துன்புற்று அவ் வேதனைக்கு ஆற்றாதவராகி, ஸ்ரீமகாவிஷ்ணுவைப் போர்க்களத்தினின்றும் பின்புற மெழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோயினார். மாலியினால் அடியுண்ட கருடன் கலங்கி ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் பின்புறம் திருப்பியதுகண்டு அரக்கர்கள் ஆனந்தத்தினால் அதிகமானகோஷஞ் செய்யலாயினர். அரக்கர்களின் ஆரவாரத்தைச்செவியுற்ற ஜனார்த்தனன் கோபங்கொண்டு குறுக்காகத்திரும்பி, மாலியைக் கொலைபுரியக் கருத்துடையோராகி, தாம் பராங்முகமாத்திரும்பி யிருக்கையிலும், அவன்மீது தமது சக்கராயுதத்தை விடுத்தனர். காலசக்கரத்திற் கொப்பான அந்தச்சக்கராயுதம் சூரியமண்டலத்திற்குச் சமமான சோபையுடையதாகித் தன்னொளியால் ஆகாயமெங்கும் ஒளிவீசுமாறு

செய்துகொண்டுசென்று, மாலியினது முடியை அறுத்துத்தள்ளியது. இராக்கதராஜனது பயங்கரமானஅம்முடியானது சக்ரபாணியினது சுதர்சனத்தினல் சேதிக்கப்பட்டதாகி, முன்னொருகால் வெட்டுண்ட ராகுவினது முடியென, உதிரவெள்ளம் பெருகியோடப் பூமியில்வீழ்ந்தது. அது கண்டு தேவர்கள் அனைவரும் மிக்க மகிழ்ச்சிகொண்டவர்களாகி, நன்று நன்றெனக்கொண்டாடிச் சிங்கநாதஞ் செய்தனர்.

மாலி இவ்வாறு மாதவனல் மடிந்தது கண்டு அவனது சகோதரர்களான சுமாலி மாலியவானென்னு மிருவரும் சோகத்தினல் தவிப்புண்டவர்களாகி இலங்கா புரிக்கே திரும்பியோட லாயினர். இதற்குள் வைநதேயர் விடாய் தீர்ந்து மிக்கசினங் கொண்டு உடனே திரும்பி முன்போலவே தமது பக்ஷங்களினின்று உண்டாகும் பெருங் காற்றினல் அரக்கர்களை யடித்தோட்டினர். சக்கரத்தினல் வெட்டுண்ட வதனமும், கதையினல் சூரணமாக்கப் பட்ட மார்பும், லாங்கலத்தினல் அறுப்புண்ட கண்டமும், முஸலங்களால் பிளப்புண்ட மண்டையும் உடையோர் களாயினர் அவ் விராக்கதர்கள். சிலர் கத்திக்கு இரையாகியும், வேறு சிலர் அம்புகளா லடியுண்டும், அரக்கர்கள் ஆகாயத்தினின்றும் அதிவேகமாக அம்புதியில் வீழ்ந்தனர். மின்னலோடு கூடிய மேகங்கள் இடிகளை யெறிவது போல, ஸ்ரீமானன நாராயணன் தமது கார்முகத்தினின்று அம்பு களாகிய இடிகளை யெறிந்து இராக்கதர்களைத் தலைவிரி கோலமாய் ஓடுமாறு புடைத்துப்பிளக்கலாயினர்.

அக்காலையில் அவ் விராக்கதசேனை, குடைக ளொடியவும், அஸ்திரங்கள் ஒழியவும், அம்புகளை யெய்த லொழிந்து வணங்கிய வேஷமுடையதாகி, குடல்கள் வெளிப்பட்டு அச்சத்தினல் கண்களை வெருள வெருள விழித்துக்கொண்டு யாதும் தோற்ருது மதிமயக் குற்றதுபோ லாகியது. நரசிங்கமாகிய நாராயணனல் துன்புறுத்தப்பட்ட இராக்கதர்கள் தமது யானைப்படைகளுடனே, சிங்கத்தினல் சிதறடிக்கப்பட்ட யானைக ளென, பெருங்கூச்சலிட்டுக் கொண்டு அதிவேகமா யோடலாயினர். காற்றினல் அடித் தோட்டப்பட்ட காளமேகங்களென, இராக்கதர்களாகிய கறுப்பு மேகங்கள் விஷ்ணுவினது பாணவருஷத்தினல் விலக்கப்பட்டனவாகி, பாணவருஷங்களை வருஷித்துக் கொண்டே யோடலாயின. சக்கராயுதத்தினல் சேதிக்கப்பட்ட சிரமுடையவர்களாயும், தடி யடியினல் பிண்டமாக நசுக்குண்ட சரீர முடையவர்களாயும், கத்திகள் பாய்ந்து இரண்டாக வெட்டுண்ட வடிவமுள்ளவர்களாயும் இராக்கத வீரர்கள் வரைகளென விண்ணிடை நின்று மண்ணில் விழலாயினர்; கழுத்தில் மணி மாலையும் காதிற் குண்டலமும் தொங்க, நீலமேகம் போன்ற தோற்றமுடைய வர்களான நிசாசரர்கள் ஓயாது அடியுண்டு தரையில் வந்து வீழ்வது, நீலமலைகள் மடிந்து மண்மீது வீழ்வதெனத் தோற்றியது.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் ஏழாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## எட்டாவது ஸர்க்கம்.

மாலியவான், சுமாலியென்னு மிருவரும் திருமாலுடன் போர்புரிந்து பராஜயமடைந்து பாதாளலோகம் போய்ச்சேர்ந்தது.

"ஓ ரகுராமா! பத்மநாபன் பின்புறமாகத் திரும்பியவாறே அரக்கர் படையை இங்ஙனம் அதஞ்செய்தல்கண்டு, கரையில்மோதிய கடலினலையென, மாலியவான் விசையாகத் திரும்பி வந்து, கோபத்தினால் கண்கள் சிவந்து தலையசைத்துப் புருஷோத்தமனான பத்மநாபனை நோக்கி ஒருவார்த்தை உரைசெய்ய லாயினான்: அஃதென்ன வெனில், 'அடே நாராயண! பழமையான க்ஷத்திரிய தருமத்தை நீ யறியாயோ? அதனை யறியாதவன்போல நீ, போர்புரிய விருப்பமின்றிப் பயந்தோடுகின்ற எங்களை யெதிர்த்து அதஞ்செய் கின்றனையே!

పరాఙ్ముఖవధం పాపం యఃకరోత్యసురేతరః।
సహన్తానగతస్స్వర్గం లభతేపుణ్యకర్మణాం॥

பராங்முகவதம்பாபம் யஃகரோத்யஸுரேதரஃ|
ஸஹந்தாநகதஸ் ஸ்வர்க்கம் லபதேபுண்யகர்மணாம் ||

அசுரனொழிய மற்றவனெவனேனும், போர்புரியாது பராங்முகமாயிருப்பவனைவதஞ்செய்தலாகிய பாபத்தைச்செய்வானாகில், அவனுக்குச் சொர்க்கங் கிடைப்பதின்று; அவன்செய்த புண்ணியகருமங்களுக்கும் பயனுண்டாவதின்றே. அடே! சங்கொடுசக்கரமும் கதையுங் கையிற்றரித்தகேசவ! உனக்குப் போர்புரியப்பிரியமுளதாயின், யான்இதோகாத்திருக்கின்றேன், உன்பலத்தையென்னிடத்திலே காட்டுவாய்' எனக்கூறினான்.

மாலியவான் என்கிற மலைபோலநின்று மாலியவான் என்னுமிராக்கதன் இங்ஙனம் புகன்றதுகேட்டு மஹாபலிஷ்டனான உபேந்திரன் உரைசெய்யலாயினார்: 'அடே ராக்ஷஸ! உங்களிடத்தில் அஞ்சிநடுங்கிய தேவர்களுக்கு யான் அஞ்சலென்றபயமளித்து, அரக்கர்களை யடித்தோட்டுவதாகவும் வாக்களித்தேன்; அதனையே இப்பொழுது பரிபாலிக்கின்றேன்; என்பிராணனைக் கொடுத்தாயினும் தேவர்களுக்கு எப்பொழுதும் பிரியஞ்செய்வதே எனக்குப் பெரியகாரியம்; ஆதலின் நீங்கள் பாதாள உலகம்புகினும், நான் உங்களை யதஞ்செய்வேன்' எனத்திருவாய் மலர்ந்தருளினர்.

செந்தாமரைக் கண்ணனான தேவதேவன் இவ்வண்ணம் சொன்னது கேட்டு அந்த ராக்ஷஸராஜன் மிகமுனிந்து தன்கையி லிருந்த சக்தி யென்னும் ஆயுதத்தை யெடுத்து அரியினது உரத்தை நோக்கி விடுத்தனன். மாலியவான் விடுத்தவேல் கணகண வென மணிகள் ஒலிக்க, மாதவனது மார்பிற் புதைந்து, மேகத்தினிடையே தோன்றிய மின்னலென விளங்கியது. தாமரைக் கண்ணன் அதனைக் கண்ணுற்று அந்தச்சக்தியையே தம் மார்பினின்று பிடுங்கி

* செய்த பிரதிஞ்ஞையைப் பரிபாலிப்பதே விரதமாகக் கொண்ட எனக்குப் பராங்முகமா யிருப்பவரை வதைத்தல் தோஷமாகா தென்றபடி.

மாலியவான் மீது விடுத்தனர். கோவிந்தனது கரத்தினின்று விடுபட்ட வேலாயுதமானது, சுப்பரமணிய மூர்த்தியினால் விடுக்கப்பட்ட வேல்போலவும், அஞ்சன சலத்தை நோக்கிச் செல்லும் மஹேந்திரனது சக்தி போலவும், அதிக உக்கிரத்துடன் அவ்விராக்கதனை நோக்கிச் சென்று, முக்தாஹாரங்கள் அணிந்து மிகச்சோதியாக விளங்குகின்ற மாலியவானது விசாலமான மார்பில், மலைமுடியி லிடிவிழுவது போல வேகமாகப் பாய்ந்தது. அந்தச்சக்தி தன்மீது தாக்கிய வளவில், அவ்விராக்கதன் கவசம் பிளந்து உடம்பு புண்பட்டு உடனே மூர்ச்சை யடைந்தனன். ஆயினும் அவ்வரக்கர்தலைவன் அதி சீக்கிரத்தில் ஆயாஸந் தீர்ந்து மறுபடி யெழுந்து மலைபோலச் சலியாது நின்று, முற்றும் பல முட்கள் அமைந்த மற்றொரு சூலத்தை யெடுத்து விஷ்ணுவினது வக்ஷஸ்தலத்தை நோக்கி விடுத்தனன். அவ்வளவோடு விடாது அவ் யாதுதானன் விஷ்ணுவினது மார்பினிடையே தனது கைத்தலத்தினால் மோதினான். மோதியவுடனே அவ்வரக்கன் ஒருவிற்கடை பின்னிடைந்து மறுபடி முனைந்து விஷ்ணுவினது வாகனமான வைனதேயனையும் ஒ ரறை யறைந்தனன். அதுகண்டு அரக்கர்கள் ஆகாயத்தில் நன்று நன்றென ஆனந்த கோஷஞ் செய்தனர்.

மாலியவான் தன்னை மோதியது கண்டு கருடபகவான் கோபம் அதிகரித்தவராகி, தமது பக்ஷங்களை வீசிப் பெருங்காற் றுண்டாக்கி அதனால் அவ் விராக்கதனை, பெருங்காற் றடிக்கையில் உலர்ந்த சருகுகள் படும் பாடுபடச் செய்தனர். பக்ஷிராஜனது பக்ஷவாதத்தினால் தனது பூர்வஜன்ம நிலைகொள்ளாது அதன் வழியே யகப்பட்டு ஒடியலைவது கண்டு சுமாலி தன்சேனைகளுடனே இலங்காபுரியை நோக்கிச் செல்லலாயினான். பெரியதிருவடியினது பக்ஷ வாதத்தின் வழிப்பட்ட மாலியவானும் வெட்கித்தலைகுனிந்து இலங்காபுரிக்கே யோடலாயினான்.

ஓ கமலலோசன! இராக்கதர்கள் அனைவரும் இவ்வண்ணம் விஷ்ணு மூர்த்தியினால் பலவாறு போரில் பராஜயமடைந்து, முதன்மையான சேனாவீரர்களும் வதையுண்டு மாண்டவளவில், மறுத்தும் அவர்கள் விஷ்ணுவை யெதிர்க்கத் திறமையற்றவர்களாகி அஞ்சி யகங்குலைந்து இலங்காபுரியை யொழித்துப் பாதாளலோகத்தில் தங்கள் பத்தினிமார்களுடனே குடி புகுந்து வசிக்கலாயினர். ஓ ரகுவீர! ஸாலகடங்கடையின் குலத்திற் றோன்றிய இவ் விராக்கதர்கள் இங்ஙனம் சுமாலியைத் தலைவனாகக்கொண்டு வாழ்ந்தனர்; அவர்கள் பல பராக்கிரமங்களில் மிகச்சிறந்தவர்கள். தேவரீரால் வதையுண்ட புலஸ்தியவமிசத்து இராக்கதர்கள் அனைவரினும், சுமாலி, மாலியவான், மாலி முதலாயமுன்னிராக்கதர்கள் மிகவும் அதிகமானபலபராக்கிரமமுடையவர்கள்; லங்கேச்வரனான இராவணனிலும் அவர்கள் அதிகமான ஆற்றலுடையவர்கள்.

தேவதைகளுக்கு வைரியாய் அவர்களைத் துன்புறுத்தும் இராக்கதர்களை வதைக்க வல்லவர் சங்கசக்கரகதாதரனான ஸ்ரீமந்நாராயணனொருவனொழிய மற்றெவருமிலர். சதுர்பாகுவும் ஸநாதநனுமான அந்த நாராயணனே தேவரீர்; இராக்கதர்களை வதை செய்யும் நிமித்தமே தேவரீர் இங்ஙனம் திருவவதரித்

தருளியது; தேவரீர் எவராலும் வெல்வதற்கரிய என்று மழிவில்லாத பிரபுவன்றோ? தேவரீர் இவ்வண்ணமே ஏற்ற தருணங்களில், தருமத்தை நிலை நிறுத்தவும், அடியார்களிடத்தில் அருள் புரிந்து அவர்களைப் பாதுகாக்கவும், பகைவர்களை வதைக்கவும் திருவவதாரஞ் செய்தருளுவது. மஹா ராஜனே! அரக்கர்களின் ஆதி யுற்பத்தி வரலாற்றை விளங்கக் கூறினேன். ஓ ரகுநந்தன! இனி இராவணனது பிறப்பையும் பெருமையையும், அவனது புத்திரனது பிறப்பு வளர்ப்பு வரலாறுகளையும் விண்ணப்பஞ் செய்கின்றேன். சுமாலி யென்னும் இராக்கதன் விஷ்ணுவினிடம் வெருண்டவனாகிப் பாதாள லோகத்தில் குடி புகுந்தவளவிலே, இலங்காபுரியில் தனேசுவரனான குபேரன் தனது புத்திர பௌத்திராதிகளுடனே வசிக்கலாயினான்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில்
எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது ஸர்க்கம்.

சுமாலியின் மகளான கைகஸிக்குத்
தசக்கிரீவன், கும்பகர்ணன், விபீஷணன், சூர்ப்பணகி இவர்கள் பிறந்ததும்,
பின்னர் இராவணாதியர் மூவரும் தவம்புரியக் கோகர்ண க்ஷேத்திரஞ் சென்றதும்.

---

“இவ்வாறு சிலகாலஞ் செல்லுகையில், சுமாலியென்னு மிராக்கதன் நீலமேகம்போன்ற மேனியுடையனாய், பசும்பொன்னாலாகிய பளபளப்பான குண்டலங்கள் அணிந்து, கன்னிகையாகிய தன் மகளுடனே, பாதாளலோகத்தை விட்டுப் புறப்பட்டுப் பூலோக முழுமையும் விநோதமாகச் சஞ்சரிக்கலாயினான். அக்காலையில் அக்கன்னிகை தாமரைமலரைவிட்டு வந்த ஸ்ரீமகாலக்ஷ்மி யென விளங்கினாள். அப்பொழுது ஒருநாள் குபேரன் விநோதமாகப் புஷ்பக விமானத்திலேறித்தனது தந்தையான பௌலஸ்தியரைத் தரிசிக்கச்சென்றனன். அவனைக் கண்ணுற்ற சுமாலி மிகவியப்புற்றவனாகிப் பாதாள லோகஞ் சென்று அரக்கர்களின் இதத்தைக் கருதி, ‘இனி யெமக்கு நன்மை விளைவிப்பது யாது? இனியாம் தலையெடுப்பது எங்ஙனம்?’ என ஆலோசிக்க லாயினான். பின்னர் கைகஸியென்னும் பெயர்பெற்ற தன் மகளை நோக்கி, “குழந்தாய், உனக்குப்பருவம் வந்துவிட்டது; இஃது கன்னியாதான காலமன்றோ? நாங்கள் இப்பொழுது பயந்து இப்பாதாள லோகத்திலொளித்திருப்பதனால், யாங்கள் வெளியே சென்று உன்னை யெவர்க்கும் பாணிக்கிரஹணம் செய்து கொடுப்பதற்கில்லை; உனக்கு விவாஹமாகவேண்டுமென்பதற்காகவே நாங்கள் அனைவரும் மிகப் பிரயாஸப்பட்டுக்கொண்டிருக்கின்றோம். குழந்தாய்! நீ ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மிபோலவே எல்லா நற்குணங்களும் அமைந்திருக்கின்றனை.

కన్యాపితృత్వందుఃఖంహి సర్వేషాంమానకాంక్షిణాం।
నజ్ఞాయతేచకఃకన్యాం వరయేదితికన్యకే ॥
మాతుఃకులంపితృకులం యత్రచైవప్రదీయతే।
కులత్రయంసదాకన్యా సంశయేస్థాప్యతిష్ఠతి॥

கந்யாபித்ருத்வம்துக்கம்ஹி ஸர்வேஷாம்மாநகாங்க்ஷிணாம் |
நஜ்ஞாயதேசகஃகந்யாம் வரயேதிதிகந்யகே ||
மாதுஃகுலம்பித்ருகுலம் யத்ரசைவப்ரதீயதே |
குலத்ரயம்ஸதாகந்யா ஸம்சயேஸ்தாப்யதிஷ்டதி ||

மகளே! பெண்ணுக்குத் தந்தையாகுதல், மானத்தை வேண்டுகின்றவர் அனைவர்க்கும் துக்கமேயாம்; ஏனெனில், தன் கன்னிகையை வரிக்கின்றவ னின்னானெனத் தெரிவதில்லையே; விவாஹமான பின்னரும் அவளது ஒழுக்க மெங்ஙன மாகுமோவென, அவளது தாய்க்குலம், தந்தையின் குலம், அவள் வாழ்க்கைப்பட்ட பர்த்தாவின் குலம் ஆகிய முக்குலத்தவரையும் கன்னிகை யெப்பொழுதும் கலக்கமுற்றிருக்குமா றல்லவோ செய்கின்றனள். ஆதலின், என் செல்வப் புதல்வி! நீ இப்பொழுது பிரமதேவரது குலத்திற் றோன்றிய புலஸ்தியரது புத்திரரான விச்சிரவஸர் என்னும் சிறந்த முனிவரரை நண்ணி அவரைச் சுயம்வரமாக வரித்துக்கொள்க. அவரது அநுக்கிரஹத்தினால், இந்தத் தனேசுவரன் எத்தன்மையனோ, அத்தன்மையான பெருமையுடைய வர்களாய், சூரியனுக்குச் சமமான சோதிபெற்ற புதல்வர்கள் உனக்குப் பிறப் பார்கள்; இதற்கையமின்று" என்று கூறினான்.

தந்தையினது வார்த்தையைச் செவிக்கொண்டு அம்மகள் அவரிடமுள்ள கௌரவத்தினால் அங்ஙனமே யுடன்பட்டுப் புறப்பட்டு விச்சிரவஸ முனிவர் தவம்புரியுமிடஞ்சென்று நின்றனள். அவள் ஆங்கு சென்றகாலையில் புலஸ் திய புத்திரரான பிராமணர் அக்கினி ஹோத்திரஞ் செய்துகொண்டு நான்கா வது அக்கினிபோல விளங்கினர். அஃது அக்கினி ஹோத்திரஞ்செய்யும் உக்கிரமான வேளை யென்பதைக் கருத்திற்கொள்ளாது அம்மகள் தனது தந்தையின் பெருமையையே பெரிதாக வெண்ணி அம்முனிவரது சமீபத் திற் சென்று, அவரெதிரில் தலைகுனிந்து தன் கால்களையே நோக்கிக்கொண்டு நின்றனள். அம்முனிவரோ, முழுமதிபோன்ற முகமுடையளாகி மிகச்சோதி யான வடிவழகுடனே தலை குனிந்து கால் கட்டைவிரல் நுனியினால் அடிக்கடி பூமியைக் கீறிக்கொண்டு நின்ற அப்பெண்மணியைக் கண்ணுற்று, அவளிடம் கருணை கூர்ந்து, 'நங்காய்! நீ யாருடைய மகள்? எத்தேசத்திலிருந்து இங்கு வந்தனை? என்னால் உனக்கு ஆகவேண்டியது ஏதேனு முளதோ? நீ வேண்டி வந்த காரியம் யாது? உண்மையாக என்னிடம் உரைசெய்வாய்' என வின வினர்.

அதனைச் செவியுற்ற அம்மகள் கைகூப்பிக்கொண்டு கூறுகின்றனள்: 'ஸ்வாமி! மஹாயோகியான தமக்குத் தமது பிரபாவத்தினாலேயே அடி யாள்கொண்ட கருத்து இன்னதென விளங்குமன்றோ? முனிபுங்கவரே! அடி

யாள் சுமாலியென்னும் இராக்ஷஸராஜன் மகள்; தந்தையினது கட்டளையினால் இவ்விடம் வந்தவள்; அடியாளது நாமதேயம் கைகஸி யென்பதாம்; மற்ற விவரங்களைத் தேவரீரே உணர்ந்தறிந்துகொள்க' என வணங்கி விண்ணப்பஞ் செய்தாள். அதுகேட்டு அம்முனிவர் உடனே ஞானதிருஷ்டியினால் நோக்கி அவள் வந்த காரியத்தைத் தெரிந்துகொண்டு அவளை நோக்கிக் கூறுகின்றனர்: 'கல்யாணி! நீ உன் உள்ளத்திற்கொண்ட கருத்து இன்னதென்பது எனக்கு இப்பொழுது நன்றாகத் தெரியவந்தது; மதயானைபோன்ற மந்தக மனமுடைய மாதே! நீ யென்னிடத்தில் மக்களைப்பெற விரும்பியன்றோ இவ்விடத்திற்கு வந்தனை? அங்ஙனமே உனக்குப் புத்திரபாக்கிய முண்டாகத் தடையில்லை; ஆயினும் நீ யென்னிடம் வந்தவேளை மிகவும் உக்கிரமான ஆசுர வேளை யாதலின், உனக்கு எத்தன்மையரான புதல்வர்கள் உற்பவிப்பார்களோ, அதனை யுரைக்கின்றேன் கேள்; நீ என்னிடம் வந்த உக்கிரமான காலத்திற்கேற்றபடி, கொடிய செய்கையும், பயங்கரமான நினைப்பும், பயங்கரமான தோற்றமும், கொடியவர்களிடத்தில் அன்பு முடையவர்களான ராக்ஷஸர்கள் உற்பவிப்பார்கள்' என்று கூறினர்.

அதனைச் செவிக்கொண்ட கைகஸி அவரை வணங்கி, 'ஓ மகிமைபெற்ற முனிபுங்கவரே! மஹாப்பிரம்மவித்தான தேவரீரிடத்தில் அடியேன் தீயொழுக்கமுடையோரான தீய புதல்வர்களை வேண்டினே னில்லையே! அடியாளிடம் அருள்புரிக' எனப் பிரார்த்தித்தனள். கன்னிகையாகிய கைகஸியிவ்வண்ணம் வேண்டியது கேட்டு விச்சிரவஸ முனிவர் மறுபடி அவளை நோக்கி, 'இந்துமுகி! நீ இங்ஙனம் வேண்டுகின்றமையால், உன்னுடைய கடைசி குமாரனொருவன்மாத்திரம் எனது குலத்திற்கு ஏற்ற தருமபுத்தியும் நல்லொழுக்கமு முடையவனாக உற்பவிப்பான்' என, ரோகிணியை நோக்கிப் பூர்ணசந்திரன் புகல்வதெனப் புகன்றனர்.

ஓ ராம! இவ்வாறு இருக்கையில் சிலகாலஞ்சென்ற பின்னர், கைகஸி மிக விகாரமான தோற்றமுடைய பயங்கரமான ராக்ஷஸனைப் பெற்றனள். அவன் பத்துத்தலையும், கோரப்பல்லும், மைபோன்ற மேனியும், தாம்பிர நிறமான உதடும், இருபது புஜங்களும், மிகப் பருத்தவாயும், எரி நிறமான மயிரும் உடையனா யிருந்தனன். அவன் உற்பவித்த வேளையில் குள்ளநரிகள் கோரமாக வாயினால் வன்னியைக் கக்கின; கொடிய பறவைகள் அப்பிரதக்ஷிணமாக வட்டமிட்டுக்கொண்டு எங்கும் ஸஞ்சரித்தன; வானத்தினின்று குருதி மழை பொழிந்தது; மேகங்கள் கொடுமையாகக் கழுதையெனக் கர்ஜ்ஜித்தன; சூரியன் ஒளி மழுங்கினன்; எரிகொள்ளிகள் ஆகாயத்தினின்றும் எரிந்துகொண்டு வீழ்ந்தன; பூமிமுழுமையும் நடுக்க முற்றது; காற்று மிகக் கொடுமையாகவீசியது; ஸகல நதிகளுக்கும் நாயகமாய் என்றும் கலங்காத கடல் கலக்க முற்றது. அப்புத்திரன் பத்துத்தலையுடையனாகவே பிறந்தமையால் அவனுக்குப் பிதாமஹனென மகிமைபெற்ற அவனது பிதா 'தசக்கிரீவன்' என நாமகரணஞ்செய்தனர். அவனுக்குப் பின்னர் மஹாபலிஷ்டனான கும்பகர்ணன் உற்பவித்தனன். உருவத்தில் அவனிலும் பெரியபொருள் இவ்வுலகில் எங்குமில்லை.

அவனுக்கு இளையவளாய் விகாரப்பட்ட முகமுடையளாகிய சூர்ப்பணகி ஜனித்தனள். தருமாத்மாவான விபீஷணர் கைகஸியின் கடைசி குமாரராம். மஹா ஸத்துவகிதியான அவர் உற்பவித்த வளவில் பூமாரி பொழிந்தது; வானவர்கள் விண்ணிடையே துந்துபி முழக்கினர். ஆகாயத்தில் நன்று நன்றெென ஆநந்த கோஷமுண்டாகியது.

தசக்கிரீவனும் கும்பகர்ணனுமாகிய இருவரும், உலகமெல்லாம் கண்டு அஞ்சுமாறு மஹா பராக்கிரமசாலிகளாய் அவ்வனத்தினிடையே வளர்ந்தனர்கள். கும்பகர்ணன் மிக மதித்தவனுகி, தருமத்தையே விரும்பியவர்களான மகரிஷிகளையும் மற்றுமுள்ள மூவுலகத்தவரையும் பிடித்துப் புசித்துக்கொண்டு பெருமகிழ்ச்சி கொண்டவனுகி யெங்கும் திரிந்தனன். தருமாத்மாவான விபீஷணரோ, வேதமோதுதலே எப்பொழுதும் ஓயாத உணவாகக்கொண்டு, உபவாஸத்தினுல் இந்திரிய நிக்கிரகஞ்செய்து என்றும் தருமத்திலேயே நிலைகொண்டிருந்தனர்.

இஃது இங்ஙனமிருக்கையில், சிலகாலத்திற்குப் பின்னர் ஒருநாள் தனேசுவரனுன குபேரன் புஷ்பகவிமானத்திலேறித் தந்தையைத் தரிசிக்குமாறு அவ்விடத்திற்கு வந்தனன். சோதிமயமாக விளங்குகின்ற அவனைக் கண்ணுற்றுக் கைகஸியென்னுமிராக்ஷஸி தன்மகனுன தசக்கிரீவனிடஞ் சென்று 'என் செல்வப்புதல்வனே! உனது பிராதாவான இவ்வைச்சிரவணனைக் கண்ணுற்றனையா? இவன் எவ்வளவு பெருமைபெற்று விளங்குகின்ருன்! உடன் பிறப்பில் நீ அவனுக்கு ஒப்பானவனுகவே யிருக்கையிலும், நீ இத்துணை வறியனு யிருக்கின்றனையே! ஓ தசக்கிரீவா! என் அருமைமகனே! நீ மிகமற்ற பராக்கிரம முடையோனுதலின், நீ எவ்வண்ணம் இவ்வைச்சிரவணனுக்குச் செல்வத்தி லிணையாகுவையோ, அவ்வண்ணம்முயல்க' எனவுரைத்தனள்.

தாய் இங்ஙனம் கூறியதுகேட்டுப் பிரதாப முடையோனுன பத்துத்தலையோன் மிகக்கோபங்கொண்டு, அப்பொழுதே அன்னையைநோக்கி, 'அம்மா! யான் என் பிராதாவுக்குச் சமமாகவோ, மேலாகவோ சிறப்புப்பெற்று வருகின்றேன், இஃது உண்மை, உன்னிடம் பிரதிஞ்ஞை பண்ணுகின்றேன்; நீ மனத்திற்கொண்ட வருத்தத்தை இவ்வளவோடு ஒழித்துவிடுக' என வுறுதிமொழி கூறினுன். இங்ஙனம் அன்னையிட முரைசெய்து தசகந்தரன் அதே கோபத்துடனே, யான் தவம்புரிந்து எனக்கு வேண்டியவைகளைப் பெறுவேனென மனவுறுதிகொண்டு தவம்புரியத் துணிந்து, செயற்கரிய செய்கைகளைச் செய்தல்வேண்டுமென்ற விருப்புடையனுகி, தன் தம்பிமாருடனே கோகர்ணக்ஷேத்திரஞ்சென்றனன். உக்கிரமான விக்கிரமமுடையனுன அவ்விராக்கதன் அந்த க்ஷேத்திரத்திலே தன் தம்பிகளுடனே அருந்தவம்புரிந்து பிரமதேவனை யகமகிழச்செய்தனன். பிதாமஹரும் தசக்கிரீவனது தவத்தினுல் சந்தோஷமடைந்தவராகி அவனுக்கு வெற்றியை விளைவிக்கவல்ல வரங்களை யளித்தனர்" எனமொழிந்தனர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பத்தாவது ஸர்க்கம்.

தசக்கிரீவன் முதலிய மூவரும் தவம்புரிந்து பிரமதேவரிடம் வரம்பெற்றது.

அகஸ்தியமுனிவர் இவ்வாறு உரைசெய்தது கேட்டு ஸ்ரீராமன் அகமகிழ்ச்சிகொண்டு, மஹா பலிஷ்டர்களான அவ்விராக்கதர்கள் எவ்விதமான தவம்புரிந்தனர் என மறுபடியும் வினவ, அம்முனிவர் மறுமொழி மொழியலாயினர்: "ஓ ராம! சொல்லுகின்றேன் கேளும்: அந்தப்பிராதாக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தருமநியமத்தை மேற்கொண்டனர். கும்பகர்ணன் அறநெறி தவறாது மிகமுயற்சிகொண்டவனாகி, கோடையில் *பஞ்சாக்கினி மத்தியிலே நின்று பெருந்தவம் புரிந்தனன்; மாரிகாலத்தில் மேலே மழைபொழிகையிலும் இருந்தவிடம் விட்டசையாது † வீராஸனங்கொண்டு வீற்றிருந்தனன்; சீதகாலத்தில் ஓயாது ஜலத்தினிடையே நின்று தவம்புரிந்தனன். நன்னெறி பிறழாது தருமத்திலே நிலைகொண்டு தவம்புரிகையில், அவனுக்கு இவ்வண்ணமே பதினாயிரமாண்டுகள் கழிந்தன. தருமாத்மாவான விபீஷணரோ, மிகப்பரிசுத்தராய் என்றும் தருமத்திலேயே நோக்குடையவராகி, ஒரேகாலினால் ஊன்றி நின்று ஐயாயிரமாண்டு அருந்தவம் புரிந்தனர். அவர் மேற்கொண்ட விரதம் முற்றுப்பெற்றவளவில், தேவமகளிர் ஆனந்தக்கூத்தாடினர்; பூமாரி பொழிந்தது; தேவர்கள் அனைவரும் கலக்கமுற்றனர். மறுத்துமவர் அவ்வண்ணமே ஒற்றைக்காலினால் நின்று ஈச்வரத் தியானத்திலேயே மனத்தை நிலைக்கச்செய்து, கைகளையும் தலையையும் உயரவெடுத்து ஆதித்தனை நோக்கியவண்ணமே ஐயாயிரமாண்டு உறுதிகொண்டிருந்தனர். இவ்வண்ணம் விபீஷணருக்கும் பதினாயிரமாண்டுகள் கழிந்தன; அப்பதினாயிரமாண்டுகளும் அவருக்குத் தேவலோகத்திலே நந்தனவனத்திடை வசிக்குமாறு விநோதமாகச் சென்றன; அதில் அவர் அணுவளவும் ஆயாஸமடைந்தவரல்லர்.

தசாநநனும் இவ்வாறே ஆகாரத்தை யொழித்தவனாகிப் பதினாயிரமாண்டு விரதங் கொண்டிருந்தனன். அக்காலையில் அவன் ஒவ்வோராயிரமாண்டு கழிகையிலும், தனது முடிகளி லொவ்வொன்றை அக்கினியில் ஓமஞ்செய்து வந்தனன். இவ்விதமாக ஒன்பதினாயிர மாண்டுகள் செல்ல, அவனது ஒன்பது முடிகள் அக்கினியில் ஓமஞ் செய்யப்பட்டன. கடைசியாகிய பத்தாவது ஆயிர மாண்டு முற்றுப் பெறுமளவில் தசாநநன் தனது பத்தாவது முடியையும் அறுத்து ஆவுதிசெய்ய ஆவல்கொண்டவனாயினன். அதுகண்டு பிரமதேவர் மிகுந்த ஸந்தோஷ மடைந்தவராகி, அத்தருணத்தில் ஸகலமான தேவர்களுடனும் அவ்விடம் வந்து அவனுக்குப் பிரஸன்னராகி, அவனை நோக்கி, 'ஓ தசக்கிரீவ! நீ செய்த அருமையான செயல்களைக் கண்டு யான் ஆநந்தபூரிதனாயினேன்; உனக்கு விருப்பமான வரங்களை உடனே வேண்டுக; நீ கேட்ட வரம் கொடுக்கின்றேன்; நீ பட்டபாடு வீணாகாது' என விளம்பினர்.

* பஞ்சாக்கினி = ஐந்து அக்கினி; சுற்றி நாற்புறமும் தீ வளர்த்து மேலே சூரியனெரிய, இவற்றினிடை தவம் புரிதல்.

† வீராஸநம் = வலதுகாலை இடது தொடைமீது போட்டுக்கொண்டு உட்காருதல்.

அதனைச் செவியுற்ற தசகந்தரன் அகமகிழ்ந்தவனாகி அத்தேவனைமுடி தாழ்த்தி வணங்கி, ஆநந்தத்தினால் தழதழத்த குரலுடனே கூறுகின்றனன். 'ஓ பகவன்! பிராணிகளுக்கெல்லாம் மரணமே மிகுந்த பய முண்டாக்குவது; மரணமொன்று தவிர மற்றெதற்கும் பிராணிகள் பயப்படுவ தில்லை; மிருத்தியுவே அனைவர்க்கும் கொடிய சத்துருவாம்; மிருத்தியுவுக்குச் சமமான சத்துரு மற்றெவனுமில்லை; ஆதலின், யான் மரணமின்றி அமரனாக வரம் வேண்டுகின்றேன்' என்றனன். அதுகேட்ட பிரம்மதேவர் தசக்கிரீவனை நோக்கி, 'தசாநநா! அங்ஙனம் என்றும் மரணமின்றி அமரனாயிருக்கை யியலாதன்றோ? ஆதலின், ஈதொழிய வேறு வரம் வேண்டுக' என்றனர். ஓ ராமா! லோக கர்த்தாவான பிரம்மதேவர் இங்ஙனம் கூறியது கேட்டுத் தசக்கிரீவன் அவரெதிரே கைகூப்பிக்கொண்டு வரம் கேட்க லாயினன்: 'உலகமனைத்தும் படைக்கும் பிரமதேவனே! அங்ஙனமாயின் சுபர்ணர், நாகர், யக்ஷர், தைத்தியர், தானவர், ராக்ஷஸர், தேவர்கள் ஆகிய இவர்கள் அனைவரிடத்தும் எனக்கு என்றும் மரணமில்லாதிருக்க வரமளிக்க வேண்டுகின்றேன். தேவர் தொழும் பெருமானே! எனக்கு மற்றப் பிராணிகளிடத்துச் சிறிது மச்சமிலது; மானிடர் முதலாய மற்ற ஜீவன்களெல்லாம் எனக்குச் சிறு துரும்பளவே யன்றோ' என வேண்டி விண்ணப்பஞ்செய்தனன்.

இராக்ஷஸனான தசகந்தரன் இவ்வண்ணம் கூறியதுகேட்டுப் பிரமதேவர் 'அங்ஙனமே யாகுக' வென மற்றெல்லாத் தேவர்களுடனும் அவனுக்கு வரமளித்து, பின்னும் பிரமதேவர் அவனை நோக்கி, ஓ தசாநநா! நான் உனது செய்கையினால் அகமகிழ்ந்து உனக்கு மற்றுமொரு வரமளிக்கின்றேன்: நீ முன்பு உனது முடிகளைக் கொய்து அக்கினியில் ஆவுதிசெய்தனையன்றோ, தழலிலிட்ட அத்தலைகள் அங்ஙனமே மறுத்தும் முளைக்கக் கடவன. ஓ ஸௌமிய! உனக்கு மற்றொரு அருமையான வரமுமளிக்கின்றேன்: நீஎப்பெப்பொழுது எந்தெந்த விதமாக உருவமெடுக்க வேண்டுகின்றனையோ, அப்பப்பொழுது அந்தந்தவிதமானஉருவம் உனக்கு எனது வரத்தின் மகிமையால் உண்டாகும், இதில் சந்தேகமின்று' என அருள் புரிந்தனர். பிரம்மதேவர் இவ்வாறு சொன்னவளவிலே, தசக்கிரீவன் அக்கினியில் அறுத்து ஓமஞ்செய்த முடிகள் அனைத்தும் அப்பொழுதே முளைத்தெழுந்தன.

ஓ தாசரதே! தசக்கிரீவனுக்கு இவ்வண்ணம் வரமளித்துப் பிரமதேவர், விபீஷணனை நோக்கி, 'வத்ஸ, வீபீஷணா! நீ தருமபுத்தியுடையோனாகிப் புரிந்த தவத்தினால் யான் மிக்க மகிழ்ச்சி கொண்டவனாயினேன்; நீ விரும்பிய வரத்தை வேண்டுக' என மொழிந்தனர். கிரணங்கள் பூர்ணமாக நிறைந்து விளங்கும் சந்திரனென, எல்லா நற்குணங்களும் என்றும் நிறைந்து விளங்குகின்ற தருமாத்மாவான விபீஷணன் அது கேட்டு அஞ்சலிஹஸ்தனாய்ப் பிரம்மதேவனை நோக்கிப் புகல்கின்றனன்: 'ஓ பகவன்! லோக குருவான தேவரீரே இங்ஙனம் அடியேனிடம் அருள் புரிந்து பிரத்தியக்ஷமானபொழுது, இனி அடியேனுக்கு என்ன குறையுளது; அடியேன் கிருதகிருத்தியனாயினேன். ஆயினும் தேவரீரே திருவுள்ளமுவந்து வரமளிக்க விருப்புற்றிருக்

இன்றமையால், ஒருவரம் வேண்டுகின்றேன்: அடியேன் எவ்விதமான ஆபத்தை யடைகையிலும் எனது மனம் தருமத்திலேயே நிலைகொண்டிருக்குமாறு அருள் புரிக; அன்றியும், அப்பியாஸமின்றியே பிரம்மாஸ்திரம் அடியேனுக்கு நன்கு விளங்குக; அடியேனுக்கு எந்தெந்தவிதமான புத்தி யுண்டாகின்றனவோ, அவையாவும் தருமபுத்தியாகவே யிருத்தல்வேண்டும்; எந்தெந்த ஆச்சிரமத்தை மேற்கொண்டிருக்க அடியேன் விரும்புகின்றேனே, அந்தந்த ஆச்சிரமத்திற்குரிய தருமங்களையே அடியேன் பரிபாலித்து வர வரமளிக்க வேண்டுகின்றேன். எல்லாவரங்களினும் முதன்மையானவர மிதுவேயென அடியேன் புத்திக்குத் தோற்றுகின்றது; தருமத்திலேயே நிலைகொண்டவர்களுக்குக் கிடைத்தற்கரியது யாதுமிலதன்றோ?' என விண்ணப்பம் செய்தனன். அதைக்கேட்ட பிரமதேவர் பிரீதராகி விபீஷணனை நோக்கி, 'வத்ஸ, நீ எவ்வண்ணம் தருமிஷ்டனு யிருக்கின்றனையோ, அவ்வண்ணமே நீ வேண்டியது உனக்குக் கிடைக்கலாகும்; சத்துருக்களைச் சிதைக்கவல்ல வீரனே! நீ இராக்ஷஸ யோனியில் ஜனித்திருக்கையிலும் உனக்கு அதருமத்தில் புத்தி புகாமைபற்றி, அமரனுபிருக்க உனக்கு வரமளிக்கின்றேன்' என உரைத்தருளினர்.

விபீஷணனுக்கு இவ்வாறு வரமளித்தபின்னர் கும்பகர்ணனுக்கு வரங்கொடுக்கக் கருத்துக்கொண்டு நின்றனர் பிரமதேவர். அதுகண்டு தேவர்கள் அனைவரும் அவரைநோக்கிக் கைகூப்பிக்கொண்டு கூறலாயினர்: 'ஸ்வாமி' தேவரீர் கும்பகர்ணனுக்கு வரங்கொடாதிருக்க வேண்டுகின்றோம்; துர்ப்புத்தியுடையனுன இவன் எல்லா வுலகங்களையும் நடுக்கமுறச் செய்கின்றனனென்பது தேவரீருக்குத் தெரிந்ததேயன்றோ? இவன் நந்தனவனத்தில் எழு அப்ஸர ஸ்திரீகளையும், தேவேந்திரனது அநுசரர்கள் பதின்மரையும் பிடித்துப் புசித்தனன்; இங்ஙனமே அநேகம் முனிவர்களையும் மானிடர்களையும் புசித்திருக்கின்றான். இவன் வரம் பெறுதற்கு முன்னரே இங்ஙன மியற்றுகின்றன னென்றால், வரமும் பெற்றுக்கொள்வானுயின், மூவுலகங்களையும் பக்ஷித்துவிடுவானன்றோ? ஆதலின் மகிமையிற் சிறந்தமேலோய்! வரமென்கிற வியாஜத்தினால் இவனுக்கு மயக்கத்தைத் தந்தருள்வீர்; அங்ஙன மளிப்பதனால் எல்லா வுலகங்களுக்கும் க்ஷேமமளித்ததாகும்; இவனுக்கும் அஃது உடன்பாடாகும்' என்றனர்.

தேவர்கள் இவ்வாறு உரைசெய்ததுகேட்டுப் பிரமதேவர் ஸரஸ்வதி தேவியைச் சிந்தித்தனர். சிந்தித்த வளவிலே நாமகள் அவர்பக்கலில் வந்து நின்றனள். பக்கத்தில்வந்ததும் பர்த்தாவை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு கலைமகள், 'ஹேதேவ! இதோ வந்திருக்கின்றேன், அடியாள் செய்தற்குரியது யாது?' என ஏகாந்தமாக மெல்லியகுரலாய் இயம்பினள். பாரதி தம் அருகேவந்து நிற்பதுகண்டு பிரமதேவர் அவளை நோக்கி, வாணீ! நீ இக் கும்பகர்ணனது வாக்கில் வாக்குக்குரிய தேவதையாய்ப் புகுந்து நமக்கு விருப்பமான மொழியாக அவனது வாயினின்று நீ வெளிவருக' என்றனர். அங்ஙனமேயாகுகவென்று அயன்மனைவி உடன்பட்டுக்கும்பகர்ணனது வாயில்

அமைந்தனள். பிறகு பிரம்மதேவர் அவனைநோக்கி, 'மஹாபாகோ, கும்பகர்ண! உனக்கு வேண்டிய வரம் யாது? விளங்கக் கூறுவாய்?' என வினவினர். அதனைச் செவியுற்ற கும்பகர்ணன், 'ஹே தேவ! யான் பலவாண்டுகள் ஒரு தன்மையாகத் துயில்கொள்ள விரும்புகின்றேன்! என வேண்டினன். அது கேட்டுப்பிரம்மதேவர் அங்ஙனமேயாகுகவென்று உரைத்து, தேவர்களுடனே புறப்பட்டுச்சென்றனர். ஸரஸ்வதி தேவியும் அவ்விராக்கதனை விட்டுச் சென்றனள்.

நான்முகனுடனே தேவர்கள் விண்ணுலகஞ்சென்று நாமகளும் தன்னை விட்டு நீங்கிய பின்னர் கும்பகர்ணனுக்குத் தன் நினைவு வந்தது. பிறகு துஷ்டாத்துமாவான அக்கும்பகர்ணன் மிகுந்த துக்கமடைந்தவனாகி, ஆ! வரங் கேட்க விருப்புற்ற என் வாயினின்றும் ஏன் இத்தன்மையான சொல் வெளி வந்தது! ஆ! அப்பொழுது இவ்விடம் வந்திருந்த் தேவர்கள் என்னை மயக்கி விட்டார்களென வெண்ணுகின்றேன்! எனச்சிந்தித்து வருந்தலாயினன். அந்தப் பிராதாக்கள் மூவரும் இவ்வண்ணம் வரம் பெற்றவர்களாகி மிகச்சிறப் புற்று, சிலேஷ்மாதக மென்னும் நறுவிலிக்காடுக ளடர்ந்த தந்தையினது தபோவனம் புகுந்து ஆங்கு சுகமாக வசித்திருந்தனர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில்
பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினோராவது ஸர்க்கம்.

பிரஹஸ்தனது போதனையைக் கேட்டு இராவணன் இலங்கையிற் குடி புகுந்ததும், தனதிபதி அதனைவிட்டுக் கைலாஸஞ் சென்றதும்.

---

இந்த இராக்கதர்கள் இவ்வாறு மேலான வரம்பெற்ற செய்தி உடனே சுமாலிக்குத் தெரியவந்தது. இந்த விருத்தாந்தம் கேட்டவளவில் அவன் தான் கொண்டிருந்த அச்சத்தை யொழித்துத் தன் இனத்தாருடனே பாதாள லோகத்தை விட்டு வெளிப்பட்டனன். சுமாலி வெளிப்பட்டபோழ்து அவ னது மந்திரிமார்களான மாரீசன், பிரஹஸ்தன், விருபாக்ஷன், மகோதரனென் னுமிராக்கதர்களும் மிகுந்த ஸன்னுஹமுடையவர்களாகி அவனுடனே புறப் பட்டனர். இங்ஙனம் அமைச்சர்களுடனே அநேக மிராக்கதர்கள் புடை சூழப்புறப்பட்ட சுமாலி தசக்கிரீவனிடம் சென்று அவனை ஆலிங்கனஞ் செய்து கொண்டு அவனைநோக்கிக் கூறலாயினன்:

'வத்ஸ, தசக்கிரீவ! நீ மூவுலகங்களிலும் மேலோனான பிரம்மதேவனி டம் உத்தமமான வரம் பெற்றனையே, இது நமது பாக்கியவிசேஷமன்றோ? இதனை யாம் வெகுநாளாக வேண்டிக்கொண்டிருந்தோம். ஹேமஹாபாஹோ! யாங்கள் எதனால் இலங்காபுரியைத் துறந்து பாதாளலோகம் புகுந்தனமோ, விஷ்ணுவினிடம் உண்டாகிய அந்தக்கொடிய பயம் இப்பொழுது நீங்கியது. அடிக்கடி அந்த விஷ்ணுவினால் அபஜயமடைந்தவர்களாகி யெங்களிருப்பிடத்

தைத் துறந்து யாங்களனைவரும் துரத்தப்பட்டவர்களாகிப் பாதாளலோகம் புகுந்தனம். அந்த இலங்காபட்டணம் ஆதியில் நம்முடையதாயிருந்தது; இராக்கதர்களுக்கே உரியதாகிய அந்நகரியில் இப்பொழுது உன்பிராதாவான தனதிபதிகுடிபுகுந்திருக்கின்றனன். மஹாபாஹோ! அதனை நீ ஸாமத்தினாலோ, தானத்தினாலோ, தண்டத்தினாலோ, மீட்டுக்கொள்வையாயின், அப்பொழுதே எங்கள் மனோரதம் பூர்த்தியாகும்; குழந்தாய்! இவ்விலங்காபுரிக்கு நீயே அதிபதியாகுவை, அதற்கையமின்று; மூழ்கிப்போன அரக்கர் குலமும் உன்னால் உத்தரிக்கப்பட்டதாகும்; மஹாபலிஷ்டனான நீ எங்களனைவர்க்கும் பிரபுவுமாகுவை.' என வேண்டினான்.

அதனைச் செவியுற்ற தசக்கிரீவன் தன் அருகிலிருந்த மாதாமஹனை நோக்கி, 'தாத! நீர் இங்ஙனம் உரைசெய்வது உசிதமன்று, எனக்கு மூத்தோனான தனதிபதி நமக்குக் குருவன்றோ? அவர் திறத்து நாம் இங்ஙனமியற்றுவது தகாது' என்று கூறி மறுத்துவிட்டான். ராக்ஷஸராஜனால் நல்வார்த்தையாக நிராகரிக்கப்பட்ட அவ்விராக்கதன் அவனது கருத்தையுணர்ந்து ஒன்றும் மறுமொழி கூறாது வந்தவழியே சென்றனன்.

சிலகாலஞ்சென்ற பின்னர் பிரஹஸ்தனென்கிற இராக்கதன் இராவணனிடம் வந்து மிகுந்த வணக்கத்துடனே ஏற்ற காரணங்களோடு சிலவார்த்தை கூறலாயினான். 'மஹாபாஹோ, தசக்கிரீவ! நீ உன் மாதாமஹரிடமுரைசெய்ததனையே, அவ்வாறு உரைப்பது உனக்கு ஏற்றதன்று; சூரர்களுக்குப் பிராதாவென்கிற பரிவு ஒருபொழுதுமில்லை; அதற்கு ஒரு திருஷ்டாந்தம் கூறுகின்றேன், கேளும்: அதிதி, திதி என்னு மிரண்டுபேர் ஸகோதரிகள்; அவர்கள் அந்நியோந்நியம் அதிகமான அன்புடையவர்கள், மஹா ரூபவதிகளான அவ்விருவரும் கசியபப்பிரஜாபதியினுடைய பத்தினிகள். அவ்விருவரில் அதிதி யென்பவள் மூவுலகங்களுக்கும் ஈசுவரர்களான தேவதைகளைப் பெற்றனள். திதியென்பவளும் கசிபரிடம் பல புத்திரர்களைப் பெற்றாள்; அவர்கள் தைத்தியர் அல்லது அசுரரெனப் பெயர்பெற்றனர். தருமமுணர்ந்தவர்களிலுத்தமனே, மஹாவீர! கானும் கடலும் கிரியுமடங்கிய இம்மூவுலகத்தாட்சியும் முதலில், தைத்தியர்கட்கேயாகி அவர்கள் மிக்க மகிமைபெற்று விளங்கினர். மஹா பராக்கிரமசாலியான ஸ்ரீமஹா விஷ்ணுவால் சமரமுகத்தில் அவ்வசுரர்களை வதைத்து அழிவற்றதான இம்மூவுலகத்தாட்சியும் தேவர்கள் வசமாக்கப்பட்டது. தேவாசுரர்களே முன்னம் இத்தன்மையான விபரீதம் செய்திருக்கின்றனர்; நீயொருவனே இவ்விபரீதம் செய்வதாக நினைத்தல் வேண்டாம்; ஆதலின், பிராதாவென்கிற குருத்துவம் பாராட்டாது யாம் சொல்லுகிற இத வசனத்தைச் செவிக்கொள்வாய்' என்றனன்.

அதனைச் செவியுற்ற தசக்கிரீவன் மிக்க மனமகிழ்ச்சி கொண்டவனாகி முகூர்த்தகாலம் சிந்தனைசெய்து, அங்ஙனமே யாகுகவென்று உடன்பட்டு அந்த ஸந்தோஷத்துடனே அவ்விராக்கத ரனைவரும் புடைசூழ அன்றையதினம் சிலேஷ்மாதகவனஞ்சென்றனன். அப்பொழுது மஹாவீரியவானான தசமுகன் திரிகூட பருவதத்திலிருந்து, சாதுரியமாகப் பேசுந் திறமுடையோனான

பிரஹஸ்தனையே வைச்சிரவணனிடம் தூதனுப்பவெண்ணி, ஓ பிரஹஸ்த! ராக்ஷஸத்தலைவனே! நீ சீக்கிரமே தனதிபதியினிடம் சென்று, யான்சொன்ன தாகநல்வார்த்தையாகவே அவனிடம் இவ்வாறு விளம்புக: 'ஹே ராஜன், ஸௌமிய! ஒப்பற்றபராக்கிரமமுடையோய்! இந்த இலங்காபுரி மஹாத்துமாக்களான இராக்கதர்களுடையதே யன்றோ? அதனை நீ கைப்பற்றிக்கொண்டனை; சிறிதும் குற்றமில்லாதவனான உனக்கு இஃது உசிதமன்றே. உனது பராக்கிரமப் பெருமையையோசித்து நீ அதனை இப்பொழுது எமக்குக்கொடுத்துவிடுவை யாகில், எனக்கு மிகுந்த பிரீதி செய்ததாகும்; தருமமும் பரிபாலிக்கப்பட்டதாகும்' என யான் கூறியதாகச் சொல்லுகவென நியமித்துத் தூதனுப்பினன்.

அங்ஙனமே பிரஹஸ்தன் புறப்பட்டுத் தனதிபதியினால் நன்கு பாதுகாக்கப்பட்ட இலங்காபுரிக்குச்சென்று, பொருட்கிறையான அவனைநோக்கிப் பின்வருமாறு மிக்க கம்பீரமாகக் கூறலாயினன்: "ஹே மஹாபாஹோ! சஸ்திரந் தரித்தவர்களிற் சிறந்தோனே! மேலான விரதத்தை மேற்கொண்டவனே! உமதுபிராதாவான தசக்கிரீவன் என்னை உம்மிடம் அனுப்பினன். மஹாபிராஞ்ஞரே! சஸ்திரவித்தையிற் கைதேர்ந்தவரே! ஓ தனதிபதே! தசாநனன் சொல்லியனுப்பியதைச் சொல்லுகிறேன், செவிக்கொள்க: 'ஹே விசாலாக்ஷ! அழகிய இவ்விலங்காபுரி மஹா பராக்கிரமசாலிகளான சுமாலி முதலாகிய இராக்கதர்களால் அனுபவிக்கப்பட்டதன்றோ? ஆதலின், வைச்சிரவணா! இப்பொழுது யான் ஒருவிண்ணப்பம் செய்கின்றேன். தாத! நல்வார்த்தையாகவே வேண்டுகின்ற அவ்விராக்ஷஸர்க்குஇப்பொழுது அவ்விலங்காபுரியைத்தந்தருள்க' என வேண்டுகின்றனன்" என்றான்.

பிரஹஸ்தன் புகன்ற வார்த்தையைக்கேட்டு வைச்சிரவணன் அவனை நோக்கி மறுமொழி கூறலாயினன். 'ஓ பிரஹஸ்த! இந்த இலங்காநகரம் முன்பு நிசாசரர் யாருமின்றிச் சூனியமாயிருந்தமையின் எமதுபிதா இதனை எங்களுக்கு வாஸஸ்தானமா யளித்தனர். தானம் மானம் முதலாய மஹா குணங்களுள்ள யக்ஷர்களுடனே யான் இதனை வாஸஸ்தானமாக்கொண்டேன். நீ இப்பொழுது தசக்கிரீவனிடஞ்சென்று யான் சொல்லியதாகச் சொல்லுக: 'ஹே மஹாபாஹோ! நகரமோ, ராஜ்ஜியமோ, என்னுடையது யாது உளதோ, அஃது உன்னுடையதுமன்றே? உனக்கும் எனக்குமுள்ள ராஜ்யமும் செல்வமும் அவிபக்தமேயல்லவா? ஆதலின் இவ்விராஜ்ஜியத்தை நீயே நிராக்ஷேபமாய் அனுபவிக்கலாம் என்றுகூறுக' எனவுரைத்து அவனை அனுப்பிவிட்டுத் தனதியக்ஷன் தந்தைபாற் சென்றனன்.

தகப்பனாரிடஞ்சென்று அளகையாளி அவரை அபிவாதனம்பண்ணி இராவணன் சொல்லியசெய்தியை அவரிடம் விண்ணப்பஞ் செய்யலாயினன். "தாத! தசக்கிரீவன் என்னிடம் தூதனுப்பினன். முன்னால் இராக்கதர்களுடைய வாஸஸ்தானமாயிருந்த இலங்காபுரியைத் தனக்குக் கொடுத்துவிட வேண்டுமெனக் கேட்கிறான். இதுவிஷயத்தில் அடியேன் இயற்றத்தகுவது இன்னதென அருள்புரிக" என வேண்டினன். பிரம்மரிஷியான விச்சிரவ முனிவர் அதனைச் செவியுற்று, அஞ்சலிஹஸ்தனாக நின்ற நிதிக்கிழவனை

நோக்கி உரைக்கின்றனர். 'புத்திர! யான் சொல்லுகிறேன் கேள்: மஹாபலசாலியான தசக்கிரீவன் இவ்விஷயத்தை என்னிடத்திலும் எடுத்துக் கூறினான். யான் பலவாறு இதமுரைத்தும் கேளாமையின் அம்மதிகேடனை யான் பலவாறு வெருட்டினேன்; மீண்டு மீண்டும் அவன் தீயவழியையே நாடுகின்றனன். குழந்தாய், மகனே! உனக்கு நன்மை விளைவிப்பதும் தருமத்திற்குப் பொருத்தமுடையதுமான எனது வார்த்தையைக் கேள்: அந்தப்புத்தியீனன் வரப்பிரஸாதத்தினால் மதிமயக்கங் கொண்டவனாகி, பெரியோர் சிறியோரென்பதை உணராதிருக்கின்றனன். அவனது தாய் என்னிடம் வந்தகாலத்தில் யான்சபித்த சாபத்தினாலும் அவன் மிகக் கொடுந்தன்மை யுடையனாயிருக்கின்றான். நீ இலங்காபுரியை விட்டுவிட்டுக் கைலாஸகிரியிற் சென்று வாஸஞ் செய்க. ஆங்கு எல்லா நதிகளிலும் மிகச்சிறந்ததான மந்தாகினியென்கிற மஹாநதி அழகாகப் பிரவகிக்கின்றது; அதில் சூரியன்போன்ற சோதியுள்ள பொற்றாமரைமலர்களும், ஆம்பல், நெய்தல் முதலாயமற்றும் பல மணமுள்ள மலர்களும் பூத்து மநோஹரமா யிருக்கின்றது. அவ்விடத்துத் தேவர்கள், கந்தர்வர், அப்ஸரசுக்கள், உரகர், கின்னரர் முதலியோர் எப்பொழுதும் வந்துவிளையாடிக்கொண்டிருக்கின்றனர். தசக்கிரீவன் மேலானவரம் பெற்றுச் செருக்குற்றிருக்கின்றானாதலின், அவ்விராக்கதனுடன் உனக்குப் பிணக்குவேண்டாம்.' என்று கூறினார்.

அம்முனிவர் இவ்வாறு புகன்றதுகேட்டுத் "தந்தைசொன்மிக்க மந்திரமில்லை" யென அவர்மொழியை முடிமேற்கொண்டு, புத்திர களத்திராதியரோடும், மந்திரிமார்களோடும், சேனைகளோடும், செல்வத்தோடும் இயக்கர்கோமான் இலங்கையைவிட்டுக் கைலாஸஞ் சென்றனன். பிரஹஸ்தன் அதுகண்டு மிக்க மகிழ்ச்சிகொண்டு தசக்கிரீவனிடஞ் சென்று, அநுஜருடனும் அமைச்சருடனும் கூடியிருக்கும் அம்மகாநுபாவனிடம் உரை செய்கின்றனன். "ஓ தசக்கிரீவ! இலங்காபுரி இப்பொழுது சூன்னியமாயிருக்கின்றது; அரன்தோழன் அதனைவிட்டொழிந்தனன். நீர் எங்களுடனே அதனுட் கிரகப்பிரவேசம் செய்து நமது தருமத்தைப் பரிபாலித்து வருக" என்று கூறினான். பிரஹஸ்தன் இவ்வாறு கூறியதுகேட்டு மஹாபலிஷ்டனான தசக்கிரீவன் பிராதாக்களோடும் மற்றுமுள்ள பரிவாரங்களோடும், சுரர்பதி சுவர்க்கலோகஞ் சேர்ந்ததுபோல், தனபதி யொழித்துவிட்ட மிகப்பெரியவீதிகளோடு கூடிய இலங்காபுரியிற் பிரவேசித்து, ஸகல ராக்ஷஸர்களாலும் ராக்ஷஸ ராஜனாப் அபிஷேகம் செய்யப்பெற்று வாழ்ந்தனன்; அவ்விடத்துப் பழையபடியே பல ராக்ஷஸர்களும் கருமேகங்களௌவந்து நெருங்கினர். தனேச்வரனோ, தந்தைசொல்லையே மேலாகக்கொண்டு, சந்திரன்போன்ற வெண்ணிறமான கைலாஸகிரியிலே, ஆயிரக்கண்ணனது அமராவதி நகரம்போன்று, விசித்திரமான மாடமாளிகைகளால் அலங்கரிக்கப்பெற்ற நகரத்தில் வாஸஞ்செய்யலாயினான்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாவது ஸர்க்கம்.

இராக்ஷஸராஜன் சூர்ப்பணகிக்கு விவாஹஞ் செய்வித்துத் தான் மயனது மகளான மந்தோதரியை மணம்புரிந்துகொண்டு தன் தம்பிமார்களுக்கும் விவாஹம் செய்வித்ததும் அவனது மேகநாத னென்கிற புத்திரன் பிறந்ததும்.

இலங்காபுரியில் இராக்ஷஸராஜனாய் அபிஷேகம் பெற்றபிறகு தசக்கிரீவன் தன்பிராதாக்களுடனே தங்கள் சகோதரியான சூர்ப்பணகியினது விவாஹத்தைப்பற்றி யாலோசனைசெய்து, காலகை யென்பவளுடைய மகனான வித்யுஜ்ஜிஹ்வனென்னும் தானவனுக்கு இல்லாளாகக்கொடுத்துச் சிந்தையொழிந்திருந்தனன். அங்ஙனமிருக்க ஒருநாள் வேட்டையாட வனத்திற்கு சென்றபொழுது, ஓ ராமா! அவ்விடத்து அவ்விராக்கதன் திதியினுடைய மகனான மயனென்பவனைக் கண்ணுற்றனன். ஒரு கன்னிகையுடனே அவன் அவ்விடத்துத் திரிவதுகண்ட தசக்கிரீவன் அவனைநோக்கி, 'நிர்மாநுஷியமான இவ்வனத்தில் நீ தனியே மான்குட்டியினது விழிபோன்ற விழிகளையுடைய இக்கன்னிகையுடன் ஏன் நிற்கின்றனை'? என வினவினான். இவ்வாறு வினவிய அவ்விராக்கதனை நோக்கி மயன் மறுமொழி கூறுகின்றனன்: "கேளீர் ஐயா! எனது வரலாறு முற்றும் உள்ளபடி கூறுகின்றேன். ஹேமா (பொன்னுருவமைந்தவள்) என்னும் அப்ஸரஸ்திரீ ஒருத்தியுண்டு; நீர் கேள்வியுற்றதுண்டோ இல்லையோ? இந்திராணியைத் தேவேந்திரனுக்குக் கொடுத்தவாறு அப் பெண்மணியைத் தேவர்கள் எனக்கு அளித்தனர். யான் அவளிடத்து அதிகமான மனப்பற்றுடையோனாகி ஐந்நூறுண்டளவு அவளுடன் இன்புற்றிருந்தேன்; பிறகு அவள் ஏதோ ஒரு தேவகாரியத்தின் பொருட்டுச் சென்றனள்; பதினான்கு வருஷமாயிற்று; இன்னும் மீண்டுவந்திலள். பொன் என்னும் பொருளுள்ள ஹேமா என்கிற அவளது நாமதேயத்திற்கேற்ப, வச்சிர வைடூரியாதிகளால் வேலைப்பாடுகள் செய்யப்பெற்ற பொன்மயமான பட்டணமொன்று யான் மாயையினால் நிருமித்தனன். அவ்வழகியை விட்டுப்பிரிந்த பின்னர் அந்த ஹேமபுரத்திலேயே மிகுந்த துக்கத்துடன் இதுவரையில் வஸித்திருந்தேன். இப்பொழுது அந்தநகரத்தைவிட்டு நீங்கி இக்கன்னிகையுடனே வனத்திற்கு வந்துவிட்டேன். ஹே மகாராஜனே! இவள் எனதுமகள்; அந்த ஹேமாவின் வயிற்றிற்பிறந்தவள். இவளுக்கு ஏற்றகணவனைத் தேடவேண்டி இவளுடன் யான் வெளியே புறப்பட்டேன்.

கந்யாபித்ருத்வம் துக்கம்ஹி ஸர்வேஷாம்மாநகாங்க்ஷிணாம் ।
கந்யாஹித்வேகுலே நித்யம்ஸம்சயேஸ்தாப்யதிஷ்டதி ॥

மானத்தில் நோக்குடையவர்களுக்குப் பெண்ணைப்பெறுவது பெருந்துக்கமன்றோ? ஒரு பெண்ணினால் இரண்டுகுலமும் எப்பொழுதும் ஸந்தேஹிக்கதக்கநிலையி லிருக்குமன்றோ? அந்தப் பத்தினியினிடத்தில் எனக்கு

இரண்டுபுத்திரர்களும் பிறந்தனர்; அவர்களில்மூத்தவன் *மாயாவியென்பவன்; இளையவன் துந்துபி யென்பவன், இவைகளே எனதுவரலாறு; நீர் கேட்டமை யால் யாவும் உள்ளபடி யுரைத்தேன். நீர் யாரோதெரியவில்லையே, நீர் இன்னாரென்பதை யான் அறிந்துகொள்ள விரும்புகிறேன்'' என்று கூறினான்.

மயன் இவ்வாறு வினவியது கேட்டு அவ்விராக்கதன் வணக்கத்துடனே விடை கூறுகின்றனன்: "யான் பிரம்மாவினது ஸந்ததியில் மூன்றுவது தலை முறையான்; பிரம்ம புத்திரரான புலஸ்தியருடைய பௌத்திரன், விச்சிரவஸ முனிவரது புத்திரன், தசக்கிரீவ னெனப் பெயர் பெற்றவன்'' என்று கூறி னான். ஓ ராம! ராக்ஷஸராஜன் இவ்வாறு கூறியது கேட்டு அவன் மகரிஷியி னது குமாரனென வுணர்ந்து அந்த தானவனான மயன் மிகுந்த சந்தோஷ மடைந்தவனாகி, அப்பொழுதே தன்மகளை அவனுக்குக் கலியாணஞ் செய்து கொடுக்க நிச்சயித்துத் தன்மகளது கையைப் பிடித்துக் கொள்ளும்படி செய்து இராக்ஷஸேந்திரனை நோக்கி முகமலர்ச்சியுடனே, 'ஹே ராஜன்! இக்கன்னிகை ஹேமா என்னும் அப்ஸர ஸ்திரீயினது கர்ப்பத்தி லுதித்த என்னுடையமகள்; மந்தோதரியெனப் பெயர் பெற்றவள். இவளை நீர் பத்தினியாகப் பரிக்கிர கிக்க வேண்டுகின்றேன்' என்றனன்.

ஓ ராம! தசக்கிரீவன் அங்ஙனமே யாகுகவென அதற்கு உடன்பட்டது கேட்டு மயன் அவ்விடத்திலேயே தீவளர்த்தி அக்கினி ஸாக்ஷிகமாகப் பாணிக் கிரஹணஞ் செய்வித்து விவாஹ மகோற்சவத்தை நிறைவேற்றினான். தபோ தனரான விச்சிரவஸ முனிவரிடம் தசக்கிரீவனுக்கு உண்டாகிய சாபத்தை யுணர்ந்தவனாயினும், பிதாமஹருடைய குலப்பெருமையை யறிந்து தன்மகளை மயன் அவனுக்குக் கலியாணஞ்செய்து கொடுத்து, தான் தவப்பெருமையினால் பெற்ற அற்புதமாகிய அமோகமான ஒரு சக்தியையும் அவனுக்கு அளித்த னன். அந்தச் சத்தியையே ஆயோதனத்தில் இராவணன் இலக்குமணன்மீது எறிந்தது.

லங்கேஸ்வரன் இவ்விதமாக விவாஹஞ்செய்து கொண்டு தன் நகரஞ் சென்று தன்பிராதாக்களுக்கும் விவாஹஞ்செய்விக்கலாயினன்: வைரோசன னுடைய தௌஹித்திரியான வஜ்ரஜ்வாலை யென்பவளைக் கும்பகர்ணனுக்குக் கலியாணஞ் செய்வித்தனன்; சைலூஷனென்கிற மஹாத்துமாவான கந்தர்வ ராஜனது மகளான மஹாதருமிஷ்டையாகிய ஸரமை யென்பவளை விபீஷணர் விவாஹஞ்செய்து கொண்டனர். இவளுக்கு ஸரமையெனப் பெயர் வந்த காரணம் யாதெனில், இம்மகள் மானஸ ஸரஸ்ஸினது தீரத்தில் உற்பவித்த னள்; அத்தருணத்தில் மாரிகால மாதலின் மழைபொழிந்து அத்தடாகம் விசேஷமாக விருத்தியடைய லாயிற்று. அதுகண்டு தாய் குழைந்தைக்கு எங்கு அபாய முண்டாகுமோ வென அஞ்சி அதனிடமுள்ள அன்பின் மிகுதி யால் †'ஸரோ மா' (ஓ தடாகமே நீ பெருக்கெடுக்க வேண்டாம்) என்று கூறி னள். அது காரணமாகவே அம்மகளுக்கு ஸரமா எனப் பெயராயிற்று.

* இந்த மாயாவியென்பவன் வாலியினால் வெல்லப்பட்டு மாண்டனனெனவறிக.

† ஸரஃ=தடாகம், மா=வேண்டாம்,

இவ்வாறு அவ்விராக்கதர்கள் விவாஹஞ்செய்து கொண்டு தத்தம் பாரியைகளுடனே, நந்தனவனத்தில் கந்தர்வர்களென, மேலான இன்பங்களை நுகர்ந்து வந்தனர். அக்காலையில் மந்தோதரி மேகநாதனென்கிற ஒரு மகனைப் பெற்றாள்; அவனையே நீங்கள் இந்திரஜித்தென வழங்குகின்றீர். அவனுக்கு மேகநாதனெனப் பெயர் உண்டான காரணமென்னவெனின், அந்த இராவண புத்திரன் பிறந்தவளவிலே அழுதகுரல் மேகத்தொனி போன்று மிகக் கொடியதாயிற்று. ஓ ராகவ! அந்த நாதத்தினால் இலங்காபுரி முழுமையும் திடுக்கிட்டுப் போயினமையின், பிதா அம்மகனுக்கு மேகநாதனெனவே நாமகரணஞ் செய்தனன். ஓ ராம! அந்தக்குமாரன் இராவணனது அந்தப்புரத்தில் மிகத்தேர்ச்சிபெற்ற தாதிமார்களால் போஷிக்கப்பட்டவனாகி, உலர்ந்தகாஷ்டத்தைபற்றிய அக்கினிபோலமேன்மேலும்விருத்தியடையலாயினான். அதுகண்டு அவனது மாதாபிதாக்கள் மிக்க மகிழ்ச்சிகொண்டவரானார்கள்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது ஸர்க்கம்.

கும்பகர்ணன் பெருந்துயில்கொண்டதும், பிறகு தசக்கிரீவன் பலரையும் துன்புறுத்தத்தொடங்கியது கண்டு தனேசுவரன் அவனுக்கு நற்புத்தி போதிக்குமாறு தூதனுப்பியதும் அவன் கூறியதைச் செவிக்கொளாது அக்கொடியோன் அத்தூதனைக்கொன்று தனாதிபதியின் மேற் படையெடுத்ததும்.

---

"இவ்வாறு சிலகாலஞ் செல்லுகையில் பிரமதேவனால் அனுப்பப்பட்ட மிகக்கொடிய நித்திரையானது ஓர் உருவம் பூண்டு கும்பகர்ணனிடம் வந்து நின்றது. அதுகண்டு கும்பகர்ணன் அங்கு உட்காந்திருந்த தமையனை நோக்கி, 'அண்ணா! நித்திரை என்னை மிகவருத்துகின்றது; யான் படுத்துறங்க எனக்கு ஒருமாளிகை நிருமித்துத் தரல்வேண்டு'மென வேண்டினான். அதைக் கேட்ட இராக்ஷஸராஜன் உடனே சிற்பிகளுக்குக் கட்டளையிட்டனன். அவர்கள் அந்நிமிஷமே விச்வகர்மாவேபோல, கும்பகர்ணன் படுக்க மிகவிசாலமாக ஒரு யோஜனை அகலமும் * இரண்டு யோஜனை நீளமு முடையதாய்க் கண்ணுக்கழகான மாளிகை யொன்று நிருமித்தனர். படிகக் கற்களாலும் பொற்சிலைகளினாலும் விசித்திரமாக ஸ்தம்பங்கள் நாட்டி, வைடூரியத்தினால் ஸோபானங்கள் அமைத்து, கிங்கிணிகளால் ஜாலகங்கள்கட்டி, தந்தத்தினால் தோரணவாயில்கள் அமைத்து, வைரக்கற்களாலும் படிகக் கற்களாலும் வேதிகைகளியற்றப்பட்டு மேருமலையி லுள்ள குகையென வெகு மனோஹரமாய் எவ்விடத்தும் இன்பந்தருவதும், அனைவரையும் இன்புறச் செய்வதுமாய் அவ்வில்லம் மிகவும் அற்புதமாயிருந்தது. மஹாபலிஷ்டனான கும்பகர்ணன் அதிற்படுத்து நித்திரை கொண்டவனாகி அனேக மாயிரம் ஆண்டுகள் மெய்ம்மறந்து உறங்கலாயினான்; இடையில் கண்விழிக்கவே யில்லை.

* யுத்தகாண்டத்திலு மிப்படியே ௪௬௪-ம் பக்கத்தில் ஒருயோஜனை விஸ்தாரமென்ற விடத்துப் பொருள்கொள்க.

கும்பகர்ணன் இவ்வாறு பெருந்துயில் கொண்ட வளவில் தசாநநன், தேவர்கள் இரிஷிகள், யக்ஷர், கந்தர்வர், முதலியோரை நிரங்குசமாய்த் துன் புறுத்த லாயினன். விசித்திரமான உத்தியான வனங்களோ, நந்தன வனங்க ளோ, அவை யெல்லாவற்றையும் மிகுந்த கோபத்துடனே சென்று சின்ன பின்ன மாக்கினன்; ஆறுகளை யானைகள்போல வீழ்ந்து விளையாடிக் கலக்கி னன்; விருக்ஷங்களை வாயுவென முறித்தனன்; மலைகளை வஜ்ராயுத மெனப் பாய்ந்து பிளந்தனன்.

தசக்கிரீவன் இத்தன்மைய சரித்திரமுடையனா யிருத்தல்கண்டு தரும முணர்ந்தவனை தனதிபதி தனக்கும் தன் குலத்திற்கும் அநுகுணமான நல் லொழுக்கத்தை நினைந்து, தம்பியென்கிற அன்பினல் தசக்கிரீவனது இதத் தைக் கருதித் தூதனொருவனை யிலங்கைக்கு அனுப்பினன். அத்தூதன் இலங்காபுரி சென்று முன்னர் விபீஷணரைக்கண்டு அவரால் ஸம்மானிக்கப் பட்டவனகி, வந்தகாரியம் யாதென தருமமுறைப்படி அவர்வினவ, அதனை உள்ளபடி அவரிடம் அறிவித்தனன். பிறகு விபீஷணர், ராஜாவான குபேர னும் மற்றுமுள்ள ஞாதிகளுமாகிய யாவருடைய குசலத்தையும் கேட்டுணர் ந்து, ஸபையில் உட்காந்திருந்த தசாநநனை அவனுக்கு காண்பித்தனர். மேலே சிறந்த ஆஸநமமைந்த உத்தமமான பரியங்கத்திலே உட்கார்ந்து தனது காந்தியினல் ஜொலித்துக் கொண்டிருக்கின்ற இராக்ஷஸ ராஜனை அத்தூதன் கண்ணுற்று 'ஜயவிஜயீப்வ' எனவாழ்த்திச் சற்றுநேரம் மௌனமாயிருந்து மறுபடி அவனைநோக்கி, ஹே ராஜன்! உம்முடைய பிராதா உம்மிடம் என்னை யனுப்பினர். தாயின்குலம் தந்தையின்குலம் இரண்டிற்கும், நல்லொழுக்கத்திற் கும் ஏற்றதாக அவர் சொன்ன ஸங்கதி முற்றும் சொல்லுகின்றேன் கேளும்:

'நல்லொழுக்கத்தைக் கைக்கொள்ள வேண்டுமாயின், நீ செய்தகாரிய மிவ்வளவே போதும்; கூடுமாயின், இனி நன்னெறியில் நிலைகொண்டு நிற்க. நந் தன வனத்தை யழித்தது கண்டேன்; முனிவர்களை மாய்த்தது கேட்டேன்; உன் செருக்கை யடக்குதற் பொருட்டுத் தேவர்கள் மிக்க முயற்சிகொண் டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன்; ஹே ராக்ஷஸாதிப! நீ என்னைப்பலவாறு நிராகரித்தனை; அங்ஙனம் நீ அபராதஞ் செய்தவனே யாயினும், பாலனாதலின், பந்துக்களால் ரக்ஷிக்கத் தக்கவனே யாகின்றனை. யான் சிலகாலமா யிவ்விடத்திலில்லை; ருத்திர மூர்த்தியினது அநுக்கிரகத்தை வேண்டித் தரு மத்தை உபாஸநஞ்செய்தற் பொருட்டு இமயமலைத் தடஞ்சென்று ஐம்பொறி களையடக்கி ருத்திரனைபற்றி *விரதம் பூண்டிருந்தேன். அக்காலையில் அங்கு எழுந்தருளிய உமாமஹேசுவரரைக்கண்டு, அவரதுபாரிசத்தினின்ற உமாதேவி யினிடம் தற்செயலாய் எனது இடதுகண்ணைக் கிஞ்சித்துச் செலுத்தினேன்; இத்தனைமங்கள ரூபமுள்ள இவள் யாரென அறிய விரும்பியேயன்றி வேறொரு காரணத்தினலுமன்று. அப்பொழுது ருத்திராணி ஒப்பில்லாத உருவமெடுத்து நின்றனள்; யான் கண்ணுற்ற வளவில் அத்தேவியாரது திவ்வியப் பிரபாவத்தி னல் எனது இடதுகண் எரிக்கப்பட்டுப் பசந்து, மண்ணினல் அவிக்கப்பட்ட

* இஃது கேதாரவிரதமென்பர்.

எரிபோல ஒளிமழுங்கியது. பிறகுயான் அம்மலையினது விசாலமான மற்றொரு புறஞ்சென்று மௌனமாய் எண்ணூறு வருஷகாலம் கொடிய விரதம் பூண்டிருந்தேன். அந்நியமம் முடிந்தவளவில் மஹேசுவரர் மகிழ்ச்சி கொண்டு பிரஸன்னராகி உள்ளமுவந்து உரைசெய்யலாயினர். "ஓ தனாதிப! தேவியினது ரூபத்தை யுற்றுப்பார்த்ததனால் உனது ஒருகண் பிங்களவர்ண மாகியதன்றோ? அதுபற்றி நீ வருந்தற்க; தருமமுணர்ந்தோனே! உனது தவத்தினால் யான் பிரீதியடைந்தவனா யினேன். நீ யியற்றிய விரதம் மிகக் கொடுமையானது; இத்தன்மையான விரதத்தை மேற்கொண்டவர் நீ யொருவனும் யானொருவனுமேயன்றி மூன்றாமவனொருவனுமிலன். இஃது எவராலும் அநுஷ்டிப்பதற்கரியதாய் முன்புஎன்னால் உண்டாக்கப்பட்ட விரதமாம். நீ உனது தவத்தின் பெருமையால் அவ்விரதத்தை முற்றுப்பெற நிறைவேற்றினையாதலின், ஓ தனேச்வர, ஹே ஸௌமிய! இனி நீ எனக்கு நண்பனாகுவை. தேவியின் பிரபாவத்தினால் உனது இடதுகண் எரிக்கப்பட்டதன்றோ? அது காரணமாக ஏகாக்ஷி பிங்களன் என்பது உனக்கு என்றும் ஒரு சிறப்பான நாமதேயமாகக் கடவது" என அனுக்கிரகித்தருளினர். இவ்வண்ணம் சங்கரமூர்த்தியிடம் அவரது நட்பையும் அநுக்கிரகத்தையும் பெற்று வந்தேன். வந்தவிடத்தில் நீ பாபத்தொழில் புரியத் துணிந்ததைக் கேள்வியுற்றேன். குலத்திற்குக் கேடுவிளைவிக்கின்ற அதருமமான செய்கைகளை விட்டு இனி விலகுக. தேவர்களும் முனிவர்களும் உன்னை வதைக்க வழிதேடுகின்றனரே' என உமக்குத் தெரிவிக்குமாறு என்னை உம்மிடம் அனுப்பினர் எனக்கூறினான்.

இதனைச் செவியுற்ற தசக்கிரீவன் கோபமூண்டு கண்கள் சிவந்து கை பிசைந்து எயிறுதின்று அத்தூதனை நோக்கி, 'அடே தூதா! நீயாருடைய பேச்சாக என்னிடம் உரைக்கவந்தனையோ, அஃது எனக்கு நன்றாகத்தெரிந்தது. இத்தன்மையான பேச்சை யச்சமின்றி என்முன் பகர்ந்த நீயும் இனி உயிரோடிராய்; இங்ஙனம் எடுத்துரைக்க உன்னை யேவிய என் பிராதாவும் இனி உயிரோடிரான். தனரக்ஷகன் இயம்புவது எனக்குச்சிறிதேனு மிதமானதன்று. ஹே மூட! சிவனுக்குச் சகாவாயினதை ஒருபெருமையாக எடுத்துரைத்தனையே, அஃதும் யான் ஒரு பெருமையாக் கொள்ளத்தகுவதன்று; நீ இன்னும் என்னென்னவோ வேண்டுகின்றனையே, அதுவும் யான் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. ஹே தூத! யான் இத்தனைகாலம் இவன் நமக்குக் குருவென்றும் மூத்தவனென்றும் மதித்துக் கொல்லலாகாதென்று பொறுத்திருந்தேன்; இப்பொழுது அவன் சொல்லியனுப்பிய வார்த்தையைச் செவியுற்றபோழ்து, நமது பாகுபலத்தைக்கொண்டு மூவுலகங்களையும் வெல்ல வேண்டுமென விருப்பமுண்டாகின்றது. இந்தமுகூர்த்தத்திலேயே யான், அவனொருவனைமாத்திரமேயல்ல; அவன் பொருட்டாகவே நான்கு லோகபாலகர்களையும் யமலோகமனுப்பி விடுகிறேன்' என்று அறைந்துகொண்டே லங்காதிபதி கத்தியைக் கையிலெடுத்து அத்தூதனை ஒரே வீச்சாக வீசி, துஷ்டர்களான இராக்கதர்களுக்குஅவனுடலை உணவாயளித்தனன். பிறகு இராக்ஷஸராஜன்பயணத்திற்கு

வேண்டிய சடங்குகளைச் செய்வித்து மூவுலகங்களையும் வெல்ல விருப்புற்று ரதத்தின் மேற்கொண்டு முதலில் குபேரனிருக்குமிடம் நோக்கிச்சென்றனன்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் பதின்மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினான்காவது ஸர்க்கம்.

இலங்காதிபதி தன் மந்திரிமாருடனே தனுதிபதியை யெதிர்க்கப் புறப்பட்டுக் கைலாஸபருவதஞ் சேர்ந்து யக்ஷர்களுடன் அமராடியதும், அவர்களனைவரையும் வென்று வாயிலோனையும் வதைத்து உட்புகுந்ததும்.

---

அநந்தரம் இலங்கையரசன், மஹாபலிஷ்டர்களாய்ப் போர்புரியப் பிரிய முள்ளவர்களான மகோதரன், பிரஹஸ்தன், மாரீசன், சுகன், ஸாரணன், தூமிராக்ஷன் என்னும் ஆறு மந்திரிமாருடனே உலகமனைத்து மெரிப்பவனெனக் கோபம் மேற்கொண்டு புறப்பட்டு, நகரங்கள், நதிகள், சைலங்கள், வநங்கள், உபவநங்கள் ஆகிய பலவற்றையும் கடந்து ஒரு முகூர்த்தகாலத்தில் கைலாஸகிரி போய்ச்சேர்ந்தனன். போர் புரியப் பேராவல் கொண்டு மந்திரிமாருடனே கைலாஸகிரியில் வந்திறங்கிய துராத்துமாவான தசக்கிரீவனைக் கண்டு அங்குள்ள யக்ஷர்கள் அவனெதிரே நிற்கத் திறமையற்றவர்களாயினர். அன்றியும், அவன் தம் இறைவனது அநுஜனென வறிந்து அவர்கள் ஒன்றுஞ் செய்யாமல் தனேசுவரனிடஞ் சென்று தசாநநனது செய்கைகள் யாவையும் விண்ணப்பஞ்செய்தனர். தனுதிபதி அவ்வரக்கனுடன் போர்புரிய அனுமதியளித்தது கேட்டு அவ்வியக்கர்கள் அகமகழ்ச்சியுடன் யுத்தத்திற்குப் புறப்பட்டனர். இயக்கர் எதிர்த்துப் போர் தொடுத்தவளவில், அரக்கர் படை கடல்கலங்குமாறு உல்லோலகல்லோல மாகியது; மலைநடுங்குதல்போல் நடுக்கமுற்றது; யக்ஷர்களுக்கும் இராக்ஷஸர்களுக்கும் கோரமான யுத்தம் ஆரம்பமாக, தசாநநனது அமைச்சர்கள் மிகத்துன்புற்று வருந்தினர். தனது படை அத்தன்மையதானதுகண்டு தசக்கிரீவன் அகங்கரித்து அதிகமான அட்டஹாஸஞ் செய்துகொண்டு கோபத்துடனே கொதித்தெழுந்தனன். அதுகண்டு இயக்கர்கள், மிகக்கொடிய பராக்கிரமமுடையோரான இராக்கதராஜனது அமைச்சராயிரவரையும் ஒவ்வோரியக்கராகச் சூழ்ந்துகொண்டு சமர்புரியலாயினர். பிறகு அந்த யக்ஷர்கள் கதைகள், முஸலங்கள், கத்திகள், சத்திகள், தோமரங்கள் ஆகிய பல படைக்கலங்களைப் பத்துத்தலையான்மீது பிரயோகிக்கலாயினர். மேகம் மழை பொழிவது போல இயக்கர்கள் பலசஸ்திரங்களைப் பொழிகையிலும், மழைத்தாரைகளால் அடிபட்ட மலையெனச் சிறிதும் வருத்த முறாதவனாகி, துராத்துமாவான இராக்ஷஸராஜன் காலதண்டத்திற்கொப்பான கதையொன்றைக் கையிலேந்தி யக்ஷஸேனையிற் புகுந்து, மிகுதியாகச் சேர்ந்த உலர்ந்த விறகுகளைக் காற்றுடன் கூடிய அக்கினி யெரிக்குமாறு, இயக்கர்களை யெரித்து யமலோகம் அனுப்பலாயினன். அதுகண்டு அவனுடைய மஹோதரன் சுகன் முதலிய மந்திரிமார்

களும் அவனுடன் கூடி இயக்கர்களைப் புடைக்கத் தலைப்பட்டு அநேகமாக அதமாக்கினர். அப்பொழுது யக்ஷர்கள் காற்றின் வழிப்பட்ட மேகங்கள் போலாயினர். அடியுண்ட சிலர் சினமூண்டு பற்களால் உதடுகளைக்கடித்துக் கொண்டு போர்க்களத்திலே மடிந்தனர்; போர்புரிந்து சலிப்புற்ற சிலர் கைப்படை கீழே நழுவ, ஒருவரையொருவர் ஆலிங்கனஞ் செய்துகொண்டு வெள்ளத்தினால் அறுப்புண்ட கரைபோல விசனத்துடனே மடிந்துவிழலாயினார். அக்காலையில் புவிமீது போர்புரிந்து புடைபட்டு இறந்து விண்ணுலகஞ் செல்பவர்க்கும், இந்த மஹாயுத்தத்தைக் காண வந்து கூட்டங்கூடியமுனிவர்களுக்கும் ஆகாயத்திலிருக்க இடமின்றி வெகுநெருக்கமாகிவிட்டது.

இந்த யக்ஷர்கள் இவ்வண்ணம் வதையுண்டதுகண்டு தனத்தியக்ஷன் மஹாபலிஷ்டர்களான வேறுபல இயக்கர்களை அமர்புரியுமாறு அனுப்பலாயினான். ஓ ராம! அத்தருணத்தில் மிகப்பெரியபடையும் பராக்கிரமமு முடையோனான ஸம்யோதகண்டகன் என்னும் தலைவனையனுப்ப, அவ்வியக்கன் அமர்க்களம்புகுந்து இராக்கதர்களை வதைக்கலாயினான். விஷ்ணுவினது சக்கரத்தினால் அடியுண்டவனென அவ்வியக்கனால் அடியுண்டு மாரீசன், புண்ணியமிழந்தவன் தேவலோகத்தினின்று வீழ்வதுபோல, கைலாஸகிரியினின்று கிழேவீழ்ந்தனன். உடனே அவ்விராக்கதன் முகூர்த்தகாலத்தில் அம்மூர்ச்சைதெளிந்து இளைப்பாறி மீண்டும் அவ்வியக்கனுடன் அமர்புரிய, அவன் தோற்றோடிப் போயினான்.

இவ்வாறு இயக்கர்படை பறந்தோடிய பின்னர் தசக்கிரீவன் துணிவு கொண்டு, சுவர்ணத்தினாலும் வைடூரியத்தினாலும் வேலைப்பாடுகள் செய்து விசித்திரமாக விளங்குகின்ற தோரணவாயிலுள் நுழைந்தனன். அதுகண்டு அங்கிருந்த வாயில் காப்போனான சூரியபானுவென்பவன் அவனைத் தடுத்தனன். வாயிலோன் விலக்குகையிலும் கேளாது இராவணன் உட்புகத் துணிவதுகண்டு அந்த யக்ஷன் அங்கிருந்த பெரியதொரு ஸ்தம்பத்தையெடுத்து அவ்விராக்கதனைப் புடைத்தனன். அப்பொழுது பெரியதொரு பருவதத்தில் பொன்தாதுக்கள் பெருகுவதுபோல இராவணனது உடலில் குருதி வெள்ளம் பெருகலாயிற்று. மலைச்சிகரம்போன்றதான பெரியஸ்தம்பத்தினால் புடைபட்டவளவிலும், பிரமதேவனது வரத்தின் பெருமையால் இராவணன் சற்றும் சிதைவுறுதவனாகி, அதேஸ்தம்பத்தைக் கைக்கொண்டு அவ்வியக்ஷனைப் புடைத்தனன்; அவன் உடனே உடல் நீறுபட்டு உள்ள விடந்தெரியாதவனாயினான். இத்தன்மையதான இராக்கதனது பராக்கிரமத்தைக் கண்டவளவில் இயக்கர்கள் அனைவரும் அச்சமுற்றவர்களாகி முகம்வாடிக் கைப்படைகளை யெறிந்துவிட்டு, நதிகளிலும் குகைகளிலும் ஓடியொளித்தனர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் பதினான்காவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## பதினைந்தாவது ஸர்க்கம்.

யக்ஷர்களுக்கும் இராக்ஷஸர்களுக்கும் நடந்த யுத்தமும், அதில் இராக்ஷஸர்கள் தனுத்தியக்ஷனை வென்றதும்.

இவ்வாறு இயக்கர்தலைவர்கள் ஆயிர மாயிரமாய் அஞ்சி ஓடிப்போயி னமைகண்டு தனுதிபதி மாணிபத்திரனென்னும் பெரிய யக்ஷனை நோக்கிக் கூறுகின்றனன்: 'ஹே யக்ஷேந்திர, மாணிபத்திர! தீயொழுக்கமுடையவ னும், பாவமே புரியத்துணிந்தவனுமான இராவணனை வென்று, நீ போர்புரிய விருப்பமுள்ள வீரர்களான இயக்கர்களைப் பாதுகாப்பாயாக' என்று கூறி னுன். எவராலும் வெல்வதற்கரிய மஹாபாகுவான மாணிபத்திரன், இங்ஙு னம் தனுதிபதி புகன்றது கேட்டு நாலாயிர மியக்கருடனே போர்புரியப் புறப்பட்டனன். அந்தயக்ஷர்கள் கதை, முஸலம், பிராஸம், சத்தி, தோம ரம், முத்கரம் என்னும் ஆயுதங்களால் அரக்கர்களை யடித்து உபத்திரவிக்க லாயினர். அக்காலையில் அவர்கள் பருந்துபோல மெல்ல நடந்துகொண்டு, 'என்னுடன் போர்தொடுக்க வருக, யான் போர்புரிய விரும்புகின்றேனில்லை, எனக்குப் போர் அளிக்க' என இவ்வண்ணம் மொழிகின்றவர்களாய் மிக நெருங்கி அமர்புரிய லாயினர். அந்தக் கொடிய யுத்தத்தைத் தேவர்களும், கந் தர்வர்களும், முனிவரும், பிரம்மவாதிகளும் கண்டு மிக்க வியப்புற்றனர்.

அத்தருணத்தில் பிரஹஸ்தன் ஆயிரம் இயக்கரைக் கொலைசெய்தனன்; அங்ஙனமே மகோதரன் மற்றொரு ஆயிரம் இயக்கரை அதம்செய்தனன்; மாரீசன் மிகக்கோபங்கொண்டு போர்புரிந்து நிமிஷகாலத்தில் இரண்டாயிரம் இயக்கரை மாய்த்தனன். ஓ புருஷசிங்கமே! இயக்கர்களது நேரான தரும யுத்தமெங்கே? அரக்கர்களது மாயப்போர் எங்கே? மாயப்போர் புரியும் இராக்கதர் முன்னே நேர்நெறியாக யுத்தஞ்செய்யும் இயக்கர்நிற்கமுடியுமோ? ஆனதுபற்றியே இராக்கதர்கள் இந்த யுத்தத்தில் ஏற்றம் பெற்றவர்களாயினர். அக்காலையில் தூமிராக்ஷனென்னுமிராக்கதனுடனெதிர்த்து, அவன்சினமுற்று விடுத்த முஸலத்தினுல் மார்பில் அடியுண்டனன் மாணிபத்திரன். ஆயினும் அவன் அதனுல் சற்றேனும் சலியாதவனுகிக் கதையைக் கையிலெடுத்து தூமிராக்ஷனை மோதினுன். மாணிபத்திரனுல் முடிமீது அடியுண்ட தூமி ராக்ஷன் உடனே மூர்ச்சித்து மண்மீது வீழ்ந்தனன்.

போர்க்களத்துக் குருதிவெள்ளம் பெருகியோட, தூமிராக்ஷன் அடி யுண்டு வீழ்ந்தது கண்டு தசமுகன் மாணிபத்திரனை யெதிர்த்துச் சென்றனன். தசாநநன் சீற்றங்கொண்டு விரைந்து வருவதுகண்டு மாணிபத்திரன் மூன்று வேல்களை விடுத்து அவனை யடித்தனன். அதுகண்டு தசகந்தரன் கோபங் கொண்டு மாணிபத்திரனது மகுடத்தின்மீது தாக்கினுன். அதனுல் மாணிபத் திரன் சற்றேனும் சலித்திலனுயினும், இராவணன் மோதிய உக்கிரத்தினுல் அவனது மகுடம் ஒருபுறமாச் சரிந்து போயிற்று; அன்றுதொட்டு அந்த

யக்ஷனுக்குப் * பாரிசமௌளியெனவேபெயர்பிரசித்தமாக வழங்கலாயிற்று. அதுகண்டு ஆற்ருது மாணிபத்திரன் தசக்கிரீவனைப் புடைக்கையிலும், அவன் சற்றேனும் சலித்தனனல்லன்.

ஒ ராஜனே! மாணிபத்திரன் இங்ஙனம் அவமானமடைந்ததுகண்டு அம்மலையிலே மிகப்பெரியகோஷமொன்று உண்டாகியது. அக்காலையில் தனுத்தி யக்ஷன் கதாதரனுய் சுக்கிரன், பிரோஷ்டபதன் என்னும் மந்திரிகள், பதுமநிதித்தலைவன், சங்கநிதித்தலைவன் ஆகிய இவர்களுடனே சிறிது தூரத்திற்கண்ணுக்குத்தோன்றினன். அவன், தன் பிராதாவான தசமுகன் சாபத்தினுல் இங்ஙனம்பெருமையையிழந்து பொல்லாங்கிழைப்பதுகண்டு, பிதாமஹனதுகுலத்தில் தோன்றிய தனக்குத் தகுந்தவையான சிலமொழிகள் மொழியலாயினன். அஃதென்னவெனில், 'ஒ புத்திகெட்டவனே! யான்உரைத்த இதவசனத்தை ஏற்றுக்கொள்ளாது இவ்வாறு அறநெறிதவறி யொழுகுகின்றனே; இதன் பயன் விளையுங்காலத்து நீ நரகத்து வீழ்ந்தபின் இதனையுணர்வாய்.

యోహిమోహాద్విషంపీత్వా నావగచ్ఛతిదుర్మతిః।
సతస్యపరిణామాన్తే జానీతేకర్మణఃఫలం॥

யோஹிமோஹாத்விஷம் பீத்வா நாவகச்சதிதுர்மதி: |
ஸதஸ்யபரிணமாந்தே ஜாநீதேகர்மண: பலம் ||

துர்ப்புத்தியுடையோனுன ஒருவன் மோஹத்தினுல் விஷத்தைப்பருகித் தான்செய்த தீச்செயல் இத்தன்மையதென்பதை அப்பொழுது உணரானுகி, அதன்பயன் விளையுங்காலத்திலேயே அதனையுணர்வான். நீ ஏதோ ஒரு நற்செயல் செய்ததனுலேயேதெய்வம் உன்விஷயத்தில் அகமகிழ்ச்சிகொள்ளாது; தெய்வமே உன்னை இத்தன்மையான நிலையில் இழுத்துவிட்டது; அதனை நீ உணர்ந்தனையல்லை.

మాతరంపితరంమోహీ ఆచార్యంచావమన్యతే।
సపశ్యతిఫలంతస్య ప్రేతరాజవశంగతః॥
అధ్రువేహిశరీరేయో నకరోతితపోర్జనం।
సపశ్చాత్తప్యతేమూఢో మృతోదృష్ట్వాత్మనోగతిం॥
ధర్మాద్రాజ్యంధనంసౌఖ్య మధర్మాద్దుఃఖమేవచ।
తస్మాద్ధర్మంసుఖార్థాయ కుర్యాత్పాపంవిసర్జయేత్॥
పాపస్యహిఫలందుఃఖం తద్భోక్తవ్యమిహాత్మనా।
తస్మాదాత్మోపఘాతార్థం మూఢఃపాపంకరిష్యతి॥
కస్యచిన్నహిదుర్బుద్ధేశ్ఛన్దతోజాయతేమతిః।
యాదృశంకురుతేకర్మ తాదృశంఫలమశ్నుతే॥
బుద్ధింరూపంఫలంపుత్రాన్ శౌర్యంధీరత్వమేవచ।
ప్రాప్నువన్తినరాలోకే నిర్జితంపుణ్యకర్మభిః॥

* பாரிசமௌளி-ஒருபுறமாகச்சரிந்த கிரீடமுடையவன்.

மாதரம்பிதரம்யோஹி ஆசார்யஞ்சாவமந்யதே |
ஸப்ச்யதிபலந்தஸ்ய ப்ரேதராஜவசங்கத: ||
அத்ருவேஹிசரீரேயோ நகரோதிதபோர்ஜநம் |
ஸபச்சாத்தப்யதேமூடோ ம்ருதோத்ருஷ்ட்வாத்மநோகதிம் ||
தர்மாத்ராஜ்யம்தநம் ஸௌக்ய மதர்மாத்துக்கமேவச |
தஸ்மாத்தர்மம்ஸுகார்த்தாய குர்யாத்பாபம்விஸர்ஜயேத் ||
பாபஸ்யஹிபலந்துக்கம் தத்போக்தவ்யமிஹாத்மநா |
தஸ்மாதாத்மோபகாதார்த்தம் மூட:பாபங்கரிஷ்யதி ||
கஸ்யசிந்நஹிதுர்ப்புத்தே: சந்தோஜாயதேமதி: |
யாத்ருசங்குருதேகர்ம தாத்ருசம்பலமச்நுதே ||
புத்திம்ரூபம்பலம்புத்ராந் சௌர்யந்தீரத்வமேவச |
ப்ராப்நுவந்திநராலோகே நிர்ஜிதம்புண்யகர்மபி: ||

தாய் தந்தையர் ஆசிரியன் இவர்களை யாவனொருவன் அவமதிக்கின்றனனோ, அவன் அதன்பயனை யமன்கையில் அகப்பட்டுக்கொண்ட பின்னர் உணர்வான். இக்காயம் நிலையற்றதாதலின், இதனைப்பெற்றிருக்கையிலேயே எவன்தவம் புரியாதொழுகின்றனனோ, மூடனாகிய அவன் அதன்பயனைத் தான்மரித்து விதிவசப்பட்டவனாகி வருந்துகையில் உணர்ந்து அல்லலுறுவான். இராச்சியம், தனம், சவுக்கியம் இவை தருமத்தினாலேயே விளைகின்றவை; அதருமத்தினால் துக்கமேவிளைவது; ஆதலின் சுகத்தை வேண்டுவோர் அறத்தினையேசெய்வர், பாவத்தைவிட்டொழிவர். பாவத்தை யிறப்பப்புரிபவர் அதன்பயனான துக்கத்தை இம்மையிலேயே அனுபவிக்கலாகும். 'கெடுபவர்க்குக்கெடுமதி பிடரியி' லாதலின், மூடன் இதமுணரானாகிப் பாவத்தையேபுரிவான். துர்ப்புத்தியுடையோனான ஒருவனுக்குப் பெரியோரது நற்போதனையின்றிச் சுயமே நற்புத்தி தோற்றாது. எவன் எத்தன்மையானகருமம் இயற்றுகின்றனனோ, அத்தன்மையான பயனையே அனுபவிப்பான்: புண்ணியகருமஞ் செய்தவர்களே அதன்பயனாக, நற்புத்தி, நல்லுருவம், நற்பயன், நற்புதல்வர், சௌரியம், தைரியம் ஆகிய இவைகளைப்பெறுவர். நீ இத்தன்மையான துர்ப்புத்தியுடையோனாகித் தீமையே புரிகின்றமையின், நீ கெடுநரகில் வீழ்ந்தழிவாய். துர்ப்புத்தியுடையோனான உன்னுடன் இனி யான்பேசேன்' என்றுகூறி, மாரீசன் முதலாய அவனது அமைச்சர்கள் அனைவரையும் உறுதியாப்புடைத்துப் புறங்காட்டி யோடச்செய்தனன்.

அதன்பிறகு தனதிபதி கதையொன்றைக் கையிலெடுத்து அதனால் தசக்கிரீவனைச் சிரத்தில்மோதினான். அங்ஙனம் மோதுகையிலும் அவ்விராக்கதன் சிறிதும் சலித்தவனல்லன். ஒ ராம! பின்பு அவர்கள் இருவரும் சிறிதும் சோராமலும் சலியாமலும் அதிககோபத்துடனே ஒருவரையொருவர் புடைத்துப் பெரும்போர் இயற்றினார்கள். இயக்கர்கோன் அரக்கர்கோனை நோக்கி ஆக்கினேயாஸ்திரம் விடுக்க, அவன் வருணாஸ்திரத்தைவிடுத்து அதனை யவித்தனன். பின்னர் அவ்விராக்கதர்தலைவன் அரக்கர்கட்கு உரிய தான மாயையிற்புகுந்து, இயக்கர்களை யொழிக்குமாறு, வேங்கை, வராகம், மேகம், மலை, மரம், மகோததியெனப் பலவுருவமெடுத்தனன்; இயக்கனாக

வும், தைத்தியனுகவும் தோற்றினன். தசாநநன் இங்ஙனம் பற்பலவுருவங் களைப்பெற்று மயக்கினனேயன்றி, தான்கட் புலனுயினனில்லை. ஓ ராம! பத் துத்தலையோன் அதன்பிறகு கதாயுதத்தில் மகத்தான ஒரு அஸ்திரத்தை மூட்டித் தனதிபதியினதுமுடியில் மோதினன். அதனுல் அடியுண்டவளவில் அவன் மிகச்சோர்ந்து குருதிவெள்ளம் பெருகியோட, அடியற்றமரமென வேதனையுற்று வீழ்ந்தனன். அதுகண்டு அருகிலிருந்த பதுமநிதி முதலான நிதிதேவதைகள் அவனையுடனே யெடுத்து நந்தனவனத்திற் கொண்டுபோய்க் களைதீர்த்தனர்.

அரக்கர்தலைவன் இவ்வாறு வித்தேசனைவென்று மனமகிழ்ந்தவனுகி தான்பெற்ற வெற்றிக்கு அறிகுறியாக அவனது ஒப்பற்ற புஷ்பகவிமானத் தைக் கைப்பற்றிக்கொண்டனன். சுவர்ணமயமான ஸ்தம்பங்கள்நாட்டி, வைடூரியமணிகளால் தோரணங்கட்டி, முத்துமாலைகள் தொங்கவிட்டு, மணி கள்பதித்த பொன்னுலாய படிக்கட்டுகளும், சிறந்ததங்கத்தினுலாய மேடை களுமுடையதாக விளங்குவதும், வேண்டுவோர்க்கு வேண்டும்பலனை யளிப்ப தும், வேண்டியவாறு உருவமெடுப்பதும், இஷ்டமானபடி இயங்கவும் மனே வேகமாக வானத்தில்செல்லவும் திறமையுடையதும், மிகவும் அதிசயமான தோற்றமுடையதாய்க் கண்ணுக்கும் மனத்திற்கும் இன்பம் விளைவிப்பதும், அதிசீதமும் அதிஉஷ்ணமுமின்றிச் சமசீதோஷ்ணமாய் எல்லாப்பருவங்களி லும் சுகந்தருவதுமாய் முன்பு பிரமதேவனுல் ஸர்வகாமங்களோடும் நிருமிக்கப் பட்ட ஒப்புயர் வில்லாத மனோஹரமாகிய அக்ஷயமான தேவ வாஹனமான அப் புஷ்பகவிமானத்தின்மீது இராக்ஷஸராஜன் தான் வீரியத்தினுல் ஜயித்த தென்ற செருக்குடனே யேறி மூவுலகத்தையும் வென்றதாக வெண்ணினன். இவ்வாறு வைச்சிரவணனைத் தசக்கிரீவன் தனதுவிக்கிரமத்தினுல் வென்று கைலாஸத்தினின்று மிறங்கினன். ஜயசீலனுன ராக்ஷஸராஜன் கிரீடம் ஹாரம் முதலான அணிகளையணிந்து புஷ்பகவிமானத்தின்மீது தோற்றுகையில், பெரியஸபைநடுவே ஓங்கிச்சொலிக்கும் அக்கினிபோல விளங்கினன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினுறுவது ஸர்க்கம்.

தசக்கிரீவன் கைலாஸகிரிமீது செல்லுகையில் புஷ்பகவிமானம் அப்புறஞ்செல்லாது நின்றுவிட்டதும், அதுகண்டு அவன்மயங்கி நிற்கையில் எதிரேதோன்றிய நந்தி கேச்வரரைக்கண்டு அவன் இகழ்ந்ததும், அதனுல் அவர் அவனுக்குச் சாப மிட்டதும், பிறகு லங்கேச்வரன் கைலைமலையைப் பெயர்க்கமுயன்று சிவபிரானது சத்தியினுல் அக்கிரியின் கீழ்க்கைகள் நசுக் குண்டு வீரிட்டுப் பிறகு அப்பிரானைப்போற்றி அவரால் வரமளிக்கப்பெற்று உலகமெல்லாம் வெல்லப் புறப்பட்டதும்.

---

"ஹே ராம! இவ்விதமாக ராக்ஷஸாதிபன் தன்தமையனுன தனதிபனை வென்று புஷ்பகவிமானத்திலேறிக்கொண்டு முருகக்கடவுள் உற்பவித்த விட

மான *சரவணத்தைக்காண விருப்புற்று அவ்விடம்சென்றனன். ஆங்கு மிகச் சோதியுடனே பொன்மயமாக இரண்டாவது சூரியனெனவிளங்கும் அந்த நாணற்காட்டைக் கண்டு வியப்புற்று தசக்கிரீவன் அவ்விமானத்துடனே மலை மீதேறினன். ஆங்கு மிக ரமணீயமான உத்தியானவனமொன்று காணப்பட்டது. ஹே தாசரதே! அவ்விடத்து அந்தப் புஷ்பகவிமானம் அப்பால் செல்லாது அவ்வாறே ஸ்தம்பித்துவிட்டது. இஷ்டமானபடி செல்லவல்ல விமானம் அவ்வண்ணம் அசையாமற்போனதுகண்டு இராக்ஷஸேந்திரன் இஃதென்னபுதுமையெனத் தன்மந்திரிமார்கள் புடைசூழச் சிந்திக்கலாயினன். 'இந்தப்புஷ்பகவிமானம் நாம் கருதியவண்ணம் செல்லாது இங்ஙனம் நின்றுபோனது யாதுகாரணம்? இம்மலைமீதுள்ளவன் எவனேனும் இங்ஙனம் செய்திருப்பானோ' வெனச் சிந்தித்து நின்றனன். ஒ ராகவ! அதுகண்டு மகாபுத்திசாலியான மாரீசன் இராவணனைநோக்கி, 'ஹே ராஜன்! இந்தப்புஷ்பகவிமானம் இவ்வாறு அசைவற்றுநிற்பது நிஷ்காரணமென்று நினைக்கலாகாது. ஒருகால் இஃது குபேரனொருவனொழிய மற்றெவனுக்கும் வாஹனமாவதின்றோ? மேலே குபேரன் ஏறியிராமை பற்றியே இஃது இயங்காது நிற்கின்றதோ' என்றனன்.

இங்ஙனம் அவன் இயம்புகையிலே, குறுகியகைகளும், மொட்டைத்தலையுமாய், கறுத்த பிங்களநிறமான கரடுமுரடாகிய மேனியுடனே வாமனரூபமான ஒருவர் அவனருகேவந்து தோன்றினர். அவர் சிவபிரானது அநுசரரான நந்தீச்வரராம். அந்த நந்தீச்வரர் இராக்ஷஸராஜனைநோக்கி, 'ஒ தசக்கிரீவா! இம்மலை ஸாக்ஷாத்சங்கரபகவான் எழுந்தருளியிருக்குமிடம், இங்கு சுபர்ணர், நாகர், யக்ஷர், தேவர், கந்தர்வர், ராக்ஷஸர் முதலியோர் ஒருவரும் கண்ணெடுத்துப்பார்க்கக் கூடாது. எப்படிப்பட்டவரேனும் இவ்விடம் செல்லலாகாது. நீ துர்ப்புத்தியினால் இவ்விடம்வந்துசேர்ந்தனை, திரும்பிச்செல்லுக, வீணாக விநாசத்தையடையற்க' எனச்சிறிதும் அச்சமின்றி உரை செய்தனர்.

நந்திதேவனுரைத்த வார்த்தையைக்கேட்டு அரக்கர்கோன் கோபத்தினால் குண்டலங்கள் அசையக் கண்கள் சிவந்து புஷ்பகத்தினின்று மிறங்கி, 'அடே, சங்கரனென்பவன் யாரடா!' எனக்கதறி அந்தச்சைலத்தின் மூலம் சேர்ந்து கண்ணெடுத்து நோக்கினன். ஆங்கு சிவபிரானுக்குச் சற்றுத் தூரத்தில் மிகச் சோதிமயமான சூலத்தைக் கையில்தரித்து இரண்டாவது சங்கரனெனத் தோற்றிய நந்திதேவனைக் கண்ணுற்றனன். அந்த நந்திதேவர் வாநரமுகமா யிருத்தல்கண்டு அவ்விராக்கதன் அவரை யிகழ்ந்து நீருண்டமேகம் முழங்குமாறு பெருநகை செய்தனன். அதுகண்டு சங்கரனது மற்றொரு மூர்த்தியென விளங்கும் நந்திகேச்வரர் கோபமூண்டு பத்துத்தலையோனான அப்பிசிதாசனனை நோக்கி, 'அடே, தசாநந! வாநரரூபியான என்னை நீ யிறுமாப்பினால் இகழ்ந்து இடியிடித்தாலன்னப் பெருநகைசெய்தனையல்லவா? இஃதுவீண்போகாது; என்னைப்போன்ற உருவமும், எனக்

* சரவணம்—நாணல்காடு.

 தசக்கிரீவன் கைலயாங்கிரியை, எடுத்தாட்டியது. 



దశగ్రీవుడు కైలాసగిరిని యెత్తి ఆడించినది.

கொப்பான வீரிய பராக்கிரமங்களு முடையோரான வாநரர்கள் உன் குலத்தைக் கருவழிக்க உற்பவிப்பார்கள். அவர்கள் சலிக்கின்ற சைலங்களையொத்த தோற்றமுடைய வர்களாகி, மனோவேக முடையவர்களாய் மிக்க வலிகொண்டு, நகங்களும் பற்களுமே படைக் கலங்களாகக்கொண்டு போர்புரியப் பேராவ லுடனே வந்து உனது செருக்கையும் கொழுப்பையும் ஒழிக்கப்போகின்றனர்; உன்னை யொருவனையே யன்று, உனது புத்திராமாத்தியர்களையும் அதஞ் செய்வார்கள். (* அன்றியும், தேவர்களின் வேண்டுகோளால் ஸ்ரீமகாவிஷ்ணு தசரத நந்தனனாய் ஸ்ரீராமனெனப் பெயர்பூண்டு மானிடவுருவமாகத் திருவவதரித்து உன் உயிரையொழிக்கப் போகின்றனர்.) அடே நிசாசர! யான் இப்போதே உன்னை யொழித்து விடுவேன்; நீ முன்னமே உனது கொடிய செய்கைகளால் அதஞ்செய்யப் பட்டிருக்கின்றமையின், கொலையுண்டவனை மறுத்துங் கொல்வது வீணெனவிடுத்தேன்' என மொழிந்தனர்.

நந்திதேவர் அங்ஙன முரைசெய்த வளவில், தேவர்கள் துந்துபி வாத்தியம் முழங்கினர்; வானத்தினின்று புஷ்பவருஷம் வருஷித்தது. ஆயினும் தசாநநன் தன்வலியையே மேலாகவெண்ணி நந்திதேவர் மொழிந்ததைச் சிந்தையிற் கொள்ளாது கைலைமலை யருகிற்சென்று, யான் செல்லுகையில் என் புஷ்பக விமானத்தினது போக்குக்குத் தடைசெய்தது இம்மலையே யாதலின், ஹே ஏறுயர்த்த ஈசனே! உன்வாஸஸ்தானமான இவ்வரையை வேரோடு பெயர்த்தெறிவேன்; எந்தப் பிரபாவத்தைக்கொண்டு ருத்திரன் இம்மலையில் இராஜனென நிர்ப்பயமாக விசாரமற்று விஹரித்துக் கொண்டிருக்கின்றனனோ விளங்கவில்லை; தனக்கு நேர்ந்திருக்கு மபாயத்தையும் இவன் உணர்ந்திலன்! என்று கூறினான். ஹே ரகுநந்தந! இங்ஙனம் உரைத்து அவ்விராக்கதன் தன்கைகளை நீட்டிக்கைலையங்கிரியின் கீழே கொடுத்து அதனை யசைத்தனன். உடனே அந்தமலை கலகலவென் றாடியது. அவ்வசலம் சலிக்கவே, ஆங்கிருந்த பிரமதகணங்கள் நடுநடுங்கினர்; உமாதேவியும் ஆட்டமுற்று அஞ்சித் தம்கணவனை யாலிங்கனஞ் செய்துகொண்டனள். ஹே ராம! அதுகண்டு தேவர்களிற் சிறந்தவரான மஹாதேவர் தமது திருவடிப்பெரு விரலினால் அம்மலையை யழுத்தினார். அங்ஙனம் அவர் அழுத்திய வளவில், அவ்வரையின் அடியிலிருந்த அரக்கனது புஜங்கள் நன்றாக நசுக்குண்டன. அதுகண்டு அவ்விராக்கதனது அமைச்சர்கள் மிக்க வியப்புற்ற வராயினர். அரக்கர்தலைவனோ, புஜங்கள் நசுக்குண்டதினாலும் ரோஷத்தினாலும், மூவுல

---

* ஸ்ரீமகாவிஷ்ணு இராமனாக அவதரிப்பா ரென்று இங்கு கூறியது சில புஸ்தகங்களில் காணப்படவில்லை; அதை யிங்கெடுத்து இராவணனுக்கு உரைக்கவேண்டுவது அவசியமின்றெனத் தள்ளப்பட்டது போலும். 'அந்த ஸ்ரீமந்நாராயணனே ஸ்ரீராகவனாக அவதரித்து வந்தனர் போலு' மென யுத்தகாண்டத்தில் இராவணனே கூறுவதனால், இந்த ரகசியம் இராவணனுக்கு முன்பே தெரியுமென்றும், தன்னை ஸம்ஹாரஞ் செய்யவே ஸ்ரீராமன் அவதரித் திருக்கிறானெனத் தெரிந்தே இராவணன் தான் முக்தியடையும் பொருட்டு ஸீதாபஹரணம் முதலான செய்கைகளை செய்தானென்றும் விளங்குகின்றமையின், இங்கு அதனைக்கூறியது தக்கதே யென்பர் சிலர்.

கங்களும் அஞ்சி நடுங்குமாறு ஒருபெருங் கூச்சலிட்டனன். அதுகேட்ட அவனது அமைச்சர்கள் இஃது யுகாந்தகாலத்தி லுண்டாகும் இடிமுழக்கமோவென மயக்குற்றனர். இந்திராதி தேவர்களும் மயங்கி வழிதுறை தெரியாது தடுமாறினர்; கடல்களும் கலக்கமுற்றன; சைலங்களும் சலிக்கலாயின; யக்ஷர், விச்சாதரர், ஸித்தர் இவர்கள் இஃதென்னவென வியப்புற்றனர்.

இவ்வாறு வீரிடுகின்ற தசாநநனை நோக்கி அவனது மந்திரிகள், 'அரக்கர் பெருமானே! நீ நீலகண்டனும் உமாபதியுமான மஹாதேவனை அகமகிழச் செய்தல்வேண்டும்; ராஜனே! அவரொழிய இப்பொழுது உனக்கு அடைக்கலம் மற்றெவருமிலர்; நீ இப்பொழுதுவணங்கி அத்தேவனை ஏத்தித்தொழுது அவரையே சரணமடைக; அதனால் கிருபாளுவான சங்கரமூர்த்தி ஸந்தோஷமடைந்து உன் விஷயத்தில் அருள் புரிவார்' என மொழிந்தனர். அமைச்சர்கள் இங்ஙன முரை செய்ததுகேட்டுத் தசாநநன் எருத்துக்கொடியோனை ஸாமகானம் பண்ணிப் பலவாறு தோத்திரஞ் செய்யலாயினன். இவ்வாறு அவன் அழுது புலம்பி ஸாமகானத்தால் சங்கரனை யேத்தித் துதிசெய்கையில், அவனுக்கு ஆயிரம்ஆண்டுகள் கழிந்தன. அதன்பின்னர் மஹாதேவர் பிரஸன்னராகி, ஓ ராம! அம்மலை முடியிலே தோன்றித் தமது விரலைத்தளர்த்தித் தசகந்தரனது புஜங்கள் விடுபடுமாறு செய்து, பின்னர் அவனைநோக்கி அடியில் வருமாறு அருளிச் செய்யலாயினர்: "ஹே தசாநநா! உனது வீரியத்தையும் ஸாமர்த்தியத்தையுங் கண்டு யாம் மிக்க மகிழ்ந்தோமாயினேம். இம்மலையின் கீழ் உனதுகைகள் அகப்பட்டுக்கொண்டு நீ மிகப்பயங்கரமாகப் பெரியராவம் (=பெருங்கூச்சல்) செய்ததாலும், அதுகேட்டு மூவுலகங்களும் பெருங்கூச்சலானதனாலும், இதுமுதல் உனக்கு இராவணனெனவே நாமதேயம் வழங்கக்கடவது. உலகமெங்கும் கலங்கும்படிசெய்த உன்னைத்தேவர் யக்ஷர் மானிடர் முதலான இவ்வுலகிலுள்ளோர் அனைவரும் இன்றுதொட்டு இராவணனெனப் பெயரிட்டு வழங்குவார்கள். ஹே பௌலஸ்தியா! இனி நீ எந்தவழியாகச் செல்ல விரும்புகின்றனையோ, அந்தவழியேயெழுந்து செல்லுக; யாம் இப்பொழுது உனக்கு அநுமதிகொடுக்கிறோம்; எழுந்துசெல்லுக" என்றனர்.

சிவபிரான் இங்ஙனம் அருளிச்செய்ததுகேட்டு லங்கேச்வரன், 'ஸ்வாமி, தேவரீர் அடியேன்மீது அருள்புரிந்தது உண்மையாயின், அடியேனுக்கு ஒரு வரமளிக்கவேண்டுகின்றேன்; தேவர், கந்தருவர், தானவர், ராக்ஷஸர், குய்யகர், நாகர் ஆகிய இவர்களிடத்தும், மற்றுமுள்ள பலிஷ்டர்களிடத்தும் எனக்கு வதம்உண்டாகாதிருக்குமாறு யான் முன்பே வரம்பெற்றிருக்கின்றேன். மானிடர்களை யான் ஒருபொருட்டாக வெண்ணினேனில்லை; அவர்கள் எனக்கு அணுவளவேயன்றோ? முப்புரமெரித்த மஹாதேவ! பிரமதேவனிடம் யான் தீர்க்கமான ஆயுளையும் பெற்றிருக்கின்றேன். அந்தவாணாளின் குறைவையும், ஒரு சஸ்திரத்தையும் எனக்குத்தந்தருளுமாறு தம்மை வேண்டுகின்றேன்' எனப்பிரார்த்தித்தனன். இராவணன் இவ்வாறு உரைத்ததுகேட்டுச் சங்கரன், சந்திரஹாஸமெனப் பெயர்பெற்ற ஒரு கட்கத்தைத் தந்தருளி, அவன் வேண்டிய வாணாளின்குறைவையும் கொடுத்து,

அவனைநோக்கி, 'நீ இந்தவாளை அவமதிக்கலாகாது; அவமதித்தனையாகில், இஃது மறுபடி என்னிடமே வந்து சேர்ந்துவிடும், இதற்கையமின்று' என மொழிந்தனர்.

இவ்வாறு மஹேச்வரனாலேயே நாமகரணஞ் செய்யப்பட்டவனாகி அவ்விராவணன் அத்தேவனைவணங்கி விடைபெற்று மீளவும் புஷ்பகவிமானத்திலேறி யிப்பூமண்டலம் முழுமையும் ஸஞ்சரிக்கலாயினன். அவ்வாறு லோகஸஞ்சாரம் செய்கையில், ஆங்காங்குள்ள மஹா வீரியமுடையோரான க்ஷத்திரியர்களைத் துன்புறுத்தியவாறே சென்றனன். அப்பொழுது போர்புரியப் பின்வாங்காத மஹாபல பராக்கிரமசாலிகளான சூரர்களாகிய க்ஷத்திரியர்கள் பலர் அவனுக்குக் கீழ்ப்படியாதவர்களாகித் தம் பரிவாரத்துடனே விநாசம் அடைந்தனர். மற்றவர்கள், அவ்விராக்கதன் வெல்வதற்கரியனென வுணர்ந்து, வலிகொண்டு செருக்குற்ற அவனைநோக்கி 'யாம் அபஜெயமடைந்தோம்' என வுரைத்து அவனுக்கு ஆட்பட்டவர்களாயினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் பதினாறாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## பதினேழாவது ஸர்க்கம்.

இராவணன் இமயகிரித்தடத்தில் தவம்புரிந்துகொண்டிருந்த வேதவதியைக்கண்டு அவள்மீது காமுற்றதும், அதுகண்டு அவள் உன்னைக் கொலைசெய்ய யானே மறுபடிவந்து தோன்றுவேனெனக் கூறித் தீக்குளித்ததும், அந்தவேதவதியே சீதாபிராட்டியாரென வுரைத்ததும்.

"ஹே ராஜன்! மஹாபலிஷ்டனான அவ்விராவணன் இவ்வண்ணமே உலகஸஞ்சாரம் செய்துகொண்டு இமயமலைத்தடஞ் சேர்ந்தனன். ஆங்கு தேவமகளிர் போன்ற வடிவழகுடையளான ஓர் கன்னிகை கிருஷ்ணாஜினமும் ஜடையும் தரித்துத் தவவேடம்பூண்டு தவம்புரிந்துகொண்டிருந்தனள். விரதம்பூண்டிருந்த கட்டழகியான அக்கன்னிகையைக் கண்ணுற்றுக் காமத்தினால் மோஹித்து அவ்விராவணன் அவளருகிற்சென்று அவளைநோக்கிப் புன்னகைசெய்து கூறலாயினன்: 'ஓ பெண்மணி! உனதுயௌவனத்திற்கு ஒவ்வாதவண்ணம் நீ இஃதென்னகாரியம் செய்கின்றனை? நீ புரியும் இத்தவம் உனது அழகிய இவ்வுருவத்திற்குச் சிறிதுமேற்றதன்றே! உனது ஒப்பற்ற வடிவழகு ஆண்மக்கள் அனைவர்க்கும் காமத்தை யோங்கிவளரச் செய்வதன்றோ? நீ இங்ஙனம் தவம்புரியத் துணிந்து உன்பருவத்தைப் பாழாக்குவது உசிதமன்று. கண்மணி! நீ யாருடையமகள்? முழுமதிபோன்ற முகமுடையாய்! உன்னைக்கைபிடித்த பாக்கியவானான கொழுநன் யாவன்? உன்னை யனுபவிப்பவன் ஒருவனேயன்றோ உலகில் புண்ணியசாலி. நீ யாது காரணம்பற்றி இந்தக்கொடிய விரதம்பூண்டனை? இவையாவும் எனக்கு விளங்கக்கூறுவாய்' என வினவினன்.

இராவணன் இங்ஙனம் இயம்பியதுகேட்டுத் தவமே தனமெனக்கொண்ட அந்தப் புகழ்பெற்ற பெண்மணி அவனுக்கு விதிப்படி அதிதிபூஜைசெய்து மறுமொழி கூறலாயினள்: 'கேளும் ஐயா என் வரலாற்றை: எனது தந்தை மஹாப்பிரபாவசாலியாகிய ஒருபிரம்மரிஷி; பிரஹஸ்பதியின் புத்திரர்; குசத்துவஜரெனப் பெயர்பெற்றவர்; புத்தியில்பிரஹஸ்பதிக்குஒப்பானவர். நித்தியம் வேதாப்பியாஸஞ் செய்துகொண்டிருந்த அம்மாஹாநுபாவருக்கு அந்தவேத வாக்கேயெனத் தற்செயலாய் அவரது வாக்கினின்றும் ஒருகன்னியாக யான் உற்பவித்தேன்; அதனால் எனக்கு வேதவதியெனவே பெயருண்டாகியது. தேவர், கந்தர்வர், யக்ஷர், ராக்ஷஸர், பன்னகர் ஆகிய பலரும் என் தந்தையிடம் என்னை மணமகளாக வரிக்கவந்தனர். ராக்ஷஸராஜனே! என்பிதா என்னை அவர்களிலொருவருக்கும் அளித்திலர். ஹே நிசாசர ராஜனே! அதற்குக்காரணம் கூறுகின்றேன் கேளும்: என்பிதா தமக்குத் திரிலோகாதிபதியான ஸ்ரீமகாவிஷ்ணுவையே மருமகனாகக் கொள்ளவேண்டுமெனக் கருதியிருந்தனராதலின், மற்றெவருக்கும் என்னைக்கொடுக்க விரும்பினாரில்லை. அதுகேட்டு 'தம்பு' என்னும் அசுரத்தலைவனொருவன் வலியினால் செருக்குற்று அழுக்காறுடையானாகிக் கதம்விஞ்சி, இரவில் நித்திரைசெய்துகொண்டிருக்கையில் வந்து என்தந்தையைக் கொலைபுரிந்தனன்; எனது அன்னை அதுகண்டு துயரமுற்று அவருடலைத் தழுவிக்கொண்டு தீக்குளித்தனள். அதன் பிறகு யான் தந்தையினது மநோரதத்தைப் பூர்த்திசெய்விப்பதே பெரியகாரிய மெனக்கொண்டு, அந்த நாராயணனையே நாயகனாகவரிப்பேனெனத்துணிந்து, அங்ஙனமே பிரதிஞ்ஞைசெய்து இங்குவந்து இத்தவம் புரிகின்றேன். ஹே இராக்ஷஸராஜனே! இதுவே எனதுவிருத்தாந்தம், முற்றுமியம்பினேன். ஸ்ரீமந்நாராயணனே எனதுபர்த்தா; அந்தப் புருஷோத்தமனொருவனன்றி மற்றெவனும் எனக்கு நாயகனல்லன்; அந்த நாராயணனையே அடையவேண்டுமெனவே இந்த உக்கிரமான நியமம் பூண்டிருக்கின்றேன். ஹே பௌலஸ்தியநந்தந! ஹே ராஜன்! யான் உம்மையறிவேன், எனது தவத்தின் மகிமையால் மூவுலகத்திலும் நடக்கின்ற யாவற்றையும் யான் அறிவேன். இனி நீர் இவ்விடம்விட்டு அப்புறமெழுந்து செல்லுக' என்று கூறினள்.

அதுகேட்டு இராவணன் மன்மதபாணங்களால் பீடிக்கப்பட்டவனாகி விமானத்தினின்று மிறங்கிவந்து கொடியவிரதம் பூண்டிருக்கின்ற அக்கன்னிகையை நோக்கி மறுபடி மொழியலாயினன்: 'ஹே சுந்தரி! நீ அழகிற்சிறந்த பவழக்கொடியென்று அகங்காரமடைந்திருக்கின்றனை; இல்லையாயின் உனக்கு இத்தன்மைய புத்தியுண்டாகாது. மான் விழிபோன்ற விழிகளையுடைய மடமாதே! பெரியோர்களுக்கு நீ புண்ணியங்களின் தொகுதியேயெனத் தோன்றுகின்றனை; எல்லாநற்குணங்களுமமைந்த நீ இங்ஙனம் உரைசெய்வது உசிதமானதன்று, அச்சமும் அழகுமமைந்த உத்தமி! உனது பருவம் வீணே கழிந்துபோகின்றது. ஹே கல்யாணி! யான் இலங்காபுரத்தரசன், தசக்கிரீவனெனப் பெயர்பெற்றவன். அத்தன்மையனான எனக்கு நீ இல்லாளாகி

NO7. வேதவதி இராவணனைச்சபித்துத்தீக்குளித்து மருபடி தாமரைமலரில் உற்பவித்தது. 



వేదవతిరావణుని శపించి అగ్నిప్రవేశము చేసి, పిమ్మట తామర పుష్పములో వుద్భవించినది.)

உனக்கு வேண்டியவாறு ஸகலபோகங்களையும் அனுபவிக்கக்கடவை. நீ விஷ்ணுவென்றுகூறுகின்றனையே, அவன் யாவன்? அவன் வீரியத்திலாயினும், தவத்திலாயினும், போகத்திலாயினும், வலியிலாயினும் எனக்கு இணையாகுவனோ? பெண்கள் நாயகமான நீ அவன்மீது காதல்கொள்ளுதல் உனக்குத் தகுமோ' என இங்ஙனம் பலவாறு பிதற்றினான்.

இராவணன் இவ்வாறு புகன்றதுகேட்டு வேதவதி, 'ஓ ராக்ஷஸராஜனே! நீர் இவ்வாறு உரைசெய்வது உமக்குத் தகுந்ததன்று; திரிலோகாதிபதியும் ஸகலலோகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவருமான ஸ்ரீமஹாவிஷ்ணுவை இப்பொழுது நீரொருவரே இகழ்ந்து பேசினீர்; நீரொருவரொழியப் புத்திமானை மற்றெவனேனும் அவரை இங்ஙனமிகழ்ந்து அவமதித்துப் பேசுவனோ?' என்றனள். வேதவதி, இவ்வாறு விளம்பியது கேட்டு அக்கொடிய நிசாசரன் தன் கையினால் அக்கன்னியினது கூந்தலைப்பற்றிபிழுத்தனன். அதுகண்டு வேதவதி கோபமூண்டு அரக்கன் கையிற் பிடியுண்ட கூந்தலைத் தன்கையால் அறுக்க, அக்கையே கத்தியாகி அதனையிரண்டாகச் சேதித்துவிட்டது. பின்பு அவள் கோபமதிகரித்து அவ்வரக்கனை யெரிப்பவள்போலச் சொலித்துக்கொண்டு உடனே தன் உடலை யொழிக்கத் துணிந்து தீமூட்டி அவனை நோக்கிக் கூறுகின்றனள்: 'அடா பாதகா! நீ யிங்ஙனமென்னைத் தீண்டிய பிறகு யான் இவ்வுடலைவைத்திருக்க விரும்பினேனில்லை; நீ பார்த்திருக்கையிலேயே இதோ தீக்குளிக்கின்றேன்! மஹாபாபிஷ்டனான நீ இவ்வநத்தில் என்னைப்பிடித்திழுத்தனை யாதலின், உன்னை வதைசெய்தற்பொருட்டு யான் மறுபடிவந்து பிறக்கின்றேன். மாபாபியாயினும் ஒரு புருஷனைவதைசெய்தற்குப் பெண்கள் உரிமையுடையவரல்லர்; உன்னை யான் சபிப்பேனாயின், எனது தவத்திற்கு அழிவுண்டாகும். யான் செய்த தானதருமம் முதலிய நற்செய்கை கிஞ்சித்தேனு முளதாயின், யான் அயோநிஜையாய்ப் பூமிதேவிக்குப் புதல்வியாகப் பிறந்து பெருமை பெற்றுவிளங்குவேன்' எனமொழிந்து ஓங்கி யெரிகின்ற அக்கினியிற் பிரவேசித்தனள். அப்பொழுது ஆகாயத்தினின்று நாற்புறமும் புஷ்ப வருஷம் வருஷித்தது.

*(இவ்விதமாகத் தீயிற்புகுந்த வேதவதி மறுபடி தாமரைமலரினின்றும் தாமரைபோன்ற மேனியளாக வந்து பிறந்தனள்; முன்போலவே இராவணன் அக்கன்னிகையிருந்தவிடம் சென்றனன். அவளைக்கண்டவளவிலே மோகித்து அவ்வரக்கன் அக்கன்னிகையைக் கையிலெடுத்துக்கொண்டு கிருகத்திற்குச் சென்று அங்குள்ள மந்திரிமார்களுக்குக் காண்பித்தனன். பெண்களின் லக்ஷணங்களை நன்கு ஆய்ந்துணர்ந்த ஒருவன் அக்குழந்தையின் வடிவத்தை உற்றுப்பார்த்து இராவணனை நோக்கி, 'இப்பெண்மணி உன் வீட்டிலிருப்பாளாயின், உன்னையே வதை செய்வாளென விளங்குகின்றது' என்று கூறினான். ஓ ராம! அதுகேட்டு இராவணன் அக்கன்னிகையைக் கடலில் எறிந்து விட்ட

* இப்படி வேதவதி தாமரைமலரில் தோன்றினாளென்ற ஸங்கதி சில ஸ்ரீகோசங்களில் காணப்படாமையாலும், இதற்கு வியாக்கியான மில்லாமையாலும், இதனை அதிக பாடமென்கிறார்கள்.

னன்; அவளே பூமியிற்புகுந்து ஜநகமகாராஜாவினது யாகசாலையினிடையே அமைந்து, அந்நிலத்தைக் கலப்பையிட்டு உழுதவளவில் அதிலெழுந்து தோன்றினள்.)

அந்தப்பெண்கள்நாயகமே ஜநகமகாராஜாவினது புதல்வியும் உம்முடைய இல்லாளுமான ஸீதாதேவியாம். ஆதலின், ஹே மஹாபாஹோ! தேவரீர் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாவிஷ்ணுவேயாம். முன்னம் வேதவதிக்குப் பகைவனுகி அவளுக்குக் கோபமூட்டிய மலைபோன்றவனை ராக்ஷஸமன்னனை வதைத்தற் பொருட்டு அந்த வேதவதியே தான்முன்பு பிரதிஞ்ஞை செய்தவண்ணம் கலப்பையாலுழுத யாகபூமியில், உத்தரவேதியில் அக்கினிசிகைபோல வந்து தோன்றி, மனுஷியாவதாரஞ்செய்து உமக்கு வாழ்க்கைப்பட்டு, அமாநுஷ மான உமது வீரியத்தையே கொண்டு அவனைக் கொலைசெய்தனள். பூர்வம் கிருதயுகத்தில் இவள் வேதவதியெனப் பெயர்பெற்று வாழ்ந்தனள்; இப்பொழுது திரேதாயுகத்தில் அவ்விராக்கதனை வெல்வதற்காகவே மைதிலகுலத்தில் ஜநகமகாராஜனுக்குப் புதல்வியா யவதரித்தனள். 'ஸீதா' என்கிற கலப்பைப் படையினின்று தோன்றினமையின், இவளுக்கு ஸீதை யெனவே பெயர் பிரஸித்தமாகியது.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் பதினேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## பதினெட்டாவதுஸர்க்கம்.

இராவணன் மருத்தனது யாகசாலைக்குச் சென்று அவனை வெற்றி கொண்டதும், அங்கிருந்த தேவர்களெல்லாரும் இராவணனைக் கண்டு பயந்து மயில் முதலான ஜந்துக்களாக மாறு வேஷமடைந்ததும், இராவணன் அவ்விடம் விட்டுச் சென்றபின் அவர்கள் நிஜரூபங் கொண்டு அந்தப்பிராணிகளுக்கு வரங்கொடுத்ததும்.

"ஹே தாசரதே! வேதவதி அக்கினியிற் பிரவேசித்தவளவிலே இராவணன் புஷ்பகவிமானத்திலேறி மறுபடி மேதினிமுழுமையும் ஸஞ்சரிக்கலாயினன். அக்காலையில் மருத்தன் என்னும் ஓரரசன் உசீரபீஜமென்னும் க்ஷேத்திரத்தையடைந்து தேவதைகளுடனேகூடி யாகம் செய்துகொண்டிருந்தனன். ஸாக்ஷாத் பிரஹஸ்பதிக்குப் பிராதாவாய் எல்லாத்தருமமு முணர்ந்தவரான ஸம்வர்த்தரென்கிற பிரம்மரிஷி எல்லாத்தேவர்களுடனும் கூடி யாகம் செய்வித்து வந்தனர். உலகசஞ்சாரம் செய்யும் இராவணன் தற்செயலாய் அவ்விடம் சென்றனன். அளவற்ற வரங்கள் பெற்று எவராலும் வெல்வதற்கு அரியனுயிருந்த அவனைக்கண்டவளவிலே தேவர்கள் அனைவரும் அஞ்சினவர்களாகி விலங்குகளாகவும் பறவைகளாகவும் வேற்றுடம்பெடுத்து

மறைந்தனர். இந்திரன் மயிலாயினன்; யமதருமராஜன் வாயஸமாயினன்; தனதிபதி ஓந்தியாயினன்; வருணன் அன்னப்புள்ளாயினன். பகைவர்களை வெற்றிகொள்ளுகின்ற வீரனே! மற்றைத்தேவர்களும் இவ்வண்ணமே தத் தமக்கு இஷ்டமான வடிவமாக மாறுவேஷம் பூண்டவளவில், அந்தயாகசாலை யில் ஓர் நாய்வந்து நுழையுமாறு மிகவும் அசுத்தனான அவ்விராவணன் புகுந் தனன். யாகசாலையிற் புகுந்தவுடனே அந்த ராக்ஷஸராஜன் மருத்தனை நோக்கி, நீ இன்று என்னுடன் போர்புரிகின்றனையா? வெல்லப்பட்டேனென வுரைத்து வணங்குகின்றனையா? என வினவினன். அதுகேட்டு மருத்தன், நீ யார்? என்று அவனை உசாவினன். அதற்கு இராவணன் பெருநகை நகைத்து, இராஜனே! நீ என்னைக்கண்டவளவிலும் அச்சமும் வியப்பும் கொள்ளாது வெகுதீரமாக நிற்கின்றனையே? அதற்கு யான் உவந்தேன். தனதிபதியின் அநுஜனான இராவணன் யானென்பதை நீ இன்னும் அறியா திருப்பது மிக வியக்கத்தக்கதே; உன்னைத்தவிர எனது வலிமையயறியாதவன் மூவுலகத்திலும் மற்றெவனுமில்லை; எனது மூத்தோனைவென்று இதோ அவ னது புஷ்பகவிமானத்தைக் கொணர்ந்திருக்கின்றேன்பார்! என்று கூறினன்.

அதுகேட்டு மருத்தராஜன் இராவணனை நோக்கிக் குலுங்கநகைத்து, 'ஆ! உலகில் உனக்கிணையான புண்ணியவான் யாருண்டு. ஜியேஷ்டபிராதாவை நீ போரில் வென்றனையல்லவா? உன்னைப்போலக் கொண்டாடத்தக்கவர்கள் இம்மூவுலகிலும் மற்றெவருமில்லைதான். நீ அண்ணனையடித்து வாஹனம் பெற்றுக்கொண்டது மஹாவிசேஷம், அங்ஙனம் செய்த சிறப்பைச் சொல்லித் தற்புகழ்ச்சிசெய்வது அதிலும் விசேஷம். இப்படிப்பட்ட சற்குண சாலிக்கு வரங்கிடைத்தது எல்லாவற்றிலும் விசேஷம். முன்பு நீ சாதாரண மான தருமத்தை மேற்கொண்டு வரம்பெற்றது யான் அறிவேன்; இப்பொ ழுது நீ பிராதாவை வென்றவனெனப் பெருமைபாராட்டுகின்றனையே, இதனை யான் அறியேன்; நல்லது, அடே மூடா! ஓடாதே, நில், இனி நீ உயிரோடு திரும்பாய்; எனது கூரியகணைகளால் உன்னை இன்றே யமலோகம் அனுப்பி விடுகின்றேன்' என்றுகூறி, உடனே அவ்வேந்தன் கணையும் கார்முகமும் கைக்கொண்டு போர்புரியவெழுந்து இராவணனை யெதிர்த்து நின்றனன்.

அது கண்டு அவ்வரசனது புரோஹிதரான மஹரிஷி மருத்தனை நோக்கி, 'இராஜனே! என்வார்த்தையில் உனக்கு விசுவாஸமுள்ளதாயின், யான் சொல்வதைக்கேள்: நீ இப்பொழுது தொடங்கியிருப்பது மஹேச்வர யாகம், இதனை நீ முற்றுப்பெறச்செய்யாது ஒழியின் உன்குலமெரிந்துபோம். யாகதீக்ஷை கொண்டவர்க்குப் போர்புரிதல் கூடுமோ, கோபங்கூடுமோ? அன் றியும், போரில் வெற்றிபெறுதல் ஸந்தேஹமேயன்றோ? இவ்வரக்கனும் வெல்வதற்கரியனும்' என வுரைத்தனர். மருத்தராஜன் அந்தகுருவாக்கியத் தைக் கேட்டுப் போர்முயற்சியொழிந்து அம்பையும் வில்லையும் கீழேவைத்து வேள்விபுரிய விருப்புற்றவனாயினன். இராவணன் அதுகண்டு அவன் தோல்வியடைந்தானாகவெண்ணி ஆநந்தமடைந்தவனாகி, 'இராவணன் வெற்றி பெற்றனன்' எனப்பெரிய கோஷஞ்செய்துகொண்டு, ஆங்கு அந்த யாகத்திற்

காக வந்திருந்த மகரிஷிகளையெல்லாம் கடித்துப்புசித்து அவர்களது உதிரத்தினாலும் திருப்தியடையாதவனாகி அவ்விடம்விட்டு அப்புறஞ்சென்றனன்.

தசக்கிரீவன் அவ்விடம் விட்டொழிந்தபின்னர் இந்திரன் முதலான தேவர்களெல்லோரும் தாம் பெற்றிருந்த வேற்றுருவத்தைவிட்டு நிஜமான தேவரூபம்பெற்று, தசாநநனுக்குப்பயந்து எவரெவர் எந்தெந்த ஜந்துவாக வேஷமெடுத்திருந்தனரோ, அவரவர் அந்தந்த ஜந்துவினிடத்தில் அன்பு கூர்ந்து அவற்றிற்குவரமளிக்கலாயினர்: இந்திரன் மயிலினிடத்தில் மகிழ்ச்சி கொண்டவனாகி, சுத்தமான கருநிறமாகிய தோகையுடையதாயிருந்த அதனை நோக்கி, 'மேன்மைபெற்ற மயிலே! யான் உன்விஷயத்தில் பிரீதனாயினேன்; உனக்கு இனிப் பாம்புகளிடத்தில் பயமில்லை; உனதுதோகையில் அழகான அநேகம் கண்கள்உண்டாகும்; என்பிரீதிக்கு அடையாளமாக, யான்மழை பொழிகையில் நீ மிக்கமகிழ்ச்சிகொண்டு களிப்புறுவாய்' என வரமளித்தனன். தேவேந்திரன் வரமளிப்பதற்குமுன்பு நீலநிறமாயிருந்த மயில் தோகைகள், அவன் இவ்வாறு வரமளித்தபின்னர் அழகிய கண்களுடையனவாயின.

ஓ ராம! அதன்பிறகு தருமராஜன் அந்தயாகசாலையில் ஒருகழியின்மீது உட்கார்ந்திருந்த வாயஸத்தைநோக்கி 'ஹே வாயஸ! யான் உன்விஷயத்தில் பிரீதியடைந்தவனாயினேன். பிரீதிகொண்டு யான் அளிக்கின்றவரத்தைக்கேள்: உலகத்தில் எல்லாப்பிராணிகளும் பற்பலவிதமான ரோகங்களால் பீடிக்கப் படுகின்றனரல்லவா? யான் உன்னிடத்தில் அருள்புரிந்தமையால் அந்நோய்கள் உனக்கு உண்டாவதில்லை, இதுநிச்சயம்; காகமே! யான் அளித்த வரத்தினால் உனக்கு மிருத்தியுவினிடமும் பயமில்லை; மானிடர்கள் எவ்வளவுகாலம் உன்னைக்கொல்லாதிருக்கின்றனரோ, அவ்வளவுகாலம் நீபிராணபயமின்றிவாழ்வாய். மரித்து எனதுநாட்டில்வந்து சேர்ந்திருக்கின்ற இந்தமானிடர்கள் பசியினால் பெருந்துன்பமுற்றுத் தவிக்கையில், நீ புசிப்பாயானால், அவர்கள் தம் பந்துக்களுடனே திருப்தி யடைந்தவராவார்கள்' என வரமளித்தனன்.

வருணனோ, கங்காநதியில் விஹரித்துக்கொண்டிருந்த அன்னப்பறவையைநோக்கி 'ஓ பக்ஷிராஜனே! யான் அகமகிழ்ந்து உனக்குவரமளிக்கின்றேன் கேள்: உனக்குச் சந்திரமண்டலம்போலவும், நீரின்நுரைபோலவும் மிக மநோஹரமாய் நிர்மலமான வெண்மைநிறமுண்டாகும். எனதுசரீரமான தடாகம் முதலிய நீர்நிலைகளையடைந்து நீ மிக்கமகிழ்ச்சியும் அழகும்பெற்று விளங்குவாய்; இவைகளே யான் உன்னிடம் ஸந்தோஷமடைந்ததற்கு அறிகுறிகளாம்' என வரமளித்தனன். ஹே ராம! பூர்வம் அன்னப்பறவைகள் வெண்மைகலந்த நீலநிறமுள்ளனவாயிருந்தன; சிறகுகள் நீலமான நுனிகளுள்ளனவாயும், மார்பு பசும்புல் நிறமுள்ளதாயுமிருந்தன; வருணனிடம் வரம் பெற்ற பின்னரே அன்னப்பறவைகள் வெண்மைநிறமுள்ளனவாயின.

அப்பால் வைச்சிரவணன் ஓர்மலைமீதிருந்த ஓந்தியைநோக்கி, 'ஓந்தி! யான் உன்னிடத்தில் அதிகமான விசுவாஸமுடையவனானேன்; அதற்கு அடையாளமாக யான் உனக்கு ஒருவரமளிக்கின்றேன், உனதுதேகம் முழுமை

யும் பொன்னிறமாகக்கடவது; உனதுமுடி பொன்னுடனே கூடியதாகி என்றும் அழியாதிருக்கும்' என வுரைத்தனன்.

இவ்விதமாகத் தேவர்கள் அனைவரும் அவ்வேள்வியில் அந்தப்பிராணிகளுக்கு வரமளித்து அவ்வேந்தனுடனே அவ்விடத்தினின்றுமெழுந்து தங்கள் தங்களிருப்பிடஞ்சேர்ந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் பதினெட்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## பத்தொன்பதாவது ஸர்க்கம்.

இராவணன் அயோத்தியாபுரி சென்று ஆங்கு அரசுபுரிந்திருந்த அநரணியராஜனை வெற்றிகொண்டு இகழ்ந்ததும், அதுகண்டு அவ்வரசன் இராவணனுக்குச் சாபமிட்டதும்.

"இராக்ஷஸராஜனான இராவணன் மருத்தராஜனை இவ்விதமாக வெற்றிகொண்டு, பின்னும் போர்புரிய விருப்புற்றவனாகிப் பற்பலராஜாக்களினிருப்பிடமான நகரங்கள்தோறும் சுற்றித்திரிந்தனன். தேவேந்திரன் வருணன்முதலிய தேவர்கட்கொப்பான வீரமுள்ள ஒவ்வோரரசனிடமும் சென்றவுடனே 'நீங்கள் என்னுடன் எதிர்த்துப் போரிடவாருங்கள், இல்லாவிடின் தோல்வியடைந்தோமென்றாயினுமுரைத்து அடிபணிக. இதுவே யான்கொண்டிருக்கும் உறுதியானவிரதமாம்; இதற்கு விரோதமாக நடப்பவர்கட்கு வேறுகதியில்லையாம்' எனக்கூறினான். அதுகேட்டு எல்லாமுணர்ந்தவரும், அச்சமற்றவரும் தருமநிச்சயமுடையோரும், மஹாபலிஷ்டருமான பார்த்திவர்கள் பலர்ஒன்றுகூடி யாலோசனைசெய்து, எதிரிபெற்றிருக்கும் வரத்தினது வலியையுணர்ந்து இஃது நமக்குக்காலமன்றென நிச்சயித்து, வெல்லப்பட்டவராயினோமென விளம்பினர். மகாரதனான துஷியந்தன், காதி, கயன், புரூரவன் என்னும் இராஜாக்களும், மற்றுமுள்ள பலபார்த்திவர்களும் பராஜயமடைந்தனமெனவே இயம்பினர்.

இராவணன் அதன்பிறகு அயோத்தியாபுரஞ் சென்றனன். அந் நகரியில் அக்காலத்தில் அநரணியனென்னும் அரசன் அரசுபுரிந்து தேவேந்திரன் அமராவதிப்பட்டணத்தைப் பரிபாலிப்பதுபோலப் பாதுகாத்து வந்தனன். புரந்தரனுக்கொப்பான பராக்கிரமப்பெருமைபெற்ற புருஷசிங்கமான அப்பார்த்திவனையணுகி இராவணன், 'என்னுடன் அமராடவருக, அல்லதுதோல்வியடைந்தேனென்றுவது கூறிவணங்குக' வென விளம்பினான். பாபிஷ்டனான அவ்வரக்கனது வசனத்தைச்செவியுற்று அயோத்தியாதிபதியான அநரணியராஜன் மிகக்கோபங்கொண்டவனாகி ராக்ஷஸராஜனை நோக்கி, 'அரக்கர்தலைவனே! இதோ யான் உன்னுடன் அமராடவருகின்றேன், ஓடாது நில், நீ போருக்கு ஆயத்தமாகுக, யான் இதோ சித்தமாயிருக்கிறேன்' என்று

பத்து லக்ஷம்

கூறினான். இதற்கு முன்னமே அநரண்யராஜன், இராவணன் எங்கும் வெற்றிகொண்டு வருகின்ற செய்தியறிவான். அதனால் பெருஞ்சேனைசேர்த்து வைத்திருந்தனன். இராவணன் போர்புரியத் துணிந்தவளவில், அவனைவெல்வதன்பொருட்டு அளவற்றசேனை வெளிப்பட்டது: லக்ஷம் யானைகளும், நியுதம் குதிரைகளும், அநேகமாயிரம் தேர்களும், அளவற்ற காலாட்களுடனே போர்புரியப்புறப்பட்டுப் பூமிமுழுமையும் சூழ்ந்துகொள்ளலாயின. போர்த்தொழிலில்வல்ல வீரனே! அப்பால் அநரண்யமகாராஜனுக்கும் ராக்ஷஸ ராஜனுக்கும் மிகவும் அற்புதமான கொடியயுத்தம் ஆரம்பமாகியது. இராவணனுடனெதிர்த்தவளவில், அநரண்யனது சேனையாவும் அக்கினியில் ஓமம் செய்யப்பட்டஹவிஸ்ஸைப்போல நாசமுறலாயின. அப்படைகள் தமக்குள்ள பராக்கிரமம் முற்றும் வெளியிட்டு வெகுநேரம் அமராடி அநேகமாயழிந்து போகலாயின; அப்படைகள் அத்தனையும் விளக்கிற்பாய்ந்த விளக்கிட்டுப் பூச்சிபோலவும், அக்கினியிற் பெய்த ஆவுதிபோலவும் ஆகியது. கடலிற் புகுந்த கங்கை முதலான நதிகளின் நீர்போலத் தனது பெரும்படை நாசமுறுவது கண்டு அந்நரேந்திரன் அதிக கோபங்கொண்டவனாகி இந்திர தனுசுக்கொப்பான தனது சிறந்த வில்லைக்கையிலெடுத்து நாணேறைசெய்து கொண்டு இராவணனை நோக்கி யெதிர்த்துவந்தனன். அவனைக்கண்டவளவிலே மாரீசன், சுகன், ஸாரணன், பிரஹஸ்தன் முதலான இராவணனது அமைச்சர்கள் சிங்கத்தைக்கண்ட மான்கள்போல அஞ்சியோடிப்போயினர். அதன் பின்னர் இக்ஷ்வாகுகுலவேந்தன் இராக்ஷஸராஜனது முடிமீது நூற்றெட்டு பாணங்களைப்பொழிந்தனன். மலையினது முடிமீது வீழ்கின்றமழைத் தாரைகள்போல, இராவணனது முடியின்மேல் வீழ்ந்த அத்தனை அம்புகளும் அவனை யணுவளவேனும் ஊறுபடுத்தினவல்ல. ஆயினும் இராக்ஷஸராஜன் மிகக்கோபங்கொண்டு அநரண்யராஜனதுமுடிமேல் ஓங்கி ஓரறை அறைய, அவ்வேந்தன் அதனைத்தாங்கமுடியாது உடல்சோர்ந்து நடுக்குற்று இடியுண்டமரம்போலத் தேரினின்று வீழ்ந்தனன். இக்ஷ்வாகுகுலத்தரசன் இங்ஙனம் வருந்துவது கண்டு அவனைநோக்கி அவ்வரக்கன் நகைத்து, 'நீ யிப்பொழுது என்னுடன் எதிர்த்து யாதுபயன் பெற்றனை? ஹே நராதிபதி! என்னுடன் எதிர்த்துப் போர்புரிபவன் இம்மூவுலகிலும் ஒருவனுமில்லையன்றோ? நீ செல்வச் செருக்குற்றவனாகி எனது வலியைக்கேட்டிலைப்போலும்' என இகழ்ந்து கூறினான்.

அதுகேட்டு அநரண்யராஜன் குற்றுயிராய்த்துடித்துக்கொண்டே இராவணனைநோக்கிக் கூறுகின்றனன்: 'அடேராக்ஷஸ! இங்கு ஒருவரையொருவர் செய்யத்தகுவது யாது உளது; யாவும் விதியின் பயனாகவே விளைவதன்றோ? விதியை மதியால் வெல்லக்கூடுமோ? தற்புகழ்ச்சி செய்கின்ற உன்னால் யான் வெல்லப்பட்டேனல்லேன்; எனது விதிப்பயனல்லவோ இவ்வாறு வந்து வாய்த்தது; நீ அதற்கு நிமித்தமாக மாத்திரமே நின்றனை. என்னையடித்துவிட்டு ஏன் இங்ஙனம் அகங்கரித்து வீண்பெருமைபாராட்டிப் பிதற்றுகின்றனை? இழிகுலத்தவனே, நரமாமிசம் புசிக்கின்ற நீசா! சூரர்கள் இவ்வாறு பெருமை

பாராட்டார்களன்றோ? இப்பொழுது உயிர்போகுந் தருணமாதலின், யான் யாதும் செய்யத்திறமையற்றவனாகின்றேன். யான் போர் புரிகையில் சற்றுப் பராமுகமாயிருந்தபோழ்து நீ புடைத்துத் தள்ளினாய். நீ இவ்வாறு இக்ஷ்வாகு வமிசத்தை யிகழ்ந்தனையாதலின், யான் இப்பொழுது உரைசெய்வதைக்கேள்: மானிடர்களனைவரும் காலபாசத்திற்குக் கட்டுப்பட்டவர்களேயாம்; அதனால் எனக்குப் போரில் இவ்விபத்து வந்து விளைந்தது. யான் இன்னமும் உனக்கு ஒன்று புகல்கின்றேன். யான் தானதருமங்கள் செய்ததும், வேள்வியியற்றியதும், தவம் புரிந்ததும், பிரஜைகளை நன்கு பரிபாலித்ததும் உண்மையாயின், யான் இப்பொழுது உரைப்பதும் உண்மையாகக்கடவது. மிக்க மேன்மைபெற்றதான இந்த இக்ஷ்வாகுகுலத்திலே தசரத மகாராஜாவுக்கு நந்தனனாய் இராமனென்னும் ஒருமஹாநுபாவன் அவதரிக்கப் போகின்றனன், அவன் உன் உயிரையொழிப்பான்' எனவுரைத்தனன்.

அவ்வேந்தன் இவ்வாறு சாபமிட்டவளவில் மேகம் முழங்குவது போலத் தேவதுந்துபி முழங்கியது; வானத்தினின்று பூமாரிபொழிந்தது. ராஜசிங்கமே! அதன்பின்னர் அவ்வேந்தன் விண்ணுலகடைந்தனன்; அநரணியன் உயிர்நீத்தது கண்டு இராக்ஷஸராஜன் அப்புறமெழுந்து சென்றனன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் பத்தொன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## இருபதாவது ஸர்க்கம்.

இராவணன் பூலோகஸஞ்சாரஞ் செய்கையில் நடுவழியே நாரதமுனிவரைக் கண்ணுற்றதும், அற்பர்களான மானிடர்களை இம்சிப்பதினும் அனைவரையும் ஸம்ஹரிப்பவனான யமனை வெற்றிக்கொள்வதே உன் வீரியத்திற் கழகென அம்முனிவர் அவனுக்குக் கூறியதும், அதுகேட்டு அவன் அங்ஙனமே யமலோகஞ் செல்லப் புறப்பட்டதும்.

இராக்ஷஸராஜன் இவ்வாறு இப்பூமியிலுள்ள மானிடர் அனைவரையும் வருத்திவெருட்டிக்கொண்டு திரிகையில் முனிபுங்கவரான நாரதமுனிவர் ஒருநாள் அவனுக்கெதிர்ப்பட்டனர். அவரைமேகத்தின்மீதுகண்டதசக்கிரீவன் அவருக்குத் தண்டனிட்டு அபிவாதனஞ்செய்து குசலம் வினவியபின்னர், அவர் அங்கெழுந்தருளியதற்குக் காரணம் யாதெனவினவினான். அதுகேட்டு மேகத்தின்மீதுநின்ற முனிபுங்கவர் புஷ்பகவிமானத்தின்மேலிருந்த இராவணனை நோக்கி, 'ஹே ஸௌம்ய, ராக்ஷஸராஜனே, விச்சிரவசின் புத்திரனே, உயர்குலத்திற்றோன்றிய உத்தமனே! அசுரர்களை ஸ்ரீமகாவிஷ்ணு வதைக்குமாறு, கந்தர்வர் உரகர்முதலியோர்களை வெல்லவல்லதான உனது விக்கிரமத்தைக் கண்டு யான் வியப்புற்றவனாயினேன். ஆயினும் யான் உனக்கு ஒருவிஷயம் உரைக்கவெண்ணுகின்றேன், அதனைக்கேட்க உனக்கு விருப்பமுளதாயின்

கேட்டுப்பின்னர் செய்வதை யாலோசனைசெய்க. முன்னர் யான்சொல்வதைக் காதுகொடுத்துக்கேள்: தேவதைகளாலும் வதைத்தற்கரியனான நீயேன் இப்படிப்பட்டவீணானவதைசெய்கின்றனை? இவ்வுலகம் எப்பொழுதுமிருத்தியுவுக்கு வசமாயினதோ, அப்பொழுதே வதைப்பட்டதாமன்றோ? அத்தன்மையரான இவ்வுலகத்து மானிடர்களை தேவர், தானவர், தைத்தியர், யக்ஷர், கந்தர்வர், ராக்ஷஸர் ஆகியபலர்க்கும் வெல்வதற்கரியனான நீ துன்புறுத்தல் அநுசிதமேயன்றோ? தனக்கு நலமின்னதென உணராததும், மஹத்தான விசனத்தினால் சூழப்பட்டதும், பிணி மூப்புமுதலிய கொடிய துன்பங்களுக் கிடமானதுமாகிய இத்தகையவுலகத்தை யாவனேனும் கொலைபுரிய வெண்ணுவனோ? ஏதேனுமொருவகையில் எப்பொழுதும் அநிஷ்டங்களையே அனுபவித்துக் கொண்டிருக்கும் இம்மானிடவுலகத்தைப் போர்புரிந்து வதைசெய்ய விவேகியான எவனேனும் ஆவல்கொள்ளுவனோ? ஆதலின், தானேஅழியுமியல்பினதும், விதியினாலும் வெல்லப்பட்டதும், பசி மூப்புமுதலிய துன்பங்களுக்கு இடமாகித் தவிப்புறுவதுமான இவ்வுலகத்தை நீ வீணில்வருத்தாதொழிக. ஹே மஹாபாஹோ, ராக்ஷஸேச்வர! இம்மானிடவுலகத்தை நீயே சற்று ஆலோசனை செய்துபார்: இஃது தனதுகதியித்தன்மையதென வுணராது முழுமூடமாயிருக்கின்றது; இதனிலும் விசித்திரம் வேறுளதோ? ஓரிடத்து மகிழ்ச்சிகொண்ட மானிடர்களால் வாத்தியம் நர்த்தனம் முதலியன நடத்தப்படுகின்றன; மற்றோரிடத்துத் தாரைதாரையாக் கண்ணீர்பெருகத் துன்பமுற்ற ஜனங்கள் தீனமாப்புலம்புகின்றனர். தாய் தந்தை மகன் மனையாட்டியென இங்ஙனம் உறவுபற்றி அன்பின்மிகுதியா லுண்டாகும் ஆசைப் பெருக்கினால் மோகங்கொண்டதாகி இவ்வுலகத்துப் பிரஜை அழிந்துகிடக்கின்றது. அங்ஙனம் அழிந்ததை மறுத்தும் அழிப்பதனாலுண்டாகும் ஆயாஸத்தை நீ உணராய்போலும். மோஹத்தினால் அழிக்கபட்ட இவ்வுலகத்தையழித்தது இவ்வளவுமட்டுமே போதும். ஹே ஸௌம்ய! இம்மர்த்தியலோகத்தை நீ ஜயித்தவனே யாகின்றனை; இதற்கையமிலது. இவ்வுலகத்தவர் அனைவரும் யமனதுகிருகத்திற்கு அவசியம் செல்லவேண்டியவர்களே யன்றோ? ஆதலின், எதிரிகளை வெல்லவல்லவீரனே, பௌலஸ்திய! அந்தயமனைத் தண்டிப்பாயாக, அவனை வென்றனையாயின், இவ்வுலகமனைத்தும் வெல்லப்பட்டதேயாகும். இதில் ஸந்தேகமில்லை' எனவெடுத்துக் கூறினர்.

நாரதமுனிவர் இவ்வாறுமொழிந்துகேட்டு லங்கேச்வரன் குலுங்க நகைத்து அந்நாரதமுனிவரை வணங்கி அபிவாதனம்பண்ணி, 'ஹே மஹரிஷே! தேவர் கந்தர்வர் முதலியோருடன் கானம்பண்ணி விஹரிக்க விருப்பமுடையவரும், போர்க்களம் கண்டுகளிக்கக்காதலுடையவருமன்றோ தேவரீர்? தேவரீரைசேவித்து அடியேன் தன்னியனாபினேன். ஹே பிரம்மன்! அடியேன் விண்ணப்பஞ்செய்வதைச் செவிகொடுத்துக் கேட்டருள்க: மூவுலகங்களையும் வெல்லவிருப்புற்ற யான் இம்மண்ணுலகத்தை முன்னர்ஜயித்து, பாதாளலோகத்தை வெல்லுமாறு அவ்விடஞ்செல்ல இதோ பிரயாணமாகின்றேன். இவ்வாறு மூவுலகங்களையும் வென்று நாகர், தேவர்களாகிய அனைவ

ரையும் அடிமையாக்கியபின்னர் ஸகல ரஸங்களுக்கும் ஆலயமானகடலையும் அமுதமெழுமாறு கடைவேன்' என்று தன்பெருமையைப் புகழ்ந்துகூறி னன். அதுகேட்டு ரிஷீச்சுரரான நாரதமுனிவர் தசக்கிரீவனைநோக்கி, 'பகைவரைவெல்லுகின்றவீரனே! நீ இப்பொழுது எந்தவழியாகச்செல்ல விரும்புகின்றனை? இதோ இவ்வழி பிரேதராஜனான யமனது பட்டணத்திற்குப் போகின்றமார்க்கமாம். இஃது சுகமானசிறந்தமார்க்கம்' எனமொழிந்தனர்.

இங்ஙனம் நாரதமுனிவர் மொழிந்ததுகேட்டு தசாநநன் சரத்காலமேகமென நகைத்து, அம்முனிவரைநோக்கி, 'ஸ்வாமீ! அங்ஙனமேயாகுக, அடியேன் வைவஸ்வதனை வதைத்தற்பொருட்டு, சூரியன் மகனான அந்தயமனிருக்குமிடமான தென்றிசையை நோக்கி இதேவழியாக இப்பொழுதே செல்லுகின்றேன். ஹே பகவன்! யுத்தப்பிரியனான யான் அதிகோபத்துடனே லோகபாலகர் நால்வரையும் வெற்றிகொள்வதாக முன்னமே பிரதிஞ்ஞைசெய்திருக்கிறேன். தேவரீர் நியமனப்படி இதோ இப்பொழுதே வைவஸ்வதபட்டணத்திற்குப் புறப்படுகின்றேன்; ஸகல பிராணிகளையும் கிலேசப்படுத்துகின்ற அந்தமிருத்தியுவையும் மரணமடையச் செய்வேன்' என அகங்கரித்துக்கூறி, அம்முனிவரை மறுத்தும் தண்டனிட்டு மிக்கமகிழ்ச்சிகொண்டு மந்திரிமார்களுடனே தென்றிசைநோக்கிச் சென்றனன்.

புகைநீங்கிய நெருப்புப் போலச்சொலிக்கின்ற நாரதமுனிவர் பிறகு, சற்றுநேரம்நிதானித்துச்சிந்திக்கலாயினர்: 'ஸகலசராசரங்களுமுள்ளிட்டமூவுலகங்களையும், அவற்றிற்கு அதிபதியான தேவேந்திரனையும் நலியச்செய்கின்றவனை நமனை இவ்விராவணன் எங்ஙனம் ஜயிப்பான்? அவரவர் செய்யும் புண்ணியபாபங்களுக்கு ஸாக்ஷியாய் அவரவரை ஆயுள்முடிவில் தருமநெறி தவறாது கொண்டுபோகின்றமையால் 'நடுவன்' எனவே பெயர் பூண்டு இரண்டாவது அக்கினிபோல விளங்குபவனன்றோ தருமதேவன். மஹாநுபாவனான அத்தருமதேவனது அநுக்கிரஹத்தினாலேயன்றோ அநேகர் அறிவுள்ளவர்களாகி ஆநந்தமடைகின்றனர்? இந்தக்காலமூர்த்தியைக் கண்டவளவிலே மூவுலகங்களும் அஞ்சியோடுமன்றோ? அத்தன்மையனான தருமராஜனை இந்த ராக்ஷஸராஜன் எங்ஙனம் அணுகுவான்? ஸகலலோகசிருஷ்டிகர்த்தாவும் புண்ணியபாபங்களுக்கு ஏற்றவாறு பயனளிப்பவனும், மூவுலகங்களையும் வெற்றிகொண்டிருப்பவனுமான யமதருமராஜனை இராவணன் எங்ஙனம் ஜயிப்பான்? காலமூர்த்தியே எல்லாவற்றிற்கும் ஸாதனமாயிருக்க, அந்தக்காலமூர்த்தியையும் வெல்லவல்லதான உபாயம் இவனிடத்தில் யாது இருக்கின்றது? இதனைக்கண்டறிய எனக்கு மிகுந்த குதூகலமுண்டாகின்றது யமபுரத்திற்கு நாமும் செல்வோம், யமனுக்கும் ராக்ஷஸனுக்கும் நடக்கும் யுத்தத்தைக்கண்டு களிப்படைவோம்' எனத்தீர்மானித்தினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

# இருபத்தோராவது ஸர்க்கம்.

நாரதமுனிவர் யமலோகத்திற்கு விரைந்துசென்று இராவணன் வருகின்ற விருத்தாந்தத்தைத் தருமராஜனுக்குத் தெரிவித்ததும், உடனே இராவணன்யமலோகம் சேர்ந்து ஆங்கு நரகயாதனை அனுபவிக்கும் பாபிகளை அந்நரகங்களினின்று விடுவித்ததும், அதுகண்டு கோபங்கொண்ட யமகிங்கரர்களுக்கும் இராவணனுக்கும் உக்கிரமான யுத்தம் நடந்ததும்.

அந்தணர் பெருமானான நாரதமுனிவர் இவ்வண்ணம் ஆலோசனை கொண்டு, நடந்தவரலாற்றை உள்ளபடி அறிவிக்குமாறு வெகுசீக்கிரத்தில் யமபுரம் போய்ச்சேர்ந்தனர். அத்தருணத்தில் தருமராஜன் அக்கினியை ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு பிராணிகளுக்குக் கர்மாநுகுணமாகப் பயனளித்துக்கொண்டிருந்தனன். நாரதமகரிஷியைக் கண்டவுடனே காலதேவன் அவரை யெதிர்கொண்டு அழைத்துப்போய் அர்க்கிய பாத்தியம் முதலாய உபசாரங்கள் செய்து சிறந்ததோர் தவிசிலெழுந்தருளியிருக்கச்செய்து பின்னர் அவரை நோக்கி, 'மகரிஷே! குசலமா? தருமம் நாசமுறாதிருக்கின்றதா? தேவர் கந்தருவர் முதலியோர் தொழும் பெருமானான தேவரீர் இப்பொழுது இவ்விடம் எழுந்தருளிய நிமித்தம் யாது?' எனவினவினன். அதுகேட்டு நாரதமுனிவர் அவனைநோக்கி, 'பித்ருராஜனே! சொல்லுகின்றேன் கேள், கேட்டு அதன் பிறகு வேண்டிய முயற்சிசெய்க. தசக்கிரீவனெனப் பெயர்பெற்ற நிசாசரன் எவராலும் வெல்வதற்கரியனான உன்னைத்தனது விக்கிரமத்தைக்கொண்டு வெல்லவெண்ணி இவ்விடம் வருகின்றனன்; ஹே பிரபோ! தண்டதரனான உனக்கு யாது விளையுமோவென அஞ்சி, அதை உனக்கு அறிவிக்க வேண்டிய காரணம் பற்றியே யான் விரைந்து இவ்விடத்திற்கு ஓடிவந்தனன்' எனவிளம்பினர்.

அம்முனிவர் இவ்வாறு உரைக்குமளவிலேயே இராக்ஷஸராஜன் ஏறிவருகின்ற புஷ்பகவிமானம் வெகுதூரத்தில் சூரியனுதயமானதுபோலச் சொலித்துக்கொண்டு தோன்றியதைக் காலதேவன் கண்ணுற்றனன். கண்ணுற்றவளவிலே அவ்விடமெங்கும் புஷ்பகவிமானத்தினது காந்தியினால் சோதியாக விளங்குமாறு செய்துகொண்டு இராவணன் அருகே வந்து சேர்ந்தனன். யமபுரஞ்சேர்ந்த இராவணன் ஆங்கு பற்பல பிராணிகள் அவரவர்செய்த பாபபுண்ணியங்களை அங்கங்கே அனுபவித்துக்கொண்டிருப்பதைக்கண்டனன்; யமபடர்களையும் யமனுடைய வேலையாட்களையும் அவ்விடத்தேகண்டனன்; பயங்கரமான ரூபமுடையவர்களான யமகிங்கரர்கள் மிகவும் உக்கிரமாகப் பிராணிகளைவருத்தி வதைப்பதையும் பார்த்தனன். அந்தவேதனையை பொறுக்கமாட்டாது பலர் பெருங்கூச்சலிட்டனர்; பலர் கோரமாகக் கூவினர்; பலவகைப் பூச்சிகளாலும் கொடிய நாய்களாலும் கடியுண்டு கர்ணகடோரமாகப்

பரிதாபமாய்ப் புலம்பினர் சிலர்; உதிரமே ஆறாய்ப்பெருகும் வைதரணீநதி யைத்தாண்டிக்கொண்டிருந்தவர் பலர்; சூடுண்டு சொலிக்கின்ற கொப்பரை யிலே அடிக்கடி புரட்டிக்கப்பட்டனர் சிலர்; அதருமமே புரிந்தவர்களான பலர் கத்திக்காட்டிலே துண்டு துண்டாகச் சேதிக்கப்பட்டனர். பெருங் கூச்சலுடையதான ரௌரவமென்னும் நரகத்திலும், எரிச்சலுண்டாகும் உப்பாற்றிலும், கத்திமுனைகளிலும் அகப்பட்டுக் கொண்டு அல்லலுற்றனர் அநேகர்; நீர்வேட்கை கொண்டு தண்ணீர்கிடைக்காது, தவித்தவாய்க்குத் தண்ணீர் அளிப்பாருளரோ வென, வருந்தி வேண்டிக்கொண் டிருந்தனர் சிலர்; அங்ஙனமே பசியால் வருந்தியவரும், உணவின்றி மெலிந்தவரும், பிணமானவரும், மிகுந்த துன்பமுற்றவரும், நிறம் மாறியவரும், தலை விரி கோலமானவரும், எச்சிலையும் சேற்றையும் மேலே பூசிக்கொண்டவரும், அவ்வேதனை பொறுக்கமாட்டாது மிகக் கொடியராய் ஓடுகின்றவருமாகி மற்றும்பலர் யாதனை யநுபவித்தனர். இவ்வாறு நூற்றுக்கணக்காயும் ஆயிரக்கணக்காயும் நரகவேதனை யநுபவிக்கின்ற பிராணிகளை இராவ ணன் வழியிலே கண்ணுற்றனன். இவர்களன்றியும், தாம்செய்த புண் ணிய விசேஷங்களால் இன்புற்றுப் பெருமகிழ்ச்சி கொண்டிருக்கின்ற பிராணி கள் பலரையும் கண்டனன்: சிலர் சிறந்த மாளிகைகளில் பற்பல வாத்தியங் கள் கோஷிக்கச் செவிக்கின்பமாகச் சங்கீதங்கேட்டுச் சந்தோஷித்துக் கொண்டிருந்தனர்; கோதானஞ்செய்தவர்கள் பலர் பசுவின்பால்முதலிய வற்றை யருந்தி யகமகிழ்ந்தனர்; அன்னதானஞ்செய்தவர்கள் அன்னத்தை வயிறுநிரம்பவுண்டு களித்தனர்; கிருஹதானஞ்செய்தவர்கள் அற்புதமான மாட மாளிகைகளில் குடிபுகுந்து களித்திருந்தனர்; கன்னிகாதானஞ்செய்தவர் பலர் அளவற்ற ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பெற்ற பெண்மணிகளைப் பெற்று இன்புற்றுவாழ்ந்தனர்; இவ்வண்ணம் மற்றும் பற்பலகருமங்கள் செய்தவர்கள் பலரும் தத்தம் கருமங்களுக்கேற்றவாறு அவற்றின் நற்பயனைப் பெற்றுப்பேரானந்த மடைந்து விளங்கினர்.

அவர்கள் அனைவரையும் கண்ணுற்ற இராவணன், தாம்செய்த தீவினையி னால் தவிக்கின்ற பலரிடத்திலும் பரிதாபமுற்றுத் தனது பராக்கிரமத்தினால் அவர்களனைவரையும் அந்நரகத்தினின்று விடுவித்து ஓடிப்போகச்செய்தனன். தசக்கிரீவனால் நரகயாதனையினின்று விடுவிக்கப்பெற்ற அந்தப்பிராணிகள், ஆ! இப்படி நமக்கொரு நல்லகாலமுண்டாகுமென்று நாம் கனவிலும் கருதா திருந்தோமே; இதுவும் ஒருபாக்கியவிசேஷமேயென்று ஒருமுகூர்த்தகாலம் சுகமுற்று மகிழ்ந்திருந்தனர். மஹாபலிஷ்டனான இந்த இராக்ஷதனால் இவ் வாறு பிரேதங்களெல்லாம் நரகத்தினின்று விடுவிக்கப்பட்டதுகண்டு அவற் றின் காவலாளர்கள் மிகக்கோபங்கொண்டவர்களாகி இராக்ஷதராஜனை யெதிர்த் துச் செல்லலாயினர். மஹாகோரர்களான யமகிங்கரர்கள் வெகுவேகமாக ஓடிவருகையில் எல்லாத்திசைகளிலும் பெரியகோஷமுண்டாயது. அவர் கள் அதிகமான உக்கிரங்கொண்டவர்களாகிப் பிராஸம், பரிகம், சூலம், சக்தி, தோமரம், முஸலமுதலான பலபடைக்கலங்களையும் பதினாயிரக்கணக்காய்ப்

புஷ்பக விமானத்தின்மீதெறிந்து, அதிலுள்ள ஆஸநங்கள், பிராஸாதங்கள் வேதிகைகள், தோரணங்கள் முதலிய பலவற்றை வண்டுகள்வீழ்ந்து அரிப்பது போல அரிக்கலாயினர். யமகிங்கரர்கள் புஷ்பகவிமானத்தை இவ்வாறு முறிக்கமுயலுகையிலும், தேவநிர்மிதமான அவ்விமானம் பிரம்மதேவனது மகிமையால் சிறிதும்சேதமுறாது சோதிபெற்றுவிளங்கியது. உடனே மஹா சூரர்களான யமகிங்கரர்கள் பதிநாயிரக்கணக்காகவந்து கூடி, விருக்ஷங்களை யும் வரைகளையும், பிராஸம்முதலான பலபடைக்கலங்களையுமெடுத்து இரா வணன்மீதும் அவனது அமைச்சர்கள்மீதும் பொழியலாயினர். சிறந்த வீரர்களான இராவணனது அமைச்சர்களும் இராவணனும் தமக்குள்ள திறத்தையும் வலியையும்வெளியிட்டு அமர்புரியலாயினர்; அவர்கள் பற்பல சஸ்திரங்களால் புடையுண்டு உடம்பில் உதிரவெள்ளம்பெருகுகையிலும் சலிக்காது சமர்புரியலாயினர்.

இவ்வாறு யமகிங்கரர்களுக்கும் இராவணனது அமைச்சர்களுக்கும் மஹத்தான யுத்தம் நடந்துவருகையில், மஹாபலிஷ்டர்களான யமகிங்கரர்கள் அவ்வமைச்சர்களை விட்டு இராவணனையே யெதிர்த்து அவன்மீது சூலங்களை மழைபொழிவது போலப் பொழியலாயினர். அவற்றால் பொத்துண்ட பத் துத்தலையோன் உடம்பு முழுமையும் துளைக்கப்பட்டு உதிரவெள்ளம் வழிந் தோட, புஷ்பகவிமானத்தி னிடையே நிரம்பப்பூத்த அசோகமரமென விளங் கினான். உடனே இராக்ஷஸராஜன் சூலம், கதை, பிராஸம், சக்தி, தோமரம் என்னும் ஆயுதங்களையும், பலபாணங்களையும், முஸலங்களையும் மலைகளையும் மரங்களையும் அஸ்திரங்களையும்அபிமந்திரித்து யமனது சேனையின்மீதுசொரிய லாயினான். பற்பல விருக்ஷங்களும், சிலைகளும், சஸ்திரங்களும் அதியுக்கிர மாகவும் பயங்கரமாகவும் யமனது சேனைகளில்வந்து வீழலாயின. அவை யாவும் மழைபொழிவதுபோல மிகப்பயங்கரமாக வந்து வீழ்கையிலும், அவையனைத்தையும் பிளந்துகொண்டு யமகிங்கரர்கள் ஆயிரவர் மேகங்கள் மலையைச் சூழ்ந்துகொள்வதுபோல அவ்விராவணனொருவனைச் சூழ்ந்து கொண்டு, பிண்டி பாலம் சூலம் முதலான படைக்கலங்களை விடுத்து அவனைத் திக்குமுக்காடச்செய்தனர். அதனால் இராக்கதராஜன் கவசம் பிளந்து உதிரம் ஆறுய்ப்பெருக மிகுந்த கோபத்துடனே புஷ்பகவிமானத்தி னின் றும் மூர்ச்சித்துக் கீழேவீழ்ந்தனன். ஆயினும் ஒருமுகூர்த்த காலத்தில் அவன் மூர்ச்சைதெளிந்து மிகுந்த கோபமடைந்து கார்முகமும் கணையுங் கைக்கொண்டு ஸாக்ஷாத் யமன்போலவே போர்புரிய எழுந்துநின்று பாசுபதா ஸ்திரத்தை ஸந்தானஞ்செய்து, யமகிங்கரர்களை நோக்கி, நில்லுங்கள்! நில்லுங் கள்! என்றுகூறி, அந்தக்கோதண்டத்தைக் காதளவிழுத்து, முப்புரமெரிக்க மஹாதேவன் விடுத்தவண்ணம் அக்கணையை விடுத்தனன். அப்பொழுது அந்த அம்பானது, கடுங்கோடையில் காட்டையெரிக்கவெழுந்த காட்டுத்தீ யெனச் சோதிமண்டலமாக எரிந்து கொண்டு விளங்கியது. கொடியவிலங்கு கள் பின்றொடர்ந்து செல்ல, நாற்புறமும் சுவாலைகளை வீசிக்கொண்டு சென்று அந்தச்சரமானது அரக்கர்கோன்கையினின்று விடுபட்டு வழியிலுள்ள மரம்

செடி முதலிய எல்லாவற்றையுமெரித்து நீறுக்கிக்கொண்டு விசையாகச் சென்று யமனது சைனியங்கள் முழுமையும் எரிக்கலாயிற்று. அதனால் எரிக்கப்பட்ட அச்சேனுவீரர்கள் காட்டுத்தீயினுல் கொளுத்தப்பட்ட விருக்ஷங்களெனப் போர்க்களத்து மடிந்து வீழ்ந்தனர். அதுகண்டு ராக்ஷஸராஜன் தன் அமைச்சர்களுடனே பூமிமுழுமையும் நடுங்குமாறு மிகப்பெரியதாக ஆநந்த கோஷஞ்செய்தனன். பிரஹஸ்தன் முதலாய மந்திரிமார்களும் ஆநந்தமதிகரித்து ஆரவாரஞ் செய்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.



தருமராஜனுக்கும் இராக்ஷஸராஜனுக்கும் மிகப்பயங்கரமான போர்நடந்ததும், இறுதியில் யமதண்டத்தைவிடுத்து இராவணனைவதைக்கத்துணிந்த தருமதேவனை நோக்கிப் பிரம்மதேவர் பயந்து, அங்ஙனம்செய்து தன்வரத்தை வீணுக்காது மறைந்துபோம்படி யமனைவேண்டிக்கொண்டதும், அவன் அவ்வாறே ஸத்தியத்திற்குக் கட்டுண்டு மறைந்துபோனதும், அதுகண்ட இராவணன் தான்வெற்றிகொண்டதாக வெண்ணி ஜயகோஷஞ் செய்துகொண்டு அவ்விடம்விட் டெழுந்து சென்றதும்.



இராவணன் இவ்வாறு ஆநந்த பூரிதனுகி அட்டஹாஸஞ்செய்ததுகேட்டு யமதருமராஜன் தன் சத்துரு வெற்றிகொண்டதாகவும், தன்சேனை யழிந்துவிட்டதாகவுமெண்ணினன். தனது சேனுவீரர்கள் வதையுண்டனரெனத் தோன்றிய வளவிலே வைவஸ்வதராஜன் கோபத்தினுல் கண்கள் சிவந்து, உடனே ரதம் சித்தஞ்செய்துகொண்டுவருமாறு ஸாரதிக்குக் கட்டளையிட்டனன். அவ்வண்ணமே ஸாரதி திவ்வியமான ஒருமஹாரதத்தை அலங்கரித்து உடனே கொண்டுவந்து நிறுத்த, அந்தநிமிஷமே தருமராஜன் அதன் மீதேறினுன். பாசமும் இருப்புலக்கையும் கைக்கொண்டு மிருத்தியுதேவன் அவன் முன்னே நின்றனன்; என்றும் நாசமுருத இவ்வுலகமனைத்தையும் ஸம்ஹாரஞ்செய்பவன் அந்த மிருத்தியுதேவனேயன்றே? யமனது திவ்வியமான ஆயுதமாகிய காலதண்டமானது புருஷரூபந்தரித்து அக்கினிபோலச்சொலித்துக்கொண்டு அவனது பக்கத்தில் நின்றது; அவனைச்சுற்றிலும் காலபாசங்கள் இடைவெளியின்றி அடர்ந்து நின்றன; முத்கரமென்னும் இருப்புத்தடியும் உருவமெடுத்து வந்துநின்றது. எல்லாவுலகங்களும் அஞ்சுமாறு காலமூர்த்தி இவ்வாறு கோபங்கொண்டதுகண்டு தேவர்கள் திரிலோகங்களுமழிந்தனவென வெண்ணினர்கள்.

பிறகு ஸாரதி குருதியெனச் செந்நிறமாக விளங்கும் குதிரைகளைத் தூண்ட, ராக்ஷஸராஜ னிருக்குமிடநோக்கி யமனது ரதம் பயங்கரமாகக்

கோஷஞ்செய்துகொண்டு செல்லலாகியது. சூரியனது தேர்க்குதிரைகளுக் கொப்பான அக்குதிரைகள் மநோவேகமாகச்சென்று போர்நடக்குமிடத் திற்கு ஒரு முகூர்த்தகாலத்தில் அந்த மஹாரதத்தைக் கொண்டுசேர்ந்தன. மிருத்தியுவை ஏற்றிக்கொண்டு வருகின்ற பயங்கரமான அந்த ரதத்தைக் கண்டவுடனே இராவணனது மந்திரிமார்கள் அவ்விடத்து நிற்கமாட்டாது ஓடலாயினர். அவர்கள் அற்பமான ஆற்றலுடையோராதலின், அறிவழிந்து அச்சம்மேலிட்டு, யாங்கள் இனி இங்குநின்று அமர்புரியவல்லோமல்லோ மென வுரைத்துத் திசைகள்தோறு மோடலாயினர்.

உலகமெல்லாம் நடுங்குமாறு மிகப் பயங்கரமாக வருகின்ற அத்தன்மை யான தேரைக் கண்டவளவிலும் தசக்கிரீவன் சிறிதும் கலக்கமுற்றவ னல் லன், அச்சமுற்றவனு மல்லன். இராவணனருகிற் சேர்ந்தவுடனே யமன் மிகுந்த கோபத்துடனே அவன்மீது சத்தி தோமரம் என்னும் ஆயுதங்களை விடுத்து அவனது மருமஸ்தானங்களைப் பிளக்கலாயினன். அதனால் இராவ ணன் சிறிதும் சலிப்புறுதவனாகி யமனது ரதத்தின்மீது மேகம் மழை பொழியுமாறு சரமாரி பொழியலாயினன். அதுகண்டு காலமூர்த்தி கொடிய கணைகளைத் தொடுத்து ராக்ஷஸராஜனது மார்பில் விடுக்க, அவற்றால் பீடிக் கப்பட்ட இராவணன் மிக வருந்தி அதற்கொன்றும் பிரதிசெய்யத் தோன் றாது தவித்தனன்.

அப்பொழுது யமதருமராஜனும் ராக்ஷஸராஜனும் வெற்றியை வேண்டி னவர்களாய்ப் போர்முகத்தில் பின்வாங்காது ஜயாபஜயந் தோன்றாமலே ஏழு நாள் யுத்தஞ்செய்தனர். அதுகண்டு தேவர், கந்தர்வர், ஸித்தர், மஹரிஷி கள் ஆகிய பலரும் பிரமதேவரை முன்னிட்டுக்கொண்டு அந்தப் போர்க்களம் வந்து சேர்ந்தனர். இராக்ஷஸராஜனும் பிரேதராஜனும் இவ்வாறு பராக்கிர மத்துடனே போர்புரிகையில், உலகத்திற்கு யுகாந்தகாலம் வந்துவிட்டதோ வெனத் தோற்றியது. அக்காலையில் அரக்கர்தலைவன் இடி யிடித்தாலன்ன தன் வில்லை வளைத்து நாணோசை யுண்டாகச்செய்து பாணங்களை விடுத்து ஆகாயமெங்கும் இடைவெளி யில்லாமற் செய்தனன்; மிருத்தியுவின்மீது நான்கு பாணமும், ஸாரதியின்மீது ஏழு அம்புகளும் விடுத்து, யமன்மீது ஆயிரக்கணக்காய் அம்புகளைப் பொழிந்து அவனது மர்மஸ்தானங்களைத் துளைக்கலாயினன். அதுகண்டு யமன் மிகுதியாகக் கோபங்கொள்ள, அவ னது வாயினின்றும் புகையுடனே சுவாலைகளை மாலைமாலையாக வீசிக்கொண்டு கோபாக்கினி வெளிக்கிளம்பியது. தேவதானவர்முதலானோரெதிரிலுண்டாகிய அந்த ஆச்சரியத்தைக் கண்டு மிருத்தியுவும் காலனும் மிக்க மகிழ்ச்சிகொள்ள லானார்கள்.

அநந்தரம் மிருத்தியுதேவன் கோபமதிகரித்தவனாகி வைவஸ்வதனைநோக் கி 'ஸ்வாமி! ஏன் இவ்வளவு தாமதம்? அடியேனுக்குக் கட்டளையிடுக; மாபாவி யான இவ்வரக்கனை யமர்புரிந்து யானே அதஞ்செய்து வருகின்றேன்; இனி இவ்வரக்கன் உயிரோடு திரும்பான்; இஃது உலகமரியாதையே யன்றோ? மஹா பராக்கிரமசாலிகளான ஹிரணியகசிபு, நமுசி, சம்பரன், விசந்தி, தூமகேது,

உத்தரகாண்டம்.

NO.8. இராவணனுக்கும் யமனுக்கும் யுத்தமும், பிரம்தேவர் சமாதானம் செய்வதும். 

రావణునికిన్ని యమునికిన్ని యుద్ధములౌట బ్రహ్మదేవుడు సమాధానము చేయుట.

வைரோசனனான பலிசக்கரவர்த்தி, தைத்தியராஜனான தம்பு, விருத்திராசுரன், பாணாசுரன் ஆகிய பலரும்; அஸ்திரசஸ்திரங்களை யுணர்ந்த ராஜரிஷிகளும்; கந்தருவர், உரகர், ரிஷிகள், பந்நகர், தைத்தியர், யக்ஷர், அப்ஸரசுக்கள் ஆகிய இவர்களும்; எவராலும் வெல்வதற்கரிய பலிஷ்டர்களான மற்றும் பலரும் என்னால் விநாசமடைந்திருக்கின்றனர்; கடலும் கிரியும் கானும் கானாறு மடங்கிய இப்பூமண்டலம் முற்றுமே விநாசமுற்றிருக்கின்றது. அங்ஙனமாக, ஹே மகாராஜனே! இந்நிசாசரன் எனக்கு எவ்வளவு? தருமதேவனே! எனக்குக் கட்டளை யிடுக, யான் இவனைக் கொலைபுரிகின்றேன், என் கண்ணுக்குத் தோற்றியபின் எவ்வளவு பலிஷ்டனாயினும் உயிரோடு திரும்புவனோ? இஃது எனது வலிமைபற்றி யன்று; தொன்றுதொட்டு வந்த உலகவியற்கையா லாகுவதேயாம். ஓ காலதேவனே! இப்பொழுது இவ்வரக்கன் எனக்குக் கட்புலனாயினன், இனி ஒரு முகூர்த்தகாலமும் ஜீவித்திரான்' என இவ்வண்ணம் உரைசெய்தனன்.

அதுகேட்டுத் தருமராஜன் மிகுந்த பராக்கிரமத்துடனே மிருத்தியுவை நோக்கி, 'அங்ஙனமன்று, நீ சும்மா இரு, இவனை யானே வதைக்கின்றேன்' என்று கூறிக் கோபத்தினால் கண்கள் சிவந்து, என்றும் வீண்போகாத காலதண்டத்தைக் கைபிலெடுத்துச் சுழற்றினான். காலபாசங்கள் பலவும் அதனைச் சூழ்ந்துகொண்டு நின்றன; இருப்புத்தண்டமும் அக்கினிபோல உருவமெடுத்துக்கொண்டு வந்துநின்றது. எல்லாப்பிராணிகளும் யமதண்டத்தைக் கண்டவளவிலே பிராணனை யிழப்பார்களென்றால், அஃது மேலே பட்டபோழ்து கேட்கவேண்டுமோ? அதனை மேலே தாக்கினால் விளையும் தீமையை யாம் என்னென்று சொல்லக்கூடும்? அத்தன்மைய மஹத்தாகிய ஆயுதத்தைப் பலிஷ்டனான காலமூர்த்தி கையிலெடுத்தவளவில், அஃது அரக்கனை உடனே யெரிப்பதென அக்கினிச்சுவாலைகளை நாற்புறமும் வீசிக்கொண்டு விளங்கியது. அதுகண்டு அந்தப் போர்க்களத்திலுள்ளோர் அனைவரும் அஞ்சி யோடினர்; தண்டமும் கையுமாக நின்ற யமனைக் கண்டு தேவர்களனைவரும் கலக்கமுற்றனர்.

இவ்வாறு யமதருமராஜன் இராவணனைப் புடைக்க வெண்ணிக் காலதண்டத்தைக் கைக்கொண்டது கண்டு நான்முகக்கடவுள் வைவஸ்வதனிடஞ் சென்று அவனை நோக்கி, 'அப்பா, மிகுந்த பாகுபலமும் பராக்கிரமும் பெற்ற தருமராஜனே! நீ இக்காலதண்டத்தினால் இந்நிசாசரனைக் கொல்லாதொழிக; தேவர்பெருமானே! தேவாயுதங்களால் மரணமுண்டாகாதென யான் இவனுக்கு வரமளித்திருக்கின்றேன்; யான் உரைத்த மொழியை நீ பொய்யாகச் செய்யலாகாது; தேவனாயினும் மனுஷியனாயினும் என்பேச்சைப் பொய்யாக்குகின்றவன் இம்மூவுலகங்களையும் பொய்யாகச் செய்தவனாவான்; அதற்கையமின்று. இந்தக் காலதண்டமோ, கோபத்துடன் பிரயோகித்த மாத்திரத்தில், பிரியம் அப்பிரியமென்னும் வேற்றுமையின்றி மிகக் கொடியதாய் எல்லாப் பிரஜைகளையும் ஸம்ஹரிக்க வல்லது; மூன்று உலகங்

களுக்கும் அச்சத்தை யுண்டாக்குவது; எல்லாப் பிராணிகளையும் அழித்தற் பொருட்டு எக்காலத்திலும் வீண்போகாதபடி ஆதியில் யானே மிருத்தியு வுடனே இந்தக் காலதண்டத்தையும் படைத்தேன். ஆதலின் நீ இதனை இராவணன் தலையிலெறியா தொழிக. இஃது தாக்கியபின் ஒரு முகூர்த்தகால மாயினும் ஜீவித்திருப்பவ னெவனுமிலன். இஃது தாக்கியபின்னர் இவ்வரக்கன் இறந்தாலும், இறவாதொழிந்தாலும் இருவகையிலும் என்வாக்குப் பொய்யாகும்படி நேரிடுகின்ற தாதலின், இதனை இலங்கையரசன்மீ தெறியாது அவனை விட்டுவிடுக. உலகங்களையெல்லா முற்றுநோக்கி யென்னையும் ஸத்தியவானுக்குக' என்று வேண்டினர்.

அதனைச் செவியுற்ற தருமராஜன், 'ஸ்வாமி! தேவரீர் திருவாக்குக்கு மெதிர்வாக்குண்டோ? எமக்கெல்லாம் பிரபு தேவரீரே யன்றோ? இதோ இந்தத் தண்டத்தை வைத்துவிட்டேன்; இனி இப்போர்க்களத்து யான் செய்யத்தகுவது யாது? வரம்பெற்று விளங்குகின்ற இவனை யான் வெல்வது கூடாதாயின், இவ்வரக்கன்கண்ணிற் புலப்படாது மறைந்துபோகின்றேன்' என்று கூறி, தேரோடும் தேர்க்குதிரைகளோடும் அவ்வாறே மறைந்து போயினன். அதுகண்டு தசக்கிரீவன் யமனை ஜயித்துவிட்டேனெனப் பெருங்கூச்சலிட்டுக்கொண்டு மறுத்தும் புஷ்பகவிமானத்தின்மீதேறி யமலோகத்தினின்று வெளியே சென்றனன். பிரமதேவர் முதலான தேவர்களுடனே வைவஸ்வதனும் தேவலோகஞ் சென்றனன்; நாரதமுனிவரும் மகிழ்ச்சிகொண்டனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்துமூன்றுவது ஸர்க்கம்.

இராவணன் பாதாளலோகஞ்சென்று அங்குள்ள நிவாதகவசர்களுடன் நட்புச்செய்துகொண்டு, காலகேயர்களைக் கொன்று, வித்யுஜ்ஜிஹ்வனை வதைத்ததும், அப்பால் வருணலோகஞ்சென்று அங்குள்ள வருணபுத்திரர்களை வெற்றிகொண்டதும்.

இவ்வாறு தசக்கிரீவன் யமனிடம் வெற்றிபெற்று தன் பெருமையைப் புகழ்ந்து பேசிக்கொண்டு சென்று தன் துணைவர்களைக் கண்டனன். மாரீசன் முதலாய அத்துணைவர்கள் அவனைக் கண்டு வெற்றிகொண்டாடி, அவனுடம்புமுழுமையும் துளைக்கப்பட்டு உதிரம் படிந்திருப்பதைப் பார்த்துப் பெருமகிழ்ச்சிகொண்டனர். இராவணனும் அவர்களைத் தேற்றிப் புஷ்பக விமானத்தி லேற்றிக்கொண்டனன். பிறகு அவ்விராவணன் பாதாளலோகஞ் செல்லவேண்டி, வருணனால் பாதுகாக்கப்பட்டதும், தைத்தியர் உரகர் முதலியோர் வசிக்கப்பெற்றதுமான மஹாஸமுத்திரத்திற் புகுந்தனன். அவ்வழியே அவன் முதலில் வாசுகியினால் பரிபாலிக்கப்பட்ட போகவதிப்

டணஞ் சேர்ந்து அங்குள்ள நாகர்களையெல்லாம் வென்று வசப்படுத்திக் கொண்டு களிப்படைந்து மணிமதி யென்னும் பட்டணம்போய்ச் சேர்ந்தனன். ஆங்கு வரப்பிரஸாதம் பெற்ற நிவாதகவச ரென்னும் தைத்தியர்கள் வசிக்கின்றனர்; இராவணன் அவர்களிடம் சென்று அவர்களை அமராட அழைத்தனன். அந்த தைத்தியர்கள் அனைவரும் மஹா பராக்கிரமசாலிகள், மஹா பலசாலிகள், பலவிதமான படைக்கலங்களும், பெற்றுப் போர்புரியும் பேராற்றலுடையவர்களாய் மிக்க மகிழ்ச்சிகொண்டிருந்தனர். இந்த ராக்ஷஸர்களுக்கும் தைத்தியர்களுக்கும் யுத்தம் ஆரம்பமாக, அவர்கள் ஒருவர்க்கொருவர் சூலம், திரிசூலம், குலிசம், பட்டஸம், கத்தி, பாசு முதலான பல படைக்கலங்களாலும் மிகுந்த கோபத்துடனே மோதலாயினர். இங்ஙனம் அமர்புரிகையில் அவர்களுக்கு ஓராண்டளவுக்கு அதிகமாகிவிட்டது; அவர்களில் வெற்றிதோல்வி ஒருபக்கத்திலும் தோன்றவில்லை.

மூவுலகங்களுக்கும் முக்கியமானஆதாரமா யிருக்கின்றவரும், யாவர்க்கும் மூலபுருஷருமான பிதாமஹர் இதனைக் கண்டு விமாநத்தின்மீதேறி விரைவாக அவ்விடஞ் சென்று நிவாதகவசர்களைக் கண்டு அவர்களை அப்போர்த்தொழிலினின்று தடுத்து, உண்மை விளங்க அவர்களை நோக்கி உரைசெய்கின்றனர்: 'இந்த இராவணன் தேவாசுரர்களாலும் போரில் வெல்வதற்குரியனல்லன்; ஆதலின் தேவாசுரர்களுடன் ஒன்றுகூடினாலும் நீங்கள் இவனை வெல்ல வல்லவராகமாட்டீர்; இந்த இராக்கதனுடன் நீவிர் நட்புச்செய்து கொள்வதே நலமென எனக்குத் தோற்றுகின்றது.

అవిభక్తాశ్చసర్వార్థా స్సుహృదాంనాత్రసంశయః।

அவிபக்தாச்சஸர்வார்த்தாஸ் ஸுஹ்ருதாந்நாத்ரஸம்சய:।

நண்பர்களாயின் அவர்களுடைய எல்லாப்பொருள்களும் பிரிக்கப்படாது இருவர்க்கும் பொதுவாகவேயிருக்கின்றன; இதிலையமிலது' என்று கூறினர்.

அதற்குடன்பட்டு இராவணனும் நிவாதகவசர்களுடன் அக்கினிஸாக்ஷிகமாக நட்புச்செய்துகொண்டு அவர்களிடம் மிகுந்த பிரீதியுடையவனாயினான். பிறகு அவர்களால் கிரமப்படி பூஜிக்கப்பட்டவனாகி ஓராண்டளவு அவ்விடத்திலேயே வசித்துக்கொண்டிருந்தனன். ஆங்கு வசிக்குமளவில் தசாநநன் தனது நகரத்திலிருந்தா லெவ்வண்ணமோ அவ்வண்ணமே எல்லாச் சுகங்களையுமனுபவித்துவந்தனன். அவ்விடத்து தைத்தியர்கட்குரியதான நூறு மாயைகளையும் நன்கு கற்றுணர்ந்து, வருணனது நகரத்தைத் தேடிக்கொண்டு அப்பாதாளலோகத்திலேயே சுற்றித் திரிந்தனன். பிறகு காலகேயர்கள் வஸிக்குமிடமான அச்மநகரமென்னும் பட்டணஞ்சென்று அங்குள்ள பலசாலிகளான காலகேயர்களைக் கொன்று, சூர்ப்பணகியின் பர்த்தாவான வித்யுஜ்ஜிஹ்வனையும் கத்தியால்வெட்டிக் கொன்றனன். அவன் தனக்குச் சோதரிபுருஷனும் மஹாபலிஷ்டனுமாயினும், தம்மினத்தவரான அரக்கரையும் பிடித்து நாவினால் நக்கிப் புசிக்கும் கொடுந்தன்மை யுடையோனாதலின் அவனையும் கொலைசெய்தனன். பிறகு நானூறு தைத்தியர்களை ஒரு முகூர்த்தகாலத்தில் மாய்த்தனன்,

அநந்தரம் ராக்ஷஸராஜன் வெண்மேகங்கள் போலவும் கைலாஸகிரிபோல வும் வெண்ணிறமாக விளங்குகின்ற வருணனது திவ்வியமான வாஸஸ்தானத் தைக் கண்ணுற்றனன். இடைவிடாது பால்சொரிகின்ற தெய்வத்தன்மை பொருந்திய சுரபியென்னும் பசுவையும் கண்டனன். அதன் பால் பெரு கியே பாற்கடல் உண்டாகியது; இந்த சுரபியின்கன்றே மஹேச்வரனுக்கு வாஹனமாயிருக்கிற விருஷபமாம்; அதன்பால் பெருக்கினுலாய பாற்கடலி னின்றுமே இரவில் ஒளிவீசும் சந்திரன் உற்பவித்தனன்; 'பேநபர்' என்னும் மேன்மைபெற்ற மகரிஷிகள் அதன்நுரையை அருந்தியே உயிர்வாழ்கின்ற னர்; தேவர்களுக்கு உணவான அமுதமும் அதினின்றுமே உண்டாயது; ஸ்வ தையைப்புஜிக்கும் பிதிர்க்களுக்குப் போஜனமான கவியமும் ஆங்கு உண் டாயது; சுரபியெனப் பிரசித்திபெற்ற அற்புதமான அந்தத் தெய்வப்பசு வை இராவணன் வலம்வந்துவணங்கி உள்ளேசென்றனன்.

அவ்விடம் பற்பலவிதமான காப்புச்சேனைகளால் பாதுகாக்கப்பட்டும் நாற்புறமும் நீர்த்தாரைகள் பலவுற்றுல் சூழப்பட்டும் மிகப்பயங்கரமா யிருந் தது. சரத்காலமேகம்போல வெண்ணிறமாகி என்றும் மகிழ்ச்சிகூர்ந்திருக் கின்ற வருணனது அற்புதமான மாளிகையைக்கண்ணுற்று, இராவணன் அம் மாளிகை வாயிலிலுள்ள சேனுவீரர்களை வதைத்துத் தானும் அவர்களால் அடி யுண்டனன். பின்னர் இராக்ஷஸராஜன் அவ்வீரர்களைநோக்கி,'நீவிர் விரைவாகச் சென்று உங்கள் அரசனேடு இவ்வண்ணம் உரைசெய்க:—போர்புரிய இராவ ணன் இங்குவந்திருக்கின்றுன்; அவன் தன்னுடன் உன்னைப்போர்புரியஅழைக் கின்றனன்; துணிவுஉண்டாயின் எதிர்த்துப்போர்தொடுக்கலாம்; அஞ்சினவனு யின், கைகூப்பிக்கொண்டுவந்து தோல்வியடைந்தேனெனக் கூறுக; உன்னை வருத்தாது விட்டுவிடுகின்றேம் - என யான்சொன்னதாகச் சொல்லுக' என வுரைத்தனன்.

இராவணன் இவ்வண்ணம் உரைசெய்யுமளவில், வருணனது புத்திரர்க ளும் பௌத்திரர்களும் மிக்க கோபங்கொண்டவர்களாகி வெளிப்பட்டுவந்த னர்; அவர்களது சேனுபதிகளான காவன், புஷ்கரன் என்பவர்களும் வெளிப் பட்டனர். இளஞ்சூரியன்போலச் சோதியுடையனவாகிக் கருதியவண்ணஞ் செல்லவல்ல தேர்களின்மீதேறி மிகுந்த பராக்கிரமத்துடனே அவர்கள் சிறந்தசேனைகள் புடைசூழப்புறப்பட்டுப் போர்க்களம் புகுந்தனர். புகுந்த வளவிலே வருணனது புத்திரர்களுக்கும், அமைச்சர்களுடனேகூடிய இரா வணனுக்கும் மிகப் பயங்கரமாக போர் ஆரம்பமாகியது. ஒருநொடிப் பொழுதில் வருணனது படைகள்யாவும் புடையுண்டு மடிந்தன; பூமியி னின்று யுத்தஞ்செய்த வருணபுத்திரர்களும் இராக்கதர் எய்த அம்புக ளால் அடியுண்டு ஆற்றுதவர்களாயினர். பின்னர் அவர்கள் தாம் தரை யிலும் இராவணன் புஷ்பக விமானத்தின்மீதும் நின்று அமராடுவது ஒவ்வா தென வுணர்ந்து, விரைவாகச்செல்லும் தமது தேர்களுடனே விண்ணிடை சென்று இராக்ஷஸராஜனுக்குச் சரியாகநின்று சமர்புரியலாயினர். தேவதான வர்களுக்குப்போல இவர்களுக்கு ஆகாசத்தினிடையே அற்புதமான யுத்த

முண்டாக, அதில் வருணபுத்திரர் அக்கினிக்கொப்பான அம்புகளைவிடுத்து இராவணனைப் போர்புரிய வொட்டாது புறங்காட்டச்செய்து களித்துக்கூச்ச லிட்டனர்.

தம்மரசன் இவ்வாறு தோல்வியடைந்ததுகண்டு மஹோதரன் மிகுந்த கோபமடைந்தவனாகி உயிர்க்குத்துணிந்து யுத்தஞ்செய்ய முனைந்து உற்று நோக்கிக் கதையொன்றைக்கொண்டு வருணபுத்திரர்கள்விண்ணிடையினின்று மண்ணிடைவீழப் புடைத்தனன்; அவர்களது சேனைத்தலைவர்களையும் நூறு குதிரைகளையும் கொலைசெய்தனன்; அதனால் அவர்கள் தேரொழிந்து தரையில் நிற்பது கண்டு ஆநந்தகோஷஞ் செய்தனன். மகோதரனால் அடியுண்ட ரதங்கள்குதிரைகளுடனும் ரதிகர்களுடனும் பூமியில்வந்து வீழ்ந்தன. ரதங்கள் இங்ஙனம் ஊறுபட்டவளவிலும் மஹாமஹிமைபெற்றசூரர்களானவருணகுமா ரர்கள் தம் பிரபாவத்தினால் சிறிதும் வருத்தமுறாதவர்களாகி வானத்திலேயே நிலைகொண்டு வில்லைவளைத்து நாணேறிட்டு அம்புகள்விடுத்து மஹோதரனைப் பிளந்து தள்ளி, பிறகு மிகுந்த கோபத்துடனே இராவணனையெதிர்த்து, வஜ்ராயுதத்திற் கொப்பான கொடியகணைகளை விடுத்து, மேகம் மழை பொழிந்து மலையைப்பிளக்குமாறு பிளந்தனர். அதுகண்டு தசக்கிரீவன் கோபங் கொண்டு பிரளயகாலாக்கினியென வெழுந்து பயங்கரமாகப் பாணங்களைப் பெய்து அவர்களது மருமஸ்தானங்களைப் பிளந்தனன்; அதனால் அவர்கள் தரையில்வீழ்ந்து காலாட்களாகி மிகுந்த விசனமடைந்தனர். இராவணன் அவ்வளவோடு ஒழியாமல், விசித்திரமான முஸலங்கள், அனேகமான பல்லங்கள், பட்டஸம், சக்தி, சதக்னி, தோமரம் என்னும் பற்பல படைக்கலங்களைப் பொழிய, வருணபுத்திரர்கள் பெருஞ்சேற்றில் புதையுண்ட மதயானைகள் போல மிக வருத்தமுற்றனர்.

ஜலேசுவரனது புத்திரர்கள் போர்புரியத் திறமையற்றுப் பெருந்துன்ப மனுபவிப்பதுகண்டு இராவணன் மேகம் முழங்குவதென ஆநந்தகோஷஞ் செய்து, மேகம் மழை பொழியுமாறு பின்னும் பலபாணங்களை அவர்கள் மீதுபொழிந்தனன். அவற்றைத் தாங்கமுடியாது அவர்கள் மூர்ச்சித்துக்கீழே விழ, அங்கிருந்த ஏவலாட்கள் உடனே அக்குமாரர்களை யெடுத்துத் தம்மாளி கையிற் கொண்டு சேர்த்தனர்.

அதன்பிறகு அரக்கன்தலைவன் அவர்களைநோக்கி, 'நீவிர் என்வரவையும் கருத்தையும் உங்கள்பிரானான வருணனுக்கு உணர்த்துவீர்' என்று கூற, வருணனது மந்திரியான பிரஹஸனென்பவன், 'நீர் இப்பொழுது எவரைப் போருக்கு அழைக்கின்றீரோ, எங்கள் மஹாராஜாவான அவ்வருணதேவர் சங்கீதங்கேட்கப் பிரமலோகஞ் சென்றிருக்கின்றனர். எம்அரசன் வெளியே சென்றிருக்கையில் நீர் ஏன் வீணாக இங்குவந்து வருந்துகின்றீர்? இங்குள்ளவர் வருணகுமாரர்களே; அவர்களை நீர் வெற்றிகொண்டீர்' என்றுகூறினான். அது கேட்டு இராக்ஷஸராஜன் தன்வெற்றிவிளங்கப் பறைசாற்றி, வந்தவழிதிரும்பி இலங்காபுரியைநோக்கி ஆகாயமார்க்கமாகச் சென்றனன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## * இருபத்துநான்காவது ஸர்க்கம்.

இராவணன் பாதாளலோகத்தில் மஹாபலி யிருக்குமிடஞ்சென்று, ஆங்கு அவனை வெல்ல முயன்று முடியாமல் வீணே திரும்பிவிட்டது.

இவ்வண்ணம் ஆநந்தகோஷஞ் செய்துகொண்டு வருணனது வாஸஸ்தானத்தினின்று வெளிப்பட்ட தசக்கிரீவன், ஆநந்தத்தினால் தழதழத்துப் பேசுகின்ற மஹோதரனுடனேகூடி அம்மந்திரிமார்களுடனே அந்த அச்ம நகரத்திலேயே மறுபடிசுற்றித் திரிந்தனன். திரிகையில் அவ்விடத்தே மிகவும் அற்புதமான மாளிகையொன்று காணப்பட்டது: சுவர்ணமயமான ஸ்தம்பங்கள்நாட்டி நாற்புறமும் வேதிகைகள் அமைத்து வைரக்கற்களாலும், படிகக்கற்களாலும் படிகளிட்டு வைடூரியத்தினால் தோரணங்கள்கட்டி முத்துமாலைகள் தொங்கவிட்டுப் பற்பலமணிகளாலும் அலங்கரிக்கப்பட்டு அநேகம் ஆஸநங்களுடனே தேவேந்திரபவநம்போல விசித்திரமாக விளங்கும் அம்மாளிகையைக் கண்ணுற்று இராவணன், 'இஃதுயாருடைய கிருகம்? மேருமலையென விளங்குகின்றதே! நீ விரைவாகச்சென்று இதனை அறிந்துகொண்டுவா' என பிரஹஸ்தனுக்குக் கட்டளையிட்டனன்.

பிரஹஸ்தன் அங்ஙனமே யாகுகவென அம்மாளிகையை நோக்கிச் சென்றனன். அதன் முன்வாயிலில் காவலாளிகள் ஒருவரும் காணப்படவில்லை. அங்கு யாருமில்லாததுகண்டு அவ்விடத்தைக் கடந்து இரண்டாவது அங்கணத்திற் புகுந்தனன்; அங்கும் யாருமில்லை. இவ்வாறே ஏழு அங்கணங்கடந்து சென்றான். ஏழாவது அங்கணத்திற் செல்லுகையில் ஒருசோதி தோன்றியது, அதனையுற்றுப்பார்க்குமளவில் அதனிடையே புருஷனொருவன் தோன்றினன். அந்தப்புருஷன் இவனைக்கண்டு களிப்புற்றுக் கோவென்று நகைத்தனன். அவன்நகைத்த கோஷத்தைக்கேட்டு பிரஹஸ்தன் மயிர் சிலிர்த்தவனாயினன். சோதிமயமான சுவாலையின்மத்தியில் சூரியனெனக் கண்ணெடுத்துப்பார்க்கக் கூடாதவனாகி ஸாக்ஷாத் யமனெனவேநின்ற பொன்னிறமான புருஷனைக்கண்டு, உடனே வெளிச்சென்று அவன் அந்தவிருத்தாந்தம் அனைத்தையும் இராவணனிடம் அறிவித்தனன்.

ஹே ராம! அதனைக்கேட்ட தசக்கிரீவன் உடனே புஷ்பக விமானத்தினின்றுமிழிந்து அந்தக்கிருகத்தினுள் பிரவேசிக்கக் கருதினான். இராவணன் அங்ஙனம் கருதியவளவில், அம்மாளிகைவாயிலை மறித்துக்கொண்டு அஞ்சன மலைபோன்ற மேனியனாய் முடியில் கிரீடம்விளங்க ஒருபயங்கரனான புருஷன் எதிரே தோன்றினன். அந்தப் புருஷன் அக்கினிசுவாலைபோன்ற நாவும், சிவந்தகண்ணும், வெண்மையான வதனமும், தொங்குகின்ற உதடும், சிலிர்த்த மயிரும், மிகப்பயங்கரமான நாசியும், சங்குபோன்ற கழுத்தும், மிகப்பெரிய மோவாய்க்கட்டையும், மறைந்த மீசைமயிரும், வெளித்தோன்றாத எலும்பு

* இதுமுதல் 5 - ஸர்க்கங்கள் அதிக பாடமென்பர்; ஆயினும் அநேக ஸ்ரீகோசங்களில் காணப்படுதலால், யாமும் இங்கு அவற்றை விடாதெழுதுகின்றோம்.

களும், கோரப்பல்லோடுகூடியவாயு முடையனும் மிகப்பயங்கரனுகி இருப் புலக்கையைக் கையில்வைத்துக்கொண்டு வழிமறித்து நின்றனன்.

உலக்கையுங்கையுமாக வழியைத் தடுத்துக்கொண்டுநின்ற அத்தன்மைய னைபுருஷனை யிராவணன்கண்ணுற்றனன். அவனைக்கண்டவளவிலே இராவண னுக்கு மயிர்சிலிர்த்தது; மனம்சலித்தது; உடல்நடுங்கியது. ஹே ராம! இந்தக் கெட்டகுறிகளைக்கண்டு அவன் இஃதென்னவெனச் சிந்திக்கலாயினன். அவன் அவ்வாறு சிந்திக்குமளவில் அந்தப்புருஷனே அவனைநோக்கி, 'ஹே ராக்ஷஸ! நீ யாதுசிந்திக்கின்றனை? அச்சமின்றி அதனை என்னிடம் உரை செய்க. ஹே ரஜநீசர, ஹே வீர! உனக்குயான் அதிதிபூஜையாக யுத்தம் அளிக்கின்றேன்; நீ என்னுடன் அமராடுகின்றனையா? அதனைநிச்சயித்துக் கூறுக' வென்றனன்.

இதனைச்செவியுற்ற இராவணன் மறுத்தும் மயிர்சிலிர்த்தவனுயினன். அங்ஙனமாகியும் சற்று மனத்தைத் தேற்றிக்கொண்டு இராவணன் அந்தப் புருஷனை நோக்கி, 'பேசத் திறமைகற்ற பெரியோனே! இவ்வீட்டிலிருப் பவன் யாவன்? அவனைச் சொல்லுக; அவனுடனே தான் யான் யுத்தம் செய்ய விரும்புகின்றேன்' என்றனன்.

அதுகேட்டு அந்தப்புருஷன், 'உன் இஷ்டப்படியே யாகுக; இம்மாளி கையிலிருப்பவன் தானவராஜன்; அவன் உதாரகுணமுள்ளவர்களில் உத்தம னவன், மஹாசூரன், ஸத்தியபராக்கிரமன், வீரன், பல நற்குணங்களு நிறைந்தவன், பாசங் கைக்கொண்ட காலமூர்த்திக்கொப்பானவன், இளஞ்சூரி யனுக்குச் சமமான சோதியுடையவன், போரில் பின்வாங்காதவன், ஆக்கிரஹங் கொண்டவன், வெல்வதற்கரியவன், யாவரையும் வெல்லும் திறமுடையவன், மஹா பலிஷ்டன், குணக்கடல், பிரியமே பேசுகின்றவன், எல்லாவற்றையும் ஸமமாயெண்ணுகின்றவன், குருமாரிடத்திலும் அந்தணரிடத்திலும் என்றும் பிரீதி மாறுதவன், எதற்கும் ஆகுங்காலத்தை யெதிர்பார்த்திருப்பவன், ஸத் துவம் சிறந்தவன், ஸத்தியவாக்குடையவன், அனைவர்க்கும் ஆநந்தமளிக்கும் தோற்றமுடையவன், மற்றும் பல நற்குணங்களும் நிறைந்த சூரன், வேதாத் தியாநமே தொழிலாக் கொண்டவன், மேகமாக கர்ஜிப்பவனிவன், வாயுவாக வீசுகின்றவனிவன், தீயாயெரிபவனிவன், சூரியனுகச் சொலிப்பவனிவன், தேவர்கள் பூதகணங்கள் பன்னகர் மகரிஷிகளாகியப் பலராலு மிவன் அச்ச மென்பதை யுணராதவன் அத்தன்மையனுடனேயோ நீ யுத்தஞ்செய்ய ஆசைகொள்ளுகின்றனை? ஹே ராக்ஷஸேச்வர! இந்த மஹாபலியுடனே யுத் தஞ்செய்வது உசிதமென உனக்குத் தோற்றுமாயின், உடனே உள்ளே புகுந்து போர்புரியலாம்' என்றனன்.

அந்தப்புருஷன் இவ்வாறுகூறியது கேட்டுத் தசக்கிரீவன் உள்ளேபுகுந்து மஹாபலி யிருக்குமிடஞ் சென்றனன். அவன் லங்கேச்வரனைக் கண்டவுடனே நகைத்து அட்டஹாஸஞ் செய்தனன். அந்த தானவராஜன் சூரியனெனச் சோதியுருவாகிக் கண்ணெடுத்துப் பார்க்கவும் அஸாத்தியனுக நின்றனன்.

அவன் இராவணனைக் கண்டவுடனே விச்வரூபங்கொண்டு அவனைக் கைபிடித்து மடிமீது உட்காருவித்துக்கொண்டு, 'ஓ ராக்ஷஸேச்வர, ஹே தசக்கிரீவ, மஹாபாஹோ! நீ வேண்டுவது யாது? யாது வேண்டினும் அளிக்கின்றேன்; நீ இப்பொழுது வந்த காரியம் யாது? அதனை உரைசெய்க' என்றனன். மாபலி இவ்வாறு புகன்றதுகேட்டு இராவணன், 'ஹே மஹாபாக! முன்பு விஷ்ணு உன்னைக் கட்டிக் காவல்செய்ததாக யான் கேள்விபுற்றேன்; அந்தச் சிறையினின்று உன்னை யான் விடுவிக்க வல்லவன், இது நிச்சயம்' என்று கூறினான்.

அதுகேட்டு மஹாபலி குலுங்கநகைத்து நவில்கின்றனன். 'ஹே ராவண! சொல்லுகின்றேன், கேள்: நீ யாரிடத்தினின்று மென்னை விடுவிப்பதாக உரைசெய்கின்றனை? கார்வண்ணமேனியாய் ஒரு புருஷன் இம்மாளிகை வாயிலில் எப்பொழுது மிருக்கின்றனனே, இவன் மஹாபலிஷ்டன், இவன் பல தானவேந்திரர்களையும், வலியிற் சிறந்த வீரர்களான முற்காலத்தவர் பலரையும் வென்று வசப்படுத்தியவன். இவனாலேயே யானும் இவ்வாறு சிறைசெய்யப்பட்டேன்; விதியை மதியால் வெல்வது கூடாதல்லவா? ஹே ராவண! இப்புருஷனை வஞ்சிக்க வல்லவனும் உலகிலொருவ னிருக்கின்றனனா? இந்த மாளிகைவாயிலில் எவன் இருக்கின்றனனோ, அவனே ஸர்வபூதங்களையும் ஸம்ஹரிப்பவன், எல்லாப்பூதங்களையும் படைப்பவனும் அவற்றை யியங்கச் செய்பவனு மிவனே; எல்லாவற்றையும் தரிப்பவனும் எல்லாவுலகங்களுக்கும் ஈச்வரனு மிவனே; முக்காலத்திலுமுள்ள எல்லாப்பொருள்களுக்கும் பிரபுவான இவனை நீயும் அறியாய், யானும் அறியேன்; கலியுமிவனே; காலமு மிவனே: ஸர்வபூதங்களையும் சராசரங்களுள்ளிட்ட மூவுலகங்களையும் படைப்பவனும் காப்பவனும் ஸம்ஹரிப்பவனும் மறுபடி சிருஷ்டிப்பவனு மிவனே; ஆதியந்தமில்லாத பராபரப்பொருள் இவனே; எல்லாவற்றிற்கும் கரணமும் காரணமும் கர்த்தாவுமா யிருப்பவன் இந்தப் புருஷோத்தமனே; ஹே நிசாசர! யாகம் செய்வதும் ஓமம் செய்வதும் தானஞ்செய்வதுமாகிய யாவும் இவனையே சேர்கின்றன; எல்லாவுலகங்களுக்கும் நாயகனுய் அவற்றைத் தரிப்பவனும் காப்பவனும் இவனே யென்பதில் ஐயமிலது; இத்தன்மையான மகிமைபெற்ற பொருள் இம்மூன்று லோகங்களிலும், மற்றொன்றிலது; ஹே பௌலஸ்திய! யான், நீ, இன்னும் இப்பூமியிலுள்ளவ ரனைவரையும், பசுவைக் கயிறுகட்டி ஈர்த்துக்கொண்டு போகுமாறு, நடத்திக்கொண்டு போகின்றவன் இம்மஹாநுபாவனே.

விருத்திராசுரன், தநு, சுகன், சும்பன், நிசும்பன், சம்பு, காலநேமி, பிரஹ்லாதன், விரோசனன்புத்திரனான பலி, காலகேயர், தாரகாசுரன், முசுகுந்தன், விவர்த்தனன், ஹிரணியாக்ஷன், மது, கைடபன், தூமன், சம்பரன், யமளார்ச்சுனர்கள், கம்ஸன் ஆகிய பலரும் சூரியனைப் பிரகாசிக்கச்செய்யவும், அக்கினியை யெரியச்செய்யவும், வாயுவை வீசச்செய்யவும், மழைபொழியச் செய்யவும் வல்லவர்கள்; இவர்களனைவரும் நூறுயாகங்கள் செய்தவர்கள்;

உத்தரகாண்டம்.

No. 9. இராவணன்மஹாபலியினிடம் அமராடசசென்று அவமானமடைந்துதிரும்பியது. PAGE No. 73.



రావణుడు మహాబలివద్ద జగడమునకు చని భంగపడి తిరిగివచ్చుట.

அனைவரும் மஹத்தான தவம்புரிந்தவர்கள்; அனைவரும் மஹா மகிமைபெற்ற வர்கள்; அனைவரும் யோகதருமம் அனுஷ்டித்தவர்கள்; அனைவரும் அளவற்ற பாக்கியம்பெற்று மஹத்தான போகங்களை அனுபவித்தவர்கள்; தானஞ்செய் தவர்கள்; வேள்வி யியற்றியவர்கள்; வேதமோதியவர்கள்; பிரஜைகளைப் பரி பாலித்தவர்கள்; மித்திரர்களைப் பாதுகாத்து சத்துருக்களை ஸம்ஹரிப்பவர் கள்; போர்புரிவதில் இணையற்றசூரர்கள்; நல்லகுடிப் பிறந்தவர்கள்; எல்லா நூல்களையும் அஸ்திரசஸ்திரவித்தைகளையும் கரைகண்டுணர்ந்தவர்கள்; மற் றும் பல கலைகளையும் நன்குகற்றவர்கள்; போர்க்களத்தில் பின்வாங்காதவர் கள்; இவர்களெல்லோரும் தேவராஜ்யத்தையும் அரசுபுரிய ஆவல்கொண் டிருந்தவர்கள்; யுத்தத்தில் தேவர்களனைவோரையும் திரள்திரளாக வென்றவர் கள்; தேவர்களினும் மேம்பட்ட மாட்சியுடையவர்கள்.

பாலசூரியனைநிகர்த்த சோதியுடையவர்களாய்ப் பற்பல இன்பங்களையு மனுபவித்துச் சிறப்புற்று மதித்திருந்தவர்க ளனைவோரையும் இனத்துடன் அதஞ்செய்தவர் இவரேயாம்; இவரே ஸகலலோகேச்வரனான ஸ்ரீ மகா விஷ்ணுவாம். அவரவரை நாசஞ்செய்வதற்கு ஏற்ற உபாயமுணர்ந்த பக வான் இவரே; எல்லாவற்றையும் உண்டாக்குகின்றவர் இவரே; எல்லாவற் றையும் ஸம்ஹரிப்பவர் இவரே; எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாய்அவற்றிற்கு ஆதாரமுமாகித் தாங்குகின்றவரு மிவரே; மஹாநுபாவனும் காமரூபியுமான இந்தத் தேவ தேவனாலே இங்ஙனம் தானவேந்திரர்கள் பலரும் க்ஷபித்தனர்; போரில்வெல்வதற்கு அரியரான பல ராஜாக்களும் விதிவசப்பட்டவர்களாகி இவராலே அதஞ்செய்யப்பட்டு அழிந்தனர்.' என வுரைத்து, மறுபடியும் அவனை நோக்கி, 'ஹே வீர! நீ வலிமை வாய்ந்தவனாயின், அதோ ஒருசக்கரம் அக்கினிபோலெரிந்துகொண்டு அற்புதமாகவிளங்குகின்றதன்றோ? நீ சென்று அதனைக் கையிலெடுத்துக்கொண்டு என்பக்கலில் வந்து சேருக, அதன்பிறகு யான் உனக்கு அழிவில்லாத மோக்ஷகாரண மின்னதென உரைக்கின்றேன்; ஹே மஹாபாஹோ! விரைவாக எழுந்துசெல்லுக, விளம்பம் செய்யற்க' என உரைத்தனன்.

ஹே ரகுநந்தன! இதனைச் செவியுற்றவளவில் அந்த இராக்கதன் நகை செய்துகொண்டு, மஹாமகிமைபெற்றதிவ்யமான அந்தக்குண்டலம்எவ்விடத் திலிருந்ததோ அவ்விடத்திற் கெழுந்துசென்றனன். சென்றவுடனே தேகவலி யிற் சிறந்த வீரனெனச் செருக்குற்ற இராவணன் அலக்ஷியமாக விளையாட் டாய் அதனை யெடுக்க முயன்றனன்; அதனை யசைக்கவும் அவனால் அஸாத் தியமாகிவிட்டது. அதுகண்டு அவன் வெட்கமடைந்தவனாகி, தன் வலியெல் லாம் கொண்டு மறுபடியும் அதனை யெடுக்க முயன்றான். திவ்வியமான அந் தக் குண்டலத்தைக் கிளப்பியவளவிலே ராக்ஷஸராஜன் உடம்பெல்லாம் உதிரவெள்ளம் பெருக, வேரற்றமரமென மண்மீது வீழ்ந்தனன். அதுகண்டு அவனது மந்திரிமார்கள் ஹா! ஹா!! எனப் பெருங்கூச்சலிட்டனர்; அஃது இடிமுழக்கமென எங்கும் பரவியது.

பிறகு ஒரு முகூர்த்தகாலம் கழித்து இராக்கதன் மூர்ச்சைதெளிந்து எழுந்தனன்; எழுந்தவளவிலும் அவன் வெட்கத்தினால் ஒன்றும் தோன்றாது தலைகுனிந்துகொண்டு நின்றனன். அதுகண்டு மஹாபலி அவனை நோக்கி, 'அரக்கர்பெருமானே! என் அங்குநிற்கின்றனை? இவ்விட மெழுந்துவருக; இதன்செய்தியை யான் உரைசெய்கின்றேன் கேள்: நீ யெடுக்கமுயன்ற இந்த மணிகுண்டலம் எனது மூதாதையான ஹிரணியகசிபுவின் காதணியாம்; அவன் மாண்டவளவில் இஃது இவ்வாறு இவ்விடத்தேவந்து வீழ்ந்தது. மற்றொரு மணிகுண்டலம் இம்மலைத்தாழ்வரையிலே வீழ்ந்துகிடக்கின்றது. அவர் யுத்தஞ்செய்கையில் அவரது மணிமகுடம் சேதிதேசத்தருகே போய் வீழ்ந்தது.

ஹே ராக்ஷஸேச்வர! என் மூதாதையான அந்த ஹிரண்யகசிபுவுக்கு யமனுமில்லை, மிருத்தியுவுமில்லை, நோயுமில்லை, மற்றுமவரை நலியச்செய்பவருமில்லை. அவர்க்குப் பகலிலும் மரணமில்லை, இரவிலும் மரணமில்லை, காலைச் சந்தியிலும் மரணமில்லை, மாலையிலும் மரணமில்லை, உலர்ந்த பொருளாலும் மரணமில்லை, ஈரமானபொருளாலும் மரணமில்லை, எந்தவிதமான அஸ்திர சஸ்திரங்களாலும் மரணமில்லை. அத்துணைச்சிறப்புற்றவர் தம் மகனான பிரஹ்லாதாழ்வானுடனே மிகக் கொடியதாக வாதாடினார். அக்காலையில் பிரஹ்லாதாழ்வானைப் பாதுகாத்தற்பொருட்டு, ஹே ராக்ஷஸேச்வர! அனைவரும் பார்த்துக் கொண்டே யிருக்கையில், மிகவும் பயங்கரமான நரசிங்கவுருவமாய் இவர் அங்குத் தோன்றினார். கோபமதிகரித்திருந்த ஹிரணியகசிபுவும் அவ்வுருவத்தைக் கண்ணெடுத்து நோக்கினார். அப்பொழுது யாவும் இன்னதெனத் தோற்றாது கலக்கமுற்றன. உற்பவித்தவுடனே அந்த நரசிங்கமூர்த்தி தமது திருக்கைகளால் அவரை வாரியெடுத்துத் தமது நகங்களாலேயே அவரை யமலோக மனுப்பினார். நிரஞ்ஜநனான அவ்வாசுதேவனே இம்மாளிகைவாயிலில் காவல்காக்கின்றனன்.

தேவாதிதேவனான இந்தப் பரமபுருஷனது பிரபாவங்களை இன்னும் வேண்டுமாயின் விளம்புகின்றேன் கேள்: ஆயிரக்கணக்கான தேவேந்திரர்களும், அயுதக்கணக்கான தேவர்களும், நூற்றுக்கணக்கான ஸப்தரிஷிகளுமாகிய பலரும், ஆயிரக்கணக்காய் ஆண்டுகள் செல்லச்செல்ல, இம்மாளிகைவாயிலி லிருக்கின்ற மகாநுபாவரால் சங்கரிக்கப்பட்டனர்' என்று கூறினான்.

மஹாபலி மொழிந்த வசனத்தைச் செவியுற்று இராவணன் சொல்லலுற்றனன்: 'ஓ தானவராஜனே! யான் பிரேதராஜனான யமனைக் கண்டேன்; ஆங்கு மிருத்தியுவையுங் கண்டேன்; பாசமுங்கையுமாக விருந்த சோதியுடனே மிகப் பயங்கரமாக நின்ற காலமூர்த்தியை யான் வென்றேன். கோரப் பல்லும், பாம்பும் தேளும் போன்ற மயிர்களும், சிவந்தகண்ணும், கொடிய வேகமுமுடையனாகி, சூரியனெனக் கண்ணெடுத்துக் காணக்கூடாதவனும், போரில் பின்வாங்காதவனும், பாபிகளைப் புடைப்பவனுமாய் மிகப் பயங்கரனாயிருந்த வித்யுஜ்ஜிஹ்வனையும் யான் ஜயித்தேன். ஹே தானவேச்வர! அவர்களைக் கண்டு யான் சிறிது மஞ்சினேனில்லை, அவர்களை வென்றதில் எனக்குச்

சிறிது வருத்தமும் தோற்றிலது. இவன் யாவனோ எனக்கு விளங்கவில்லையே; இவன்பெருமையைப் பின்னும் விளங்கக்கூறுவாய்' என வினவினன்.

இராவணன் புகன்றதுகேட்டு மஹாபலி மொழிகின்றனன்: ஹே ராக்ஷஸ ராஜனே! மூவுலகங்களுக்கும் ஆதாரபூதனாய் ஹரியென்றும் நாராயணனென்றும் அஸாதாரணமான திருநாமங்களைப்பெற்ற பிரபுவே இவர்; அநந்தன், கபிலன், விஷ்ணுவென்னும் பெயர்பெற்றவரு மிவரே; சோதிவடிவமான நரசிங்காவதாரஞ்செய்தவரு மிவரே; ரிததாமா, சுதாமா, பாசங் கைக்கொண்ட பயங்கரனான காலமூர்த்தி இவர்களு மிவரே; பன்னிரண்டு சூரியர்களு மிவரே; அநாதியான பரமபுருஷ னிவரே; கார்மேகவண்ணனான இவரே தேவர்களுக்கு நாயகனும் தேவர்களில் முதன்மையானவனுமாயிருப்பவர்; சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரமென்னும் முத்தொழிலையும் தமக்கு ஒரு லீலையாக்கொண்டு திரிலோகாதிபதியாயிருக்கின்ற அழிவில்லாத புருஷனு மிவரே. இவர் தேஜோமயமானவர்; அழகுவாய்ந்த வாகுக்களை யுடையவர்; ஸகல யோகங்களாலு மாராதிக்கப்பட்ட மஹாயோகி; அடியார்களிட மன்புமாறாதவர்; எல்லாவுலகங்களையும் இவரே தாங்குகின்றார், இந்தப் பிரபுவே படைக்கின்றார், கடைசியில் மஹாபலிஷ்டனான காலமூர்த்தியாகித் தாமே ஸம்ஹரிக்கின்றார். யாகமு மிவரே; யாகங்களினால் ஆராதிக்கப்பட்டவரு மிவரே; சக்கராயுதந்தரித்த இந்த ஹரி ஸர்வதேவர்களையும், ஸகல பூதங்களையும், ஸகல லோகங்களையும், தமக்குத் திருமேனியாகக்கொண்ட ஞானஸ்வரூபியாம். இங்ஙனம் அற்புதமான உருவம்பெற்று வீரர்களை வதைப்பவனும் வீரர்களைத் தமக்குத் திருக்கண்களாகக் கொண்டவனுமான இந்த பலதேவனே யாவையுமெவருந்தானாய்த் திரிலோகாதிபதியாக விளங்குகின்ற அழிவில்லாத புருஷனென முத்திமார்க்கத்தில் புகுந்த முனிவர்கள் பலரும் முறையிடுகின்றனர். இந்த மஹாபுருஷனை யறிந்தவர்களிடத்தில் பாபம் ஒருபொழுதும் அணுகாது. இந்த மஹாபுருஷனைத் தியானித்தும் துதித்தும் யாகஞ்செய்து ஆராதித்தும், இவனிடத்தினின்று எல்லாச்செல்வமும் பெறலாகும்' என வுரைசெய்தனன்.

மஹாபலி கூறியதுகேட்டுக் கோபத்தினால் கண்கள்சிவந்து ஆயுதபாணியாய் மஹாபலிஷ்டனான இராவணன் வெளியே யெழுந்துசென்றனன். ஹே ராம! இராக்ஷஸராஜன் அவ்வாறு எழுந்து வருதல்கண்டு ஆங்கு முஸலமும் கையுமாகநின்ற நாராயணன் பிரமதேவனது வரத்தை வீணாக்க லாகாதெனத் திருவுள்ளம்பற்றி, இப்பாபியைப் புடைப்பதற்கு அஃது தருணமன்றெனநினைத்து அந்தர்த்தான மாயினார். அந்த மஹாபுருஷனை அவ்விடத்துக் காணாமற்போகவே அவ்விராக்கதன் ஆநந்தகோஷம் செய்துகொண்டு அங்கிருந்து வெளிப்பட்டுத் தான் முன்சென்ற மஹோத்தி வழியேதிரும்பிப் போயினான்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்துநான்காவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## இருபத்தைந்தாவதுஸர்க்கம்.

இராவணன் சூரியலோகஞ்சென்று ஜயம்பெற்றது.

அநந்தரம் பௌலஸ்தியன் அன்றிரவு அதி ரமணீயமான மேருமலைச் சிகரத்தில் சுகமாக வஸித்திருந்து மறுநாள் காலையிலெழுந்து ஆலோசனை செய்து, வாயுவேகம் மனோவேகமாகச் செல்லவல்லதும், சூரியனது குதிரைக் கொப்பானதுமாகிய புஷ்பகவிமானத்தின்மீதேறிச் சூரியலோகத்திற்குச் சென்றனன். அவ்விடத்துச் சோதியே உருவெடுத்து வந்ததென விளங்கும் சூரியதேவனையும் கண்ணுற்றனன். ஆங்கு ஆதித்தியமூர்த்தி அற்புதமான கேயூரம் குண்டலம் முதலான ஆபரணங்களணிந்து சிவந்த ஆடையுடுத்துச் சிவந்த பூமாலைகள் முடித்துச் சிவந்த கலவைச்சாந்துபூசிஆயிரம் கிரணங்களுடனே 'ஸப்த' என்னும் பரிமாபூட்டிய தேர்மீதுதோன்றினன். ஆதிமத்தியாந்தரஹிதனாய் ஸர்வலோக ஸாக்ஷியாயிருக்கின்ற ஆதிதேவனான அந்த ஆதித்தியனைக்கண்டு ராக்ஷஸராஜன் இராவணன் தன் மந்திரியான பிரஹஸ்தனை நோக்கினன். அந்தப் பிரஹஸ்தன் சூரியனது சோதியைத் தாங்கமுடியாது தவித்துக்கொண்டிருந்தனன். அவனைநோக்கி இராவணன், 'அமைச்சர் பெருமானே! நீ இம்மார்த்தாண்டனிடம் உடனேசென்று,— உன்னுடன் போர் புரியவேண்டி இராவணன் இங்குவந் திருக்கின்றனன். அவனுடன் அமர்புரிய நீ எழுந்துவருக, அங்ஙனமில்லையாயின் தோற்றேனென்றாயினும் துணிந்து கூறுக, இரண்டிலொன்று உடனே உரைசெய்தல் வேண்டும்—என்றறிவித்து அவனது கருத்தை யறிந்துகொண்டுவருக' என்றனன்.

இராவணன் சொன்னதுகேட்டுப் பிரஹஸ்தன் சூரியனது சமீபத்திற்குச் சென்று அங்கிருந்த பிங்களன், தண்டியென்னும் இரண்டு துவாரபாலகர்களைக் கண்ணுற்று, அவர்களிடம் இராவணனது கொள்கையை விளங்கக்கூறிச் சூரியனது சோதியினால் தவிக்கப்பட்டவனாகிச் சும்மா இருந்தனன். பிரஹஸ்தன் புகன்றதுகேட்டு தண்டி அருக்கனருகே சென்று அவனை வணங்கி இராவணனது அமைச்சன் சொன்ன செய்தியை விளங்கக்கூறினன். அந்த விருத்தாந்தத்தை விவரமாகக் கேட்ட கதிரவன் நன்கு ஆலோசனைசெய்து தண்டியை நோக்கி, 'ஹே தண்டி! நீ உடனே யெழுந்துசென்று இராவணனை யெதிர்த்து வெற்றிபெறினும் பெறுக, அஃது முடியாதாயின், ஜயிக்கப்பட்டேனென்றாயினும் உரைசெய்க; உனக்கு எவ்வாறு தோற்றுகின்றதோ அவ்வாறு இயற்றுக; எனக்கு வீண்பொழுது போக்க ஒழிவில்லை' என நியமித்தனன்.

அருக்கன் உரைசெய்தவை யெல்லாவற்றையும் அவ்வண்ணமே தண்டி இராவணனிடம் சென்று விளங்கக்கூறினன். தண்டி சொன்னதுகேட்டு இராக்ஷஸராஜன் தான் வெற்றிகொண்டதாக வெண்ணி ஜயகோஷஞ் செய்து கொண்டு எழுந்து சென்றான்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தாறுவதுஸர்க்கம்.

இராவணன் சந்திரலோகஞ் சென்றதும், வழியே பல புண்ணியசாலிகள் விமானமேறி விண்ணுலகஞ் செல்வதைக்கண்டதும், இறுதியில் மாந்தாதாவுடன் போர்புரிந்ததும்.

புலஸ்திய நந்தனனுன இராவணன் அன்றிரவையும் மேருமலைச் சிகரத்திலேயே சுகமாக்கழித்து மறுநாள் சந்திரலோகஞ் சென்றனன். அக்காலையிலொருவன் திவ்வியமான புஷ்ப சந்தனங்கள் அணிந்து தேவ ரதத்தின்மீதேறி அப்ஸர ஸ்திரீகள் பலர் பற்பல உபசாரங்கள் செய்ய அவ்வழியே சென்றனன். அவன் தேவஸ்திரீகளுடனே இன்பம் நுகர்ந்து இளைப்புற்று அவர்கள் மடியிலே படுத்திருந்தவன் அவர்கள் சும்பனஞ்செய்த மாத்திரத்தில் சுறுசுறுப்புடனெழுந்திருக்கின்றான். இராவணன் அவனைக்கண்டு குதூஹலமடைந்து, அவன் யாவனென விசாரிக்க ஆவல்கொண்டனன். அத்தருணத்தில் பருவதரென்னும் ஒரு முனீச்வரர் அவ்விடத்தே தோன்றினர். அந்த மஹாநுபாவரைக்கண்டு தசகந்தரன் அவரை நல்வரவுகொண்டாடி, 'ஸ்வாமி! தேவரீர் இத்தருணத்தில் இவ்விடமெழுந்தருளியது அடியேனுடைய பாக்கிய விசேஷமே; இதோ அப்ஸர ஸ்திரீகளுடனேகூடி ரதத்தின் மீது ஒருவன் செல்லுகின்றனனே, இவன் யாவன்? இவனுக்குச் சிறிதும் வெட்கமில்லை போலும், தனக்கு உண்டாகும் அபாயத்தையும்இவன் உணர்ந்திலன்' எனக்கூறினான்.

இராவணன் இவ்வண்ணம் வினவியது கேட்டுப் பருவத முனிவர் புகல்கின்றனர்: 'வத்ஸ! நீ மஹாமேதாவியன்றோ? உனக்குத் தெரியாததுமுளதோ? ஆகிலும் உரைக்கின்றேன், கேள்: இவன் எல்லாவுலகங்களையும் ஜயித்தவன்; பிரமதேவனையும் அகமகிழச்செய்தவன், இவன் இப்பொழுது உத்தமமான சுக ஸ்தானமாகிய மோக்ஷத்திற்குச் செல்லுகின்றனன். நீ பராக்கிரமத்தினால் எவ்வாறு உலகங்களை வென்றனையோ, அவ்வாறே இவன் தவத்தினால் எல்லாவுலகங்களையும் வென்றவன். இவன் வேள்விபுரிந்து ஸோமபானஞ்செய்து புண்ணியசீலனாகிப் பேரின்பவீடு பெறுமாறு போகின்றனன். ஹே ராக்ஷஸ சார்தூல, நீயும் மஹாசூரனே, கொண்ட விரதத்தைக் கைவிடாதவன்; ஆயினும், இத்தன்மையரான *பிரம்மசாரிகளிடத்தில் பலசாலிகள் ஒருபொழுதும் கோபங்கொள்ளார்கள்' என்றனர்.

அம்முனிவர் இவ்வாறு உரைக்குமளவில், மற்றொரு உத்தமமான ரதத்தில் மற்றொரு புருஷன் சோதிமயமாகச் சொலித்துக்கொண்டிருக்கும் மிகப்பெரிய சரீரமுடையனாகிக் கீதவாத்திய கோஷங்களுடனே செல்வதை இராவணன் கண்டனன். அதனைக்கண்ணுற்ற இலங்கையரசன் அம்முனிவரைநோக்கி, 'ஹே தேவரிஷே! இதோ இந்தப்புருஷன் கின்னரர்கள் கீதங்கள் பாடவும், மனோஹரமாக நர்த்தனமாடவும் ரதத்தின்மீது செல்லுகின்றனனே, இவன்

---

* பிரம்மசாரி-வேதமோதுதலே தொழிலாக்கொண்டவனும், பகவானிடமே மனத்தைச் செலுத்தியிருப்பவனுமாம்,

எங்குச் செல்லுகின்றனன்?' என வினவினன். அதுகேட்டு அந்தப் பர்வத முனிவர் மொழிகின்றனர்; 'ஹே ராக்ஷஸேச்வர! இவன் போர்க்களத்தில் பின் வாங்காத ஒரு மஹாசூரன், மஹாஸமர்த்தன், யுத்தத்தில் எப்பொழுதும் ஜயம்பெறுகின்றவன். இவன் போரில் புடைபட்டு உடம்பு முழுவதும் துளைக்கப்பட்டவனுகித் தன் யஜமானனுக்காக உயிரைவிட்டவன்; எதிரிகள் சேனைகளை யிமிதமாகக்கொன்று கடைசியில் இவன் யுத்தத்தில் அடிபட்டு மாண்டனன். அதனுல் இவன் இப்பொழுது கீதவாத்தியங்கள் முழங்கத் தேவேந்திரனுக்கு அதிதியாக வீரச்சுவர்க்கம் செல்லுகின்றனன். அவ்விடம் அல்லாவிடின், தனக்கு எவ்விடம் செல்ல விருப்பமாயினும் அவ்விடம் செல்வான்' என்று கூறினர்.

மறுபடியும் இராவணன் அம்முனிவரைநோக்கி, ஸ்வாமி! இதோ கோடி சூரியப் பிரகாசமாய் ஒருவன் செல்லுகின்றனனே, இவன் டாவன் என மற்ருெரு மஹாபுருஷன் செல்வதைப்பார்த்து வினவ, அதற்கு அவர் 'ஹே ராஜன்! சுவர்ணமயமான விமானத்தின்மீது விசித்திரமான ஆடையாபரணங்கள் அணிந்து பூர்ணசந்திரன்போன்ற முக மண்டலமுடையனுய், அளவற்ற அப்ஸரஸ்திரீகளுடனே கூடிச் செல்லுகின்ற இந்த உத்தமபுருஷன், சுவர்ணதானஞ்செய்த மஹாராஜன்; அதனுல் இவன் சோதிவ்டிவமான தேவசரீரம்பெற்று அற்புதமான தேவவிமானத்தின் மீதேறித் தேவலோகம் செல்லுகின்றனன்' என மொழிந்தனர்.

இவ்வாறு பர்வதமுனிவர் புகன்றது கேட்டு இராவணன் பேராநந்தமடைந்து மறுபடியுமம்முனிவரைநோக்கி, 'ஸ்வாமி! இதோ அரசர்கள் பலர் செல்லுகின்றனரே, இவர்கள் யாவர்? விளங்கக்கூறுக. என்றும் யுத்தத்தை வேண்டுகின்ற எனக்கு யுத்ததானம் கொடுப்பவன் இவர்களில் யாவன்? சீக்கிரம் உரைசெய்யவேண்டுகின்றேன்; தருமமுணர்ந்த தேவரீர் எனக்குத் தந்தையன்ருே?' என வினவினன்: அதுகேட்டுப் பருவதமுனிவர் இராவணனை நோக்கி, 'ஹே மஹாராஜனே! இம்மன்னவர்கள் சுவர்க்கம்வேண்டிச் செல்பவரேயன்றிப் போர்வேண்டுபவரல்லர். விசித்திரமான வஸ்திராபரணங்கள் அணிந்த இவர்களில் உன்னுடன் போர்புரிய விருப்பமுடையவன் இன்னுனென உரைக்கின்றேன் கேள்: மாந்தாதா எனப் பெயர்பெற்ற மஹாதேஜிஷ்டனுன மஹாராஜன் ஒருவனிருக்கின்றனன்: அவன் ஸப்தத்துவீபங்களுக்குத் தலைவனுய்; மஹா பராக்கிரமசாலி; அவனே உன்னுடனெதிர்த்துப் போர்புரிய விருப்புடையவன்' எனக் கூறினர். இவ்வாறு பர்வதமுனிவர் கூறியதுகேட்டு இராவணன் அவரை நோக்கி, 'ஸ்வாமி! அவ்வரசன் இப்பொழுது எங்கிருக்கின்றனன், உள்ளபடி யருளிச்செய்க, அந்த ராஜனிருக்குமிடத்திற்கு யானிப்பொழுதே செல்லுகின்றேன்' என்றனன். அதுகேட்டு அம்முனிவர், 'ராக்ஷஸராஜனே! மாந்தாதா என்னும் அம்மகாராஜன் யுவனுச்வனுடைய குமாரன்; ஸப்ததுவீபங்களையும் ஸமுத்திரமளவுமுள்ள பூமண்டலத்தையும் ஜயித்து இப்பொழுது சுவர்க்கம் செல்லுகின்றனன்' எனவுரைத்தனர்.

பருவதமுனிவர் இவ்வாறு புகன்றவளவில், அயோத்தியாபுரத்தரசனும் மஹாவீரனுமான மஹாராஜாவாகிய மாந்தாதாவைக் கண்ணுற்றனன் ராக்ஷஸ ராஜன். ஸப்ததுவீபாதிபதியான அவன் விசித்திரமான பூஷணங்களும் திவ்வியமான சந்தனபுஷ்பங்களும் அணிந்து சுவர்ணமயமாய்ச் சொலிக்கும் ரதத்தின்மீதேறிச் சென்றனன். அவனைக் கண்ட தசக்கிரீவன், 'நீ யென்னுடனே யுத்தஞ்செய்ய வருக' என வேண்டினன். இராவணன் அவ்வாறு கூறியது கேட்டு மாந்தாதா அவனை நோக்கி நகைத்து, 'உனக்கு உயிரினிடத்து ஆசையில்லையாயின், நீ என்னுடன் இக்கணமே அமராட வருக' என விளம்பினன்.

மாந்தாதா மொழிந்ததுகேட்டு இராவணன், 'அரே! வருணன், குபேரன், யமன் முதலியோரிடத்திலேயும் இராவணன் அஞ்சினவனல்லனே; அங்ஙனமாக, எளியமானிடனான உன்னிடமோ இராவணன் அஞ்சப்போகிறான்!' என வுரைத்துக் கோபத்தினால் எரிப்பவனென அவனை யுற்றுநோக்கி, ரணசூரர்களான ராக்ஷஸர்களுக்குக் கட்டளையிட்டனன்.

இராவணனது கட்டளையைக் கேட்டவளவில் அவனுடைய அமைச்சர்கள் அதிக கோபங்கொண்டவர்களாகி மாந்தாதாவை யெதிர்த்து அவன்மீது அம்புமாரி பொழியலாயினர். அதுகண்டு அயோத்திமன்னன் தனதுகோதண்டம் கைக்கொண்டு பிரஹஸ்தன், சுகன், ஸாரணன், மகோதரன், விரூபாக்ஷன், மாரீசன், அகம்பனன் முதலான மந்திரிகளனைவரையும் அம்புமழை பொழிந்து புடைக்கலாயினன். அதனைநோக்கிப் பிரஹஸ்தன் அயோத்தியரசன் மீது சரவருஷம் வருஷிக்கலாயினன். அவன் விடுத்த வாளிகளில் ஒன்றேனும் தன்மீது தாக்காமலே அவையனைத்தையும் அவ்வரசர்பெருமான் அறுத்துத்தள்ளினன்; அவ்வேந்தன்விடுத்தபுசுண்டி, பல்லம்,பிண்டிபாலம்,தோமரம் முதலியவற்றால் அரக்கனது அம்புகள் அக்கினியில்வீழ்ந்த விளக்கிட்டுப்பூச்சிகள்போலாயின. பின்னரும் அவ்வேந்தர்பெருமான்சினமூண்டு, முன்புமுருகக் கடவுள் கிரௌஞ்சபருவதத்தைப் பிளந்தவாறு, மிகப் பயங்கரமான ஐந்து தோமரங்களால் அவனைப் பிளந்தனன். அதன்பிறகு வச்சிராயுதத்திற்கொப்பான ஒரு முத்கரத்தை விசையாகச் சுழற்றி இராக்ஷஸராஜனது ரதத்தை நோக்கி விடுத்தனன். அந்த முத்கரம் மஹாவேகத்துடனே வச்சிராயுதமென வந்து வீழ, இராவணன் அதனால் அடியுண்டவனாகி, தேவேந்திரன் கொடிபோலக் கீழேவீழ்ந்தனன். அதுகண்டு அவ்வரசன்அகமகிழ்ந்தனன்; பூரணசந்திரனைக்கண்டவளவில் பொங்கும் பெருங்கடலென, அவனது சேனைகள்யாவும் மிகக் களிப்புற்றன. அரக்கர்சேனை உற்சாகமழிந்ததாகி, மூர்ச்சையடைந்து வீழ்ந்த தம் மன்னனைச் சூழ்ந்துகொண்டு ஒன்றும் தோன்றாதுமயங்கி நின்றது.

பின்னர் இலங்கையரசன்நெடுநேரஞ்சென்றபின் மூர்ச்சைதெளிந்துமிகக் கோபமடைந்து மாந்தாதாவின் சரீரத்திற் சரங்களைத்துரந்து, அவனது தேரையும் தேர்க்குதிரைகளையும் பிளக்கலாயினன். தனது தேர் பிளக்கப்பட்டது கண்டு மாந்தாதா மற்றொரு தேர்மீதேறி, சூரியகிரணமெனவும் அக்கினிசிகையெனவும் சொலித்துக்கொண்டு மணிகள்கட்டிக் கணகண வென ஒலிக்கின்ற ஒரு சக்தியை யெடுத்து இராவணனை நோக்கி விடுத்தனன். மாந்தாதா

வினது கரத்தினின்று விடுபட்டு வருகின்ற அந்தச் சத்தியைக் கண்டவுடனே இலங்கையரசனுன இராக்கதன் நானொரு சூலத்தை விடுத்து, வன்னி வெட்டுக்கிளியை யெரிக்குமாறு அதனை யெரித்து, யமன் அளித்த நாராசத்தை யெடுத்து மாந்தாதாவின்மீது வெகு விசையாக விடுத்தனன். அதனால் மாந்தாதா மூர்ச்சையடைந்து விழ்ந்தது கண்டு இராக்கதரனைவரும் மிக்க மகிழ்ச்சி கொண்டவர்களாகிப் பெருங்கூச்சலிட்டு அட்டஹாஸஞ்செய்தனர்.

அதன்பின்னர் அயோத்தியரசன் ஒரு முகூர்த்தகாலம் கழித்து மூர்ச்சை தெளிந்து கண்ணைத்திறக்கையில், தன் பகைவனுன பௌலஸ்தியனைச் சூழ்ந்து கொண்டு அவனது அமைச்சர்கள் ஆநந்தக்கூச்சலிட்டுக் கோலாஹலமா யிருப்பது கண்டனன். அதனைக் கண்டவளவில் கோபமதிகரித்தவனுகி மாந்தாதா சூரிய சந்திரர்கள் போலச் சொலித்துக்கொண்டு அரக்கர்படைமீது அம்பு மாரி பொழியலாயினன். அக்காலையில் அவனது வில்லின் நாணோசையாலும், அம்புகள் அதிவேகமாகச் செல்லும் ஒலியினுலும் அவனது பெரும் படை கடல்போலக் கொந்தளிக்கலாகியது. இராக்கதர்களுக்கும் மானிடர்களுக்கும் மிகப் பயங்கரமான போர் மறுபடி யாரம்பமாகியது. நரபதியும் இராக்ஷஸபதியும் அதிகமான உக்கிரங் கொண்டவர்களாகிக் கார்முகமும் கத்தியும் கைக்கொள்ளலாயினர். மாந்தாதா இராவணன்மீது சரமாரி பொழிய, இராவணனும் அவ்வேந்தன்மீது அம்புமழை பொழிந்தனன். இவ்வாறு அவர்கள் இருவரும் ஒருவர்க்கொருவர் முனைந்து அதியுக்கிரமாகப் புடைக்கையில், அவ்விருவருடலும் முற்றும் சல்லடைக்கண்ணுகத் துளைக்கப்பட்டன. இராவணன் ருத்திராஸ்திரத்தை விடுக்க, அதனைக் கண்ணுற்ற மாந்தாதா ஆக்கிநேயாஸ்திரத்தைத் தூரந்து அதனை விலக்கினன். அப்பால் தசக்கிரீவன் காந்தர்வாஸ்திரத்தை விடுக்க, அயோத்திமன்னன் வருணுஸ்திரத்தை விடுத்தனன்.

அதுகண்டு ராக்ஷஸராஜன் ஸகலபூதங்களு மஞ்சுமாறு பிரம்மாஸ்திரங் கைக்கொள்ள, அதனை நோக்கி மாந்தாதா திவ்வியமான பாசுபதாஸ்திரத்தைக் கைக்கொண்டு சுழற்றலாயினன். அந்த அஸ்திரம் அதிபயங்கரமான உருவங்கொண்டு மூவுலகங்களையும் அச்சுறுத்தியது. அதனைக் கண்ட சராசரங்கள் ஸகலமும் அஞ்சி நடுங்கின; அஃது அருந்தவம் புரிந்து அதனால் அக மகிழ்ந்த ருத்திரமூர்த்தி வரமளித்த அற்புதமான அஸ்திரமாம். அதனால் இம்மண்ணுலகிலுள்ள சராசரங்கள் மாத்திரமே யன்றி விண்ணுலகத்துத் தேவர்களும் நடுக்கமுற்றனர்; நாகலோகத்தவர்களும் எல்லாவுலகங்களுக்கும் அழிவுகாலம் வந்ததென வெண்ணினர்.

இவர்கள் இங்கு இவ்வண்ணம் அதிபயங்கரமாய் அமராடுகையில் புலஸ்தியர், காலவர் என்னும் முனிவர்க ளிருவரும் யோகதிருஷ்டியாற் கண்டு உணர்ந்து, உடனே அவ்விடம் சென்று, அயோத்தியரசனை அப்புறம் விலக்கி, இனிய மொழிகள் பல புகன்று இராக்கதராஜனையும் சாந்தப்படுத்தினர். அப்பால் நரபதியும் ராக்ஷஸபதியுமாகிய இருவரும் நட்புச்செய்துகொள்ளு

மாறு அவர்களுக்கு நற்புத்தி புகட்டி யகமகிழ்ந்தவர்களாய் அம்முனிவர்கள் தத்தமிருப்பிடம் போய்ச் சேர்ந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தேழாவது ஸர்க்கம்.

இராவணன் அநேகமாயிரம் யோஜனைதூரம் கடந்து சென்று சந்திரலோகஞ் சேர்ந்து சந்திரனுடன் அமர்புரியத் தொடங்கியதும், அதுதெரிந்து திசைமுகன் ஆங்கு விரைந்துசென்று தசானனனை சமாதானப்படுத்தி யவனுக்கு ஒருமந்திர முபதேசித் தனுப்பியதும்.

---

பிரும்மரிஷிகள் இருவர் இவர்களை இவ்வண்ணம் ஸமாதானப்படுத்தி விட்டுப் போயின பின்னர், இராக்ஷஸராஜன் அகமகிழ்ந்து புஷ்பகவிமானத்தி லேறிப் பதினாயிரம் யோஜனைதூரம் ஆகாயமார்க்கத்திற் சென்றனன். அவ் விடத்து ஹம்ஸர் என்கிற துறவிகள் பலர் ஸகல ஸற்குணமுமமைந்தவர் களாய் அற்புதமாக விளங்கினர். அவர்களைத்தரிசித்தவாறே இலங்கையரசன் அதற்குமேல் பின்னும் ஒரு பதினாயிரம் யோஜனைதூரம் அம்பரத்திடையே போயினான். ஆங்கு ஆக்கினேயம், பக்ஷஜம், பிராம்மம் என்னும் மூன்றுவித மான வெண்மேகங்கள் விசேஷமாயடர்ந்திருந்தன. அவையாவையும் கண் ணுற்று இராவணன் அப்பாலொரு பதினாயிரம் யோஜனைதூரஞ்சென்றனன்; அவ்விடத்து ஸித்தர்களும் சாரணர்களும் வாஸஞ்செய்துகொண்டிருந்தனர். அதற்குமேலே, மற்றுமொரு பதினாயிரம் யோஜனைதூரம் கடந்தனன் இரா வணன்; அந்த ஸ்தானத்தில் ஸகல பூதங்களுடனே விநாயகர் வசித்திருந்த னர். அதன்மேலும் அரக்கர்பிரான் பின்னுமொரு பதினாயிரம் யோஜனை தூரம் படர்ந்தான்; அவ்விடத்தே கங்காநதி பெருகுகின்றது; நாகர்களும், குமுதாதிகணங்களும் வாஸஞ்செய்கின்றனர்; கங்காதீரத்தில் கஜங்கள் அநே கம் வஸிக்கின்றன; அவ்வாரணங்கள் தமது துதிக்கைகளால் கங்காஜலத்தை வாரி யெங்கு மிறைத்து எல்லாவிடங்களையும் மிகப் புனிதமாக்குகின்றன. ஹே ராகவ! அவ்வேழங்கள் இவ்வண்ணம் தமது கரங்களால் வாரி யிறைத்த வாரிகள் அங்குள்ள புதர்களில் வீழ்ந்து, குளிர்ந்த காற்று மேலே பட்ட வளவில் அவ்வாறே உறைந்து பனிக்கட்டிகளாகின்றன.

அதற்குமப்பால் இராவணன் ஆறுவதான ஆகாயமார்க்கத்திற் புகுந்து பத்துயோஜனைதூரம் போயினான்; ஆங்கு கருடன் தம்மினமும் பாந்தவர்களு மான புட்குலங்களால் பூஜிக்கப்பெற்றவராகிச் சிறப்புற்று வாழ்கின்றனர். அவ் விடத்தைக் கடந்து ஏழாவது வாயுமார்க்கத்தில் புகுந்து பதினாயிரம் யோஜனை தூரம்போயினான் இராக்கதராஜன்; அஃது தேவரிஷிகள் உறையும்புனிதமான

விடமாம். அவ்விடத்தையும் கடந்து இராவணன் புஷ்பக விமானத்துடனே பதினாயிரம் யோஜனைதூரஞ் சென்றான்; அவ்விடத்தில் ஆகாயகங்கை வாயுவினால் அலைக்கப்பெற்று அதிவேகமாகப் பெருகுகின்றது. அதனையும் கண்டு களித்து இராவணன் அதற்குமேல் எண்பதினாயிரம் யோஜனைதூரஞ் சென்றான்; அவ்விடத்தே யுள்ளது சந்திரமண்டலம். ஆங்கு ஸகல நக்ஷத்திரங்களுடனும் கிரகங்களுடனும் சந்திரன் சிறப்புற்றிருக்கின்றனன். அந்தச் சந்திரமண்டலத்தினின்றுமே கோடிக்கணக்கான சந்திரகிரணங்கள் எங்கும் படர்ந்து எல்லாவுலகங்களிலும் நிலவொளி பரப்பி, ஜீவராசிகள் அனைத்தையும் அகமகிழச் செய்கின்றன.

தசக்கிரீவன் தன்னிடம் அணுகியது கண்டு தாராபதி அதற்கு ஆற்றாதவனாகித் தனது சீதகிரணங்களால் அவனை அத்யந்தம் உபத்திரவிக்கலாயினன். சந்திரகிரணங்களின் சீதபாதை பொறுக்கமாட்டாது இராவணனது அமைச்சர்கள் மிகத் துன்புற்றனர். பிரஹஸ்தனும் அதனைத் தாங்கத் திறமையற்றவனாகி, இராவணனை நல்வார்த்தையாக வாழ்த்தி விளம்புகின்றனன்: 'ஹே ராஜனே! சந்திரகிரணங்களாலாய சீதம் பொறுக்கமுடியாமல் யாம் அனைவரும் அல்லலுறுகின்றோமாதலின், இக்கணமே இவ்விடம்விட்டெழுந்து செல்லுமாறு அருள்புரிக. இத்திங்களினது தண்சுடரினால் தவிப்புண்டு இராக்கதர் அனைவரும் அஞ்சி யகங்குலைந்தனர். ஓ அரக்கர்பெருமானே! இக்குமுதபாந்தவன் குளிர்ந்த கதிருடையோனாயினும் கனலை யொத்திருக்கின்றனன்' என வுரைசெய்தனன்.

பிரஹஸ்தன் புகன்றதுகேட்டு அரக்கர்தலைவன் கதம் விஞ்சி உடனே கார்முகங் கைக்கொண்டு நாணேற்றிச்செய்து நாராசபாணங்களைத் தொடுத்து நிசாபதியின்மீது விடுத்துப் புடைக்கத் தொடங்கினான். இச்செய்தி அக்கணமே கேள்வியுற்று நான்முகக்கடவுள் சீக்கிரமெனச் சந்திரலோகம் சேர்ந்து இராவணனை நோக்கி இதவசனம் இயம்பலாயினார்: 'ஹே தசக்கிரீவ, ஹே மஹாபாஹோ! நீ விச்சிரவஸினது வயிற்றிற்பிறந்த புதல்வனன்றோ? அத்தன்மையனான நீ அம்புகளைத் தொடுத்துத் தாராபதியைத் துன்புறுத்தலாகுமோ? இவ்விடம் விட்டு அப்புறம் செல்லுக. எல்லாவுலகங்களுக்கும் இதங்கருதியன்றோ இந்தக் குமுதநண்பன் தனது குளிர்ந்த கிரணங்களை வீசிக்கொண்டு விளங்குகின்றனன். இத்தருணத்தில் யான் உனக்கு மேலான மந்திரமொன்று உபதேசிக்கின்றேன்; உனக்குப் பிராணபய முண்டாகுமளவில் இஃது உனக்கு அபயம் விளைவிக்கவல்லது. இம்மந்திரத்தை யென்றும் மறவாது மனத்திற் கொண்டிருப்பவனுக்கு மிருத்யு பய மென்னாளுமிலது' என வுரைத்தனர்.

இவ்வண்ணம் அயன் உரைத்த இனியமொழியைச்செவியுற்ற தசக்கிரீவன் அஞ்சலிஹஸ்தனாய் அவரை நோக்கி, 'ஹே தேவ! தேவரீர் அடியேன் விஷயத்தில் அகமகிழ்ந்தீராயின், அடியேன் தேவரீரது அநுக்கிரஹத்திற்குப் பாத்திரமாயினவனாயின், அந்த மந்திர ரத்தினம் அடியேனுக்கு உபதேசிக்கத் தக்கதாயின், அதனைத் தேவரீர் அங்ஙனமே அடியேனுக்கு உபதேசித்

தருள்க. அம்மந்திரத்தை ஜபித்து அடியேன் எல்லாத்தேவர்களிடத்தும் அச்சமொழிந்தவனுகுவேன். தேவர்பெருமானே! தேவரீரது அநுக்கிரகத்தினுல் தேவர், தானவர், வானத்திற் பறக்கும் பக்ஷிகள் ஆகிய பலரிடத்திலும் அடியேன் பிராணபயமில்லாமல் பேராநந்தமடைவேன்' எனக் கூறினுன்.

பிரமதேவர் அதுகேட்டு அவனை நோக்கி நவில்கின்றனர்: 'ஹே ராக்ஷஸாதிப! இப்பொழுது யான் உனக்கு உபதேசிக்கும் உத்தமமான மந்திரம் உன் பிராணனுக்கு அபாயம் நேருமளவிலேயே உபயோகிக்கத்தக்கது, மற்றக்காலங்களில் உபயோகப்படுவதின்று. அக்ஷமாலையைக் கையில் வைத்துக்கொண்டு சுபமான இம்மந்திரத்தை ஜபித்தல்வேண்டும். இதனை நீ ஜபிக்காவிடின், உனக்குக் காரியசித்தியுண்டாவதின்று. ஹே ராக்ஷஸபுங்கவ! வாயினுல் உரைத்தவளவிலே போரில் வெற்றிவிளைவிக்கவல்லதான இம்மந்திரமின்னதெனக்கூறுகின்றேன், கேள்:

1. నమస్తేదేవదేవేశ సురాసురనమస్కృత।
భూతభవ్యమహాదేవ హరపింగళలోచన॥

2. బాలస్త్వంవృద్ధరూపీచ వైయాఘ్రవసనచ్ఛద।
ఆరుణేయోసిదేవత్వం త్రైలోక్యప్రభురీశ్వరః॥

3. హర్యోహరితనేమిస్త్వం యుగాంతదహనోనలః।
గణేశోలోకశంభుశ్చ లోకపాలోమహాభుజః॥

4 మహాదేవోమహాశూలీ మహాదంష్ట్రోమహాముఖః।
కాలశ్చకాలరూపీచ నీలగ్రీవోమహోదరః॥

5. వేదాన్తగోవేదమయః పశూనాంపతిరవ్యయః।
శూలధృచ్ఛూలకేతుశ్చ నేతాగోప్తాహరిశ్శివః॥

6. జటీముణ్డీశిఖణ్డీచ లగుడీచమహాయశాః।
భూతేశ్వరోగణాధ్యక్ష స్సర్వాత్మాసర్వభావనః॥

7. సర్వదస్సర్వహారీచ స్రష్టాచగురురవ్యయః।
కమణ్డలుధరోదేవః పినాకీధూర్జటిస్తథా॥

8. మాననీయోర్హణీయశ్చ ఓఙ్కారస్సామవేదగః।
మృత్యుశ్చమృత్యుదూతశ్చ పారియాత్రశ్చసువ్రతః॥

9. బ్రహ్మచారీగృహీయోగీ వీణాపణవతూణవాన్।
అమరోదర్శనీయశ్చ బాలసూర్యనిభస్తథా॥

10. శ్మశానచారీభగవా నుమాపతిరరిన్దమః।
భగనేత్రప్రహర్తాచ పూషదన్తనిపాతనః॥

11. జ్వరహర్తాపాశహస్తః ప్రళయఃకాలఏవచ।
ఉల్గాముఖోఽగ్నికేతుశ్చ మునిర్దీప్తోవిశాంపతిః॥

12. ఉన్మాదమోహనకర స్సమర్థస్త్రిదశోత్తమః।
వామనోవామదేవశ్చ ప్రాగ్దక్షిణ్యశ్చనామతః॥

13. భిక్షుశ్చభిక్షురూపీచ త్రిజటీజటిలస్స్వయం।
చక్రహస్తఃప్రతిష్టంభీ చమూనాం స్తంభనస్తథా॥

14. ఋతుఃఋతుకరఃకాలో మధుర్మధురలోచనః।
వానస్పత్యశ్శికరశ్చ నిత్యమాశ్రితపూజితః॥

15. జగద్ధాతాచకర్తాచ పురుషశ్శాశ్వతోహ్యజః।
ధర్మాధ్యక్షోవిరూపాక్షు స్త్రివర్మాభూతభావనః॥

16. త్రిణేత్రోబహునేత్రశ్చ సూర్యాయుతసమప్రభః।
దేవదేవోఽభిదేవశ్చ చన్ద్రాఙ్కితజటస్తథా॥

17. నర్తకోలాసకశ్చైవ పూర్ణేన్దుసదృశాననః।
సుబ్రహ్మణ్యశ్శరణ్యశ్చ సర్వదేవమయస్తథా॥

18. సర్వభూతనివాసశ్చ సర్వబన్ధవిమోచనః।
మోహనోవంచకశ్చైవ సర్పధారీవరోత్తమః॥

19. పుష్పదన్తోవిభాగశ్చ ముఖ్యస్సర్వహరస్తథా।
హరిశ్మశ్రుర్ధనుర్ధారీ భీమోభీమపరాక్రమః॥

20. భక్తాభీష్టప్రదస్థాణుః పరమాత్మాసనాతనః।

1. நமஸ்தேதேவதேவேச ஸுராஸுரநமஸ்க்ருத ।
பூதபவ்யமஹாதேவா ஹரபிங்களலோசந ॥

2. பாலஸ்த்வம்வ்ருத்தரூபீச வையாக்ரவஸநச்சத ।
ஆருணேயோஷிதேவத்வம் த்ரைலோக்யப்ரபுரீச்வர: ॥

3. ஹரோஹரிதநேமிஸ்த்வம் யுகாந்ததஹநோபம: ।
கணேசோலோகசம்புச்ச லோகபாலோமஹாபுஜ: ॥

4. மஹாதேவோமஹாசூலீ மஹாதம்ஷ்ட்ரோமஹாமுக: |
காலச்சகாலரூபீச நீலக்ரீவோமஹோதர: ||

5. வேதாந்தகோவேதமய: பசூநாம்பதிரவ்யய: |
சூலத்ருச்சூலகேதுச்ச நேதாகோப்தாஹரிச்சிவ: ||

6. ஜடீமுண்டீசிகண்டீச லகுடீசமஹாயசா: |
பூதேச்வரோகணாத்யக்ஷஸ் ஸர்வாத்மாஸர்வபாவந: ||

7. ஸர்வதஸ்ஸர்வஹாரீச ஸ்ரஷ்டாசகுருரவ்யய: |
கமண்டலுதரோதேவ: பிநாகீதூர்ஜடிஸ்ததா ||

8. மாநநீயோர்ஹணீயச்ச ஓங்காரஸ்ஸாமவேதக: |
ம்ருத்யுச்சம்ருத்யுபூதச்ச பாரியாத்ரச்சஸுவ்ரத: ||

9. ப்ரஹ்மசாரீக்ருஹீயோகீ வீணாபணவதூணவாந் |
அமரோதர்சநீயச்ச பாலஸூர்யநிபஸ்ததா ||

10. ச்மசாநசாரீபகவா நுமாபதிரரிந்தம: |
பகநேத்ரப்ரஹர்த்தாச பூஷதந்தநிபாதந: ||

11. ஜ்வரஹர்த்தாபாசஹஸ்த: ப்ரளய:காலஏவச |
உல்காமுகோக்நிகேதுச்ச முனிர்தீப்தோவிசாம்பதி: ||

12. உந்மாதமோஹநகரஸ் ஸமர்த்தஸ்த்ரிதசோத்தம: |
வாமநோவாமதேவச்ச ப்ராக்தக்ஷிண்யச்சநாமத: ||

13. பிக்ஷூச்சபிக்ஷூரூபீச த்ரிஜடீஜடிலஸ்வயம் |
சக்ரஹஸ்த:ப்ரதிஷ்டம்பீ சமூனாம்ஸ்தம்பநஸ்ததா ||

14. ருத்ர:ருத்ரகர:காலோ மதுர்மதுரலோசந: |
வாநஸ்பத்யச்சீகரச்ச நித்யமாச்ரிதபூஜித: ||

15. ஜகத்தாதாசகர்த்தாச புருஷச்சாச்வதோஹ்யஜ: |
தர்மாத்யக்ஷோவிரூபாக்ஷ ஸ்த்ரிவர்த்மாபூதபாவந: ||

16. த்ரிணேத்ரோபஹுநேத்ரச்ச ஸூர்யாயுதஸமப்ரப: |
தேவதேவோபிதேவச்ச சந்த்ராங்கிதஜடஸ்ததா ||

17. நர்த்தகோலாஸகச்சைவ பூர்ணேந்துஸத்ருசாநந: |
ஸுப்ரஹ்மண்யச்சரண்யச்ச ஸர்வதேவமயஸ்ததா ||

18. ஸர்வபூதநிவாஸச்ச ஸர்வபந்தவிமோசந: |
மோஹநோவஞ்சகச்சைவ ஸர்ப்பதாரீவரோத்தம: ||

19. புஷ்பதந்தோவிபாகச்ச முக்யஸ்ஸர்வஹரஸ்ததா |
ஹரிச்மச்ருர்த்தநுர்த்தாரீ பீமோபீமபராக்ரம: ||

20. பக்தாபீஷ்டப்ரதஸ்தாணு: பரமாத்மாஸநாதந: |

"ஹே தேவ, ஹே தேவேச, தேவாசுரர்கள் வணங்கப்பெற்ற பெருமானே, முக்காலத்துமுள்ள மஹாதேவனே, ஹே ஹர, ஹே பிங்களலோசந! உன்னையான் நமஸ்கரிக்கின்றேன். நீ வாலிபனும் வயது முதிர்ந்த பெரி

யோனுமாகின்றனே. புலித்தோல்போர்த்த பெரியோனுனதேவனே, நீ அருணங்களில் ஓசப்பட்டவன், மூவுலகங்களுக்கும் பிரபுவானவன், ஈசன் நீ, ஹரனும் ஹரிதநேமியும் நீ, யுகாந்த காலத்திலெரிக்கும் அக்கினியும் நீயே, கணேசன், லோகசம்பு, லோகபாலன், மஹாபுஜன், மஹாதேவன், மஹாசூலி, மஹாதம்ஷ்டிரன், மஹாநுபாவன், காலன், காலரூபி, நீலக்கிரீவன், மஹோதரன், வேதாந்தத்தில் வீற்றிருப்பவன், வேதமயன், பசுபதி, அவ்வயன், சூலந்தரித்தவன், சூலத்தைக் கேதுவாக உடையோன், எல்லாவற்றிற்கும் நாயகன், எல்லாவற்றையும் பாதுகாப்பவன், ஹரி, சிவன்; ஜடைதரித்தவன், முண்டி, சிகண்டி, லகுடி, பெரும்புகழ்படைத்தோன், எல்லாப்பூதங்களுக்கும் ஈச்வரன், கணங்களுக்கு அதிபதி, எல்லாமானவன், எல்லாவற்றையும் ஆதரிப்பவன், எல்லாமளிப்பவன், எல்லாவற்றையும் அரிப்பவன், எல்லாவற்றையும் படைப்பவன், எல்லாவற்றிற்கும் குரு, அழிவற்றவன், கமண்டலு தரித்தவன், தேவன், பிநாகி, தூர்ஜடி, ஸம்மானிக்கத்தகுந்தவன், பூஜிக்கத்தகுந்தவன், பிரணவஸ்வரூபி, ஸாமவேதத்தால் துதிக்கப்படுவோன், மிருத்யு, மிருத்யுதூதன், பாரியாத்திரன், சிறந்தவிரதமுடையோன், பிரம்மசாரி, கிரகி, யோகி, வீணை பணவம் தூணம் என்னும் வாத்தியங்களையுடையோன், அமரன், தர்சனீயன், இளஞ்சூரியனுக் கொப்பானவன், சுடலையிலாடித்திரிபவன், பகவான், உமாபதி, அரிந்தமன், காமனதுகண்ணைக் கெடுத்தவன், சூரியனதுபல்லையுதிர்த்தவன், ஜ்வரத்தைப்போக்குவோன், பாசங்கைக்கொண்டவன், பிரளயரூபி, காலரூபி, கொள்ளிமுகமுடையோன், அக்கினிகேது, முனி, சோதிமயமானவன், விசாம்பதி, உன்மாதத்தையும் மோஹத்தையும் உண்டாக்குவோன், ஸமர்த்தன், தேவர்களில் உத்தமனுனவன், வாமநன், வாமதேவன், கீழ்த்திசையானவன், தென்றிசையானவன், பிச்சன், பிச்சனுபுருவம்பெற்றவன், திரிஜடி, ஜடிலன், சக்கரக்கையன், பிரதிஷ்டம்பி, சேனைகளைஸ்தம்பிக்கச்செய்பவன், ருது, ருதுக்களையுண்டாக்குவோன், காலன், மது, மதுரலோசனன், வாநஸ்பத்தியன், சிகரன், அடியார்களால் என்றும் ஆராதிக்கப்படுவோன், உலகங்களைத்தரிப்பவன், உலகங்களைப்படைப்பவன், புருஷன், என்றுமழியாதவன், ஜநநமில்லாதவன், தருமங்களுக்கு அத்தியக்ஷன், விரூபாக்ஷன், திரிவர்த்மா, பூதபாவநன், திரிநேந்திரன், பகுநேத்திரன், அயுதக்கணக்கான ஆதித்தியர்களுக்கொப்பான ஒளியுடையோன், தேவதேவன், அதிதேவன், பிறைசூடிய சடையுடையோன், நர்த்தகன், லாஸகன், முழுமதிக்கொப்பான முகமுடையோன், சுப்பிரமணியன், சரணியன், ஸர்வதேவஸ்வரூபி, ஸர்வபூதங்களுக்கும் வாஸஸ்தானமானவன், எல்லாத்துன்பங்களையும் விடுவிப்பவன், மோஹனன், வஞ்சகன், ஸர்ப்பங்களையணிந்தவன், ஒப்பற்ற ரமானவன், புஷ்பதந்தன், விபாகன், முக்கியன், ஸகலத்தையும் அரிப்பவன், ஹரிச்மச்ரு, வில்லைக் கைக்கொண்டவன், பயங்கரன், பயங்கரமான பராக்கிரமமுடையோன், பக்தரது அபீஷ்டங்களையளிப்போன், ஸ்தாணு, பரமாத்மா, ஸநாதநன், என்னும் நூற்றெட்டுத்திருநாமங்களை யுடையோய் நீ" எனத்தியானித்தல்வேண்டும். ஹே தசக்கிரீவ! யான் உபதேசித்த மிகப்பரிசுத்தமான

இருபத்தெட்டும் நூற்றெட்டுமான இத்திருநாமங்களைச் சொல்லிஜபித்தால், சத்துரு விநாசம் தானே யுண்டாகும்' என்று அருளிச்செய்தனர். தாமரையோன் இராவணனுக்கு இவ்வண்ணம் வரமளித்து உடனே ஸத்தியலோகஞ் சென்றனர். இராவணனும் அவரிடம் அருள்பெற்று அவ்விடம்விட்டுத்திரும்பித் தனது நகரம்சேர்ந்தனன்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் இருபத்தேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்.

இராவணன் மேற்குஸமுத்திரஞ் சென்று ஆங்கு ஒரு தீவினிடை நின்ற
கபிலரூபியான நாராயணனைக் கண்டு போர்தொடுக்கப் புகுந்து பராஜய மடைந்ததும்,
பிறகு அந்தப்புருஷன் சென்றவழியே பாதாளலோகஞ் சென்று அங்கு
அநந்தமான தேவர்களையும் பாம்பணையிற் பள்ளிகொண்ட
பரமபுருஷனையுங் கண்ணுற்று அவனால்
அவமானமடைந்து செருக்கொழிந்து
இலங்கைக்கு ஓடிப்போனதும்.

---

அநந்தரம் சிலநாட்சென்றபின்னர் இராவணன் மறுத்தும் தனது மந்திரிமார்களுடனே வெளிப்பட்டு மேற்கு ஸமுத்திரஞ் சென்றனன். ஆங்கு ஒரு தீவில் அக்கினிக்கொப்பான உருவமுடையனாய் ஒருபுருஷன் புலப்பட்டனன். அவன் ஜாம்பூனத மென்னும் சுவர்ணத்தை நிகர்த்த மேனியனாய்த் துணைவரெவருமின்றித் தனியே உயர வெழுந்த ஊழித்தீயெனத் தோற்றினான். தேவர்களில் தேவேந்திரனும், கிரகங்களில் கதிரவனும், சரபமிருகங்களில் சிங்கமும், யானைகளில் ஐராவதமும், வரைகளில் மேருவரையும், தருக்களில் கற்பகத்தருவுமென அந்தப் புருஷன் மற்றவர்களின் மேன்மைபெற்று விளங்கினான். ஓமகுண்டத்தினிடையே அக்கினிஹோத்திரமெனத்தோற்றிய அப்புருஷன்பலவாறுகோஷித்து அட்டஹாஸஞ்செய்தனன்; நீண்ட கைகளும் கோரப்பற்களுமுடையனாய் அவன் மிகப் பயங்கரமாத் தோற்றினான். சங்குபோன்ற கழுத்தும், மண்டூகத்தை நிகர்த்த குக்ஷியும், பொன்னுருக்கு நிறமான நேத்திரமும், பதுமமலரைப் பகைத்த பாதமும், செந்தாமரைமலர்போன்ற சோதிமுகமு முடையனாய், வாயுவேகம் மனோவேகமெனத்தகும் நடையுடையனாய், கைலாஸசிகரம்போன்ற மிகப் பளபளப்பான பேருருவந்தரித்து, அம்பறாத்தூணியணிந்து இருபுறமும் சாமரைகட்டி, மார்பிற் பொற்றாமரைமாலைதரித்து, கிங்கிணிகள் கல கல வென ஒலிக்க, சுற்றிலும் சுவாலைகள்சூழ, ருக்கு வேதத்திற்கொப்பான மகிமையுடையனாய் மிகக் ககம்பீரமாக விளங்கினான்.

பொன்மலையெனப் பொலிவுற்றுப் பிரகாசிக்கின்ற அந்தப் புருஷனைக் கண்ணுற்று அஞ்சனாசலத்திற்குச் சமமான சரீரமுடைய தசக்கிரீவன் 'என்னுடன் அமராட வருக' வென வேண்டியழைத்து, சூலம், சத்தி, யஷ்டி, பட்டஸம் முதலாய படைக்கலங்களைக் கைக்கொண்டு தன் அமைச்சருடனே

உரத்து அட்டஹாஸஞ்செய்தனன். அதைக்கண்டு அந்த உத்தமபுருஷன், யானையைக் கண்ட சிங்கவேறெனவும், சலபத்தைக் கண்ட குஞ்சரமெனவும், மேகத்தைக் கண்ட மேருமலையெனவும், நதிவேகத்தைக் கண்ட கடலெனவும் சிறிதும் கலக்கமுறாதவனாகி இராவணனை நோக்கி, 'ஹே ராக்ஷஸ! துர்ப்புத்தியுடையோனான உனக்குள்ள போர்விருப்பை யான் இப்பொழுதே சாந்தப்படுத்துகின்றேன்' என்று கூறினான். எல்லாவுலகங்களையு மச்சமுறச் செய்வதான எவ்வகைத்தாகியவேகம் இராவணனிடமுளதோ, அத்தன்மையவான ஆயிரம் வேகம் அந்தப் புருஷனிடமுள்ளன. அக்காலையில் அந்த மாயோனுக்குக் கோள்களின் வரிசையெனவிளங்கும் அற்புதமான நேத்திரங்கள் வரிசையாகத் தோன்றின. அவன் தந்தங்களைக் கடகடவெனக்கடிக்க, அதினாலுண்டான ஓசை யொருபெரியயந்திரம் கூச்சலிடுவதென மிகப்பயங்கரமாயிற்று. உலகநிலைக்கு ஏதுக்களான தருமமும் தவமும் அவனது தொடைகளையிடமாப்பற்றி நிற்கின்றன; மன்மதன் அவனது சிச்னத்தைத் தனக்கு இடமாக்கொண்டிருக்கின்றனன்; விச்வேதேவர்கள் அவனதுகடிதடத்தையடைந்துள்ளவர்கள்; மருத்துக்கள் முடியிலுள்ளவர்கள்; அஷ்டவசுக்களும் அவனது மத்தியபாகத்திலிருப்பவர்கள்; ஸமுத்திரங்கள் குக்ஷியிற் குடிகொண்டவைகள்; எல்லாத்திசைகளும் அவனது பக்கங்களைப் பற்றியுள்ளவைகள்; வாயுக்கள் அவனது கில்கள் தோறும் குடிகொண்டவை; பித்ருக்கள் அவனது பிருஷ்டபாகத்தையும், பிதாமஹர் இருதயத்தையும் அடைந்துள்ளவர்கள்; மிகப்பரிசுத்தமான கோதானங்களும், பூதானங்களும், சுவர்ணதானங்களும் அவனுடைய உரோமங்களை யொட்டியுள்ளவைகள்; இமயமலை, ஏமகூடமலை, மந்தரமலை, மேருமலை ஆகியபருவதங்கள் அப்புருஷனிடம் சேர்ந்து அஸ்திகளாயிருக்கின்றன; இப்பூமி அவனுக்கு வக்ஷஸ்தலமாகியது; ஆகாயம் அவனது சரீரத்திலுள்ளது; இரண்டு சந்திகளும் அவனது உடம்பின் சந்திகளைச்சேர்ந்துள்ளன; மேகங்கள்யாவும் அவனது ஜலத்துவாரத்தில் நிலைகொண்டன; தாதாவும் விதாதாவும் அவனது பாகுக்களாம்; பகனும் பூஷாவும் அவனது இருகரங்களாம்; ஐராவதம், விசாலாக்ஷம் என்னும் கஜங்களும், ஆதிசேஷன், வாஸுகி, கம்பளம், அச்வதரம், கார்க்கோடகம், தனஞ்ஜயம், கொடியவிடநாகமான தக்ஷகன், உபதக்ஷகன் என்னும் நாகங்களும் அவனது விரல்களாகின்றன; அக்கினியே அவனது முகமாகியது; ருத்திரர்கள் தோள்களாயினர்; ருதுக்கள் அவனது தந்தங்களும் கோரப்பற்களுமாயின; பூர்ணிமை அவனது நாசியும், அமாவாசை அதன்வழிச்செல்லும் சுவாஸவாயுவுமாயின; ஸரஸ்வதீதேவி அவனது கண்டமாயினள்; அச்வினிதேவர்கள் செவிகளும், சந்திரசூரியர்கள் நேத்திரங்களுமாயுள்ளனர்; வேதாங்கங்கள், வேள்விகள், நாநாவிதமான ரூபங்கள், சிறந்தவிருத்தங்கள், சிறந்தவாக்கியங்கள், தேயு, சித்தி, தவம் ஆகியபலவும் அந்தநரரூபத்தின் சரீரத்தையே பற்றியுள்ளவை.

இத்தன்மையனான அம்மஹாபுருஷன் இராக்கதராஜனை மெல்லவிளையாட்டெனவே கையினால் ஒரு அடியடித்தனன். அந்த அடி தாங்கமுடியாது இராவணன் கீழேவீழ்ந்தனன். தாமரைமாலையணிந்து ருக்குவேதமே உருவமெடுத்து

வந்ததென விளங்கும் அம்மஹாபுருஷன் இராவணன் அடிபட்டுவீழ்ந்தது கண்டு மற்ற இராக்கதர்களை யதட்டியோடச்செய்து, சலிக்கும் சைலமென நடந்து பாதாளலோகம் புகுந்தனன். சற்றுநேரஞ்சென்ற பின்னர் தசக்கிரீவன் மூர்ச்சைதெளிந்தெழுந்து, அஞ்சியோடிய பிரஹஸ்தன், சுகன், ஸாரணன் முதலானஅமைச்சர்களை யருகேயழைத்து, ‘இங்குநின்ற மனிதன் எவ்விடம் சென்றனன்? விரைந்துகூறுக’எனக்கதறினன். இவ்வண்ணம் இராவணன்வினவியதுகேட்டு அவ்வமைச்சர்கள், ‘அந்தப்புருஷன் இவ்விடத்திலேயே உட்புகுந்தனன்’ என மறுமொழிகூறினர். அதுகேட்ட இராவணன் துர்ப்புத்தியுடையோனாகி, கருடன் நாகத்தைப் பற்றுவதெனக் கூரியகத்தியொன்றைக் கைக்கொண்டு, தானும் அந்த பிலத்துவாரத்திற் புகுந்தனன். தான்பெற்ற வரத்தின்பெருமையைப்பற்றிப் பீதியொழிந்தவனாகிப் பிலத்தினுள்ளேபுகுந்த பிசிதாசனன், ஆங்கு நீலமலைபோன்றமேனியராகவிளங்கும் பலபுருஷர்களைக் கண்ணுற்றனன். அவர்கள் ஹாரம், கேயூரம், கணையாழி முதலான மிகச்சிறந்த திருவாபரணங்கள் அணிந்து, செம்மலர்மாலை சூடிச் செஞ்சாந்துபூசி நர்த்தனஞ்செய்து கொண்டிருந்தனர். அவர்கள் ஒருவரிருவரல்லர்; மூன்றுகோடி மஹாநுபாவர்கள். அக்கினியென ஒளிவீசும் அவ்வுத்தம புருஷர்கள் நித்தியோத்ஸவமாய் அங்கே கிரீடித்துக் கொண்டிருப்பதுகண்டு தசகந்தரன், தான் பயங்கரமான பராக்கிரமமுடையோனாயினும், வியந்து வாயிலிலேயே நின்றனன்.

முன்பு அம்மகாபுருஷன் அத்தீவினிடையே எவ்வாறு தோற்றினனோ, அவ்வாறே இவர்களனைவரும் அதேநிறமும் அதேவலியும் அதே ஒளியுமுடையோராயிருந்தனர். அனைவரும் சதுர்ப்புஜமுடையவர்கள்; அனைவரும் அதிகமான உற்சாகமுடையவர்கள். அவர்கள் அவ்வண்ணம் விளங்குவது கண்டு தசக்கிரீவன் உடம்பெங்கும் மயிர்க்குச் செறிந்தவனாயினன். ஆயினும் பிரமதேவனிடம்பெற்றவரத்தின்பெருமையால் கலக்கமற்றவனாகிஅங்கிருந்து அப்பால் விரைந்துசென்றான். அவ்விடத்தில், வெண்ணிறமாக மகிமைபெற்று விளங்கும் கௌஸ்துபமணி மார்பில் துலங்கத் திவ்வியாபரண பூஷிதனாய், திவ்வியமான பூமாலையணிந்து, சுற்றிலும் அக்கினி சூழ்ந்திருக்க, ஆதிசேஷனாகிய ஆஸனத்தில்வீற்றிருந்த பரமபுருஷனைப் பார்த்தனன். அந்தப்புருஷனது பாரிசத்தில் திவ்வியமான ஆடையாபரணங்களணிந்து சாமரங்கைக்கொண்டு ஒருபெண்மணி உலகமனைத்திற்கும் ஒரு அலங்காரமாக விளங்கினள். அதி மனோஹரமான புன்னகைகொண்டு சிம்மாசனத்து வீற்றிருக்கும் அந்தத் திரிலோக சுந்தரியைக் கண்ணுற்றவளவிலே இலங்கையரசன் மதியிழந்து மன்மதன் வழிப்பட்டவனாகி அவ்வுத்தமியைக் கைப்பற்ற வெண்ணி அமைச்சர்களை யங்கேயே நிறுத்தி யருகே சென்றனன். இராவணன் இவ்வாறு விதிவசப்பட்டவனாகித் தீமைசெய்யத் துணிந்தது, நித்திரைகொண்ட விடநாகத்தைத் தட்டியெழுப்ப வெண்ணியதுபோலன்றோ? இந்தக் கெடுமதியுணர்ந்து பாம்பணையிற் பள்ளிகொண்ட பரமபுருஷன் இராக்கதராஜனை நோக்கிக் குலுங்க நகைத்தனன். லோகராவணனான அவ்விராவணன் அப்பொழுது அம்மஹாநு

பாவனது தேஜஸ்ஸினால் தஹிக்கப்பட்டவனாகி மூச்சுக்காற்றினால் மேலெழுப்பப்பட்டு, அடியற்ற மரமென மண்மீது வீழ்ந்தனன்.

ராக்ஷஸராஜன் சாய்ந்து வீழ்ந்ததுகண்டு அந்தப்புருஷன் அவனைநோக்கி, 'ஓ அரக்கர் பெருமானே! நீயெழுந்து இங்குவருக, உனக்கு மிருத்யுபயமிப்பொழுதில்லை; நான்முகக்கடவுள் அளித்தவரத்தை அனைவரும் பரிபாலித்தல் வேண்டுமாதலின், நீ இன்னும்பலவாயிரவாண்டு ஜீவித்திருக்கின்றனை. ஹே ராவண! உனக்கு இவ்விடத்து மரணமில்லை; நீ தைரியமாயெழுந்து செல்லுக' என அருளிச்செய்தனன். முகூர்த்தகாலஞ்சென்று மோகந்தெளிந்து பராக்கிரமத்திற் பெருமைபெற்ற இராக்ஷஸராஜன் அம்மஹாநுபாவனைக்கண்டு அஞ்சி யகங்குலைந்தனன். ஆயினும் அவன் அருளிச்செய்த அற்புதமான வசனத்தைச் செவியுற்று மயிர்சிலிர்த்தவனாகி மெல்லமெல்ல முனிவர்பெருமானான அம்மாயோனிடம்சென்று, 'ஹே தேவ! இத்துணைச்சிறப்புற்ற சௌரியமும், பிரளயகாலாக்கினிபோன்ற சோதியுமுடையரான தேவரீர் யாவர்? ஸகலமான சரீரங்களிலும் உள்ளும் புறமுமமைந்துள்ள தேவதேவன் தேவரீரேயோ? திருவுள்ளமிரங்கி உரைசெய்தருள்க' எனவேண்டினான்.

மஹாதுராத்துமாவான இராவணன் இவ்வாறு வினவியது கேட்டு அத்தேவன் புன்னகைகொண்டு மேகங்குமுறுவதென மிக்க கம்பீரமான குரலுடனே அவனை நோக்கி, 'ஹே தசக்கிரீவ! நீ இன்றே என்கையில் வதையுண்டு மரிக்க விரும்புகின்றனையோ?' எனத் திருவாய் மலர்ந்தருளினான். அதனைச்செவியுற்ற தசக்கிரீவன் அவ் வுத்தமபுருஷனை நோக்கி அஞ்ஜலிஹஸ்தனாகி, 'ஸ்வாமி! அடியேன் பிரஜாபதியினிடம் பெற்றவரத்தின் பெருமையால் மிருத்யுவசமாயினேனல்லேன்; எனக்கு இணையான ஒருவன் தேவர்களிலும் இதுவரை ஜனித்தவனுமிலன், இனிஜனிக்கப் போகின்றவனுமிலன்; வீரியவந்தனான புருஷனெவனேனும் பிரமதேவனளித்த வரத்தைமீறி நடக்க முயல்வனோ? அங்ஙனம் மீறுகின்றவனுக்கு வேறுபரிஹாரம் யாதுமிலது; யோசிக்குமளவில் அவ்வாறு மீறமுயல்வதே முடியாதகாரியம். அன்றியும், பிரமதேவன் அளித்தவரத்தை வீணாக்கவல்லவன் இம்மூவுலகங்களிலுமொருவனேனு முளனெனயான் நினைக்கின்றேனில்லை. தேவர்களும் அங்ஙனம் செய்யவல்லவரல்லர். ஆனதுபற்றியே, ஓ தேவர் பெருமானே! அடியேன் அச்சங்கொண்டிலேன். ஆயினும் அடியேனுக்கு மரணமென்பது ஒன்று உளதாயின், ஹே பிரபோ! அஃது தேவரீராலேயே கிடைக்குமேயன்றி மற்றெவராலும் கிடைக்கற்பாலதன்று. தேவரீரால் அடியேனுக்கு மரணம் நேரிடுமாயின், அஃது அடியேனுக்குப் புகழும் பெருமையுமேயாகும்' என இவ்வாறு மொழிந்தனன்.

அப்பொழுது இராவணன் அம்மஹாபுருஷனது திருமேனியில் சராசரங்களுள்ளிட்ட மூவுலகங்களையும் கண்டனன்: ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், மருத்துகள், அச்வினீதேவர்கள், சித்தர்கள், பித்ருக்கள், யமன், வைச்சிரவணன், கடல்கள், கிரிகள், கானாறுகள், வேதங்கள், வேதாங்கங்கள், மூன்று அக்கினிகள், கிரகங்கள், நக்ஷத்திரங்கள், ஆகாயம், ஸாத்தியர், கந்தர்

வர், சாரணர், வேதமுணர்ந்த முனிவர்கள், கருடன், நாகங்கள், தேவர், தைத்தியர், தானவர், இராக்கதர் ஆகிய ஸகலமும் சேஷசாயியான ஸர்வேச்வரனது சரீரத்தில் ஸூக்ஷ்மரூபங்களாகக் காணப்பட்டன." என்று கூறினர்.

அகஸ்தியமுனிவர் இவ்வாறு உரைத்ததுகேட்டுத் தருமாத்துமாவான தாசரதி அம்முனிவரை நோக்கி, 'அத்தீவிலே நின்றபுருஷன் யாவன்? இங்குக்காணப்பட்ட மூன்றுகோடி மஹாநுபாவர்கள் யாவர்? பள்ளிகொண்டிருந்த புருஷோத்தமன் எவன்? இவற்றை யடியேனுக்கு விளங்கக்கூறுக' எனவினவ, அகஸ்தியமுனிவர் மறுமொழி மொழியலாயினர். 'ஹே ராம! ஆங்கு அத்தீவினிடையே தோற்றிய தேவன் கபிலரெனத்திருநாமம் பூண்ட நரமூர்த்தியாம். அவர் சங்கசக்கர கதாதரனான நாராயணனேயன்றி மற்றொருவருமல்லர்; சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரமென்னும் முத்தொழிற்கு முரியரும், ஆதி மத்தியாந்தரஹிதருமான ஸ்ரீமஹாவிஷ்ணு அவரே. தேஜஸ்வியிலும் பிரதாபத்திலும் அந்தக்கபிலமூர்த்திக் கொப்பானவர்களாய் அவ்விடத்து நர்த்தனஞ்செய்துகொண்டிருந்த மூன்றுகோடி மஹாத்துமாக்களும் அவ்விடத்தில் சேர்ந்துள்ள நித்தியஸூரிகளாம். இராவணன் பாவமே புரியத்துணிந்தவனும், ஸாஹஸமுடையோனுமாயினும், அவனைக்கண்டு கபிலமூர்த்தி கோபங்கொண்டிலராதலின், அவன் அப்பொழுதே நீறாகி நாசமுறாது உயிரோடு நின்றனன். ஆயினும் அவருடன் வீரியம்பேசத்தொடங்கியதனால், உடல் பிளப்புண்டு புவியில்வீழ்ந்தனன். நெடுநேரஞ்சென்று ராக்ஷஸராஜன்மூர்ச்சைதெளிந்தெழுந்து, இவ்வளவோடு உயிர்தப்பினாற் போதுமென்று உடனே தன் மந்திரிமாரிருக்குமிடஞ்சென்று அவர்களுடனே இலங்கைக்கு ஓடிப்போயினன்' என்றுகூறினர். இவ்வரலாறுகளனைத்தையும் செவிக்கொண்டு ஸ்ரீராகவன் ஆச்சரியமடைந்தனர். அந்தச் சபையில் சேர்ந்திருந்த பெரியோர்கள் பலரும் வாநரராக்ஷஸர்களும் இவ்விருத்தாந்தத்தைச் செவியுற்று வியப்புற்றனர். பூர்வகாலத்து நடந்த இந்த விருத்தாந்தம் இப்பொழுது இம்முனிவர் மொழிந்தது கேட்கையில் எனக்கு நன்கு நினைவுவருகின்றதென விபீஷணாழ்வான், சிங்காசனத்து வீற்றிருந்த ஸ்ரீராமனிட முரைசெய்து அகமகிழ்ந்தனர். அதனைத் திருச்செவி சார்த்திய சக்கரவர்த்தித்திருமகன் சோதரர்களுடனே வியந்து களிகூர்ந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்தெட்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

அதிகபாடம் ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாவது ஸர்க்கம்.

இராவணன் தான் சென்ற வழியில் தன் கண்ணிற்புலப்பட்ட பெண்களைப் பிடித்துப் புஷ்பகவிமானத்தி லேற்றிக்கொண்டு சென்றதும்,
அவர்கள் இராவணனைச் சபித்ததும்;
பிறகு இராவணன் இலங்காபுரி சென்றபோது
சூர்ப்பணகி கணவனை யிழந்த துயரத்தினால்
இராவணனைப் பழித்துப் புலம்ப,
அவளைச் சமாதானப்படுத்தி, தண்டகாவனத்தில் ஜனஸ்தான மேற்படுத்திக் கரனுடன் ஆங்கு வசிக்குமாறு அவட்குக் கட்டளையிட்டதும்.

அதன்பிறகு நடந்த இராவணனது வரலாற்றையும் கேட்கக் காகுத்தன் காதல்கொண்டது கண்டு அகஸ்தியமகாமுனிவர் பின்னும் புகலலாயினர்: "அயோத்திமன்னனே! மொழிகின்றேன், கேட்டருள்க: துராத்மாவான தசக்கிரீவன் அகமகிழ்ந்தவனாகி அங்கிருந்து வெளிப்பட்டு வருகையில், வழியே அரசர்கள், இருடிகள், தேவர், தானவராகிய பலருடைய பெண்களையும் பலவந்தமாய் அபகரிக்கலாயினன். அவ்விராக்கதன் கண்களில் கட்டழகிகளான கன்னிகைகளேனும் பருவமடைந்த பெண்மணிகளேனும் புலப்படுவராயின், உடனே அவன் அவர்களது பந்துஜனங்களை வதைத்து அவ்வனிதைகளைத் தன் விமானத்தி லேற்றித் தன்வசமாக்கிக் கொள்வான். இவ்வாறு இராக்கதராஜன் நாககன்னிகைகள், ராக்ஷஸகன்னிகைகள், அசுரகன்னிகைகள், மனுஷியகன்னிகைகள், யக்ஷகன்னிகைகள், தானவகன்னிகைகள் ஆகிய பலசுந்தரிகளைத் தன் விமானத்தில் அநேகமாக சேர்த்துக்கொண்டனன். அவ்வரிவையர் அனைவரும் அத்துயரமாற்றாதவராகி அழுது புலம்பினர். அவர்களது சோகாக்கினியால் சூடுகொண்டெழுந்த வெந்நீரெனத் தகும் அவர்களது அமங்கலமான கண்ணீர் ஆறாய்ப் பெருக்கெடுத்து, நதிகள் கடலை நிரப்புமாறு அவ்விமானத்தை நிரப்பிவிட்டது. நாககன்னியர்களும், கந்தர்வ கன்னிகைகளும், ரிஷிப்பெண்களும், தைத்தியகன்னிகைகளும், தானவகன்னிகைகளும் அவ்விமானத்தில் நூற்றுக்கணக்காகக் கூட்டங்கூடிக் கதறலாயினர். அனைவரும் மேகமெனக் கறுத்து நீண்ட குழலும், சுந்தரமான வடிவும், முழுமதி யன்ன முகமும், திரண்டுருண்டு பருத்துயர்ந்த கொங்கைகளும், தேர்த்தட்டை நிகர்த்த நிதம்பமும், பொற்கொடியைப் பகைத்த மேனியு முடையராய்த் தேவமகளிர் போன்று அழகுவாய்ந்து விளங்கினர். அவர்கள் சோகத்தினாலும் மோகத்தினாலும் பயத்தினாலும் நடுக்கமுற்றுப் பெருமூச்சு விடுகையில் எங்கும் தீக்கிளம்பி அந்தப் புஷ்பகவிமானம், அக்கினிஜ்வாலையோடுகூடிய அக்கினிகுண்டமெனத் துலங்கியது.

சிங்கத்தினிடஞ் சிக்கிய மான்குட்டிகள்போலத் தசக்கிரீவனிடம் அகப்பட்டுக்கொண்ட சிறுமிகள் யாதும்தோற்றாதுசோகத்தினால் சிந்தைகலங்கியவர்களாகி முகம்வாடிக் கண்கள் கலுழ்ந்து தவிப்புண்டனர். அவர்களி லொருத்தி 'இவன் எம்மை அருந்திவிடுவனோ!' என அஞ்சினாள். மற்றொருத்தி, 'இவன்

நம்மை உயிர்மாய்ப்பனே!' என அல்லலுற்றனள். அவர்கள் அனைவருமொன்று கூடி மாதாபிதாக்கள், பர்த்தா, பிராதா ஆகிய பலரையும் நினைந்து அவர்களைப் பிரிந்த துயரம் தாங்காதவர்களாகிப் புலம்பலாயினர்: என்னைவிட்டு என் மகன் எவ்வாறு உயிர்வாழ்வானோ? மாதாபிதாக்களும் சகோதரர்களும் எவ்வாறு சோகஸாகரத்தில் மூழ்கிவருந்துகின்றனரோ? ஆ! அத்தன்மையனான எனது நாயகனைப் பிரிந்து யான் எவ்வண்ணம் பிராணனை வைத்திருப்பேன்! 'ஓ மிருத்யு தேவனே! உன்னை யான் மன்றாடி வேண்டிக்கொள்கிறேன்; துன்பமனுபவித்தற்கே பிறந்த இப்பாவிப்பெண்ணை நீ உடனே உன்னிடம் சேர்த்துக்கொள்ளுக; பூர்வஜன்மத்தில் யான் யாது பாவம் புரிந்தேனோ!' என இவ்வண்ணம் அழுது புலம்பி அனைவரும் துயரக்கடலில் ஆழ்ந்தனர்.

'ஆ! ஐயோ! இனி இத்துயரத்திற்கு முடிவொன்றும் காணப்படுகின்றிலதே. சீ! இம்மானிடவுலகம் மிகவும் கேடுகெட்டது! இதனினும் அதமமானது வேறொன்றிலது. காலைபி லுதயமாகின்ற கதிரவன் நிலவொளி வீசும் நக்ஷத்திரங்களை நாசமுறச் செய்யுமாறு, வலியிற்சிறந்த வீரனான இவ்விராவணன் வலியற்ற எளியரான நமது பர்த்தாக்களை வதைசெய்தன னன்றோ! அஹோ! இக்கொடிய இராக்கதன் தான்பெற்ற பராக்கிரமத்தைப் பிறரை வதைசெய்தற்கே பயன்படுத்துகின்றனன். இத்துணைத் தீயொழுக்கமுடையோமென இவனுக்குச் சிறிதளவேனும் தன்னிடத்து இகழ்ச்சி தோன்றிற்றிலது போலும்; இந்தத் துராத்துமாவுக்கு இத்துணை ஆற்றலுடைமை எவ்வகையிலும் ஏலாததாம். இவன் இங்ஙனம் பரதாரங்களைப் பிடித்துப் பீடிப்பது மிகவும் பொல்லாதபாவமன்றோ? இவன் துர்ப்புத்தியுடையவனாகிப் பரஸ்திரீகளைப்பிடித்து அவர்களுடன் கூடிக் களிக்க வெண்ணுகின்றனனாதலின், ராக்ஷஸாதமனான இப்பாவிக்குப் பெண்மூலமாகவே சாவுவருக' எனப் பதிவிரதைகளான பெண்மணிகள் பலர்பழித்துச் சபித்தனர்.

அவர்கள் அங்ஙனம் சபித்தகாலையில் ஆகாயத்தில் துந்துபிவாத்தியங்கள் முழங்கின; வானத்தினின்று பூமாரிபொழிந்தது; சற்புடைமகளிர் இவ்வாறு சிந்தைகலங்கிச் சபித்தவளவில், அவ்விராக்கதன் ஆற்றலொழிந்தவனென ஒளியற்றவனாயினன். ஆயினும் அவன் அவர்களது கூச்சலைக்காதிற் கொள்ளாதவனாகவே, பெண்களின் பரிதாபமான புலம்பலுக்கும் மனமிரங்காமல், இராக்கதர்பலர் போற்றிப் புகழவும், கோவென்று கதறும் கன்னிகைகளுடனே இலங்காபுரி போய்ச்சேர்ந்தனன்.

இராவணன் இலங்காபுரியில் பிரவேசித்தது கண்டவுடனே, அவனது ஸகோதரியான சூர்ப்பணகி யென்னும் ஒரு கோரவடிவமுடையவளாகிய அரக்கி, கோவென்று அழுதவண்ண மோடிவந்து அவனது பாதத்தருகே பூமியில் வீழ்ந்தனள். அதுகண்டு இராவணன் அவளையெடுத்து அணைத்துச் சமாதானப்படுத்தி, 'பெண்மணி! ஈதென்ன? நீயேன் இங்ஙனம் புலம்புகின்றனை? என்னுடன்யாது உரைசெய்யவந்தனை? துரிதமாயுரைசெய்க' என்று வேண்டினன். அதற்குக் கொள்ளிக்கண்ணியான அவ்வரக்கி கண்ணீர் தாரை தாரையாப்பெருக, அதனால் மறைக்கப்பட்ட கண்களை யுடையளாகிக் கூறு

கின்றனன்: 'ஓ ராக்ஷஸராஜனே, நீ பலசாலியெனச் செருக்குற்று, காலகேயரெனப் பெயர்பெற்ற மகாசூரர்களான பதினாயிரம் தைத்தியர்களைக் கொலைபுரிந்ததுமன்றி, எனக்குப் பிராணனிலும் பிரியதமனான என்னாயகத்தனையும் வதைத்து என்னைக் கைம்பெண்ணாக்கினையே! நீ எனக்குப்பிராதாவெனப்பெயர் பூண்டுவந்த பகைவனேயாகிக் கேடுவிளைவித்தனை. உன்னால் விதவையாகவும் எனக்குவிதிவாய்த்த தன்றோ? போர்புரிய நேரிடினும் மருமகனென்பதை நோக்கி மனமிரங்கி அவனைக்கொல்லாது காத்தல்வேண்டுமன்றோ? நீயே உன்மருமகனைக் கொலைசெய்து வெட்கமுறாதிருக்கின்றனையே!' எனப்புலம்பியவாறே புகன்றனள்.

சோதரிசொலுற்று இவ்வாறு சொன்னதுகேட்டுத் தசக்கிரீவன் அவளை நல்வார்த்தைகளாகவே சமாதானப் படுத்தி, 'என்செல்வத்தங்காய்! ஏன்வீணாய் அழுகின்றனை: அழுகையைநிறுத்துக, இஃதென்னால் விளைந்ததொன்றன்று; விதிவசமாகவாய்த்தது. நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டா; உனக்குவேண்டியவையெல்லாவற்றையும் என்றுமியன்றவரை அளித்து உன்னையான் அகமகிழச் செய்கின்றேன். யான்வெற்றியைவேண்டிப்போர்புரியவெறிகொண்டுடன்கணைவளை வதைக்கலாயினேன். போரில் தன்மனிதன், பிறமனிதன் என்பது புத்திக்குத் தோற்றுவதில்லை; மூர்க்கங்கொண்டு முனைமுகத்து நின்றபொழுது மருமகனென்பதும் தோற்றாது, உடன்பிறந்தானான உனது மணாளனையும் மாய்த்துவிட்டேன். போனதுபோயிற்று, இனியதனைச் சிந்திக்காவதென்னை? இப்பொழுது யானுனக்குச் செய்யவேண்டிய நன்மையாதோ அதனைக்குறைவறச்செய்கின்றேன். உனது சோதரனான கரன் மிகுந்த ஐசுவரிய முடையனாக வாழ்கின்றனனே, நீ அவனிடஞ்சேர்ந்து சுகமாகவாழ்க. அவன் உனக்குச் சிற்றன்னை மகனாதலின் உடன்பிறப்பன்றோ? மகாபலிஷ்டனான அவன் பதினாலாயிரம் இராக்ஷதர்களைத் தன்வசமாகக்கொண்டு அவர்களைப் பரிபாலிப்பவனாகி அவர்களுக்கு அதிபதியாகும்படி செய்கிறேன். அவ்விராக்ஷதர் உன் கட்டளைக்கு எப்பொழுதும் கீழ்ப்படிந்து நடப்பான். அவ்வீரனையளவற்ற சேனைப்படையொடு தண்டகாவனத்திற்கு அதிபதியாய் அனுப்புகின்றேன். மகாபலிஷ்டனான தூஷணனென்போன் அவனுக்குச் சேனாபதியாகுவான். காமரூபிகளான இராக்ஷதர்கள் அனைவர்க்கும் அவன் அதிபதியாகி, உன் சொற்படிக் கேட்டு நடப்பான்' எனவுரைத்து அவளைச் சமாதானப்படுத்தி, மகாபராக்கிரமசாலிகளான பதினாலாயிர இராக்ஷதர்கள் சூழ்ந்த பெருஞ்சேனையைக் கரனிடம் அனுப்பினான். பயங்கரமான தோற்றமுடையோரான அவ்விராக்ஷதரனைவரும் புடைசூழ, கரன் உடனேபுறப்பட்டுத் தண்டகாவனஞ்சேர்ந்து, ஆங்கு ஜனஸ்தானத்தை நேர்ப்படுத்திக் கொண்டு எதிர்ப்பாரொருவருமின்றி ஆங்கு அரசு செலுத்திவந்தனன். சூர்ப்பணகையும் சோகந்தீர்ந்து அங்குச்சென்று இனிதாக வாழ்ந்தனள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் இருபத்தொன்றாவது ஸர்க்கம்

முற்றிற்று.

No. 10. மேகநாதன் நிகும்பலையில் யாகம் செய்து கொண்டிருக்கையில் இராவணன் அவ்விடம் சென்று அவனை வினவியது. 



మేఘనాదుడు నికుంభిలలో యాగము చేయుచుండగా రావణుడు అచ్చటికి వచ్చి వానిని ప్రశ్న చేయుట.

## முப்பதாவது ஸர்க்கம்.

மேகநாதன் நிகும்பிலையில் வேள்வி யியற்றி வரம்பெற்றதும்,
பிறகு மதுவென்னுமிராக்கதன் கும்பீனஸியைக் கைக்கொண்டு போனதுகேட்டு
இராவணன் அவன்மீது படையெடுத்துச் சென்று
கும்பீனஸியினது வேண்டுகோளால் அவனுடன் நட்புச்செய்துகொண்டதும்,
பின்பு தேவேந்திரனை வெற்றிகொள்ள விரும்பி மதுவென்பவனோடும் புறப்பட்டுக்
கைலாஸகிரியில் இராத்திரி யிறங்கியதும்.

தசக்கிரீவன் தண்டகாவனத்தை இவ்வாறு கரனுக்குக் கொடுத்துத் தன் சோதரியையும் சமாதானப்படுத்திச் சிந்தைநோய் நீங்கிச் சந்தோஷமடைந்தனன். அதன்பின்னர் இராக்கதர் பெருமான் இலங்காபுரத்திலுள்ள உத்தமமான உத்தியானவனமாகிய நிகும்பிலையென்கிற அழகிய சோலைக்குத் தன் அமைச்சர்களுடனே சென்றனன். ஆங்கு யூபஸ்தம்பங்கள் நாட்டி வேதிகைகள் அமைத்து யாகசாலை யொன்று அற்புதமாக நிருமிக்கப்பட்டிருந்தது. அவ்விடத்து அவனது மைந்தனான மேகநாதன் கிருஷ்ணாஜிநமும் கமண்டலமும் சிகையும் தண்டமும் தரித்து தீக்ஷிதனாய்ப் பயங்கரமான தோற்றமுமுடையோனாக விளங்கினான். இலங்கையரசன் அக்குமாரனைக் கண்ணுற்று அவனருகேசென்று தன் இருபதுபுஜங்களாலு மவனை யெடுத்து அணைத்து முத்தமிட்டு, 'மகனே! ஈதென்ன காரியஞ் செய்யத் துணிந்தனை? என்னுடன் உண்மை யுரைசெய்க' என வினவினான். அதுகேட்டு வேள்வி செய்வித்தற்பொருட்டு ஆங்கு வந்திருந்த தவப்பெருமை பெற்ற பிராமணோத்தமரான சுக்கிராசாரியர் கூறலாயினர். 'ராக்ஷஸராஜனே! யாவும் யான் உரைசெய்கின்றேன், செவிக்கொள்க: உன்னுடைய பெறலரும் புதல்வன் ஏழுயாகங்கள் மிகவும் விஸ்தாரமாக இயற்றினன்: அவை அக்னிஷ்டோமம், அச்வமேதம், பகுசுவர்ணகம், ராஜசூயம், கோமேதம், வைஷ்ணவம், மாஹேச்வரம் என்பனவாம். எவர்க்கும் செய்தற்கரியதான மாஹேச்வர யாகத்தில் உனது புத்திரன் ஸாக்ஷாத் பசுபதியினிடம் அளவற்ற வரங்கள் பெற்றனன்; அதனுலிவன், மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும் வேண்டியவாறு செல்லவல்லதும் என்று மழியாததுமான திவ்வியமான ஒரு ரதமும், அம்புகள் நிறைந்த அக்ஷயமான அம்பறாத்தூணிகளும், எவராலும் வெல்வதற்கரியதான வில்லும், எதிரிகளை யதஞ்செய்யும் அற்புதமான அஸ்திரமும், தாமஸியென்னும் ஒரு மாயையும் பெற்றனன். போரில் இம்மாயையைப் பிரயோகித்தவளவில் பேரிருள் ஒன்று உண்டாகி, இவனுள்ளவிடமின்னதெனத் தேவாசுரர்களுக்கும் அறிதற்கரியதாகும். ஹே தசாநந! இவை எல்லாவற்றையும் இம்மைந்தன் பெற்று வேள்வியை முடித்தனன். உன்னைக் காணவேண்டியே யானு மிப்பொழுது இங்கிருக்கின்றேன்' என்று கூறினர்.

தசக்கிரீவன் அதுகேட்டு 'இவ்வேள்வியை யிவன் நன்றெனவே நினைத்துச் செய்தனனாயினும், ஒருவகையி லிதனால் தீமையே செய்யப்பட்டதாகின்றது; ஏனெனில், தொன்றுதொட்டு நமக்குத் துன்னாராயின தேவேந்திரன் முதலான தேவர்களேயன்றோ இவ்வேள்விகளால் பூஜிக்கப்பட்டவராயினர். அஃது அங்ஙனமாயினும், இவனியற்றியதும் நற்கருமமே யாகும்; அதற்கு ஐயமின்று. என் செல்வச்சிறுவா! எழுந்துவருக, இல்லம் செல்வோம்' என்றனன். அதைச் செவியுற்ற மேகநாதன் உடனே புறப்பட்டுவர, அக்குமாரனுடனும் விபீஷணனுடனும் தசக்கிரீவன் தன் அரண்மனை சேர்ந்து, புஷ்பக விமானத்திற் கண்ணுங் கண்ணீருமாக் கதறிக்கொண்டிருந்த குமரிகளை அதினின்று மிறக்கினன். தேவர் தானவர் இராக்கதரென்னும் பல குலத்தவர்களான அவ் விளம்பெண்கள் பெண்களுக்குரிய லக்ஷணங்கள் பலவுமமைந்து ஸர்வாங்க சுந்தரிகளாக விளங்கினர்.

தருமாத்துமாவான விபீஷணன் அந்த ஸ்திரீரத்தினங்களையும் அவர்கள் விஷயத்தில் இராவணனுக்கு உண்டாகிய துர்ப்புத்தியையும் கண்டு அவனை நோக்கி, அண்ணா! நீர்செய்யத்துணிந்த இத்தன்மையவான தீச்செயல்கள் புகழையும்பொருளையும்குலப்பெருமையையும்நாசஞ்செய்வனவன்றோ? இதனைக் கண்டவளவில் கற்றுணர்ந்தபெரியோர் நம்மையிகழ்வரென்பதையுணர்ந்தும், நீர் இவ்வாறு உமது உள்ளத்திற்றோற்றியவாறு ஒழுகுகின்றீர். இவ்வரிவையர்களின் உற்றுருறவினரை அதஞ்செய்தேயன்றோ நீர் இவர்களைக் கொணர்ந்தீர்? நீர் இங்ஙனம் அயலார் பெண்டிரை யனியாயமாய் அபஹரிக்க ஆவல்கொண்டவளவில், உமது சோதரியான கும்பீநஸியை மதுவென்னு மிராக்கதன் அபஹரித்துக்கொண்டுபோயினான்' என்று கூறினான்.

அதுகேட்டு இராவணன் விபீஷணனை நோக்கி, 'நீ உரைப்பது இன்னதென விளங்கவில்லையே! மதுவென்பவன் யாவன்? அவன் யாரை யபஹரித்தனன்?' என வினவ, விபீஷணன் மிகக் கோபங்கொண்டு, 'நீ புரிந்த பாவச்செயலின் பயன் வந்து விளைந்ததை விளம்புகின்றேன், செவிக்கொள்க: நமது மாதா மஹரான சுமாலிக்கு முத்த சோதரரான மாலியவானை நீர் அறிவீரே? அவர் அரக்கர்குலத்தினரேயாயினும் நூல்கள் அனைத்தையும் குறைவறக் கற்றுணர்ந்த புலவர், வயதிலும் முதிர்ந்தவர்; நமது மாதாவுக்குப் பெரிய தந்தையும், நமக்கு ஆசிரியருமானவர். அவருடைய மகளும் நமது அத்தையுமான அநலை யென்பாளுடைய மகள் கும்பீநஸியென்பவள். அச் சிறுமி நமக்குச் * சகோதரி முறையன்றோ? உமது மைந்தனான மேகநாதன் யாகத்தில் தீக்ஷைகொண்டு வேள்விபுரியப்புகுந்து வீட்டு விசாரமற்றிருக்கவும், யான் நீரிடைநின்று நற்றவ மியற்றவும், கும்பகர்ணன் நித்திரைகொண்டு இவ்வுலகசிந்தை யொழிந்திருக்கவும், அத்தருணங் கண்டு வலியிற் சிறந்த வீரனான மதுவென்னும் இராக்கதன் இந்நகரத்திற் புகுந்து, இங்குள்ள அமைச்சர்களையும் மற்றும் பல பராக்கிரமசாலிகளான பிசிதாசனர்களையும் கொலைபுரிந்து, அந்தப்புரத்தில் அயர்ந்து துயில்கொண்டிருந்த கன்னிகை

* பெரியபாட்டனாரது தௌஹித்திரியாதலின் சோதரிமுறையாம்.

யான கும்பீநஸியைக் கைக்கொண்டு போயினன். அச்செய்தி உடனே எங்களுக்குத் தெரியவந்ததாயினும், ஏற்றகணவனைத் தேடிக் கன்னிகையை யென்றைக்காயினும் கலியாணஞ் செய்துகொடுக்க வேண்டுவது அவசியமே யாதலின், அவனே இவளுக்குக் கணவனாகுக வெனக் கருதி யாங்கள் அவனை யதஞ்செய்யாது ‘ஐயோ பாவம்!’ என்று பொறுத்தோம். நீர் விவேகமற்றுச் செய்த தீச்செயலின் விளைவே யன்றி † இஃது மற்றொன்று மன்று. இந்த ஒரு திருஷ்டாந்தத்தினாலேயே உமதுகொடுமை உலகமெங்கும் பிரசித்த மாகுமன்றோ?’ என வுரைத்தனன்.

இவ்வாறு விபீஷணன் விளம்பியதுகேட்டு அரக்கர்தலைவனான தசக்கிரீவன் தனது தீக்குணத்தினால், கொதிப்புண்ட கடலெனக் கதம்விஞ்சிக் கண்கள் சிவந்து, ‘இக்கணமே எனக்குத் தேரைத் துரகங்களைப் பூட்டி ஆயத்தப் படுத்துக; சூரர்களான சேனாவீரர்க ளனைவரும் போர்க்கோலங் கொண்டெழுக; எனது சகோதரனான கும்பகர்ணனையு மெழுப்புக; இங்குள்ள முதன்மையான மற்றும் பல ராக்ஷஸர்களும் பற்பல படைக்கலங்களையுங் கைக்கொண்டு அவரவர்க்கேற்ற வாஹனங்களிலேறுக; யான் அனைவருடனும் கூடிச்சென்று இராவணனிட மச்சமொழிந்திருக்கும் மதுவென்னும் மதிகேடனை யமரில் அதஞ்செய்து, அதேகோலமாய்த் தோழர் பலரும் புடைசூழப் போர்புரிய விரும்பித் தேவலோகஞ் செல்வேன்; ஆங்குத் தேவேந்திரனை வென்று வசமாக்கிக்கொண்டு திரிலோகாதிபத்தியம் பெற்றுச் செருக்குற்றுச் சந்தோஷமடைந்து எங்கும் ஸஞ்சரிப்பேன்’ என அகங்கரித்துக் கூறினான்.

இவ்வாறு இராவணன் உரைசெய்தவளவிலே, நானாவிதமான ஆயுதங்களை யணிந்த உத்தமர்களான இராக்கதர்கள் நாலாயிரம் அக்ஷௌஹிணி சேர்ந்த பெரும்படை போர்புரியப் பேராவலுடனே புறப்பட்டது. அச்சேனையினது முன்னணியில் சேனைத்தலைவர்கள் பலரும் புடைசூழ்ந்துவர, மேகநாதன் மகிழ்ந்து சென்றனன். இராவணன் இடையில் அலங்காரமாகச் செல்ல, கும்பகர்ணன் பின்னணியைப் பரிபாலித்துக்கொண்டு சென்றனன். தருமாத்துமாவான விபீஷணனொருவன்மாத்திரம் இலங்காபுரியிலேயே அறம்புரிந்துகொண்டு பெருமையாக வாழ்ந்தனன். மற்றவரக்கர்களனைவரும் ஒட்டகங்களிலும் கோவேறுகழுதைகளிலும் குதிரைகளிலும் சிம்சுமாரங்களிலும் உரகங்களிலுமேறி யாகாயமெங்கு மிடைவெளியின்றிச் செய்துகொண்டு மதுவினது நகரத்தை நோக்கி மெல்ல நடந்தனர்கள். தேவர்களுடனே வைரங்கொண்ட தைத்தியர்கள் அநேகர், இராவணன் இவ்வண்ணம் தேவலோகத்தின்மீது படையெடுத்துச் செல்வது கண்டு பெருமகிழ்ச்சிகொண்டவர்களாகி அவனைப் பின்றொடர்ந்து சென்றனர்.

---

† நாம் நமது மகளை விதிமுறைப்படி ஏற்ற வரனைத்தேடி விவாஹஞ்செய்து கொடுக்கவேண்டியிருக்க, நமது அநுமதியின்றி வலுவிலொருவர் அபஹரித்துக்கொள்வது பெரிய பழிப்பென்பதாம்.

இராவணன் மதுபுரம் போய்ச் சேர்ந்து உட்புகுந்து ஆங்கு அரண்மனை யில் அவ்வரக்கனைத் தேடினான். அவ்விடத்து மதுவினைக் கண்டிலன்; தனது சகோதரியான கும்பீநஸி யொருத்திமாத்திரமே கட்புலனாயினாள். இராவணனைக் கண்டவளவில் கும்பீநஸி யச்சங்கொண்டவளாகிக் கைகூப்பியவண்ணம் அவனது பாதங்களில் வீழ்ந்து பணிந்தனள். அதுகண்டு ராக்ஷஸ ராஜன் அவளை யெழுப்பி யெடுத்து அவளை நோக்கி, 'என் அருமைச் சகோதரி! நீ யெதற்கு மஞ்சாதொழிக; உனக்கு யாது வேண்டுமாயினும் யான் அளிப்பேன்' என உரைத்தனன். அதுகேட்டுக் கும்பீநஸி, 'ஹே ராஜனே, பராக்கிரமத்திற் பெருமைபெற்ற பெரியோனே! நீர் என்விஷயத்தில் அன்பு கூர்ந்தவராயின், என் மணவாளனை மாய்க்காது விடுத்து மங்கிலியப்பிச்சை யளித்து என்மானத்தைக் காக்கவேண்டுகின்றேன்; குலஸ்திரீகளுக்குக் கணவனையிழப்பதினும் கொடியவிபத்து வேறொன்றும் இல்லையென்பரன்றோ? பலவகைத்தாய துன்பங்களினும் கைம்பெண்ணாவதேயன்றோ கொடிய துன்பம்! ஆதலின், ஹே ராஜேந்திர! மாங்கலியப்பிச்சை கேட்கும் அடியாளை யருள் புரிந்து நோக்குக. மஹாராஜனே! முதலில் அடியாளைக் கண்ணுற்றவளவிலே 'நீ யஞ்சாதொழிக' என நீரே அபயமளித்தீராதலின், உமதுவாக்கைப் பரிபாலனஞ் செய்க' என வேண்டினாள்.

அதுகேட்டு இராவணன் அகமகிழ்ந்தவனாகி ஆங்கு துன்புற்று நின்ற தங்கையை நோக்கி, 'பெண்மணி! இப்பொழுது உன் புருஷன் எங்கிருக்கின்றனன்; அதனை இக்கணமே யென்னுடன் உரைசெய்க; அவனுடனேகூடிச் சென்று யான் தேவலோகத்தை வெற்றிகொள்வேன்; உன்னிடமெனக்குள்ள அன்பினாலும் அருளினாலும், யான் உன் மணாளனை மாய்க்காது மன்னிக்கின்றேன்' என்று கூறினான்.

இராவணன் இவ்வண்ணம் உரைசெய்ததுகேட்டுக் கும்பீநஸி களிகூர்ந்து கடுகச்சென்று படுக்கையறையிற் புகுந்து ஆங்கு படுத்திருந்த தன்புருஷனை யெழுப்பி,'என் பிராணநாதனே! இதோ எனது சோதரனும் மஹா பலிஷ்டனுமான தசக்கிரீவன் தேவலோகத்தை வெற்றிகொள்ள விருப்புற்று அதற்கு உமது பேருதவியை வேண்டி இவ்விடம் வந்திருக்கின்றனர். நமது நட்பை வேண்டி வந்திருக்கின்ற வீரர்க்குத் துணைசெய்தற்பொருட்டு நீர் உமது இனத்தாருடனே எழுந்துசெல்லுக, ஆபத்தி லிடுக்கண் களைதலன்றோ நட்பிற்கழகு' என உரைத்தனள்.

கும்பீநஸி இங்ஙனம் கூறியதுகேட்டு அவ்விராக்கதன் அங்ஙனமேயாகுக வென் றுடன்பட்டு எழுந்துசென்று, ஏற்ற மரியாதைகளுடன் இராவணனை யெதிர்கொண்டு அழைத்துவந்து விதிமுறைப்படி வேண்டியவாறுபூஜித்தனன். தசாநநனும் மதுவளித்த உபசாரங்களை யன்புடனேற்றுக்கொண்டு அம்மாளிகையிலேயே ஒருநாளிருந்து, மறுநாளுதயத்தில் பிரயாணமாகி அவ்விடம் விட்டு நீங்கிச் சென்று குபேரனிருக்குமிடமான கைலாஸகிரியிற் சேனைகளை யிறக்கினான்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தோராவது ஸர்க்கம்.

இராத்திரி யிராவணன் கைலாஸபருவதத்தில் பூர்ணசந்திர னுதித்துப் பிரகாசிப்பது கண்டு மதிமயங்கி நின்றதும், அத்தருணத்தில் நளகூபரனிடஞ் செல்ல அவ்வழியே புறப்பட்டுவந்த அரம்பையைப் பிடித்துப் பலாத்காரஞ் செய்ததும், அவள் அங்ஙனமே யோடி அச்செய்தியை உள்ளபடி சொல்லக்கேட்ட நளகூபரன் கோபித்து இராவணனைச் சபித்ததும், அதைக்கேட்டவர்கள் ஆநந்தமடைந்ததும்.

---

இராவணன் கைலாஸகிரி சென்றவளவில் அருக்கன் அஸ்தமித்தனனாதலின், தன் பெரும்படையுடனே அன்றிரவை அவ்விடமே போக்குவதென நிச்சயித்தனன். பொழுதுபட்டவளவில் அவ்வெள்ளிமலையை நிகர்த்த நிர்மலமான நிலவொளியை யெங்கும் பரவச்செய்துகொண்டு பூர்ணசந்திரன் உதயமாயினன். இராவணனது பெரும்படை பேருறக்கமுற்றது. அக்காலையில் அரக்கர்தலைவன் உறக்கங்கொள்ளாது அம்மலையில் உட்கார்ந்துகொண்டு அங்குள்ள விநோதங்களைக் கண்ணுற்றனன். நிலவொளி படர்ந்து எல்லாப் பொருள்களும் அவனுக்குக் களிப்பையும் காமவிகாரத்தையும் விளைவிப்பனவாயின. ஆங்கு கர்ணிகாரவனங்களும், கதம்பவனங்களும், சம்பகம், அசோகம், புன்னாகம், மந்தாரம், சூதம், பாடலம், லோத்திரம், பிரியாளு, பிரியங்கு, அர்ச்சுனம், கேதகம், தகரம், நாரிகேளம், பனஸம், ஆரக்வதம், தமாலம், வகுளம் முதலான பற்பல பாதபங்கள் நிறைந்த உத்தியானவனங்களும் அநேகமிருக்கக் கண்டனன். அவற்றினிடையே அநேகம் தாமரைத்தடாகங்கள் தாமரைமலர்கள் அடர்ந்து அழகு செய்யவும், மந்தாகினிநதி பெருகிப் பேராநந்தம் விளைக்கவும் பார்த்தனன். குயிலைநிகர்த்த குரலோசை யுடையோர்களான கின்னரர்கள் தம் காதலிகளுடனே கூடிக் கர்ணமிருதமாகக் கானஞ்செய்தனர்கள்; காதல்கொண்டு கண்கள் சிவந்து காரிகைகளுடன் கூடி விச்சாதரர்கள் அங்கு வந்து விநோதமாக விளையாடினார்கள்; குபேரனது இருப்பிடமான அக்கைலாஸகிரியில் கானஞ்செய்கின்ற அப்ஸரஸ்திரீகளது மதுரமான கண்டத்தொனி மணியோசைபோன்று வெகுதூரம் பரந்து கேட்போர் மனத்தை மயக்கியது. மந்தமாருதம் குளிர்ந்து வீச, அதனால் அலைக்கப்பெற்று அங்குள்ள புஷ்பவிருக்ஷங்கள் பூமாரி பொழிவதுபோல மலர்களை யுதிர்த்தன; அம்மலர்களின் மணம் அம்மலைமுழுமையும் பரந்து குமுகுமுவென்று எங்கும் நறுமணங் கமழ்ந்தது. மல்லிகை முல்லை முதலாய மலர்களின் மகரந்தங்களை வாரிக்கொண்டுவந்து மந்தமாருதம் இராவணன்மீது வீசி அவனுக்குக் காமவேட்கை விருத்தியடையச்செய்தது. தேவமகளிரது குழலோசைபோன்ற கானத்தினாலும், மலர்களின் மணத்தினாலும், குளிர்ந்த மந்தமாருதத்தினாலும், அந்தப் பருவதத்தினது பேரழகினாலும், இராக்காலத்தினாலும், முழுமதிதோன்றி மனத்தை மகிழ்வித்தலாலும், இராக்ஷஸராஜனான இராவணன் காமனுக்கு வசமாயினன். அதனால் அவன் பலவாறு பெருமூச்செறிந்து பூர்ணசந்திரனைப் பார்த்தவண்ணம் பரிதபித்து நின்றனன்.

இராவணன் இவ்வாறு வருத்தமுற்றிருக்கையில், முழுமதிபோன்ற முக முடையளான அரம்பையென்னும் அப்ஸரப்பெண்மணி நவமணி யணிந்து நல்வண்ணப்பட்டுடுத்து, நானத்தோடு களபம்பூசி மந்தாரப்பூமாலை சூடி அவ் வழியே சென்றனள். அரைநூன்மாலை யணிந்து காண்போர் கண்களையும் மனத்தையும் கவர்ந்து காமவேட்கை விளைக்கவல்ல பருத்த ஜகனமுடைய ளாகி விளங்கும் அவ்வணங்கு தேவோத்ஸவங்களில் முதன்மையானவளெனத் தோற்றினள். அவள் ஆறு ருதுக்களினு முண்டாகும் அரியமலர்களால் அலங் காரஞ் செய்துகொண்டு நாணம், அழகு, ஒளி, மேனி, புகழ் இவற்றினுருவ மெனத் திகழ்ந்தனள். அவள் அரையில் அணிந்த ஆடை நீருண்டமேகம் போன்ற நீலநிறமுடையது; முகம் மதியையொத்தது; புருவங்கள் வில்லைப் பகைத்தன; தொடைகள் யானைத்துதிக்கையை நிகர்த்தன; கைத்தலம் தளிர் போலக் கோமளமாக விளங்கியது. இவ்வகை யழகுவாய்ந்த தெய்வப்பெண் பாசறைப்பாதையாகச் செல்வது கண்டு தசகந்தரன் மன்மதபாணங்களால் பீடிக்கப்பட்டவனுகி, நாணத்தினல் தலைகுனிந்து சென்ற அவளைக் கையைப் பிடித்துப் புன்னகைகொண்டு பேசலாயினன்.

'என் காதற்கிளியே! நீ இப்பொழுது எவ்விடத்திற் கேகுகின்றனை? யாது பயன் பெறப்போகின்றனை? இஃது எவனுக்கு நற்பேறு பெறுகின்றகாலமோ? யாவன் உன்னை அனுபவிக்கும் உத்தமபாக்கியம் பெற்றிருக்கின்றனன்? அமு தத்தினின்றும் அமுதஸாரத்தை யருந்துதல்போல, உனது முகத்தாமரையி னின்றும் அதராமிருதத்தை பருகித் திருப்தியடையும் புண்ணியசாலி யாவன்? அச்சமுறும் ஆரணங்கே! சுவர்ணகலசங்களை நிகர்த்து இடைவெளியின்றி நெ ருங்கிப் பருத்துப் பேரழகுவாய்ந்துள்ள உனது ஸ்தநங்கள் எவனது உரஸ் தலத்தைப் பரிசித்துப் பெருமகிழ்ச்சி விளைவிக்கப்போகின்றன; சுவர்ணமணி மாலைகள் அணிந்து சுவர்ணசக்கரம்போல விளங்கும் உனது பருத்த கடிதடத் தின்மீதேறிப் பேராநந்தமுறுகின்றவன் யாவன்? என்னிலும் மேலான புரு ஷன் உலகில் வேறொருவன் உளனோ? தேவேந்திரனுயினும், விஷ்ணுவாயி னும், அச்விநிதேவர்களாயினும் எனக்கு இணையானவரோ? அச்சமுற்று நிற் கும் ஆரமுதே! நீ என்னைத் தவிர்த்து வேறு யாரிடம் செல்ல வெண்ணுகின் றனை? அஃது உனக்கு ஏற்றதன்று. ஹே சுந்தரி! இந்தச் சிலாதலம் எவ் வளவு விநோதமாயிருக்கின்றது பார்! இம்மூவுலகங்களினும் என்னினும் பெருமைபெற்ற பிரபு ஒருவனுளனோ? திரிலோகாதிபதிக்கும் மேலான ராஜ னுன தசக்கிரீவன் இவ்வண்ணம் கைகுவித்து உன்னை வணங்கி வேண்டுகின்ற னன்; உளமகிழ்ந்து நீ யென்னை யணைக' என உரைத்தனன்.

தசக்கிரீவன் இவ்வாறு கூறியதுகேட்டு ரம்பை உடல்நடுங்கிக் கைகூப் பிக்கொண்டு அவனை நோக்கி நவில்கின்றனள்: 'ஹே ராக்ஷஸேச்வர! நீர் எனக்குக் குருவாகின்றீர்; ஆதலின் என்னை நீர் இங்ஙன மியம்பற்பாலதன்று; பிறர் யாவரேனும் என்னை யிவ்வண்ணம் துன்புறுத்துவராயின், அவர்கள் அவ்வாறு செய்யாவண்ணம் என்னைப் பாதுகாக்கும் உரிமையுடையீரன்றோ தேவரீர்? உண்மை யுரைக்கின், யான் உமக்கு மருமகள் முறையாகின்றேன்'

உத்தரகாண்டம்.

இராவணன் அரம்பையைக்கண்டு காதல் கொண்டது.



రావణుడు రంభను చూచి మోహించుట.

என்றனள். அவள் இராவணனைக் கண்டபோதே சரீரமெங்கும் மயிர்க்குச் செறிந்து, அதுமுதல் தலைகுனிந்து கால் கட்டைவிரலையே நோக்கிக்கொண்டு நின்றனள்.

அரம்பைகூறியதைச் செவியுற்ற தசகந்தரன், அம்மாதுசிரோமணியை நோக்கி, 'பெண்ணே, நீ யென்மகனுக்கு மனையாட்டியாயினவளாவிலே யன்றோ எனக்கு மருமகளாகுவை?' என, அரம்பை 'ராக்ஷஸராஜனே! யான் உமக்கு ஒன்றுவிட்ட மருமகளாதல் வேண்டும். உமது பிராதாவான வைச்சிரவணனுக்குப் பிராணனிலும் பிரியனான நளகூபரனெனப் பிரசித்திபெற்ற புத்திரனுளனன்றோ? அவன் தருமத்தில் பிராமணனும், வீரியத்தில் க்ஷத்திரியனும், கோபத்தில் அக்கினியும், பொறையில் பூமியுமானவனென்ப தறிவீரே! லோகபாலனது புத்திரரான அவரால் வரிக்கப்பட்டவளாகி, யான் அவரிடம் போகிறேன். அவர்பொருட்டே யான் இவ்வணிகள் பூண்டு அழகுசெய்துகொண்டு செல்கின்றேன்; அவரொருவரொழிய மற்றெவரிடத்தும் என் மனஞ் செல்வதின்று; ஆதலின், ராஜனே! அருள்புரிந்து அடியாளை விடுவித்தனுப்புக. அவர் இந்நேரம் என் வரவை வழிபார்த்துக் காத்திருப்பார். உமது குமாரருக்கு நீர் இடையூறு செய்யாது ஒழிக; என்னை விட்டுவிடுக: அரக்கர்பெருமானே! பெரியோர்கள் அநுஷ்டித்துக் காட்டிய தருமமார்க்கத்தை நீர் கைப்பற்றுக. நீர் எனக்குப் பூஜ்யராவதுமன்றி, என்னைப் பரிபாலிக்குமுரிமையுடையவருமாகின்றீர்' என இவ்வாறு வணங்கிக் கூறினள்.

அரம்பை யிவ்வண்ணம் உரைசெய்ததுகேட்டுத் தசக்கிரீவன் வணங்கி விடைகூறுகின்றனன்: 'கண்மணி! நீ யெனக்கு மருமகள் முறையென மொழிந்தது மெய்யே. ஒரேபுருஷனைக் கைபிடித்த கற்புடைப் பெண்டிர்களுக்கல்லவோ இம்முறை? தேவஸ்திரீகளுக்கு அந்த நியமமில்லையென்பது யாவர்க்குந் தெரிந்தவிஷயமே. அப்ஸரஸ்திரீகளுக்குப் பதியின்னானென்பதில்லை; ஒருத்தியை ஒருவனே வைத்துக்கொள்வதுமில்லையே' அத்தன்மையானவருக்கு முறையேது?' என வுரைத்துக் காமவெறி தலைக்கேறியவனாகி, அவ்வரம்பையைப் பலாத்காரஞ்செய்து அந்தக் கற்பாறையிலேயே படுக்கச்செய்து அவளிட மின்பம் நுகரலாயினன்.

அநந்தரம் அவனால் விடப்பட்ட அவ்வணங்கு யானையால் கலக்குண்ட மடுப்போலாகி, பூக்களும் பூணாரங்களும் அலங்கோலமாய், வாயுவினாலலைப்புண்ட பூங்கொடியெனக் கூந்தல் அவிழ்ந்து தொங்கக் கைகள் நடுங்க, அங்கமெல்லாம் வியர்த்து வெட்கித் தலைகுனிந்து அவ்விடம்விட்டுச் சென்று, அதே கோலமாய் அஞ்சிக் கைகூப்பிக்கொண்டு தன் நாயகனான நளகூபரனது தாள்களில் வீழ்ந்து பணிந்தனள்.

மகாமகிமைபெற்றவனான நளகூபரன் அவளது நிலையைக்கண்டு, 'கண்ணே, இதென்ன கோலம்! எதற்காக நீ இவ்வண்ணம் எனது பாதங்களில் வீழ்ந்து பணிந்தனை?' என வினவ, அவள் பெருமூச்சுடனே உடல்நடுங்கக் கைகூப்பிக்கொண்டு நடந்த வரலாற்றை யுள்ளபடி உரைசெய்யலாயினள்: 'ஹே தேவ! தேவலோகஞ் செல்லப் புறப்பட்ட தசக்கிரீவன் இன்றிரவு தன் சேனை

யுடன் இம்மலைமீது வந்திறங்கினான். யான் அவ்வழியே உம்மிடம் புறப்பட்டுவருதல் கண்டு என்னை யவன் கையைப்பிடித்து மறித்து, நீ யாரிடஞ் செல்லுகின்றனையென வினவினான். அதற்கு யான் உள்ளபடி மறுமொழி கூறினேன். அவன் காமமோஹத்தினால் மெய்ம்மறந்து யான் சொல்லியதைச் சிறிதும் செவிக்கொண்டிலன்; யான் உனக்கு மருமகளாயிற்றே எனவும் வணங்கி வேண்டினேன். எல்லாவற்றையும் அவன் அலக்ஷியம்செய்து பலவந்தமாய் என்னைப் பிடித்திழுத்தான். இந்தப் பிழையை நீர் பொறுத்தருளுமாறு வேண்டுகின்றேன். புருஷனுடைய பலம் பெண்களுக்கு இல்லையாதலின், யான் அவன்கையினின்று விடுபட்டுவர வல்லமையற்றவளாயினேன்' என்று கூறிப் புலம்பினாள்.

இராவணன் அவ்வாறு அரம்பையை அலங்கோலஞ் செய்ததுகேட்டுக் குபேரனுடைய குமாரன் கோபமதிகரித்துச் சற்றுநேரம் தியானித்து யோக திருஷ்டியால் நோக்கினான். அரம்பை யுரைத்தவை யாவும் உண்மையெனவே விளங்கின. உடனே அவன் கோபத்தினால் கண்கள் சிவந்து தீர்த்தத்தைக் கையிலெடுத்து, அரம்பையை நோக்கி, 'பெண்மணி! அப்புலையன் தன்மீது காதல்கொள்ளாத உன்னை இவ்வண்ணம் பலாத்காரம் செய்தமையின், இனி யவன் இவ்வாறு தன்மே லாசைகொள்ளாத யுவதிகளை இச்சியாதவண்ணம் செய்துவிடுகின்றேன்' என்று கூறி, 'இனிமே லிவ்வாறு தசக்கிரீவன் காமாதுரனாகித் தன்மேல் விருப்பமுறாத வனிதைகளை வருத்துவானாகில், அவனது சிரம் பலசுக்கலாக வெடிக்கலாகும்' எனச் சாபமளித்தனன். நளகூபரன் இவ்வாறு மிகவும் உக்கிரமாகச் சபித்தவளவில், தேவ துந்துபிகள் முழங்கின; வானத்தினின்று பூமாரி பொழிந்தது. உலகத்திற்கு நன்மை யுண்டாயினதென்றும், அவ்விராக்கதனுக்கு மிருத்தியு வந்து நெருங்கியதென்றும் உணர்ந்து, நான்முகன் முதலான தேவர்கள் மகிழ்ச்சிகொண்டனர்; ரிஷிகளும் பிதிருக்களும் பேரானந்தமடைந்தனர். கேட்போர் நடுக்கமுறத்தகுவதான இந்தக் கொடிய சாபத்தைக் கேள்வியுற்றுத் தசாநநன், தன்மீது * மனங்கொள்ளாத மாதுகளின்மீது இனி மோஹங்கொள்ள லாகாதெனத் துணிவுகொண்டனன். இராவணன் பிடித்துவந்த பதிவிரதைகளான பெண்கள் பலரும் நளகூபரனது சாபத்தைக் கேள்வியுற்று மனக்கவலை நீங்கி மகிழ்ச்சியடைந்தார்கள்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் முப்பத்தோராவது ஸர்க்கம்

முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்.

இராவணன் தேவலோகஞ் சேர்ந்ததும்,
அதுகண்டு தேவேந்திரன் பயந்து தன்னைக் காத்தருளுமாறு
ஸ்ரீமகாவிஷ்ணுவினிடஞ் சென்று வேண்டிக்கொண்டதும்,
அவர் இராவணனுடன் எதிர்த்து அவனைச் சங்கரிக்கத் தாம் பிறகு அவதரிப்பதாக் கூறி,
தற்காலம் இந்திரனே நேராக எதிர்த்து யுத்தஞ்செய்யுமாறு சொன்னதுகேட்டு
அவன் அங்ஙனமே யுத்தஞ்செய்ய ஆரம்பித்ததும்,
அதில் சுமாலியென்னும் இராவணனது மாதாமஹ னிறந்ததும்.

---

அநந்தரம் தசக்கிரீவன் கைலாஸகிரியைக் கடந்து இந்திரலோகத்தை நோக்கிச் சென்றனன். கடல்கடையுமளவிலுண்டாகும் கோஷமென, இராவணனுடைய சேனையெழுந்துசெல்வதனாலுண்டாகிய சத்தம் அப்பொழுதே தேவலோகத்தை யெட்டியது. அதுகேட்டுத் தேவேந்திரன் தன்மீது இராவணன் படையெடுத்து வருவதுணர்ந்து சிந்தைகலங்கியவனாகி ஆஸநத்தை விட்டலறியெழுந்து ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், விச்வேதேவர்கள், ஸாத்தியர்கள், மருத்துக்கள் முதலாய தேவர்களனைவரையும் அருகே அழைத்து, 'துராத்துமாவான தசாநநன் நம்மை யெதிர்க்கவருகின்றனன்; அவனுடன் அமர்புரிய நீவிர் எல்லோரும் ஆயத்தமாகுக' என ஆக்ஞாபித்தனன். போர்புரிவதில் தேவேந்திரனுக்கு இணையானவர்களான அத்தேவர்கள் அனைவரும் அங்ஙனமே போர்முயற்சி கொண்டு பராக்கிரமத்துடனே நின்றனர்.

தேவர்களுக்கு இங்ஙனம் கட்டளையிட்டனனாயினும் தேவராஜன் இராவணனிடம் மிகவஞ்சினவனாகி அகங்குலைந்து, உடனே ஸ்ரீமஹாவிஷ்ணுவினது ஸன்னிதானஞ் சென்று தனக்கு வந்த விபத்தை அவரிடம் விண்ணப்பஞ் செய்யலாயினன். 'ஸ்ரீமஹாவிஷ்ணோ! யான் யாது செய்வேன்? வீரிய சௌரியபராக்கிரமங்களிற் சிறப்புற்றவனான இராக்ஷஸராஜன் அமராடவருகின்றனன். அவன் மற்றொன்றினாலும் மேன்மைபெற்றவனல்லனாயினும், விசேஷமான வரங்கள் பெற்று வலிகொண்டிருக்கின்றனன்; தாமரையோன் தந்தவரங்களை வீணாக்கி அவர் பேச்சைப் பொய்யாக்கலாகாதே. இதுவிஷயத்தில் தேவரீரே ஏற்ற உபாயமருளிச்செய்தல் வேண்டும். நமுசி, விருத்திரன், பலி, நரகாசுரன், சம்பராசுரன் ஆகிய இவர்களை அடியேன் எவ்வண்ணம் தேவரீருடைய பராக்கிரமத்தையே பெருந்துணையாக்கொண்டு பறக்கடித்தனனோ, அங்ஙனமே இவ்வரக்கனையும் அஞ்சியோடச் செய்தல்வேண்டும். ஹே தேவ! ஹே தேவேச!! மதுசூதன!! இம்மூவுலகத்திலும் தேவரீரொருவரையன்றி எமக்குத் தஞ்சமானவன் மற்றொருவனுளனோ? தேவரீரேயன்றோ ஸ்ரீமானான நாராயணன்; திருவுந்தித் தாமரையினின்று திசைமுகனைத் தந்தருளிய புராணபுருஷன் தேவரீரேயன்றோ; தேவரீராலேயன்றோ இவ்வுலகங்கள் அனைத்தும் நிலைபெறச்செய்யப்பட்டது; அடியேன்

தேவேந்திரபதத்தில் நிலைபெற்றதும் தேவரீராலன்றோ; சராசரங்களுள்ளிட்ட இம்மூவுலகங்களும் படைக்கப்பட்டது தேவரீராலன்றோ? யுகமுடிவில் இவையனைத்தும் தேவரீரிடமே யன்றோ லயமாகின்றது? ஆகலின், ஹே தேவதேவ! அடியேன் இராவணனை வெற்றிகொள்ளும் உபாயம் இன்னதென அருளிச் செய்யவேண்டுகின்றேன். தேவரீரே திருவாழி ஆணையாக்கொண்டு இவ்வரக்கனுடன் அமராடவெழுந்தருளலாமோ? என விண்ணப்பஞ் செய்தனன்.

தேவராஜன் இவ்வாறு விளம்பியதுகேட்டு ஸகலலோகநாதனான நாராயணன் திருவாய்மலர்கின்றனன்: 'ஹே ஸுரேச்வர! இராவணனுக்காக நீ இவ்வண்ணம் அஞ்சவேண்டுவதின்று. ஆயினும் யான் கூறுவதைக்கேள். துஷ்டாத்துமாவான இவன் தேவாசுரர்களாலும் வெல்வதற்கரியவன். இவனை வதைக்க விருப்புற்று அனைவரும் ஒன்றுகூடி எதிர்த்தவரினும் வெல்லப்படாதவண்ணம் இவன் விசேஷமான வரங்கள் பெற்றிருக்கின்றனன்; இவன் வலி மிகுந்தவனாதலின் மிக்கவும் தீமைகள் செய்வான். அன்றியும் இவன் இங்கு புத்திரனுடனே வந்திருக்கின்றனன். இராவண புத்திரனுடைய போராற்றலைப் பிறந்தபோதே கண்டோம். இந்த ராக்ஷஸனுடன் அமர்புரியுமாறு என்னையெழுந்து செல்லவேண்டினையே; அஃது இத்தருணம் செயற்பாலதன்று; விஷ்ணு செருக்களம் புகுவானாகில் சத்துருஸம்ஹாரஞ் செய்யாது திரும்பானன்றோ? இப்பொழுது இராவணன் வெல்வதற்கரியனாக வரம் பெற்றுத் தனக்குக் காப்புச் செய்துகொண்டிருக்கின்றானாதலின், நம் மனோரதம் இத்தருணம் ஈடேறுவதின்று. ஆயினும், ஹே தேவேந்திர! உன் எதிரிலேயே யான் இப்பொழுது ஒரு பிரதிஜ்ஞை செய்கின்றேன்: இவ்விராவணனுக்கு மரணம் உண்டாகு நிமித்தமே இனி யான் ஒரு அவதாரஞ்செய்து, இவனைக்குடும்பத்துடனே கொலைசெய்துவிடுகிறேன். அக்காலம் அதிசீக்கிரமே ஸம்பவித்துத் தேவர்கள் அனைவரும் ஆநந்தமுறலாகும். தேவராஜனே! யான் இப்பொழுது உன்னுடன் உண்மையுரைத்தேன்; உடனே நீ படைகொண்டு சென்று அரக்கர்களுடன் அஞ்சாது அமர்புரிக' என அருளிச் செய்தனர்.

விஷ்ணுமூர்த்தி இவ்வாறு மொழிந்ததுகேட்டு ருத்திரர்கள், ஆதித்தர்கள், வசுக்கள், மருத்துக்கள், அச்விநீதேவர்கள் ஆகிய பலரும் யுத்தஸன்னத்தர்களாகி அதிசீக்கிரமே பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டு அரக்கர்களையெதிர்த்துச்சென்றனர். இவர்கள் இங்ஙனமாக, இதற்கிடையில் அரக்கர் படையிலே பெரியகோஷமுண்டாயது. மஹாசூரர்களான அவ்விராக்ஷதர்கள் ஒருவரையொருவர் உற்சாகமுறுமாறு அகமகிழச்செய்து கொண்டு அமர்க்களம் நோக்கி யெதிர்த்துவரலாயினர். அரக்கர்களது அளவற்ற சேனையைக்கண்டு தேவர்களுடைய திரண்டசேனை நடுக்கிட்டது. உடனே இருபடையும் நெருங்க, தேவதைகளுக்கும் இராக்ஷதர்களுக்கும் பெரிய கோஷத்துடனே பயங்கரமான போர் ஆரம்பமாயது. அக்காலையில் இராவணனது அமைச்சர்களான மாரீசன், பிரஹஸ்தன், மஹாபாரிசன், மஹோதரன், அகம்பனன், நிகும்பன், சுகன், ஸாரணன், சங்கிராதி, தூமகேது, மஹாதம்ஷ்டிரன்,

கடோதரன், ஜம்புமாலி, மஹாஹ்ராதன், விருபாக்ஷன், சுப்தக்னன், யஞ்ஞகோபன், துர்முகன், தூஷணன், கரன், திரிசிரன், கரவீராக்ஷன், சூரியசத்துரு, மஹாகாயன், அதிகாயன், தேவாந்தகன், நராந்தகன் என்னும் பயங்கரமான தோற்றமுள்ள மஹாசூரர்களான பல இராக்கதர்களுடனே கூடி இராவணனது மாதாமஹனான சுமாலியென்பவன் தேவர்களது படையிற் புகுந்து, பெருங்கோபத்துடனே பலபடைக்கலங்களை விடுத்து, மேகங்களை வாயு அதமாக்குவதுபோல் அதஞ்செய்யலாயினன். அரக்கர்களால் அடியுண்ட தேவர்படை, சிங்கத்தினால் துரத்தப்பட்ட சிறுவிலங்குகளென, நாற்றிசையுமோடி யொளிக்கலாகியது.

இஃது இங்ஙனமாக, வசுக்களில் எட்டாவது வசுவான ஸாவித்திரனெனப் பெயர்பெற்ற சூரன், கூரியவாள் கைக்கொண்டவீரர்கள் பலர் சூழவெழுந்து, எளிய் மிருகங்களை அரிமா வெருட்டுமாறு அரக்கர்படையை யஞ்சியோடச்செய்துகொண்டு போர்க்களம் புகுந்தனன். அங்ஙனமே துவஷ்டா, பூஷா என்னும் ஆற்றலுடையோரான இரண்டு ஆதித்தியர்கள் அஞ்சாததீரத்துடனே அரக்கர் படையை யெதிர்க்கலாயினர். போரில் ஒருகாலும் பின்வாங்குவதில்லையென இராக்கதவீரர்களுக்குண்டாகிய புகழைக் கேட்கப்பொறாதவர்களாகிக் கோபமதிகரித்துத் தேவர்கள் அனைவரும் இராக்கதர்களுடன் யுத்தஞ்செய்யலாயினர். அங்ஙனம் அமர்க்களம்புகுந்த அமரர்களை அரக்கர்கள் அனைவரும் அநேகவிதமான அம்புகளையெய்து அதஞ்செய்யலாயினர். தேவர்களும் பராக்கிரமப் பெருமை பெற்ற பயங்கரர்களான பிசிதாசனர்களின்மீது பற்பல படைக்கலங்களைப் பெய்து அவர்களை யமலோகமனுப்பலாயினர்.

இவர்கள் இவ்வண்ணம் உக்கிரமாக அமர்புரியுமளவில், ஹே ராம! சுமாலியென்னும் இராக்கதன் சினமூண்டு பல படைக்கலங்கள் கைக்கொண்டு போர்க்களம் புகுந்து, பாணவருஷம் வருஷித்தும், சூலம் பிராஸம் முதலான பயங்கரமாகிய படைக்கலங்களைப் பொழிந்தும் தேவர்களின் படைகளைப் பறந்தோடச்செய்தனன். அவற்றால் அடியுண்ட அமரர்கள் நிலைகுலைந்து அஞ்சியோடினர். சுமாலியினது சௌரியத்திற் காற்றாதவராகி விண்ணவர்கள் இவ்வாறு வெருவியோடுவது கண்டு எட்டாவது வசுவான ஸாவித்திரனென்பவன் சினமூண்டு சேனைகள் புடைசூழச் சென்று, உக்கிரத்துடனே அம்பு பொழிந்து அமர்புரியும் அவ்வரக்கனை ஆற்றலுட னெதிர்க்கலாயினன். அப்பொழுது போரில் பின்வாங்காத வீரர்களான வசு, சுமாலி யென்னு மிருவருக்கும், அனைவரும் அஞ்சி நடுங்குமாறு, பயங்கரமான போர் ஆரம்பமாகியது. அக்காலையில் மஹாவீரனான வசுவானவன் வீரியமுள்ளனவான வாளிகளைவிடுத்துச்சுமாலியினது சிறந்த ரதத்தைக் கணப்பொழுதில் சின்னபின்னமாக்கினன். தேரைத் தொம்ஸமாக்கியபின்னர் ஸாவித்திரன் சுமாலியை வதைத்தற்பொருட்டுக் காலதண்டமென மிகக் கொடியதாய்க் கனலுக் கொப்பாக விளங்கும் தண்டாயுதமொன்றைக் கையிலெடுத்துச் சுமாலியின் முடிமீது விடுத்தனன். கொள்ளிக்கட்டை போன்றதான அந்தக்கதாயுதம் சுமாலியினது

சிரத்தில் வீழ்கையில், தேவேந்திரன் மேருவரைமீது வீழ்த்திய வஜ்ராயுதமென விளங்கியது. அஃது அவன்மீது விழுந்தவளவில், அவனுடம்பில் முடியென்றும், மாமிசமென்றும், எலும்பென்றும் யாதொன்றும் தோற்றிலது; அவனது சரீரம் முழுமையும் அங்ஙனமே நீறுகிவிட்டது. சுமாலி இவ்வாறு சாம்பலானது கண்டு இராக்கதர்கள் அனைவரும் அஞ்சி வசுவினெதிரே நிற்க வல்லமையற்றவர்களாகி வெருவி வீரிட்டுக்கொண்டு புறங்காட்டிநாற்புறமும் ஓடலாயினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்திரண்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## முப்பத்துமூன்றுவது ஸர்க்கம்.

இராவணன்மகனும் இந்திரன்மகனும் அமராடியதும்,
அதிலிந்திரன்மக னிளைப்புற்றதுகண்டுஅவனது மாதாமகன்
அவனைத் தூக்கிக்கொண்டு போய்விட்டதும்,
இந்திரனு மிராவணனும் எதிர்த்து யுத்தஞ் செய்ததும்.

சுமாலி யிவ்வாறு வசுவினுல் நசித்து நீறுபின்னதையும், அதுகண்டு தன் சேனை தேவர்களால் அடியுண்டு அஞ்சி யோடிப்போனதையும் இராவணனது மகனுன மேகநாதன் கண்ணுற்றுக் கோபமதிகரித்து அவர்களை யங்ஙனம் ஓடவொட்டாது மடக்கி, நிலைகொள்ளுமாறு நிறுத்தி, கருதியவாறு செல்லவல்ல வன்னிவர்ணமான ரதத்தின்மீதேறி, உலர்ந்த வனத்தை அக்கினி தூரத்துமாறு, தேவசேனையைத் துரத்தலாயினன். ஆயுதபாணியாய் எதிர்த்து வருகின்ற மேகநாதனைக் கண்டவளவிலே தேவர்கள் யாவரும் திசைகள்தோறும் ஓடி யொளிக்கலாயினர்; ஒருவரேனும் அவனெதிரே நிற்கத் துணிவுகொண்டிலர்.

அதுகண்டு தேவேந்திரன், பயந்து புறங்காட்டி யோடுகின்ற போர்வீரரெல்லோரையும் அழைத்து அஞ்சலென்று அபயமளித்து, 'நீவிர் வெருவி வேகங்கொண்டோடுவதை இவ்வளவோடு நிறுத்தித் திரும்பிவருக; போரிற் பின்வாங்காத வீரனுன எனது புத்திரன் ஜயந்தன் போர்புரிய வருகின்றனன்' என வுரைத்தனன். உடனே ஜயந்தன் அற்புதமான ரதத்திலேறிப் போர்புரிய வெழுந்தனன். அதுகண்டு தேவர்கள் அனைவரும் அவனைச் சூழ்ந்துகொண்டு அமர்க்களம் புகுந்து இராவணனது புத்திரனுன மேகநாதனைப் புடைக்கலாயினர். தேவர்களுக்கும் இராக்கதர்களுக்கும் மகத்தான யுத்தம் ஆரம்பமாகியது; தேவேந்திரனுடைய குமாரனும் இராவணனுடைய குமாரனும் கைகலந்து கொடிய யுத்தம் செய்யலாயினர். அக்காலையில் மகேந்திரனது ஸாரதியான மாதலியின் மகன் மகேந்திரன் மகனுக்கு ஸாரதியாயிருந்தனன். கோமுகனெனப் பெயர்பெற்ற அந்த ஸாரதியின்மீது மேகநாதன் பொற்பூண்கள் பூட்டிய பாணங்களைப் பொழியலாயினன். அதுகண்டு இந்தி

ராணியின் புத்திரனை ஜயந்தனும் மேகநாதனது தேரோட்டியைச் சரங்களைத் தூரந்து துன்புறுத்தலாயினன். அதனை யுணர்ந்து இராவணன் மைந்தன் சினமூண்டு மேகவூர்தி மகன்மீது அம்புமழை பொழிந்தனன்; அதனால் ஜயந்தனும் கோபமதிகரித்துக் கண்களை விழித்து நோக்கி மேகநாதன் மீது சரமாரி பொழியலாயினன். அப்பொழுது இராக்ஷஸராஜன்மகன் கதம்விஞ்சி சதக்னி, முஸலம், பிராஸம், கதை, கத்தி, பரசு முதலான கூரிய முனையுள்ள பல படைகளையும், மிகப் பெரிய மலைமுடிகளையும் தேவர்களுடைய படைகளின்மீது விடுக்கலாயினன். அதுகண்டு எல்லாவுலகங்களும் நடுக்கமுற்றன. இவ்வாறு இராவணன்மகன் சத்துருசேனைகளைச் சின்னபின்னமாகச் செய்துகொண்டிருக்கையில், அவனதுமாயையினால் மிகப் பயங்கரமான பேரிருள் ஒன்று உண்டாகியது. அதுகண்டு ஜயந்தனைச் சூழ்ந்துகொண்டிருந்த தேவசேனை யாதும் தோற்றாது துன்புற்றுத் தவிக்கலாகியது. அப்பொழுது இன்னான்அரக்கனெனவும், இன்னான் அமரனெனவும் புலப்படுதல் அரிதாகியது; அச்சேனைகள் திக்குத்திசை தெரியாது நாற்புறமுமோடலாயிற்று. தேவர்கள் தேவர்களையே புடைக்கலாயினர்; அரக்கர் அரக்கர்களையே அதஞ்செய்யலாயினர். அந்தப் பேரிருளில் யாதும் கட்புலனாகாது மறைய, பலர் மதிமயங்கி அவ்விடம்விட் டோடலாயினர்.

இஃது இங்ஙனமான தருணத்தில், ஜயந்தனது மாதாமஹனான புலோமா என்னும் தைத்தியேந்திரன் எவர்க்கும் தோற்றாது அப்போர்க்களம் புகுந்து தனது தௌஹித்திரனைக் கையிலெடுத்துக்கொண்டு விரைந்தோடிக் கடலிற் புகுந்தனன். ஜயந்தன் காணாமற்போனது கண்டு தேவதைகள் அனைவரும் வருந்தி விசனமடைந்து வெருவி யோடினர். அத்தருணத்தில் இராவணன் மகன் அதிக கோபத்துடனே தனது சேனைகள் சூழச் சென்று, தேவசேனைகளை யடித்தோட்டி ஆநந்தகோஷஞ் செய்தனன்.

தனது குமாரன் காணாமற்போனதையும், மேகநாதன் மூர்க்கங்கொண்டு தேவசேனைகளை யடித்தோட்டுவதையும் கண்டு தேவேந்திரன், உடனே தனக்குத் தேர் சித்தஞ்செய்யுமாறு தன் ஸாரதியான மாதலிக்குக் கட்டளையிட்டனன். தக்ஷணமே பரிகள் பூட்டிய மிகப் பயங்கரமான பெரிய ரதத்தை மாதலி கொண்டுவந்து நிறுத்தினன். அந்த ரதத்திலேறித் தேவேந்திரன் போருக்குப் புறப்படுகின்றகாலையில், அவனெதிரே மிகப் பெரிய மேகங்கள் காற்றுடனே கூடி மின்னி முழங்கின; பலவகை வாத்தியங்கள் முழங்கின; கந்தருவர் கானஞ்செய்தனர்; அப்ஸரஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தனர்; ருத்திரர்கள், வசுக்கள், ஆதித்தியர், ஸாத்தியர், மருத்துக்கள் ஆகிய பலருடனும் கூடித் தேவராஜன் போர்க்கோலங்கொண்டு புறப்பட்டனன். அப்பொழுது காற்றுக் கொடுமையாக வீசியது; அருக்கன் ஒளியிழந்தவனாயினன்; எரிகொள்ளிகள் ஆகாயத்தினின்று விழலாயின.

இவன் இவ்வாறிருக்கையில், தசக்கிரீவன் மிகுந்த பராக்கிரமத்துடனே, விச்வகர்மாவினால் நிருமிக்கப்பட்ட திவ்வியமான ரதத்தின்மீதேறினன். அந்த ரதத்தைச் சுற்றிலும் மிகப்பயங்கரமான ஸர்ப்பங்கள் சூழ்ந்துகொண்டிருந்

தன. அவற்றின் மூச்சுக்காற்றினால் அஃது அப்போர்க்களத்தில் பற்றி
யெரிவதுபோலப் புலப்பட்டது. அத்தன்மையதான தேரின்மீது இராவணன்
அசுரரும் இராக்கதரும் பலர்புடைசூழவெழுந்து, தன்மகனை வேண்டாமென
மறுத்துத் தானே தேவேந்திரனை யெதிர்த்துச் சென்றனன். தந்தைமொழிந்
ததுகேட்டு மேகநாதன் போர்முயற்சியொழிந்து ஒருபுறமாயுட்கார்ந்தனன்.
அக்காலையில் தேவர்களுக்கும் இராக்கதர்களுக்கும் மிக உக்கிரமான யுத்தம்
ஆரம்பமாகியது; மேகங்கள் மழைபொழியுமாறு அவர்கள் அம்புகளைப்
பொழியலாயினர். அப்பொழுது மஹாதுஷ்டாத்துமாவான கும்பகர்ணன்
பற்பல படைக்கலங்களைக் கைக்கொண்டு இன்னாருடன் அமர்தொடுப்ப
தென்று உணராதவனாகித் தனக்கெதிரிற்பட்ட பலருடனும் போர்புரியத்
தொடங்கினான். தன்கையிலகப்பட்ட தேவர்கள் அனைவரையும், தந்தங்களா
லும், புஜங்களாலும், பாதங்களாலும், சக்தி தோமரம் முதலான படைக்கலங்
களாலும், பலபகுதிகளாலும் கடித்துப் புடைத்து உதைத்துப் பிடிக்க
லாயினான்.

அப்பொழுது கும்பகர்ணன் உக்கிரமுடையோரான ருத்திரர்களுடனே
போர்புரியத்தொடங்கி, அவர்களது சஸ்திரங்களால் செறுக்குண்டு உடம்பெங்
கும் உதிரமொழுக அட்டஹாஸஞ்செய்கையில், மின்னி முழங்கி மழைபொழி
யும் மேகமெனத் தோற்றினான். பிறகு அரக்கர்படை அமரர்களுடன் அமர்
தொடுக்க, மருத்துக்கள் பலசரங்களைத் தூர்த்து அரக்கர்படை ஓட்டங்
கொள்ளுமாறு செய்தனர். புடைபட்டவர்களிற் சிலர் உடல் கண்டதுண்ட
மாகிப் பூமியில் வீழ்ந்து புரண்டனர்; சிலர் அவரவரேறிய வாஹனங்களின்
மீதே வதையுண்டு வீழ்ந்தனர்; தேர்களிலும் தந்திகளிலும், கோவேறு
கழுதைகளிலும், ஒட்டைகளிலும், பன்னகங்களிலும், பரிமாக்களிலும்,
பிசாசமுகங்களிலும், சிம்சுமாரங்களிலும், வராஹங்களிலும் ஏறிவந்த இராக்
கதவீரர்கள் பலரும் அந்தந்த வாஹனங்களை அங்ஙனமே ஆலிங்கனஞ்
செய்துகொண்டு தேவர்களாலும் தேவேந்திரனாலும் புடைக்கப்பட்டவர்
களாகிப் பிராணனை யொழித்தனர். அக்காலையில் அவர்கள் புரிந்த போர்த்
தொழில் மிகவும் அற்புதமாகத் தோற்றியது. இராக்கதர்கள் திரள்திரளாக
மடிந்து மண்மீது வீழ, அவர்களின் உடலினின்றும் உதிரவெள்ளம் ஆறாய்ப்
பெருகியது; அவ்வெள்ளத்தில் கழுகு, கூளி முதலான பலபறவைகள் வந்து
நிறைந்தன; அந்த நதியில் மிதக்கும் பல சஸ்திரங்களே முதலைகளென
விளங்கின.

தனது படைமுற்றிலும் இவ்வாறு விபுதர்களால் வதைக்கப்படுவதுகண்டு
தசக்கிரீவன் கோபமுற்றுப் பராக்கிரமத்தை மேற்கொண்டு அக்ஷணமே சேனா
ஸமுத்திரத்திற்புகுந்து தேவர்களை வதைசெய்துகொண்டே தேவேந்திரன்மீது
பாய்ந்தனன். இராவணன் அவ்வாறு எதிர்த்துவருதல் கண்டு தேவேந்திரன்
மகத்தான ஒரு கார்முகத்தைக் கைக்கொண்டு நாணேறிட்டு நாணோசை
செய்தனன். இந்திரன் அங்ஙனம் தனுஷ்டங்காரஞ் செய்தவளவில், பகை
வர் பலரும் பயந்தோடுமாறு பெரிய கோஷமுண்டாகிப் பத்துத் திசைகளி

லும் பரவியது. இந்திர னிவ்வாறு தனது மகத்தான கோதண்டத்தைக் காதளவிழுத்து, அக்கினிக்கும் அருக்கனுக்கு மிணையான உக்கிரமுடையன வாகிய அம்புகளை இராவணது முடியிற் பொழிந்தனன். அதுகண்டு தசக்கிரீவன் சிறிதேனும் சிந்தைகலங்காதவனுகிச் சக்கரன்மீது சரமாரி பொழிந்தனன். அவ்வாறே மற்றத்தேவர்களு மிராக்கதர்களும் ஒருவரை யொருவர் எதிர்த்து யுத்தஞ்செய்யலாயினர். இவர்கள் இவ்வண்ணம் போர்புரிகையில், அவர்கள் விடுத்த வாளிகள் விண்ணிடையெங்கும் படர்ந்து பேரிருளுண்டாகி யாவும் கட்புலனுகாது மறைந்துபோயின.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்துநான்காவதுஸர்க்கம்.

இந்திரராவணயுத்தத்தில் இந்திரன் இராவணனைப் பிடித்துக் கட்டியதும், அதுகண்டு இராவணன்மகன் இந்திரனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு தன் சேனையுடனே இலங்காபுரம் போய்ச் சேர்ந்ததும்.

இங்ஙனம் மகத்தான அந்தகார முண்டாயவளவிலும், தேவர்களும் இராக்கதர்களுமாகிய இருதிறத்தவரும் ஊக்கங் கைவிடாதவர்களாகி, ஒருவரை யொருவர் புடைத்துக்கொண்டு பெரும்போர் புரிந்தனர். அக்காலையில் தேவசேனையால் அரக்கர்களின் அமிதமான படை யடிபட்டுப் பத்திலொரு பகுதி போக மற்றது மடிந்து யமலோகஞ் சேர்ந்தது. அந்த அந்தகார யுத்தத்தில் தேவர்களு மிராக்கதர்களும் இவர் இன்னுரெனக் கண்டறியத்திறமின்றித்தவித்தனர். இந்திரன், இராவணன், மேகநாதன் ஆகிய மூவருமாத்திரமே அந்தப் பேரிருளில் மோகங்கொள்ளாது முயற்சிகொண்டிருந்தனர்.

தனது பெரும்படை இவ்வாறு வதையுண்டது கண்டு இராவணன் மிகக் கோபங்கொண்டவனுகி அட்டஹாஸஞ் செய்தனன். உடனே அவன் அதிகமான ஆக்கிரகங்கொண்டு ரதத்தின்மீதிருந்த ஸாரதியை நோக்கி, 'ஹே ஸாரதே! நீ இப்பொழுது நமது ரதத்தை எதிரிசேனையை ஊடறுத்தோட்டி அதன்கடைவரையுஞ் செலுத்துக; தேவர்கள் அனைவரையும் இக்கணமே யான் எனது பராக்கிரமத்தை வெளியிட்டுப் பயங்கரமான பற்பல படைக்கலங்களைப் பெய்துப் பிரேதராஜனிடம் அனுப்பிவிடுகிறேன். தேவர்கோன், தனுதிபதி, வருணன், யம னுகிய யாவரையும் வதைத்து வெற்றிகொண்டு அனைவருக்கும் மேலாக வீற்றிருப்பேன். விசனத்தை விட்டுவிடுக; விரைவில் வாஹனத்தைச் செலுத்துக; மறுத்துமொருதரம் யான் உனக்கு உறுத்தி யுரைக்கின்றேன்; தேவர்படை எவ்வளவுதூரம் பரவியுள்ளதோ, அவ்வளவுதூரம் ரதத்தை யோட்டுக. இப்பொழுது யாமிருக்கின்ற விடம் நந்தனவனமன்றே; இது தொடங்கி உதயபர்வதமளவும் இப்பெரும்படை பரந்திருக்கின்ற தாதலின், அதுவரையில் ரதத்தை யோட்டி என்னை யவ்விடத்து விடுக' என வுரைத்தனன். இவ்வாறு இராவணன் கட்டளையிட்

டதுகேட்டுத்தேரோட்டி துரகங்களை வாயுவேகமாகச் செல்லுமாறு அதட்டித் தேவர்சேனையினிடையே ரதத்தைச் செலுத்திக்கொண்டு போயினன்.

இங்ஙனம் தசக்கிரீவன் துணிவுகொண்டது தெரிந்து தேர்மீது நின்ற தேவேந்திரன் அமர்க்களத்திலுள்ள அமரர்களனைவரையு நோக்கி, 'தேவர்காள்! யான் சொல்வதைச் செவிகொடுத்துக் கேளுங்கள் : இப்பொழுது என் புத்திக்குத் தோற்றுவது யாதெனின், பத்துத்தலையனான இவ்வரக்கனை யாம் உயிருடனே பிடித்துக்கொள்ளல்வேண்டும்; இவன் இயற்கையிலேயே அதிகமான வலி வாய்ந்தவன்; இவன் அளவற்ற சேனைகளுடனே, பருவகாலத்திற் பெருக்கெடுத்த கடலென, மிக விருத்தியடைந்தவனாகி, வாயுவேகமான ரதத்திலேறி எதிர்த்துவருகின்றனன். யாமிப்பொழுது இவனை வெல்லவல்லோமல்லோம்; இவன்வேண்டிய வரங்கள்பெற்று வீரியமதிகரித்தவனாகி எவரிடத்தும் அச்சமொழிந்திருக்கின்றனன்; ஆதலின் இவனைப் பிராணனுடனே பிடித்துக் கொள்வோம். நீவிர் அனைவரும் அமர்புரிதலில் ஊக்கமுடையவர்களாகுக; மஹாபலியைக் காவலிலிட்டு யாமெங்ஙனம் உபத்திரவமின்றி மூவுலகங்களையும் பரிபாலித்துவருகின்றோமோ, அங்ஙனமே இந்தப் பாதகனையும் பிடித்துக் கட்டிக் காவல்செய்துவிடக் கருதுகின்றேன்' என வுரைத்து, இராவணனிருக்கும் அவ்விடத்தைவிட்டு மற்றோரிடஞ் சென்று, இராக்கதர் அனைவரும் அஞ்சியோடுமாறு அதியுக்கிரமாக அமர்புரியலாயினன்.

அக்காலையில் தசக்கிரீவன் வடபுறமாக வந்து செருக்களம் சேர்ந்தனன்; தேவேந்திரன் தென்புறமாகச் சென்று செருச்செய்யலாயினன். இராக்கதராஜன் தேவசேனையின்மீது சரமாரி பொழிந்துகொண்டே நூறு யோஜனை தூரம் சென்றனன். தனதுபடை தசாநநனால் நாசமுறுவது கண்டு சதக்கிரது சிந்தை கலங்காதவனாகி, தசகந்தரனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு போயினன். இராக்கதராஜன் தேவராஜன்கையிற் சிக்கியதுகண்டு, 'அந்தோ! அந்தோ!! யாமழிந்தோம்!' எனத் தானவரு மிராக்கதரும் கூக்குரலிட்டுக் கதறினார்கள்.

அதுகண்டு மேகநாதன் மிகுந்தகோபமுடையனாகி மிகப் பயங்கரமாகப் பரவிய தேவசேனையிற் புகுந்து, முன்பு மஹேச்வர னளித்த மாயையை மேற்கொண்டு ஒருவர்கண்ணுக்கும் புலப்படாதவனாகி விரைந்து சென்றனன். செல்லுகையில், தேவர்கள் பலர் எதிர்ப்பட்டனராயினும், அவர்கள் அனைவரையும் அலக்ஷியமாக ஒதுக்கி அதிகமான ஆவேசத்துடனே தேவேந்திரன் மீதே பாய்ந்தனன். மஹேந்திரன் மிகுந்த மகிமைபெற்றவனாயினும் அவனது கண்ணுக்கு இராவணன்மகன் புலப்பட்டவனல்லன்; மற்றத் தேவர்கள் தன்னைக் கவசம் பிளக்கக் கணைகளை விடுத்து வதைக்கின்றனராயினும் அவர்களிடத்தில் சிறிதும் செருச்செய்ய வெண்ணாது, தேவேந்திரன் வருவது கண்டு அவனது தேர்ப்பாகனானமாதலியின்மீது மேலான பகழிகளைப் பெய்து புடைத்து, மஹேந்திரன்மீது மறுத்தும் மறுத்தும் பாணவருஷம் வருஷிக்கலாயினன். அதுகண்டு தேவராஜன் தேரையும் தேரோட்டியையும் விட்டு ஐராவதத்தின்மீதேறி இராவணன்மகனை வேட்டையாடினன். அக்காலையில்

மேகநாதன் மாயையினது வலியால் இந்திரன்கண்ணிலகப்படாது ஆகாயத்தி லிருந்தவாறே இந்திரனைத் தனது மாயையினால் மயக்கி அவன்மீது பாணங்களைப் பெய்தனன். தான்வருஷித்த சரவருஷத்திற்காற்றாது இந்திரன் இளைப்புற்றது கண்டவுடனே மேகநாதன் அம்மாயையினாலேயே அவனைப் பிடித்துக் கட்டித் தனது சேனையினருகே செலுத்திக்கொண்டு போயினான்.

மஹேந்திரனை மேகநாதன் இவ்வண்ணம் மாயையினால் கட்டிப் போர்க் களத்தினின்று பலாத்காரமாகப் பிடித் திழுத்துக்கொண்டு செல்வது கண்டு தேவர்கள் அனைவரும் ஒன்றுகூடி, 'இதென்ன விபரீதம் வந்து வாய்த்தது! மாயாவியான மேகநாதன் நமக்குக் கட்புலனாகாமலே கொலைபுரிகின்றனனே! தேவேந்திரன் அசுரர்களது மாயைகள் அனைத்தையும் ஸம்ஹரிக்கவல்ல ஸகலவித்தைகளும் கற்றுணர்ந்தவனாயிருக்கையிலும், அவனை இராவணன் மகன் வலியக் கட்டி யிழுத்துக்கொண்டு செல்கின்றனனே' என இவ்வண் ணம் சிந்தித்துக் கூக்குரலிட்டனர். ஆயினும் அத்தேவர்கள் அனைவரும் அக்கணமே அதிகமான கோபங்கொண்டவர்களாகி இராவணன்மகனை அப் புறஞ் செல்லவிடாது அவன்மீது அம்புமாரி பொழியலாயினர். அக்காலையில் இராவணன் விடுப்பட்டனனாயினும், ஆதித்தியர் வசுக்கள் முதலியவர்களோடு முனைந்து போர்புரிய வலியற்றவனாயினான்.

தகப்பன் உடம்பெங்கும் அடிபட்டு இளைப்புற்றுத் தவிப்பது கண்டு அவனை நோக்கி மகன் மாயையில் * மறைந்தவனாகவே 'ஹே தாத! போர் புரிதலை யிவ்வளவோடு நிறுத்தித் திரும்பிவருக; நாம் வெற்றிபெற்றோம்; இதனை யுணர்ந்து நீர் ஆயாஸந்தீர்ந்து அகமகிழ்க. ஸகலமான தேவசேனை களுக்கும் திரிலோகங்களுக்கும் நாயகனான இந்திரன் இதோ என்கையில் கட்டுண்டிருக்கின்றனன்; தேவர்கள் செருக்கொழிந்து சீர்குலைந்தனர். இனி நமக்குச் சத்துருபயமில்லை யாதலின், இம்மூவுலகங்களையும் நீரே ஏகசக்கர மாய் அனுபவித்து வருக. இனி நீர் ஏன் வீணாக வருந்தல்வேண்டும், இனி யுத்தஞ்செய்வது உபயோகமற்ற காரியம்' என்று கூறினான்.

இந்திரன்பிடிபட்டச்செய்திதெரிந்து தேவர்களெல்லாரும் போர்புரித லொழிந்து அப்புறஞ் சென்றனர். அப்பால் இராக்கதராஜன் தனக்கு மிக வும்பிரியமாக மகன் மொழிந்ததுகேட்டுச் சிந்தைநோய் நீங்கி யகமகிழ்ந்தவ னாகி, இந்திரசத்துருவெனப் பிரசித்திபெற்றுப் போர்க்களத்தினின்று நீங்கி மகனருகேசென்று, 'எனது செல்வப் புதல்வனே! நீ பராக்கிரமத்தி லிணை யில்லாத உத்தமவீரன்; எனது குலத்திற்குப் பேரும் புகழும் விளைவித்த பெரியோன்; இணையில்லாத ஆற்றலுடையோனான தேவேந்திரனும் தேவர்க ளும் உன்னாலன்றோ வெல்லப்பட்டவராயினர்' என்று கொண்டாடி, 'நீ இந்த வாஸவனைரதத்திலேற்றிக்கொண்டு சேனைகள் புடைசூழப் புறப்பட்டுப் பட்டணஞ் செல்லுக; யான் உன் பெருமையைப் பார்த்துப் பெருமகிழ்ச்சி கொண்டு மந்திரிகளுடனே உன்னைப் பின்பற்றி வருகிறேன்' என்று கூறி

* மறையாது கட்புலனாகுவனாயின், உடனே தேவேந்திரன் கொலை செய்துவிடுவ னென்றபடி.

னுன். அங்ஙனமே இராவணகுமாரன் தேவேந்திரனைக் காவல்செய்து பிடித்துக்கொண்டு வாஹனத்தின்மீதேறிச் சேனைகள் சூழச் சென்றனன். இலங்காபுரம் போய்ச்சேர்ந்தவுடனே தனக்குத் துணையாகப் போர்புரிந்த சேனுவீரர்கள் பலருக்கும் பலவாறு ஸம்மானஞ்செய்து வீடுசெல்ல விடைகொடுத்தனுப்பினுன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்துநான்காவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்.

பிரமதேவர் இராவணனிடஞ்சென்று அவனது மகனுக்கு வேண்டியவரமும்
இந்திரஜித்தென்னும் பட்டப்பெயருமளித்து இந்திரனைவிடுவித்ததும்,
தனக்குநேர்ந்த அவமானத்தை நினைந்து வருந்திய இந்திரனுக்கு
கௌதமமுனிவரது சாபம்நேரிட்ட வரலாறும்
அகலிகையின் உற்பத்தி சாபம் முதலியவரலாறும் பிரமன் கூறியதும்.

---

இராவணன்மகன் இந்திரனை ஜயித்துப் பிடித்துக்கொண்டு போயினமை கண்டு தேவர்கள் அனைவரும் துயரமதிகரித்தவர்களாகிப் பிரமதேவரிடம் சென்று முறையிட்டுக்கொள்ளலாயினர். 'பிரஜைகளைப் படைக்கின்ற பெரியோய்! தேவரீர் அளித்த வரத்தின்மகிமையால் இராவணன் இந்திரனைக் கட்டிக்கொண்டு போயினுன்; மூவுலகங்களுக்கு மீசனுன தேவரீர் அவனுக்கு வேண்டிய வரங்கள் அளித்து, அவனை யென்றும் அழியாதவனுக்கினீர்; மஹாநுபாவரான மஹேசுவரர் அவனது மகனுக்கு அற்புதமான மாயையொன்று தந்தருளினர்; அவற்றுல் அவர்கள்எவராலும் எவ்வகையிலும்வெல்வதற்கரியராயிருக்கின்றனர். ஆனதுபற்றித் தேவரீரே தேவேந்திரனை இப்பொழுது விடுவித்தல்வேண்டும்' என வணங்கிப் பிரார்த்தித்தனர்.

* அதைக்கேட்டவுடனே தேவர்களுக்கெல்லாம் தலைவரான பிதாமஹர் அவ்விடம்விட்டெழுந்து இலங்காபுரஞ்சென்றனர். பிரமன் சென்றகாலையில் இராவணன் பிராதாக்களும் புத்திரனும் புடைசூழச் சிங்காசனத்து வீற்றிருந்தனன். அவனைக் கண்டு அயன் ஆகாயத்தினிடையே நின்று நல்வார்த்தையாக இதவசன மியம்பலாயினர். அஃதென்னவெனில், 'ஹே வத்ஸ, ராவண! போரில் உனது புத்திரனது பராக்கிரமத்தைக் கண்டு யான்பெருமகிழ்ச்சி கொண்டேன். இவ்விளவலது விக்கிரமமும்ஔதாரியமும்மிகவியக்கத்தக்கவை;இவன் உனக்கு இணையானவன்; உன்னினும் மேம்பட்டவனுகவே விளங்குகின்றனன். நீ இப்பொழுது உனதுபராக்கிரமத்தினுல் மூவுலகங்களையும் வெற்றிகொண்டனையன்றே? நான்கு திக்குப்பாலகர்களையும் ஐயங்கொள்வேனென்ன நீ பண்ணினபிரதிஞ்ஞை உன்புத்திரனது பராக்கிரமத்தினுல் ஸபலமாகியது

---

* பிரமதேவனை முன்னிட்டுத் தேவர்களனைவரும் இலங்காபுரிசென்றனரெனச் சில ஸ்ரீ கோசங்களில் காணப்படுகின்றது.

No. 12. பிரம்தேவர் மேகநாதனுக்கு இந்திரஜித்து என்றபெயரளித்து தேவேந்திரனை சிறையினின்றும் விடுதலை செய்ய வேண்டினது. 



బ్రహ్మదేవుడు మేఘనాదనికి ఇంద్రజిత్తు అనే నామమిడి - దేవేంద్రుని చెరలోనుండి విడిపించుటకు వేడుకొనుట.

கண்டு யான் அகமகிழ்ந்தேன். ஹே ராவண! உனதுகுமாரன் மிகுந்தவலியும் வீரியமும் உடையோனுகி இந்திரனையும் வெற்றிகொண்டதுபற்றி இனி இவனுக்கு இந்திரஜித்து எனவே உலகமெங்கும் பெயர்பிரசித்தமாகும். இவன் பராக்கிரமத்தி லிணையில்லாதவனுகி எவராலும் வெல்வதற்கரியனுகுவான்; தேவர்கள் அனைவரையும் வென்று வசப்படுத்திக் கொண்டவன் இவனொருவனேயன்றே? நீ இயற்றியது இவ்வளவே போதுமானது; ஹே மகா பாஹோ! இனி நீ இந்திரனைப்பிடித்துக் கட்டிவைப்பதனுல் உனக்கு யாது பயன்? அவனை விட்டு விடுக; அவனை விடுவதற்குப் பிரதியாக வேண்டிய வரங்களைத் தேவர்கள் உனக்கு அளிப்பார்கள்' என்றுகூறினுர்.

பிரமதேவர் அவ்வாறு புகன்றதுகேட்டு, போரில்பின்வாங்காத வீரனுன இந்திரஜித்து அவரைநோக்கி, 'ஹே தேவ! இப்பொழுது இந்திரனை விட்டு விடவேண்டுமாயின், அமரனுக (என்றைக்கும் மரணமற்றவனுக) இருக்க எனக்கு வரமளிக்க வேண்டுகின்றேன். நாற்கால் ஜந்துக்கள், ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவைகள், பராக்கிரமமுள்ளனவாகிய மற்றும் பலபிராணிகள், மரங்கள், செடி கொடி புல்பூண்டு முதலான ஓஷதிகள், சிலைகள், மலைகள் ஆகிய பலவற்றினின்றும் பிராணிகளுக்குப்பயமுண்டாகின்றது; எல்லாஜந்துக்களும் ஒன்றையொன்று கண்டவளவிலும் அச்சங்கொள்ளுகின்றன; இவ்வுலகில் எல்லாவற்றிற்கும் எல்லாவற்றினின்றுமே அச்சமுண்டாகின்ற தென்பது திண்ணம். ஆதலின், அவ்வண்ணம் எனக்குப் பிராணபய மில்லாதவாறு நான் இவ்வரம் வேண்டுகின்றேன்' என மொழிந்தனன்.

அதுகேட்டுப் பிதாமஹர் மேகநாதனைநோக்கி, 'வத்ஸ! இவ்வுலகில் படைக்கப்பட்ட பிராணிகள் என்றைக்காயினும் ஒருநாள் இறக்கவேண்டுமல்லது, என்றுமிறவாதிருத்தல் இயலாதகாரியம். இப்பூவுலகில் எந்தப்பிராணிக்கும் அப்படி யென்றுமழியாதிருத்தல்கிடையாது; பசு, பக்ஷி, மிருகாதிகள், மற்றும் பல பெரும்பூதங்களாகிய யாவும் இறுதியிலிறக்கற் பாலனவே' எனப் புகன்றனர். பிரமதேவர் இவ்வாறு மொழிந்ததுகேட்டு மேகநாதன், 'அடியேனுக்கு அமரனுக வரமளிக்க முடியாதாயின், மற்றொருவரம் வேண்டுகின்றேன்: அதனையாயினும் அருள்புரிந்தளிப்பீராகில், இந்திரனை விட்டுவிடுகிறேம். அஃதென்னவெனில், யான்சத்துருக்களை வெல்லவேண்டிப் போர்புரிதற்காக ஒருவேள்வி யியற்றுகின்றேன். அதில் மந்திரங்கள் மொழிந்து ஆவுதிகள்பெய்து இடையூறின்றி அக்கினி ஆராதிக்கப்பட்டு வேள்விமுற்றுப் பெறுமாயின், அந்த அக்கினியினிடையே அற்புதமான ரதமொன்று பரிமாக்கள் பூட்டியவாறே மேலெழுந்து வரக்கடவது; அதன்மீதேறி யான் அமர் புரிவேனுயின், அப்பொழுது எனக்கு அமரத்துவம் உண்டாகக்கடவது. அதில் அநுஷ்டிக்கக்கடவனவாகிய மந்திரஜபங்களும் ஹோமங்களும்மத்தியில் இடையூறு உண்டாகிமுற்றுப் பெறுமலிருக்கையில் யான்எழுந்து அமர்புரியத் தொடங்குவேனுகில், அப்பொழுது எனக்கு விநாசமுண்டாகக் கடவது; இதுவே எனது முக்கியமான மனோரதம். அநேகர் தவம்புரிந்து தேவனுயிறப்பில்லாதிருக்க வரம்வேண்டுகின்றனர்; யான் எனது பராக்கிரமத்தை

வெளியிட்டு அமரனாக அனுக்கிரகம் வேண்டுகின்றேன்' எனப்பிரார்த்தித் தனன். அதனைச்செவியுற்ற சிருஷ்டிகர்த்தா 'அங்ஙனமேயாகுக' வென்றருள் புரிந்தனர். அதுகேட்டு இந்திரஜித்து அகமகிழ்ந்து இந்திரனைச்சிறைநீக்கி விட்டனன். தேவராஜன்விடுபட்டதுகண்டு தேவர்கள் மனமகிழ்ந்து அவனு டனே தேவலோகம் போய்ச்சேர்ந்தனர்.

ஹே ராம! இஃது இங்ஙனமாக, தேவேந்திரன் இந்திரஜித்தினிடம் அகப்பட்டு அல்லலுற்றதனால் ஒளியிழந்து ஊக்கமதுகைவிட்டுச் சிந்தை கலங்கிச் சோகிக்கலாயினான். தேவராஜன் அத்தன்மையனானதுகண்டு தாமரையோன் அவனுக்கு ஆறுதலுண்டாகுமாறு உரைசெய்யத்தொடங்கினர். "நூறுவேள்விகள் புரிந்து தேவேந்திரபதவி பெற்ற தேவனே! தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவித்தல்வேண்டுமென்பது தெரியாதோ? முன்பு நீ அத்தன்மையதான பாபத்தொழில் புரிந்தனை; முன் நீசெய்த தீவினையை யான் விளங்க விளம்புகின்றேன், கேள்: அமரேந்திரனே! ஆதியில் யான் பல்லா யிரம் பிரஜைகளைப் படைத்தேன். அவர்கள் அனைவரும் ஒரேவிதமானவடிவ மும், ஒரேவிதமான பருவமும், ஒரேவிதமான நிறமும், ஒரேவிதமான குரலு முள்ளவர்களாயிருந்தனர். அவர்களிலொருவர்க் கொருவர் உருவமைப்பிலே னும் அழகிலேனும் ஒருவிதமானவிசேஷமும் தோற்றவில்லை. அதுகண்டுயான், இதற்கு யாம் யாதுசெய்வது? ஒருவர்க்கொருவர் வேற்றுமைகண்டறிவதெங் ஙனமென்று அதேசிந்தையாய் அப்பிரஜைகளைப்பற்றி ஆலோசித்தேன். இறு தியில், அவர்கட்குள் வேற்றுமை தோற்றுவிக்குமாறு யானொரு அணங்கை நிருமிக்கவெண்ணி, அப்பிரஜைகளில் ஒவ்வொருவருடலினும் ஒவ்வொரு உறுப்பினும் மிக உத்தமமான பகுதி யாது உளதோ, அந்தந்த உறுப்பினின் றும் அதனதனைப் பிரித்தெடுத்து, அவற்றைக்கொண்டு அற்புதமான ரூபலா வணியமுடையவளாய் அஹல்யையென்னு மொருபெண்மணியைப் படைத் தேன். ஹலமென்றால் இங்கு வைரூப்பியம்; அதாவது, கண்ணுக்கினியா தது. அதனாலாயகுற்றம் ஹல்யம், அழகின்மை; அக்குற்றமாகிய ஹல்யமில் லாமைபற்றி அப்பெண்மணிக்கு அஹல்யையெனவே பெயர்பிரசித்த மாயிற்று. அஹல்யையெனப்பெயரிட்டுயான் அந்தச்சுந்தரியைச் சிருஷ்டித்த வளவிலே, ஹே தேவராஜனே! இக்கட்டழகிக்கேற்ற கணவன் யாவனென எனக்குவிசாரமுண்டாயிற்று. அக்காலையில் நீ உனது யோகதிருஷ்டியினால் அவ்வுத்தமியை யுணர்ந்து, உனது மேலான பதவியை நினைந்து, அப்பெண் மணி உனக்கே பத்தினியாதல் வேண்டுமெனப் பிரார்த்தித்தனை. நமதுசங்கற் பத்திற்கு மாறாகவெண்ணி நீ செருக்குற்றனை யாதலின், யான் அவளையுனக்குக் கொடாது, அவளைப் பாதுகாத்து வருமாறு கௌதமமுனிவரிடம் பலவாண்ட ளவு விட்டிருந்தேன்; அவ்வாறே அவர் அப்பெண்மணியைப் பலவருஷங்கள் பாதுகாத்து மறுபடி யென்னிடம் கொணர்ந்துவிட்டனர். மகளிரைக்கண்டு மயங்காத அம்முனிவரது மனவுறுதியையும், தவநிஷ்டையையுங்கண்டுயான் களிகூர்ந்து, அவ்வழகியை அம்முனிவர்க்கே இல்லறத்துணைவியா யளித்து

விட்டேன். தருமாத்துமாவான கௌதமமுனிவரும் அவளைத் தமக்குத் தருமபத்தினியாகப் பரிக்கிரகித்தனர்.

அகலிகையைக் கௌதமருக்குத் தானஞ்செய்துகொடுத்தது கண்டு தேவர்களெல்லோரும் அவளிடமாசையொழிந்தவர்களாகி விசனமடைந்தனர். நீயோ, அதுகண்டு அதிக கோபங்கொண்டு அம்முனிவரது ஆச்சிரமத்திற்குச் சென்றனை. ஆங்கு அக்கினிஜ்வாலைபோலச் சொலித்துக்கொண்டிருந்த பெண்கள் நாயகத்தைக் கண்ணுற்றுக் காமமும் கோபமு மேலிட்டு அவளைப் பலாத்காரஞ் செய்தனை. அக்காலையில் அம்முனிவர் உன்னை அவ்விடத்தே கண்டு கோபங்கொண்டு உன்னை உக்கிரமாகச் சபித்தனர். ஹே தேவேந்திர! அத்தபோதனருடைய தவப்பெருமையினாலேயே உனக்கு இவ்விதமான விபரீதம் வந்து விளைந்தது. கௌதமமுனிவர் சபித்தசாபமென்ன வெனில், 'ஹே, வாஸவ! நீ நிர்ப்பயமாக எனது பத்தினியைக் கற்பழித்தனையல்லவா? இந்தப்பாதகத்தினால் நீபோரில் பகைவர் கையிற்பிடிபட்டு வருந்துவாய். ஸகல லோகங்களுக்கும் ராஜனான நீயே இத்தன்மையதான பாபச்செய்கை செய்ய முதலிட்டனையாதலின், 'யதாராஜர்ததாப்ரஜா:' என்றபடி, மானிடர்களும் இனி இத்தீமையை விசேஷமாச் செய்யத்தொடங்குவார்கள்; அதனால் அதிகமான அதருமம் உண்டாகத் தலைப்படும். அதிற்பாதி அப்பாவஞ் செய்பவனையும், 'ராஜாராஷ்ட்ரக்ருதம் பாபம்' என்றபடி மற்றொரு பாதிராஜாவான உன்னையும் வந்தடையக்கடவன. நீ இப்பொழுது செய்யத் துணிந்த அதருமத்தினால் இந்த இந்திரபதவியும் உனக்கு என்றும் ஸ்திரமாயிருக்கத்தகுவதன்று; இந்த இந்திராதிபத்தியத்தைப் பலர் அனுபவிக்கலாகும். உன்னைப்போலவே இன்னுமெவர் இப்பாவத்தொழில் புரிகின்றனரோ, அவர்களும் உன்னைப்போலவே அழிவுறுவார்கள்; இது யான் உனக்கிட்ட சாபம்' என மொழிந்தனர். (மேலும் உனக்கு விருஷண மொழிந்து போகுமாறும் அவர் சாபமிட்டனர். ஆனதுபற்றியே உனக்கு இப்பொழுது மேஷவிருஷண மமைக்கப்பட்டுளது.) பிறகு அவர் அருகிலிருந்த தம் பத்தினியை நோக்கி அவளைப் பலவாறு இகழ்ந்து, 'நீ துர்ப்புத்தி யுடையவளாகித் துர்ச்செய்கை செய்தனையாதலின், நீ என் ஆச்சிரமத்தருகில் ஒரு ஸ்தாவரமாக மாறக்கடவை; உலகில் நீயொருத்தியே ஒப்பற்ற ரூபலாவணிய முடையளா யிருந்தமையினன்றோ இக்கேடுவந்து விளைந்தது. இனி யுலகத்தில் ரூபவதி நீயொருத்தியேயென்பதில்லை; உன்னைப்போன்ற பேரழகு வாய்ந்தவர்களான பெண்மணிகள் பலர் தோன்றுவார்கள், அதற் கையமின்று' எனச் சபித்தனர். அதுமுதலாக ரூபவதிகளான அழகிய பெண்கள் பலர் உண்டாகத் தலைப்பட்டனர்.

கௌதமமுனிவர் மொழிந்ததுகேட்டு அகலிகை அதிகமான துக்கத்துடனே முனிவரை வணங்கி, 'முனிவர்பெருமானே, அடியாள் காமவேட்கைகொண்டு மனமொப்பி இக்குற்றஞ் செய்தவளன்றே; இஃது அறியாமல் வந்த விபரீதமன்றோ? தேவரீர்போலவே தேவேந்திரன் உருவமெடுத்து வந்தன்றோ அடியாளை மயக்கினன்; ஆதலின் அருள்புரிந்து மன்னிக்கவேண்டுகின்றேன்' எனப் பிரார்த்தித்தனள். அஹலிகை இவ்வாறு கூறியதுகேட்டுக் கௌதம

முனிவர் மனமிரங்கி, 'இனி இக்ஷ்வாகுகுலத்திலே ஸ்ரீராமனெனப் பிரசித்தி பெற்ற மஹாரதரான ஒரு மஹாநுபாவர் அவதரிக்கப்போகின்றனர். அவர் பிராமணர்களுக்கு இதஞ்செய்ய வெண்ணி மாநுஷாவதாரஞ்செய்யும் ஸ்ரீமஹா விஷ்ணுவேயாம். இவ்வனத்திற்கு அவர் எழுந்தருளுவார்; அவரது ஸேவை பிராப்தமானவளவிலே நீ புனிதையாகுவை; நீ செய்த தீச்செயலை யொழித்து உன்னைப் புனிதையாக்கிப் பாதுகாக்க வல்லவர் அவரொருவரேயாம். அவரைச்சேவித்து நீ அவர்க்கு விருந்து செய்து அதன்பின்னர் என்னிடம் வந்து சேர்ந்து இனிது வாழ்க' என வரமளித்து அம்முனிவர் தம் ஆச்சிரமஞ் சென்றனர். பிரம்மவித்தான கௌதமமுனிவரது தருமபத்தினி சிலையுருவாகி, அன்றுதொட்டு அவ்விடத்தே மஹத்தான தவம் புரிந்துகொண்டிருந்தனள். ஆதலின், அம்முனிவரிட்ட சாபத்தினாலேயே இவை யாவும் நேர்ந்தன. நீ முன்புசெய்த தீச்செயலை நினைத்து நோக்குக; இப்பொழுது நீ பகைவன் கையிற்பிடிபட்டதற்குக் காரணம் அப்பாவத்தொழிலேயன்றி மற்றொன்று மன்று. இப்பொழுது நீ உடனே வைஷ்ணவமான வேள்வி யொன்று இயற்றுவையாகில், அதனால் இப்பாவம் நீங்கிப் பரிசுத்தனாகிப் பிறகு தேவலோகம் சேர்வாய். உனது புத்திரனும் அந்தப் போரில் பிராணனை யிழந்தவனல்லன்; அவனது மாதாமஹன் அவனை யெடுத்துச்சென்று கடலிற் புகுந்து பாதுகாத்துவருகின்றனன்' என மொழிந்தனர். அதுகேட்டு மஹேந்திரன் பிரமன் புகன்றவாறே விஷ்ணுவைக் குறித்து யாகம் செய்து புனிதனாகிப் பொன்னுலகம்போய்ச் சேர்ந்து தேவராஜனாகி ஆதிபத்தியஞ் செலுத்திவரலாயினான்.

கேட்டீரோ ஸ்ரீராமபத்திரரே, இராவணன்மகன் இந்திரஜித்தெனப் பெயர்பெற்ற வரலாறும், அவனது பல பராக்கிரமங்களும் புகன்றேன். அவன் தேவேந்திரனையும் வென்றனனென்றால், மற்றப்பிராணிகளுக்குக் கேட்கவேண்டுமோ? மிகுந்த மாயாசத்தி யுடையோனாதலின் அவன் மாண்டது மிக வியக்கத்தக்கதே" என அகஸ்தியமாமுனிவர் மொழிந்தனர். அவர் அவ்வாறு அருளிச்செய்ததுகேட்டுச் சக்கரவர்த்தித்திருமகனு மிளையபெருமாளும் வாநரர்களும் இராக்கதர்களும், இஃதுமிகவும் ஆச்சரியமானதே யெனச் சிரமசைத்தனர். சக்கரவர்த்தித்திருமகன் சமீபத்தி லுட்காந்திருந்த விபீஷணாழ்வான் அதுகேட்டு, இம்முனிவர் மொழிந்தன யாவும் உண்மையே; அடியேன் கண்ணாரக் கண்ட இந்தப் புராதனமான விருத்தாந்தங்களெல்லாம் இம்முனிவர் கூறியது கேட்க, இப்பொழுது அடியேனுக்கும் நினைவுவருகின்றன என்று சொல்லி வியந்தனர். அதுகேட்டு ஸ்ரீராமபிரான், 'ஆம், இஃது வாஸ்தவமே,யானு மிதனைக் கேள்வியுற்றிருக்கின்றேன். லோககண்டகனாய் இப்படி இராவணன் உண்டானதும், அவன் தனது குமாரனுடனே கூடிச் செருக்களத்தில் சுரேச்வரனை ஜயங்கொண்டதும் மிக வியக்கத்தக்கவையே' என்று கூறிக் கொண்டாடினார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்தைந்தாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## முப்பத்தாருவது ஸர்க்கம்.

இராவணன் கார்த்தவீரியனுடன் அமர்புரியுமாறு
அவனுது மாஹிஷ்மதிபட்டணஞ் சென்றதும்,
அவ்விடத்து அவனில்லாமைகண்டு,
விந்தியமலைவழியாக நர்மதா நதிக்குச்சென்று அதனழகைக்கண்டு வியந்து,
அதன்மணற்குன்றின் மீது சிவபூஜைசெய்யத் தொடங்கியதும்.

சக்கரவர்த்தித்திருமகன் மறுபடியும் வியப்புற்று அகஸ்தியமுனிவரை நோக்கி, 'ஸ்வாமி, இஃதென்ன ஆச்சரியம்! இந்தக் கொடியனுன இராக்ஷஸன் எதுமுதலாகப் பூமியில் சூறையாடித்திரியத்தலைப்பட்டனனே? அதுமுதலாக இவ்வுலகமனைத்தும் பாழாகிவிட்டதோ? இவ்விராவணனை வெல்வதற்கு ஒரு அரசனுயினும் அரசனல்லாத மற்றெவனுயினும் அக்காலையில் ஒருவனேனு மிவ்வுலகில் இல்லாமற்போயினரோ? இருக்கினும் அவர்கள் அனைவருடைய சவுரியமும் ஒருங்கே களையப்பட்டதோ? சவுரியமிருந்தும் மேலான அஸ்திரங்கள் அவர்களிடம் இல்லாமற்போய் அதனுல் அநேகராஜாக்கள் இவனிடம் தோல்வியடைந்து துன்புற்றனரோ?' என வினவ, அகஸ்திய மாமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கிப் புன்னகைகொண்டு, ஈச்வரனை நோக்கி அயன் உரைசெய்யுமாறு, இராவணன் அபஜயமடைந்த வரலாறுகளை உரைக்கலாயினர்.

"ஹே ராம! சொல்லுகின்றேன் கேளும்: இராவணன் இவ்வாறு பார்த்திவர்கள் பலரையும் பீடித்துக்கொண்டு பூமியெங்கும் ஸஞ்சாரஞ் செய்கையில், அமராவதி பட்டணம்போன்ற பேரழகுவாய்ந்த மாஹிஷ்மதியென்னும் பட்டணத்திற்குச் சென்றனன். அந்நகரில் அக்கினிதேவன் எப்பொழுதும் ஸான்னித்தியமா யுள்ளவன். அந்த அக்கினிதேவனுக்கு ஒப்பாகிய மகிமையுடையோனுன அர்ஜுனனென்னும் ஓரரசன் அந்நகரில் அரசுபுரிந்து வந்தனன். அங்கு ராஜமாளிகையிலே வேதிமத்தியில் அக்கினி யெப்பொழுதும் ஜொலித்துக் கொண்டே யிருக்கும். இராக்ஷஸராஜன் அந்த மாஹிஷ்மதி பட்டணம் சேர்ந்த தினத்தில் ஹேஹய தேசாதிபதியான அர்ச்சுனன் ஜலக்கிரீடை செய்தற்பொருட்டு ஸ்திரீகளுடனேகூடி நர்மதாநதிக்குச் சென்றிருந்தனன். அந்நகரம் சேர்ந்தவுடனே இராவணன், 'உங்களரசனுன அர்ஜுனன் எவ்விடத் திருக்கின்றனன்? சீக்கிரமதனை யெனக்கு விளங்கக்கூறுக; அவனுடனே அமர்புரியயான் 'இராவணன்' இங்குவந்திருப்பதையும் இக்கணமே அவனிட முரைசெய்க' என அவனது அமைச்சர்கட்குக் கட்டளையிட்டனன்.

இராவணன் இவ்வாறு உரைசெய்ததுகேட்டு அர்ஜுனனது அறிவிற் சிறந்தோரான அமாத்தியர்கள், 'எங்கள்அரசன் இப்பொழுது இவ்விடத்திலில்லை; வெளியேபோயிருக்கின்றனர்' எனக்கூறினர். ராக்ஷஸராஜன் அது கேட்டு உடனே அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, இமயமலை போன்ற மஹிமையுடையதான விந்தியபருவதத்தைப் பார்க்கப்போயினுன். அம்மலை மேக

மண்டலமென முற்றும் படர்ந்து பூமியைப் பிளந்துகொண்டு மேலெழுந்ததென விளங்கியது. சிங்கங்கள் குடிபுகுந்தகந்தரங்களுடனே ஆகாயமளாவிய ஆயிரம் சிகரங்களையுடையதாகி, அம்முடிகளினின்று வீழ்கின்ற நீர்த்தாரைகளினொலியால் ஓசை பெற்றுயரும் கடலெனத் துலங்கியது; தேவர், தானவர், கந்தர்வர், கின்னரர் முதலியோர் அப்ஸரஸ்திரீகளுடனே கூடிக் களித்து விளையாடப் பெற்று விண்ணவ ருலகமென வியக்கத்தக்கதாயிற்று. பளிங்குபோன்ற பளபளப்பான நீர் பெற்றுப் பெருகிவருகின்ற பற்பல நதிகளால் அப்பருவதம், அசைகின்ற நாவுள்ள படங்களுடனே கூடிய ஆதிசேஷனெனச் சொலித்தது. இவ்வாறு ஹிமவத் பருவதமென மேலெழுந்து பல குகைகளுடனே பெருமைபெற்றுப் பிரகாசிக்கின்ற விந்தியபருவதத்தி னழகை நோக்கி வியந்துகொண்டே ராக்ஷஸராஜன் நர்மதாநதியினிடஞ் சேர்ந்தனன்.

அந்தப் புண்ணியநதி பெரும்பாறைகளின்மீது பெருகி மேற்குக் கடலை நோக்கிப் பிரவஹிக்கின்றது. கோடையாற் களைத்து நீர்வேட்கை கொண்டு வருகின்ற மஹிஷம், சவரிமிருகம், சிங்கம், சார்த்தூலம், கரடி, கஜம் முதலாய விலங்குகள் குளித்துக் கலங்கிய மடுக்கள் நிரம்பப்பெற்ற அம்மஹாநதியில் சக்கரவாகம், காரண்டம், அன்னம், நீர்க்கோழி, ஸாரஸம் முதலான நீர்ப்பறவைகள் பலமதித்துக் கூவி விளையாடுகின்றன. அக்காலையில் அந்த நர்மதாநதி பேரழகுவாய்ந்த ஒரு பெண்மணியெனப் பிரகாசித்தது. அவ்வணங்குக்குப் பூத்த விருக்ஷங்களடர்ந்த தீரங்களே இருவிலாப்புறங்களாகவும், ஆணும் பெண்ணுமாகக் கூடிவிளையாடும் இரண்டு சக்கரவாகப் புட்களே இரண்டு கொங்கைகளாகவும், பருத்துப் பரந்த மணற்குன்றுகளே ஜகனங்களாகவும், அங்குள்ள அன்னப்புட்களின் வரிசையே மணிமேகலையாகவும், நீரிற் படிந்த பூந்தாதுகளே கலவைப்பூச்சாகவும், நீர்நுரையே வெண்பட்டாடையாகவும், மலர்ந்த நீலோத்பலங்களே கருவிழிகளாகவும் விளங்கின.

இத்தன்மைத்தாகிய அழகுவாய்ந்த உத்தமநதியான நருமதை யாற்றைக் கண்டவளவில் உடனே தசாநநன் புஷ்பகவிமானத்தினின்று மிறங்கித் தனது அன்பிற்கு இடமான உத்தம ஸ்திரீயினிடத்திற்போல் அவகாஹனஞ் செய்து, அநேகம் முனிவர்கள் விருப்புடன் வீற்றிருக்குமிடமாய் அதிரமணீயமான மணற்குன்றின்மீது மந்திரிமார்களுடனே கூடி யுட்கார்ந்து, இஃது கங்காநதியே போன்றதெனக் கொண்டாடி மிகக் களிகூர்ந்தனன். அக்காலையில் அவன் தனது அமைச்சர்களை நோக்கி விலாஸமாக விளம்பியதாவது: 'அமைச்சர்காள்! நீவிர் இவ்வதிசயத்தை நோக்குக. இந்தக் கதிரவன் தனது ஆயிரம் கிரணங்களையும் பரப்பி இவ்வுலகமனைத்தையும் சுவர்ணமயமாகச் செய்துகொண்டு ஆகாயமத்தியை யடைந்தனன். இவன் அதியுக்கிரமான கிரணங்களுடனே கொளுத்து மியல்பினனாயினும், யான் இங்குற்றிருப்பது உணர்ந்து சீதகிரணனை சந்திரனெனவே விளங்குகின்றனன்; இவ்விடத்து வாயுதேவனும் என்னிடமுள்ள அச்சத்தினாலேயே நருமதையாற்றில்தோய்ந்து குளிர்ந்தவனாகி யெனது ஆயாஸந் தீருமாறு மெல்லென வீசுகின்றனன்;

முதலைகளும் மச்சங்களும் பறவைகளும் அடர்ந்து அலைகள் அலைக்கப்பெற்று மிகப் பயங்கரமாயுள்ள இந்நருமதாநதியும் அச்சமுற்றிருக்கும் ஒரு அங்கனை யெனவே அடக்கமுற்று, எனக்கு விநோதத்தை விருத்திபண்ணுகின்றது கண்டீர்களா? நீங்களும் தேவேந்திரனுக்கொப்பான ஆற்றலையுடைய தேசாதி பதிகளிடம் பற்பல சஸ்திரங்களாலும் புடைபட்டுச் சந்தனக்குழம்பினாலே போலச் சோணிதக்குழம்பினால் சரீரமுழுமையும் பூசப்பெற்று விளங்குகின் றீர்; ஆதலின் மஹாபதுமம் முதலாய மதங்கொண்ட மஹாகஜங்கள் கங்கா நதியிற் குளிக்குமாறு, நீவிர் அனைவரும் ஆயாஸத்தைத் தீர்த்து ஆரோக்கி யத்தைத் தருவதான இந்த நருமதையாற்றில் குளித்துக் களைதீருக; இம் மஹாநதியில் மூழ்கிப் பண்ணிய பாவத்தையும் போக்கிவிடுக. சரத்காலத்துச் சந்திரனெனத் துலங்கும் இம்மணற்குன்றின்மீது யானும் மகேச்வரனுக்கு மெதுவாகப் பூஜைசெய்யத் தொடங்குகின்றேன்' என மொழிந்தனன்.

இராவணன் இவ்வாறியம்பியது கேட்டுப் பிரஹஸ்தன், சுகன், ஸாரணன், மஹோதரன், தூமிராக்ஷன் முதலாய மந்திரிமார்கள் நருமதையாற்றி லிறங்கி நீராடலாயினர். மிகப் பெரிய யானைகள் போன்ற இவ்விராக்கதர்கள் இறங்கிக் குடைந்து நீராடியபோழ்து நர்மதாநதியானது வாமனம், அஞ்ஜநம், பதுமம் முதலான பெரிய திக்கஜங்கள் புகுந்த கங்காநதிபோலாகியது. இவ்வாறு அவ்வாற்றில் நீராடிக் கரையேறிய பின்னர் அவ்விராக்கதர்கள் இராவணனது சிவபூஜைக்காக வேண்டிய புஷ்பங்கள் பறித்துக்கொண்டு வரலாயினர். வெண்மேகமென விளங்கும் விலாசமான மணற்குன்றிலே மந்திரிகள் ஒரு முகூர்த்தத்தில் மலையளவாக மலர்களைக் கொண்டுவந்து சொரிந்தனர். வேண்டிய புஷ்பங்கள் வந்து சேர்ந்தபிறகு இராவணன் மஹாகஜமொன்று கங்காநதியி லிறங்குமாறு நர்மதாநதியி லிறங்கி நீராடி, ஆங்கு ஜபிக்கத்தகுவதான உத்தமமந்திரத்தை முறைப்படி ஜபித்துக்கரையேறி ஈரமானவஸ்திரத்தைக் களைந்து பரிசுத்தமான புதிய வஸ்திரந்தரித்துக்கொண்டனன். பிறகு அவன் சிவபூஜைசெய்யக் கைகளைக்கூப்பிக்கொண்டு செல்லுகையில் மற்ற இராக்கதர்கள் அனைவோரும் அவன்பின்னே, உருவமெடுத்துவந்தவரைகளெனவே, அவனைத் தொடர்ந்து சென்றனர்கள்.

இராவணன் எவ்வெவ்விடம் செல்கின்றனனோ, அவ்வவ்விடத்திற்கு அவன் சிவபூஜை செய்வதன்பொருட்டு சுவர்ணமயமான சிவலிங்கமொன்றை கூடவேகொண்டுபோவது வழக்கமாயிருந்தது. இப்பொழுது அந்தலிங்கத்தை இராவணன் இவ்விடத்தில் ஆற்றுமணலா லமைத்த மேடைமீது ஸ்தாபித்து, திவ்வியகந்த முள்ளவையான புஷ்பங்களால் அர்ச்சனை செய்யலாயினன். அடியார்களுடைய இடுக்கண்களைக் களைகின்றவனும் வேண்டியவரமளிப்பவனுமான சந்திரசேகரனை இவ்வாறு இராவணன் அர்ச்சனைசெய்த பின்னர், ஸாமகானஞ் செய்து அவனைத்துதித்துக் கைகளைப் பரப்பிக்கொண்டு அவனெதிரே நர்த்தனமுஞ் செய்யலாயினன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தேழாவது ஸர்க்கம்.

இராவணன் சிவபூஜை செய்யுமளவில்,
அவ்வாற்றில் இன்னும்கீழே ஜலக்கிரீடை
செய்து கொண்டிருந்த கார்த்தவீரியன் தன்கைகளால்
அவ்வாற்று வெள்ளத்தைத் தடுக்க,
அந்நீர் தேக்கங்கொண்டு எதிர்முகமாயோடி
இராவணனது பூஜைத்திரவியங்களை யடித்துக்கொண்டு போனதும்,
அதுகண்டு இராவணன் அவன் கார்த்தவீரியனென வுணர்ந்து
அவனுடன் யுத்தஞ்செய்ய ஆரம்பித்து அவனாற் கட்டுண்டதும்.

மிகக்கொடியனான இராவணன் இவ்வாறு நருமதையாற்று மத்திமணலிலே மஹேச்வரபூஜை செய்துகொண்டிருக்கையில், அவ்விடத்திற்குச் சமீபத்தில் அதேநருமதையாற்றிலே மாஹிஷ்மதிபுரியரசனான அர்ச்சுனன் அநேகம் மங்கையருடனே மகிழ்ந்து ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்தனன். ஆயிரம்யானைப்பேடுகளினிடையே ஸஞ்சரிக்கும் மதயானைபோல் அவ்வணங்குகளினிடையே துலங்கும் அர்ச்சுனன் அக்காலையில் தனது ஆயிரம்கைகளின்வலியையுணரவிருப்புடையோனாகி, அக்கைகளைப்பரப்பி அவற்றால் அவ்வாற்று வெள்ளத்தை யோடவிடாது அணைகட்டியதுபோலத் தடுக்கலாயினன். அர்ச்சுனன் அவ்வாறு தடுத்தவளவில் வெள்ளம் அப்பால்பெருகியோட வழியின்றித்தேங்கி யிருகரையளவும்பரவி மச்சம் முதலை மரஞ்செடிகளுடனே யெதிர்முகமாயோடத் தலைப்பட்டது. அத்தருணத்தில் நருமதையாறு மாரிகாலத்தில் பெருக்கெடுக்கும் பிரவாஹமெனத்தோற்றியது. இவ்வாறு எதிர்த்துப்பெருகிய நீர்வெள்ளம், மேலேசிறிதுதூரத்தில் தேவபூஜை செய்துகொண்டிருந்த இராவணனது பூஜைத்திரவியங்கள் பலவற்றையும் அடித்துக்கொண்டு போகலாயிற்று. அதுகண்டு தசகந்தரன் தன் நியமத்தை முடிக்காமலே பாதியிலெழுந்து, மாறுபட்டொழுகும் மனையாட்டியைநோக்குமாறு அந்நதியை விழித்துநோக்கினான். மேற்றிசையாக நோக்குகையில் நருமதாநதிசந்திரோதயகாலத்து விருத்தியடைகின்ற கடலெனப் பெருகிக் கீழ்த்திசையாக எதிர்த்துவருகின்றது. பறவைகள் பயந்தோடத் தன்இயற்கைக்கு மாறாயொழுகும் நருமதாநதியினைக்கண்ணுற்று இராவணன், 'அந்நதி அவ்வாறுபெருக்கெடுப்பதற்குக்காரணம்யாது? அஃது அதனியல்பேயோ, அல்லது அதற்கு வேறுகாரணமுளதோ?' என்பதைக் கண்டுணர்ந்துவருமாறு வாய்திறந்து பேசாமலே, விரைவிற்சென்று தெரிந்துவரவேண்டு மென்பதற்கறிகுறியான உங்காரகோஷத்துடனே வலதுகைவிரலைநீட்டிச் சுகஸாரணர்களுக்குக் குறிகாட்டினான்.

ஸோதரர்களான சுகஸாரணர்கள் இராவணன் இவ்வாறு கட்டளையிட்டவளவில் ஆற்றுப்பெருக்கின் காரணத்தை யறியுமாறு ஆகாயத்திலெழுந்து மேற்றிசைநோக்கிச் சென்றனர். அரையோஜனைதூரஞ் செல்லுகையில் அவ்விராக்கதர்கள் ஆங்கு ஒருபுருஷன் ஸ்திரீகளுடனே ஜலக்கிரீடை செய்து

கொண்டிருக்கக் கண்டனர். அவன் அவ்விடத்திலே தலைமயிர் அவிழ்ந்து தொங்க, மதத்தினற் கண்கள்சிவந்து உடல்பூரித்து மிகப்பெரியதொரு பாதபமென நின்று, ஆயிரம் பாதங்களால் பூமியைத்தகையும் பருவதமென, ஆயிரம் புஜங்களால் நதியினைத் தகைத்துகொண்டு, ஆயிரம் கரேணுக்களுடனே கூடிய குஞ்சரமென, ஆயிரம் இளம்பெண்களுடனேகூடி விளையாடிக்கொண்டிருந்தனன். அற்புதமாக விளங்கும் அப்புருஷசிங்கத்தைக் கண்ணுற்று அவ் விராக்கதரிருவரும் அக்கணமேதிரும்பி இராவணனிடஞ்சேர்ந்து, 'ஹே ராக்ஷஸேச்வர! இங்கு யாரோஒரு மகாபுருஷன் பலகிளைகளுள்ள பெரியதோர் ஆச்சாமரமென நின்று அணைகட்டியதுபோல இவ்வாற்றுநீரைத் தடுத்துத் தனது காதலிகளைக்குளித்து விளையாடச் செய்கின்றனன். அவனது ஆயிரம் புஜங்களாலும் தடுக்கப்பட்டதாகி இவ்வாற்று வெள்ளம் கடல்பொங்குவதெனப் பொங்கி இவ்வாறு மேலெழுந்துவருகின்றது' எனமொழிந்தனர்.

சுகஸாரணர்கள் இவ்வாறு சொன்னதுகேட்டு இராவணன், இத்தன்மையதானஆற்றலுடையோன்அர்ச்சுனனேயன்றி வேறல்லனென உரைத்து, அவனுடன் அமர்புரியுமாறு உடனேயெழுந்து செல்லலாயினன். இராவணன் இவ்வண்ணம் அர்ச்சுனனை யெதிர்த்துச் செல்லுகையில், மிகப்பெரிய கோஷத்துடனே மண்காற்றுமேலெழுந்தது; மேகம் ஒரேதடவைமுழங்கிக் குருதி மழை பொழியலாயிற்று; ஆயினும் இவ்வபசகுனங்களை ஒருபொருட்டாக மதியாது, மஹோதரன், மஹாபாரிசன், தூமிராக்ஷன், சுகன், ஸாரணன் முதலாய மந்திரிமார்கள் புடைசூழப் புறப்பட்டு இராவணன் அதிசீக்கிரமே அர்ச்சுனனிருக்குமிடம் போய்ச்சேர்ந்தனன். நருமதை யாற்றினது மிகப்பெரிய தான மடுவினையணுகி அவன், பெண்யானைகளுடனேகூடிய மதயானையென, மங்கையர்களுடனேகூடி ஜலக்கிரீடை செய்கின்ற அர்ச்சுனனைக்கண்ணுற்றுக் கோபத்தினல் கண்கள்சிவந்து அர்ச்சுனனது அமைச்சர்களை நோக்கி, 'இராவணனென்னும் இராக்ஷஸராஜன் யுத்தஞ்செய்யவேண்டி இவ்விடம் வந்திருக்கின்றனென ஹேஹய தேசாதிபதியினிடம் நீவிர் விரைவினுரைசெய்க' என விளம்பினன்.

இராவணன் கூறியதுகேட்டுக் கார்த்தவீரியார்ச்சுனனது அமைச்சர்கள் ஆயுதபாணிகளாயெழுந்து தசக்கிரீவனைநோக்கி 'ஹே ராக்ஷஸேச்வர! ஹே ராவண! நன்று, நன்று; நீர்போரில் நமனேபோலும்; பெண்யானைகளினிடையேயுள்ள மதயானையுடனே புலி போர்தொடுக்க நினைக்குமாறு, மதித்து மங்கையருடனே கூடியமன்னனுடன் அமராட ஆவல்கொண்டீரன்றோ? பெண்களெதிரிலே போர்புரிய உமக்குப்பிரியமுண்டாகிய தெங்ஙனமோ! ஹே தசக்கிரீவ! உமக்கு அர்ச்சுனனுடனே அமர்புரிய விருப்பமாயின், சற்றுப் பொறுமைகொண்டு இன்றிரவையிங்கேயொழித்துவிடுக; நாளையுதயம் எம்மரசனுடன் யுத்தஞ்செய்யத் தடையின்று, இன்றே போர்புரிய வேண்டுமெனப் பேராவலுளதாயின், எங்களனைவரையும் முதலில்மடித்து அதன்பின்னரே அர்ச்சுனனை யெதிர்த்தல்வேண்டும்' என்று கூறினர். இராவணனே, உடனே அமர்புரிய ஆவல்கொண்டனன்.

அங்ஙனமே தக்ஷணம் இராவணனது அமைச்சர்களுக்கும் அர்ச்சுனனது அமைச்சர்களுக்கும் யுத்தம் ஆரம்பமாக, இராவணனது அமாத்தியர்கள் அர்ச்சுனனது அமாத்தியர்களை அநேகமாய் வதஞ்செய்தனர்; பசிகொண்ட பல இராக்கதர் பலமந்திரிகளைப் பிடித்துப் புசிக்கவும்புசித்தனர். அக்காலையில் இராவணனது மந்திரிகளும் அர்ச்சுனனது மந்திரிகளும் எதிர்த்துப்போர் புரிதலாலாய பெரியகோஷம் நருமதையாற்றங்கரை யெங்கும் பரவியது. அம்புகளாலும், தோமரம், சூலம், திரிசூலம், வஜ்ரம், கர்ஷணம் முதலாயபற்பல படைக்கலங்களாலும் புடையுண்டு அர்ச்சுனனது அமைச்சர்கள் நாற்புறமும் பயந்தோடலாயினர். அவர்கள் அவ்வாறு விரைந்தோடுகையில், மச்சம் முதலை, மகரம் முதலான கொடிய ஜந்துக்களுடனே கூடியகடலில் உண்டாகும் கோஷமென மிகப்பயங்கரமான பேரொலியுண்டாகியது. பிரஹஸ்தன், சுகன், ஸாரணன் முதலான இராவணனது அமைச்சர்கள் அதிககோபத்துடனே மிகுந்தபராக்கிரம முடையோராகிக் கார்த்தவீரியனது படையை முறியடிக்கலாயினர். தசக்கிரீவனது மந்திரிகள் செய்த இக்கொடுமையைக் கார்த்தவீரியனது வாயில்காப்பவர்கள்கண்டு, ஜலக்கிரீடைசெய்து கொண்டிருந்த அவவேந்தனிட முடனே அறிவித்தனர்.

அர்ச்சுனன் அதனைச்செவியுற்று அருகிலிருந்த அரிவையர்களை நோக்கி அஞ்சவேண்டாமென அபயமளித்து, கங்காப்பிரவாஹத்தினின்று மெழுகின்ற அஞ்சன மலையென நருமதாநதியினின்று மெழுந்தனன். எழுந்து கோபத்தினால் கண்கள்சிவந்து கார்த்தவீரியன் பிரளயகாலாக்கினியெனக் கொதித்தவனாகிச் சுவர்ணமயமான கதையொன்றை விரைவிற்கைக்கொண்டு, இருளை அருக்கன் எதிர்ப்பதென, அவ்வரக்கர்படையை யெதிர்த்தோடினன். மஹத்தான கதாயுதத்தைக் கையிலெடுத்துச் சுழற்றிக்கொண்டு கருடனுக்கொப்பான வேகத்துடனே கார்த்தவீரியார்ச்சுனன் கிட்டிவருவதுகண்டு அவனெதிரில் பிரஹஸ்தன், சூரியனது வழியைமறித்த விந்தமலையென வழிமறித்துச் சலியாதுநின்று முஸலாயுதமொன்றைக் கையிலெடுத்து, மேகம் முழங்குவதெனக் கர்ஜனைசெய்து கொண்டு மிகப்பயங்கரமான முஸலத்தை மன்னவன் மீது விடுத்தனன். பிரஹஸ்தன் பிரயோகித்த முஸலாயுதத்து முனையில் அசோகப்பூமாலை சூடியதென அக்கினி ஜொலித்தெழுந்தது. அவ்வாறு அதியுக்கிரமாக எழுந்துவருகின்ற முஸலாயுதத்தைக் கண்ணுற்றுக் கார்த்தவீரியன் கலக்கமுறாதவனாகவே வெகுசாதுரியமாக அதனைத் தனதுகதையினால் வஞ்சித்துப் பிரஹஸ்தன்மீது பாய்ந்தனன். பிரஹஸ்தனையணுகி யர்ச்சுனன் தனது * ஐந்நூறு கரங்களால் மிகப்பெரியதானகதையைச்சுழற்றி வெகுவிரைவாய் அவன்மீது விடுக்க, அதனாலடியுண்ட இராக்கதன் வஜ்ராயுதத்தினால் அடியுண்டவரையெனவீரிட்டுக்கொண்டு வீழ்ந்தனன். பிரஹஸ்தன்புடைபட்டு வீழ்ந்ததுகண்டு மாரீசன் சுகன் ஸாரணன் மஹோதரன் தூம்ராக்ஷன் முதலிய மந்திரிகள் அனைவரும் அஞ்சினவர்களாகி அமர்க்களம்விட்டு அப்புறம் ஓடிப்போயினர்.

* அர்ச்சுனனுக்கு வலதுகைகள் ஐந்நூறாதலின், ஐந்நூறு கரமென்றது.

அமைச்சர்கள் எல்லோரும் அஞ்சியோடிப் பிரஹஸ்தனும் புடைபட்டு வீழ்ந்ததுகண்டு இராவணன் ஆற்றுதவனாகி யுடனே அர்ச்சுனனை யெதிர்க்கலாயினன். ஆயிரம் புஜமுடையோனான அர்ச்சுனராஜனுக்கும் இருபது புஜமுடையோனான இராக்கதராஜனுக்கும் மிகப்பயங்கரமாக யுத்தம் அப்பொழுதே ஆரம்பமாகியது. அமர்தொடுத்தவளவில் அவ்வீரர்களிருவரும் கரைபுரளு மிரண்டுகடல்க ளெனவும், சஞ்சரிக்கின்ற இரண்டு சைலங்களெனவும், சோதிபெற்று விளங்கு மிரண்டு சூரியர்களெனவும், எரிக்கின்ற இரண்டு அக்கினிகளெனவும், மஹாபலிஷ்டமான இரண்டு மதயானைக ளெனவும், உக்கிரமான இரண்டு விருஷபங்களெனவும், முழங்குகின்ற இரண்டு முகில்களெனவும், வலிமிகுந்த இரண்டு சிங்கங்களெனவும், கோபமூண்ட ருத்திரனும் காலனுமெனவும், எதிர்க்கலாகி ஒருவரையொருவர் கதைகளால் அடித்து மோதலாயினர்.

வஜ்ராயுதத்தி னது வேகத்தை வரைகள் தாங்குவதென, இந்தக் கதாயுதங்களின் பிரஹாரத்தை இந்த ராக்ஷஸனும் அர்ச்சுனனும் அலக்ஷியமாத்தாங்கிகின்றனர். இடிமுழக்குகையில் எங்குமெதிரொலி யுண்டாகுமாறு, இவர்கள் கதைகளை வீசியதாலுண்டாய கோஷம் எல்லாத்திசைகளிலும் பரவியது. அர்ச்சுனனது கதை இராக்கதன் மார்பிற் படிந்தவளவில், அம்மார்பு மிகப்பிரகாசமான மின்னலோடு கூடிய மேகமண்டலமென விளங்கியது; அங்ஙனமே தசகந்தரன் விடுத்தகதை கார்த்தவீரியனது வக்ஷஸ்தலத்தில் படிந்தவளவில், மிகப்பெரிய மலைமீதுவீழ்ந்த எரிகொள்ளியெனத்துலங்கியது. இந்தயுத்தத்தில் அர்ச்சுனனும் ஆயாசமுற்றவனல்லன்; இராக்ஷஸனும் சலித்தவனல்லன். இங்ஙனம் சற்றுஞ்சலிப்புறாதவர்களாகி அவர்களிருவரும், முன்பு பலியுமிந்திரனும் அமர்புரிந்தவாறு யுத்தஞ்செய்தனர்கள். கொம்புகளால் விருஷபங்களும், தந்தங்களால் தந்திகளுமென, அவ்விருவரும் ஒருவரையொருவர் மோதிக்கொண்டனர். அக்காலையில் அர்ச்சுனன் அதிககோபங்கொண்டு தனக்குள்ள திறமை அனைத்தையும் உபயோகித்து ஒருகதையைத் தசக்ரீவனுடைய வக்ஷஸ்தலத்தை நோக்கிவிடுத்தனன். இராவணன் மார்பு சிறந்தவரங்களாகிய கவசம்பூண்டிருக்கின்றதாதலின், அதனைத்தாக்கவலியிலதாகவே அர்ச்சுனனது கதாயுதம் இரண்டாகமுறிந்து மண்மீதுவிழுந்தது. ஆயினும் இராவணன் அதனுக்கு ஆற்றுதவனாகி ஒருவிற்கடை அப்பாலொதுங்கிக் கதறிக்கொண்டு கீழேவீழ்ந்தனன்.

தசக்ரீவன் சோர்ந்துவீழ்ந்ததுகண்டு கார்த்தவீரியார்ச்சுனன் விரைவாகப் பாய்ந்து பன்னகத்தைப் பக்ஷிராஜன் பற்றுவதெனத் தசானனனைப்பற்றிக்கொண்டு, மஹாபலியை நாராயணன் பிடித்துக்கட்டியதெனத் தனது ஆயிரங்கைகளாலும் பிடித்துக்கட்டினான். இங்ஙனம் இராவணனையவ லக்ஷியமாக அடக்கியவளவில், ஸித்தர் சாரணர் தேவதைகள் ஆகியபலரும், நன்றுநன்றெனக் கொண்டாடி, அர்ச்சுனனது முடிமீது பூமாரி பொழிந்தனர்கள். அதுகண்டு ஹேஹயராஜன் அகமகிழ்ந்துமேகம்முழங்குமாறுஜயகோஷஞ்செய்துகொண்டு

மானைப்புலியெனவும், யானையைக் கேஸரியெனவும், இராவணனைப்பிடித்திழுத்துக்கொண்டு போயினான்.

முன்னம் அடியுண்டு வீழ்ந்த பிரஹஸ்தன் இதற்குள் களைதெளிந்து உற்சாகத்துடனெழுந்து, இராவணன் பிடிபட்டுக்கட்டுண்டதுகண்டு கோபமதிகரித்தவனாகி மற்ற மந்திரிமார்களுடனுங் கூடிக் கார்த்தவீரியனையெதிர்த்துச் செல்லலாயினான். ஹேஹயராஜனைநோக்கி அவ்விராக்கதர்கள் ஆவேசத்துடன் எதிர்த்துச் சென்றது, கோடைகழிந்தவளவில் கொண்டல்கள் மஹோததியை நோக்கிச் செல்லுமாறு விளங்கியது. அவர்கள் எதிர்த்து வருகையில், 'எம் அரசனை விடுக விடுக' எனவும், 'ஓடாது நிற்க நிற்க' எனவும் அடிக்கடியுரைத்தவண்ணம் அர்ச்சுனன்மீது முஸலங்களையும் சூலங்களையும் விடுக்கலாயினார்கள். அவ்வரசன் அவற்றைக்கண்டு சிந்தைகலங்காதவனாகவே நின்று, தேவசத்துருக்கள்விடுத்த அவ்வாயுதங்களொன்றும் தன்மீது தாக்காது அவையனைத்தையும் தானேகைப்பற்றிக்கொண்டு, அவ்வாயுதங்களை அங்ஙனமே மறுத்தும் அவ்விராக்கதர்மீது விடுத்து, வாயு விசும்புகளைக் கலைப்பதுபோல அவற்றாலேயே அவர்களை யடித்தோட்டினான்.

கார்த்தவீரியன் இவ்வாறு இராக்கதர்களை வெருவியோடச்செய்து இராவணனைக் கட்டியிழுத்துக்கொண்டு தனது நண்பர்களுடனே நகரம் போய்ச் சேர்ந்தனன். மஹாபலியை வெற்றிகொண்டு தேவேந்திரன் வருவதென, இராவணனைக் கட்டிக்கொண்டு கார்த்தவீரியன் வருவதுகண்டு, அந்நகரத்திலுள்ள பிராமணர்களும் மற்றவர்களும், புஷ்பங்களையும் அக்ஷதைகளையும் அவன்மீது வாரியிறைத்து ஆசீர்வாதஞ்செய்தனர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்தேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்.

கார்த்தவீரியார்ச்சுனனால் இராவணன் கட்டுண்டதைக்கேட்டுப்
புலஸ்தியமுனிவர் அர்ச்சுனனிடஞ்சென்று
இராவணனை விட்டுவிடும்படி வேண்டிக்கொண்டதும்,
அர்ச்சுனன் அங்ஙனமே இராவணனைச் சிறை மீட்டுவிட,
இராவணன் அர்ச்சுனனுடனே நட்புச்செய்துகொண்டு,
மறுபடி உலகத்தவரை உபத்திரவப்படுத்த ஆரம்பித்ததும்.

காற்றைக்கைக்கொண்டுகட்டுவதெனக் கார்த்தவீரியன் இராவணனைக் கட்டிக்கொண்டு போனதைத் தேவர்கள் கூறக் கேள்வியுற்றுப் புலஸ்தியமுனிவர் புத்திரனிடமுள்ள ஆசைப்பெருக்கினால் அதனைப் பொறுக்கமுடியாதவராகி மனங்கலங்கிக் கார்த்தவீரியனைக்காணவேண்டி உடனே தேவலோகத்தினின்று புறப்பட்டு, வாயுவேகம் மனோவேகமாச்சென்று, அமராவதிபட்டணமெனச் சகலமான போகபாக்கியங்களும் பெற்றுக் களிப்புற்ற ஜனங்கள் அடர்ந்துள்ள மாஹிஷ்மதிபட்டணம்போய்ச் சேர்ந்தனர். அமராவதியில் இந்திரனிடஞ்செல்

இராவணனுக்கும் கார்த்தவீரியார்ச்சுனனுக்கும் யுத்தமும் அதில் இராவணன் கட்டுண்டதும், புலஸ்தியர் அவனை (உத்தரகாண்டம்.) விட்டுவிடும்படி வேண்டினதும்.



రావణునికిన్ని కార్తవీర్యార్జునికిన్ని యుద్ధము, అందులో రావణుఁడు కట్టుబడుట, పులస్త్యులు వానిని విడిపింపుమని వేఁడుట.

னும் பிரமதேவனெனவும், ஏதோ காரியத்தினால் கீழிறங்கிக் காலால்நடந்து வரும் ஆதித்தியனெனவும் விளங்குகின்ற புலஸ்தியமுனிவரைக் கண்டு வாயில் காப்போர் அவரின்னாரென்றறிந்து அவர் வருகின்ற செய்தியை அர்ச்சுனனிடம் அறிவித்தனர்.

அதுகேட்டு ஹேஹயராஜன் அவர் புலஸ்தியமாமுனிவரென வுணர்ந்து முடிமேல் அஞ்சலிவைத்தவண்ணம் அத்தவசியை யெதிர்கொண்டு சென்றனன். தேவேந்திரனுக்குத் தேவகுருவேயென, அவனது புரோகிதர் அர்க்கியம் மதுபர்க்கம் முதலியன கைக்கொண்டு முன்னே சென்றனர். உதயமான அருக்கனென எழுந்தருளுகின்ற மஹாமுனிவரை அர்ச்சுனன் கண்ணுற்று மிகப்பரபரப்புடனே, தேவேந்திரன்பிரமதேவனைவழிபட்டுவணங்குமாறுவணங்கினான். வணங்கியபின்னர் அம்மகரிஷிக்கு அர்க்கியம், பாத்தியம், மதுபர்க்கம், பசு ஆகியயாவுமளித்து, ஆநந்தத்தினால் தழதழத்த குரலுடனே முனிவரை நோக்கி, 'ஸ்வாமி! இந்த மாஹிஷ்மதி நகரம் இப்பொழுதே அமராவதி நகரத்திற் கொப்பாகியது; ஏனெனில், எவரும் தரிசித்தற்கரிய அந்தணர் பெருமானான தேவரீரை இப்பொழுது அடியேன் ஸேவிக்கலாயினேனன்றோ? அடியேன் இப்பொழுது எல்லாநன்மைகளும் பெற்றவனாயினேன்; அடியேனது விரதமும் இன்றே நிறைவேறப் பெற்றேன்; அடியேனது ஜன்மம் இன்றே ஸ்பலமாகியது; அடியேனது தவமும் ஸ்பலமாகியது; தேவர்கள் வணங்கத் தகுவனவாகிய தேவரீரது திருவடிகளை இன்று அடியேன் ஸேவிக்கப்பெற்றது பெரும்பாக்கியம். அடியேனது இந்த இராச்சியம், இந்தமக்கள், இம்மனையாட்டிகள், இந்த யாங்கள் ஆகியயாவும் தேவரீருடையனவே; ஹே பிரம்மன்! இப்பொழுது தாஸன்செய்யத் தகுவதுயாதோ, அதனையருளிச் செய்யவேண்டுகின்றேன்' எனப்பிரார்த்தித்தனன்.

அர்ச்சுனன் கூறியது கேட்டுப் புலஸ்தியமுனிவர் அம்மன்னவனை ஆசீர்வதித்து, 'உனது தருமமும் அக்கினிகளும் இனிதோங்குகின்றனவா? புத்திர மித்திரகளத்திராதிகள் சுகமாகவாழ்கின்றனரா?' எனக் குசலம்வினவிப்பிறகு, 'ஹே நரேந்திர! தாமரையிதழ்போன்ற நேத்திரமும் முழுமதிபோன்ற முகமும் உடையமன்னனே! நீ தசக்ரீவனையும் வெற்றிகொண்டனையாதலின், பராக்கிரமத்தி லிணையில்லாதவன். தசாநநன் எனது பவுத்திரன், போரில் எவராலும் வெல்வதற்கரியவன், அவனிடமஞ்சிக் கடலுங்காற்றும் அவனதுகட்டளைக்குக் கீழ்ப்பட்டிருக்கின்றன. அத்தன்மையனான எனது பேரனை நீ போரில்பிடித்துக்கட்டி அவனது புகழைப் பானஞ்செய்து, உனது புகழையெங்கும் பரவச் செய்தனை. இராவணனது செருக்கையழிக்க இவ்வளவேபோதுமானது; யான் இப்பொழுது உன்னை யொன்று கேட்டுக்கொள்ளுகிறேன்; எனது பேரனான தசாநநனை நீ விட்டுவிடுக' எனவேண்டினார்.

புலஸ்தியமுனிவரது நியமனத்தைக்கேட்டு அதற்கு மற்றொன்றும் மறுமொழிகூறாது மனமகிழ்ச்சியுடனே பார்த்திவேந்திரன் ராக்ஷஸேந்திரனைச் சிறைமீட்டு விடுத்து, அவனுக்கு வேண்டிய வஸ்திராபரணங்களும் பூமாலைகளுமளித்துப் பூஜித்து விருந்திட்டு, அக்கினிஸாக்ஷிகமாக அவனுடனே

ஸ்நேகஞ்செய்துகொண்டு, பிரம்மபுத்திரரான புலஸ்தியமுனிவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு வீட்டிற்குச்சென்றனன். இங்ஙனம் அபஜய மடைந்து அதிதிபூஜை செய்யப்பெற்றவனுன இராவணனும் வெட்கித்தலை குனிந்து, புலஸ்தியமாமுனிவரிடம் விடைபெற்றுச் சென்றனன். அம்முனி வரும் இராவணனுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுப் பிரமலோகஞ் சென் றனர். இராவணன் மஹாபலிஷ்டனுயிருக்கையிலும், கார்த்தவீரியனிடம் இவ் வாறு அபஜயமடைந்து பிறகு புலஸ்தியமுனிவரது மகிமையினல் விடுவிக் கப்பட்டனன்.

ஆகையால், ஹே ரகுநந்தன ! பலவான்களுக்கும் மேற்பட்டபலவான்கள் அநேகர் உலகிலிருக்கின்றனர். ஆனதுபற்றித் தனக்கு நன்மையைக்கருதுகின் றவன் பிறரை அவமதித்து இகழலாகாது. பிசிதாசனராஜன் இங்ஙனம் ஆயிரங் கையனுன கார்த்தவீரியார்ச்சுனனிடம் பரிபவப்பட்டு அவனுடன் நட்புச் செய்துகொண்டதுமன்றி, புலஸ்தியமுனிவரால் புத்திபுகட்டப்பெற்றவளவி லும், மறுபடியும்செருக்குற்று அங்கங்கேயிருக்கும் அரசர்களுக்குஇடுக்கண்க ளியற்றிக் கொண்டு பூமிமுழுமையும் திரியலாயினன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

இராவணன் கிஷ்கிந்தாபுரிசென்று வாலியைப் போர்க்கழைத்ததும்,
அப்பொழுது வாலி தென்கடல்சென்றிருப்பதுகேட்டு
அங்குச்சென்று வாலியைப்பிடிக்க வெண்ணியதும்,
அது தெரிந்து வாலி இராவணனைக் கக்கத்திலிடுக்கிக்கொண்டு
மற்றமூன்றுகடலுக்கும் சென்று ஸந்தியாவந்தனஞ்செய்து
மறுபடி கிஷ்கிந்தைசேர்ந்து இராவணனைக் கீழேவிட்டதும்,
அதனல் இராவணன் அவமானமடைந்து வாலியுடன் நட்புச்செய்துகொண்டதும்
ஸ்ரீராகவனுக்கு அகத்தியமுனிவர் கூறியது.

---

ராக்ஷஸராஜனுன இராவணன்அர்ச்சுனனல் விடுக்கப்பட்டவனுகி விசன மொழிந்து மறுத்தும் பூமிமுழுமையும் ஸஞ்சரிக்கையில், இராக்கதனே மானிடனே, யாவன் பலிஷ்டனுயுளனெனக் கேள்வியுறுகின்றனனே, அவ னிடம்சென்று அவனை அசங்காரத்துடனே அமர்புரிய அழைக்கத்தலைப்பட் டனன். இவ்வாறு செல்லுகையில் ஒருகால், வாலியினல் பரிபாலிக்கப் பட்ட கிஷ்கிந்தாபுரிக்குச் சென்று, பொன்மாலைபூண்டவனுன வாலியைத் தன்னுடன் போர்புரியவருமாறு விளித்தனன். அப்பொழுது அவ்விடத் திருந்த, வாலியினது மந்திரியும் மாமனுமான பிரபுவாகிய * தாரனென்னும்

* தாரனென்பவன் வாலிக்கு நேராக மாமனல்லனுகையால், மந்திரியான தார னும், தாரையின்தந்தையான சுஷேணனும், பிரபு (யுவராஜா) வான சுக்கிரீவனுமாகிய மூவருமெனவும் பொருள்கூறுவர்.

வாநரன், அமர்புரிய ஆவல்கொண்டு வந்திருக்கின்ற இராவணனைநோக்கி,'ஹே ராக்ஷஸேந்திர! உமக்கு எதிரேநிற்கவல்லவனுன வாலி இப்பொழுது இவ்விடத்திலில்லை; அவனெழிய மற்றெந்த வாநரனும் உமக்கு எதிராகநிற்கப் போதுமான ஆற்றலுடையவ னல்லன்; ஹே ராவண! வாலி நான்குஸமுத்திர முஞ்சென்று ஸந்தியோபாஸனஞ் செய்து இன்னுமொருமுகூர்த்தத்திற்குள் இவ்விடம் திரும்பிவருவான்; ஒரு முகூர்த்தகால மிங்கேயே காத்திரும். சங்கு போல வெளேரென்றிருக்கின்ற இந்த எலும்புக் குவைகளைக் கண்டீரா? இவை யாவும், யுத்தத்தை வேண்டிவந்து வாலியினல் வதையுண்ட வீரர்களுடைய எலும்புகளாம். ஹே ராக்ஷஸ, ராவண! நீர் அமிர்தபானஞ் செய்தவரே யாயினும், வாலியைநெருங்குமளவுமே உம் உயிர் உம்முடையதென் றுநினையும்; விச்சிரவஸ் முனிவரது மகனே! இங்கே ஒருமுகூர்த்தம் பொறுத்திருப்பீராகில், இவ்வுலகத்தின் விசித்திரமான ஒரு செய்கையைக் காண்பீர்; வாலியைக் கண்டவுடனே உமது உயிர் உடலைவிட்டு நீங்கிவிடும். அதற்குள்ளேயே மரணமடைய வேண்டுமெனவிரைகுவீராகில், உடனே தென்கடலுக்குச் செல்லுக; பூமியிலெழுந்த அக்கினியென ஆங்கு வாலி வீற்றிருக்கக் காண்பீர்' என்று கூறினன்.

அதனைச் செவியுற்று இராவணன் அந்தத் தாரனைவெருட்டி உடனே புஷ்பகவிமானமேறித் தென்கடலை நோக்கிச் சென்றனன். அவ்விடத்தில் மேருமலைபோலவும் பாலசூரியன் போலவும் பிரகாசித்துக்கொண்டு சந்தியோபாஸனமே சிந்தையாக்கொண்டிருக்கின்ற வாலியை அஞ்சனமலைக்கொப்பான இராவணன் கண்ணுற்றுப் புஷ்பகவிமானத்தினின்று மிறங்கி, வாலியை யங்ஙனமே பிடித்துக்கொள்ள வேண்டுமென வெண்ணி, அடி யோசைப்படாது விரைவாகநடந்து சென்றனன்.

இராவணன் இவ்வாறு விரைந்துவருவதைத் தற்செயலாக்கீழ்க்கண்ணுற் கண்டவாலி அவனதுகெடுநினைவினையுணர்ந்து சலியாது அங்ஙனமே நின்றனன். முயலைக்கண்ட சிங்கமெனவும், பாம்பைக்கண்ட பக்ஷிராஜனெனவும், கெட்டநினைவுகொண்டதசகந்தரனைக்கண்டவாலி அவனை யொருபொருட்டாக வெண்ணுது, 'நம்மைக் கைக்கொள்ளவேண்டுமெனத் துராலோசனைசெய்து கொண்டுவருகின்ற இவ்விராக்கதனைக் கக்கத்தி லிடுக்கிக்கொண்டவண்ணமே மற்றமூன்று மஹாஸமுத்திரங்களுக்கும் செல்வேன். எனது கக்ஷங்களி லிடுக்குண்டு கால்களும் கைகளும் உடுத்தவாடையும் கீழேதொங்க, கருடன் மூக்கில் நாகந்தொங்குவதென, இராவணன் ஊசலாடிக்கொண்டு வருவதைத் தேவர் முதலாயினேர் காணக்கடவர்கள் என மனத்திற்கொண்டு, இராவணனது அடியோசையிலேயே கருத்துடையனுய் வாலிமௌனமாகி வேதமந்திரங்களை ஜபித்துக்கொண்டு மேருமலையென நின்றனன்.

இவ்வாறு வாநரராஜனும் ராக்ஷஸராஜனும் ஒருவரையொருவர் கைக்கொள்ள வேண்டுமென்னுங் கருத்துடையோராகித் தமக்குள்ளவலியினல் செருக்குற்று அதிகஜாக்கிரதையுடனே அக்காரியத்தைச்செய்து முடிக்கமுயலலாயினர். அக்காலையில், கையினற் பற்றுதற்கெளிதான அவ்வளவுசமீபத்தில்

இராவணன் வந்துசேர்ந்தனனென அவனது அடியோசையால் உணர்ந்த வாலி தான் பின்புறமாகத் திரும்பியிருக்கையிலும், தன்னைப்பிடிக்கக் கைநீட்டிய இராவணனை, பாம்பைப்புள்ளரசு பற்றுவதெனக் கக்கத்திலிடுக்கிக்கொண்டு அங்ஙனமே ஆகாயத்திலெழும்பினன். அப்பொழுது இராக்கதராஜன் பல்லாற்கடித்து நகங்களாற்பீறி வருத்துகையிலும் வாநரேந்திரன் அதனையொரு பொருட்டாக மதியாது கொண்டலைக் காற்று ஈர்த்துக்கொண்டு செல்வதென விரைந்துசென்றனன்.

தசாநநனை வாநரராஜன் இவ்வண்ணம் வலியப்பிடித்துக்கொண்டு போவதுகண்டு இராக்கதனது அமைச்சர்கள் அவனைவிடுவிக்குமாறு விரைந்து பின்றொடர்ந்தோடினர்கள். இராக்கதர் பலர் இவ்வாறு பின்றொடர வாலி வானத்திற்செல்லுகையில், புயல்கள் பின்றொடரப்பெற்ற சூரியனென விளங்கினன். வாலியைத் தொடர்ந்துசென்ற இராக்கதர்கள் அவனையணுக ஆற்றலொழிந்து, அவனது கை கால்களது வேகத்தினல் அடியுண்டு இளைப்புற்று நின்றனர்கள். வாநரேந்திரன்சென்ற வழியிலுள்ள வரைகளும் அவனதுவேகத்திற்கு ஆற்ருது ஒதுங்கிப்போயினவென்றால், உதிரமாமிசங்களாலாய உடல்பெற்று உயிரின்மீது ஆசைகொண்ட மானிடர்களுக்குக் கேட்க வேண்டுமோ? இவ்வண்ணமெதிர்ப்பவரெவருமின்றி வாநரராஜன் மகா வேகத்துடனே, பறவைகளும் அணுகுதற்கரிய விடங்களாகிய நான்கு ஸமுத்திரங்களுக்கும் முறையே சென்று ஸந்தியோபாஸநஞ் செய்தனன். எவ்வாறெனில்,—

வானத்தில் செல்லவல்ல வீரனன வாலி இராவணனை வகித்துக்கொண்டவண்ணமே வானத்திற்சஞ்சரிக்கின்ற ஸகலமான பூதங்களாலும் போற்றிப் புகழப்பட்டவனுகி மேற்குக்கடலுக்குச் சென்றனன். அவ்விடத்துச்செய்ய வேண்டிய ஸ்நாநம் ஜபம் முதலியவற்றைச் செய்துமுடித்துக்கொண்டு, தனது சத்துருவான தசாநநனை வகித்தவண்ணமே அவனுடன் அநேகமாயிரம் யோஜனைதூரம் ஆகாயமார்க்கமாக வாயுவேகம் மநோவேகமாச்சென்று வடகடல் போய்ச்சேர்ந்து, அவ்விடத்துச் செய்யவேண்டிய ஸந்தியாவந்தனத்தைச் செய்துமுடித்து, அவ்விடம்விட்டு அதேகோலமாகவே கிழக்குஸமுத்திரம் போய்ச்சேர்ந்து, ஆங்குச் செய்யவேண்டிய ஸந்தியாவந்தன கருமங்களையும் இனிதுசெய்து முடித்தனன்.

வாஸவநந்தனனன வாலி இவ்வண்ணம் நான்கு ஸமுத்திரங்களிலும் * ஸந்தியாவந்தனஞ்செய்து முடித்து அங்கிருந்து இராவணனைச் சுமந்தவாறே புறப்பட்டுக் கிஷ்கிந்தாபுரி சேர்ந்து அந்தப்பெருஞ் சுமையான தசாநநனைச் சுமந்து சென்றதனல் சற்றிளைப்புற்றவனுகிக் கிஷ்கிந்தாபுரியி னுத்தியான வனத்திலிறங்கினன். இறங்கினவுடனே இராக்ஷஸராஜனை வாநரராஜன் தனது

* ஸந்தியாவந்தனம் ஒரேயிடத்தில் ஒரேதரம் செய்துமுடிக்கவேண்டிய செய்கையாயிருக்க, நான்குஸமுத்திரங்களிலும் நான்குதரம் செய்தானென்பது எவ்வாறு பொருந்துமெனின், முதலிலே தென்கடலில் சௌசம் முதலியவையும், மேற்குக்கடலில் ஸ்நாநஜபங்களும், வடகடலில் புரோக்ஷணம் முதலியவையும், கிழக்குக்கடலில் அர்க்கியப் பிரதானம் முதலியவையும் செய்யப்பட்டனவாதலின், பொருந்துமென்பர்.

இராவணனைவாலிஎடுத்துக்கொண்டுசென்றதும், அதனால் இராவணன்வாலியுடனேநட்புசெய்துகொண்டதும்.





రావణునిని వాలియెత్తుకొని పోవుటయు అందుచేత రావణుడు వాలితో మంచితనము చేసుకొనుటయు.

கக்கத்தினின்றுகீழேவிடுத்து அவனைநோக்கிப்பலதரம்நகைத்து,'ஓகோ! தாங்கள் எங்கிருந்து இப்பொழுது வருவது' என வினவினன். வாலியினது செய்கையைக்கண்டு மிக்கவியப்புற்றவனுன ராக்ஷஸராஜன் மிகவுமிளைப்புற்றுக் கண்களை வெருளவெருள விழித்து நோக்கி, 'மஹேந்திரனுக் கொப்பான மஹிமைபெற்ற வாநரேந்திரனே! யான் இலங்காதிபதியான இராவணனன்றோ? யான்உன்னுடன் அமர்புரிய விரும்பி இவ்விடம் வரலானேன்; வந்தவிடத்தில் இவ்வாறு அலைக்கழிக்கப்பெற்றேன். உனது வலியேவலி! உனதுவீரியமே வீரியம்! உனது காம்பீரியமே காம்பீரியம்! புலி பசுவைப் பற்றுவதென நீ என்னைப் பற்றிக்கொண்டு நான்கு ஸமுத்திரங்களும் சுற்றிவந்தனை யன்றோ? இவ்வாறு என்னை வஹித்தவண்ணமே சிறிதளவும் சோர்வடையாது நான்கு கடல்களுக்கும் சென்று சுற்றிவர வல்லவீரன் வேறொருவனுமுளனோ? இங்ஙனம் செல்லவல்லனவாய் மனம், வாயு, கருடனுகிய மூன்றுபூதங்களே உலகிலுள்ளனவென நான் நினைத்திருந்தேன்; இப்பொழுது அவற்றிற்கு இணையானவன் நீயுமொருவனிருக்கின்றனையென வுணர்ந்தேன்; நீ அவற்றிற்கு இணையானவனென்பதற்கு ஐயமின்று. ஹே ஹரீச்வர! யான் இப்பொழுது உனது ஆற்றலைக்கண்டு களிகூர்ந்தேனுதலின், ராக்ஷஸராஜனுன யான் உன்னுடனே அக்கினிஸாக்ஷிகமாக அழியாநட்புச் செய்துகொள்ள ஆவல்கொள்ளுகின்றேன்; பெண்டிர், பிள்ளைகள், நகரம், நாடு, போகபாக்கியங்கள், உடையுண்டி ஆகிய யாவும் இனியென்றென்றும் நம்மிருவருக்கும் பேதமின்றிப் பொதுவாகவே யிருக்கக்கடவன' என்று கூறிவேண்டினன்.

வாநரராஜன் அங்ஙனமே யாகுகவென்று உடன்பட்டனன். அப்பொழுதே தீவளர்த்து வாநர ராக்ஷஸர்களாகிய அவ்விருவரும் ஒருவரையொருவர் ஆலிங்கனஞ்செய்து கொண்டு அவ்வக்கினி ஸாக்ஷிகமாக நட்புச்செய்து கொண்டு பிராதாக்கள் போலாயினர். அப்பால் வாலியு மிராவணனும் ஒருவரோடொருவர் களிகூர்ந்து கைகோத்துக்கொண்டு, இரண்டு சிங்கங்கள் மலைக்குகையில் நுழையுமாறு கிஷ்கிந்தா புரியில் புகுந்தனர். அங்கு வாலியுடன் ஸோதரனுன சுக்கிரீவனேபோல இராவணன் ஒருமாதகாலம் வஸித்திருந்து, பின்னர் தன்னுடனே வந்த அமைச்சர்களுடன் இலங்காபுரம் போய்ச் சேர்ந்தனன். ஹே பிரபோ, ஹே ராம! இஃது முன்னுல்நடந்த விருத்தாந்தம்; இராவணன் இவ்வாறு வாலியினுல் வெல்லப்பட்டவனுகிப் பின்னர் அவனுடனே அக்கினி ஸாக்ஷிகமாகச் சிநேகம் செய்துகொண்டு ஸகோதரனே போல வாழ்ந்திருந்தனன். வாலியினது வலி ஒப்புவமையில்லாதது; அத்தன்மையனுன வாலியும், வன்னியினுல் விளக்கிட்டுப் பூச்சிபோல, உம்மால் எரிக்கப்பட்டிறந்தனன்" எனமொழிந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் முப்பத்தொன்பதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## நாற்பதாவது ஸர்க்கம்.

ஸ்ரீராகவன் அனுமானைப் புகழ்ந்து அவனுடைய மகிமைகளை விளங்கக்கூறுமாறு அகஸ்தியமுனிவரை வினவ, அவர் அதனைக் கூறத்தொடங்கி, அனுமான் வாயுகுமாரனாய் அஞ்சனாதேவியிட முற்பவித்ததும், உற்பவித்தவுடனே கதிரவனைக் கனியென வெண்ணிக் கவர வெழுந்ததும், அக்காலையில் அங்குவந்த ராகு அனுமானைக் கண்டு இந்திரனிடஞ் சென்று முறையிட, இந்திர னுடனேவந்து தன் வஜ்ராயுதத்தினால் வாயுகுமாரனை மெல்லத்தட்டியதும், அதுகண்டு வாயு கோபித்து உலகமெங்கும் வாயுசஞ்சாரமேயின்றிப் பெருந்துன்ப முண்டாக்கியதும், அதுகேட்ட பிரமதேவர் அவ்விடம் சென்றதும்.

தென்றிசைமுனிவரான அகத்தியர் இவ்வாறு உரைத்தது கேட்டு ஸ்ரீராம பிரான் வினயத்துடனே வணங்கிக் கைகூப்பிக்கொண்டு அவரைநோக்கி அரும்பொருளமைந்த ஒருவார்த்தை விண்ணப்பஞ் செய்யலாயினர். 'ஹே ஸ்வாமி! தேவரீரருளிச்செய்தவாறு வாலிக்குமிராவணனுக்குமிருந்த வலி இணையற்றதேயாகும்; ஆயினும் அவர்கள் அநுமானுக்கு இணையாகாரெனயான் நினைக்கின்றேன்: சௌரியம், ஸாமர்த்தியம், பலம், தைரியம், பாண்டித்தியம், நீதி, விக்கிரமம், பிரபாவம் ஆகிய பலவும் அநுமானிடத்தில் குடிகொண்டிருக்கின்றன. கடலைக்கண்டமாத்திரத்திலே விஷாதமடைந்த வாநர வாஹினியைச் சமாதானப்படுத்தி மஹாபாகுவான அநுமான் நூறுயோஜனையளவு கடலைக்கடந்து அரக்கர்பதியிற்புகுந்து லங்கிணியை வென்று இராவணனது அந்தப்புரத்தினுட்சென்று சீதையைக்கண்டு அவளுடனே ஸம்பாஷணை செய்து அவளை ஆச்வாசப்படுத்தினான்; பிறகு இராவணனது சேனாதிபதிகளையும், மந்திரிகுமாரர்களையும், கிங்கரர்களையும், அக்ஷகுமாரனையும் தானொருவனாகவே வதைத்தனன். பின்னர் தான் பிரம்மாஸ்திரத்தினால் கட்டுண்டு உடனே விடுபட்டனனாயினும், தசக்கிரீவனையுங் கண்டு அவன் தன்னுடனே ஸம்பாஷிக்குமாறுசெய்து, அக்கினி இப்பூமியை யெரிக்குமாறு, இலங்காபுரியில் தீயிட்டெரித்தனன். அமர்க்களத்தில் அநுமான்செய்த ஸாஹஸமானசெய்கைகள் யமன், இந்திரன், விஷ்ணு, குபேரன்ஆகியதேவர்களாலும் செய்யப்பட்டனவாகக் கேள்வியுற்றதில்லையே. இவ்வநுமானதுபாகுபலத்தினாலன்றோ விபீஷணனுக்கு அளிக்குமாறு இலங்கை நமக்குக் கிடைத்தது; சீதை கிடைத்தனள்; ஓஷதிமலையினால் இலக்குமணனும் எனக்குத் தம்பியா யுயிர்த்தெழுந்தான்; யானும் வெற்றிபெற்றேன்; இராஜ்யமும் பெற்று உற்றாருறவினருடனே கூடினேன். வாநரராஜனுக்கு ஸகாவான இந்த அநுமானொருவன் நமக்குக் கிடைத்திலனாயின், ஜானகியிருக்குமிட மறிந்துவர வல்லவன்தா னெவனிருக்கின்றனன்? இஃது இங்ஙனமாக, அடியேனுக்குப் பெரிய ஸந்தேகமொன்று உளது. அநுமானிவ்வளவு ஆற்றலுடையோனாகில், வாலி சுக்ரீவர்கட்கு வைரமுண்டான பொழுதே, சுக்ரீவனுக்கு இதமியற்றவெண்ணி,

அக்கினி உலர்ந்தசருகுகளை யெரிக்குமாறு, இவன் வாலியையேனெரித்திலன்? இந்த அநுமான் அப்பொழுது தன் ஆற்றலையுணர்ந்திலனோ? இல்லையாயின், தன் உயிரினுமினியனான நண்பனாகிய வாநரராஜன் அங்ஙனம் துன்புறப் பார்த்துப் பொறுத்திருப்பனோ? இதனை நினைக்கையில் அடியேனுக்கு மிக வியப்புண்டாகின்றதாதலின், மஹாமேதாவியான அநுமானிடமுள்ள மகிமைகள் எல்லாவற்றையும் உள்ளபடி அடியேனுக்கு விளங்கக்கூறவேண்டுகிறேன்' என வினவினர்.

ஸ்ரீராகவன் இவ்வாறு ஏற்றகாரணங்களுடன் எடுத்துரைத்த வசனத்தைச் செவியுற்று அகஸ்தியமாமுனிவர் அநுமானெதிரிலேயே மறுமொழி கூறலாயினர்:—"ஹே ரகுநாதா! நீர் அநுமான் விஷயத்தில் விளம்பியவை யாவுமுண்மையே; பலத்திலாயினும் கதியிலாயினும் மதியிலாயினும் அநுமானுக்கு இணையானவரொருவருமுலகிலில்லை. சொன்னது சொன்னவண்ணமே பலிக்கும் பிரபாவமுடையோரான பெரியோர்கள் பூர்வத்திலிட்ட சாபமொன்றுண்டு; அதனாலே இவன் மஹாபலிஷ்டனாய் எதிரிகளை யெரிக்குமாற்றலுடையோனாயிருக்கையிலும், தன்வலி யித்தன்மையதென வுணருந்திறமற்றிருக்கின்றனன். ஹே ராம! இவன் சிறுகுழந்தையா யிருக்கையில், சிறுபிள்ளைத்தனத்தினால் தெரியாமற் செய்த ஸாஹஸச்செய்கையே இத்தன்மைத்தென வர்ணித்துரைக்க முடியாதெனின், இவனது மகிமையை யானென்னவென்று இயம்புவது? அதனைக்கேட்கத் திருவுள்ளமாயின் ஸாவதானமாய்த் திருச்செவிசார்த்துக, இயம்புகின்றேன்.

சூரியனளித்தவரத்தினால்சுவர்ணமயமாகவிளங்கும்மேருமலையிலேகேஸரியென்னு மொருவானரன் இராஜ்யபரிபாலனஞ் செய்துவந்தனன்; அவனே இந்த அநுமானுக்குப்பிதா. அவனதுபாரியை அஞ்சனையெனப் பிரசித்திபெற்ற பெண்மணி; அவளிடத்தில் வாயுதேவனுக்குப் பிறந்த உத்தமகுமாரனிவன். பழுத்த தானியங்கள்போன்ற பொன்னிறமான மேனியுடையனாகிய இம்மகனைப்பெற்ற வளவிலே அஞ்சனாதேவி குழந்தைக்குக் கனிகள்கொண்டுவருமாறு காட்டுக்குச் சென்றனள். அப்பொழுது பெற்றதாய் பக்கத்திலின்மையாலும் பசியினாலும் வருந்தி, சரவணத்திலழுத சுப்பரமணியக்கடவுளென, அந்தச்சிசு கதறி யழத்தொடங்கியது. அக்காலையில் ஜபாபுஷ்பம் போன்ற சோதியுடையனாய்ச் சூரியனுதயமானது கண்டு அவ்விளவல் கனிவேண்டுமெனக் காதல்கொண்டதாகிக் கதிரவனை நோக்கி ஆகாயத்தி லெழும்பியது. இளஞ்சூரியனை நிகர்த்த மேனியுடையதான சிறுபிள்ளை இளஞ்சூரியனை நோக்கி யாகாயத்தி லெழுந்துசெல்வது கண்டு, தேவர் தானவர் யக்ஷர் முதலியோர் மிகுதியும் வியப்புற்றனர். ஆ! இந்த வாயுகுமாரன் வானத்தி லெழுந்து செல்கின்றனனே! இத்தன்மையதான வேகம் வாயுவுக்காயினும், கருடனுக்காயினும், மனத்திற்கேயாயினு முள்ளதோ? சிசுவாயிருக்கையிலேயே இவனுக்கு இத்தன்மையதான வேகமுளதாயின், யௌவனமும் பலமும் வந்தவளவில் இவனது வேக மெத்தன்மையதாகுமோ? என்று கூறி அதிசயித்தனர்கள்,

அநுமானிங்ஙனம் ஆகாயத்திற் செல்வது கண்டு அவனது தந்தையான வாயு, சூரியனருகா லெரிப்பனோ வென்னும் அச்சத்தினால் பனிமலை யெனக் குளிர்ந்தவனாகி யவனைக்காத்துக்கொண்டு கூடவே சென்றனன். இவ்வாறு பிதாவினது பலத்தினாலும் பால்யத்தினாலும் இளைப்புறாதவனாகி அநுமான் ஆகாயத்தில் அநேகம் யோஜனை தூரஞ் சென்று சூரியனது ஸமீபஞ் சேர்ந்தனன். இதனைக் கண்ணுற்ற கதிரவன், இவனொன்று மறியாத இளைஞனெனவும், இவனாற் பல காரியங்கள் முடியவேண்டி யிருக்கின்றன வெனவு முணர்ந்து, அவனை யெரிக்காது இதமாகக் காய்ந்தனன்.

என்றைத்தினம் அநுமான் சூரியனைப் பற்ற வானத்தி லெழுந்தனனோ அன்றைத்தினம் இராகுவும் இரவியைப் பிடிக்குமாறு அவ்விடஞ் சென்றனன். சூரியனது ரதத்தின்மீது ராகுவைக் கண்டு மாருதி ரவியைவிட்டு ராகுவின்மீது பாய்ந்தனன். சூரிய சந்திரர்களைப் பற்றுவதற்கே பிறந்த ராகு அதனைக்கண்டு அஞ்சினவனாகி அதிககோபத்துடனே தேவேந்திரனது மாளிகைக்குச்சென்று, ஆங்கு தேவர் குழாஞ்சூழச் சிங்காசனத்து வீற்றிருந்த தேவேந்திரனைநோக்கிப் புருவத்தை நெறித்துக்கொண்டு, 'ஹே வாஸவ! பலாசுரனையும் விருத்திராசுரனையும் வதைத்த வீரனை நீ என்பசிதணியுமாறு எனக்கு உணவாகச் சந்திரசூரியர்களை யளித்திருக்க, இப்பொழுது வேறு யாரோ ஒருவர்க்கு அவர்களை நீயளித்தது யாதுகாரணம்? இன்று பருவகாலமாதலின் யான்சூரியனைப்பற்ற அவ்விடஞ்சென்றேன்; அத்தருணத்தில் என்னைப்போன்ற மற்றொரு ராகு அங்குவந்து அருக்கனைக் கவர்கின்றனனே!' எனக்கூறினன்.

ராகுவிளம்பிய வசனத்தைக்கேட்டு வாஸவன் மிகப்பரபரப்புடையோனாகிப் பொன்மாலை மார்பில்துலங்க உடனே ஆஸனத்தினின்றெழுந்து, கைலாசகிரியின் சிகரம்போல வெண்மைநிறமாகவிளங்கும் நான்குதந்தங்களையுடைய நாகமான ஐராவதத்தின்மீ தேறினன். பலவிதமான அலங்காரங்கள் செய்து சுவர்ணமயமான மணிகள்கட்டிக் கணகண வென்றொலிக்கப்பெற்று மதஜலம் பெருக்குகின்ற மிகப்பெரிய வாரணத்தின்மீதேறி வாஸவன் ராகுவை முன்னிட்டு, அருக்கன் அநுமானுட னிருக்குமிடநோக்கி விரைந்துவந்தனன். அவ்வாறுவருகையில், இந்திரனுக்குமுன்னே ராகுவெகுவேகமாகச் சூரியனிடத்திற்குச் சென்றனன். மிகப்பெரியதான பருவதசிகரமென இராகு இரவிக்குநேராக வருதல்கண்டு மாருதி அஃதொரு அற்புதமானகனி யெனக் கருதிக் கதிரவனைவிட்டு ராகுவைப்பிடிக்க வானத்திலெழுந்தனன். அநுமான் தன்மீதுபாய்ந்து வருதல்கண்டு ஸிம்ஹிகையின் மகனான ராகு மிகப் பயந்து, 'இந்திரனே! இந்திரனே! என்னைக் காத்தருள்க' என வாயோயாமல் கூவியவண்ணமே அவனிடமோடி யடைக்கலம் புகுந்தனன்.

இராகு இவ்வண்ணம் கதறிக்கொண்டு ஓடிவருவதுகண்டு இந்திரன், 'யான் இவனையதஞ்செய்துவிடுகின்றேன், நீ யஞ்சாதொழிக'வென் றபயமளித்து அருக்கனருகே சென்றனன். அப்பொழுது அநுமான் ஐராவதத்தைப் பார்த்து, அஃதொரு மிகப்பெரியபழமெனப் புந்தியிற்கொண்டு அதன்மீது

உத்தரகாண்டம்.

No. 15. அனுமார் ஜனனமும் ஜனித்தவுடன் அவர் செய்த ஸாகஸங்களும். PAGE. No. 132.



హనుమంతుని జననమున్ను, జనించినతోడనే అతనుచే

பாய்ந்தனன். வெள்ளையானையைப் பற்றவெண்ணி வாயுமைந்தன் வானத்தி லெழுந்து செல்லுகையில், இந்திரன் அக்கினியென்னும் தேவர்களின் உருவ மென்ன அவனது உருவம் ஒருமுகூர்த்தகாலம் மிகப்பயங்கரமாத் துலங்கியது. இவ்வாறு எதிர்த்துவரும் அனுமானை நோக்கிச் சசிபதி சிறிது சினங்கொண்டு தன் கையிலிருந்த குலிசத்தினால் அவனை மெல்லப்புடைத்தனன்.

இந்திரனது வச்சிராயுதத்தினாலடியுண்டவளவில் அக்கவிக்குழந்தை அங்குள்ள கிரியின்மீது வீழ்ந்து இடக்கவுளில் அறைபட்டுச் சூம்பி மூர்ச்சித்துக் கிடந்தது. தன்சிறுவன் வச்சிராயுதத்தினாலடிபட்டுச் சோர்ந்துவீழ்ந்தது கண்டு வாயுபகவான் வாஸவன்மீது சினமூண்டு பிராணிகளனைவர்க்கும் பெருந்துன்பம் விளைக்கவெண்ணித் தானெங்கும் ஸஞ்சரிப்பதையொழித்துப் பிரஜைகளின் மலமூத்திராசாயங்களிற்றம்பித்து, தன்குழந்தையுடனே ஒரு குகையிற்போய்ப் புகுந்தனன். மஹேந்திரன் மழைபொழிவதை நிறுத்துமாறு, ஸர்வபூதங்களின் சரீரத்திலுமுள்ளும் புறமும் ஸஞ்சரிக்கின்ற சமீரணன் தனது சஞ்சாரத்தை நிறுத்தவே, ஸர்வபூதங்களும் மூச்சுவிடவும் கைகாலசைக்கவும் திறமற்று வயிறுவீங்கிக் காஷ்டங்கள்போலாயினர். அதனால் வேதாத்தியானமும் வேள்விமுதலிய வைதிக கருமங்களும் நடந்தேறவழியின்றித் தரும மொழியத்தலைப்பட, வாயுவினது கோபத்தினால் மூவுலகங்களும் நரகத்தில் வீழ்ந்தனபோலாயின.

அநந்தரம், தேவர் கந்தருவர் அசுரர் மனுஷியர் ஆகிய ஸகலமான பிராணிகளும் மஹோதரமென்ன வயிறுவீங்கி வருத்தமுற்றவராகித்தமது துன்பத்தைத் தீர்க்கவழிதெரியாது நான்முகக்கடவுளிடஞ் சென்று சரணம்புகுந்தனர். அப்பொழுது தேவர்கள் அவரை வணங்கிக் கைகூப்பிக்கொண்டு விண்ணப்பஞ் செய்யலாயினர்: 'ஹே பகவன்! பிரஜைகளைப்படைத்துப் பரிபாலிக்கின்ற நாதனான தேவரீர் இவ்வுலகில் *நான்குவிதமான பிராணிகளைப்படைத்து அவையாவும் உயிர்வாழ்வதற்கு முக்கியமாக வாயுதேவனை யளித்தீர். எங்களனைவர்க்கும் பிராணேச்வர னாயிருந்த வாயு இப்பொழுது, அந்தப்புரத்தில் பெண்களைச்சிறைப்படுத்துமாறு, எங்களனைவரையும் கைகாலசைக்க வொட்டாமல்கட்டிப் பெருந்துன்பம் விளைவிக்கின்றனன்; அவனேன் இவ்வாறு செய்கின்றனனோ யாமறியோம். இங்ஙனம் வாயுவினால் துன்புறுத்தப்பட்டவர்களாகி அதனைத் தாங்கமுடியாது நாங்கள் உம்மைச் சரணம்புகுந்தோம்; எல்லாத்துயரங்களையும் தீர்க்க வல்லவரான தேவரீர் வாயுபந்தத்தினாலெமக்கு உண்டான இவ்வருத்தத்தைத் தீர்த்து உயிரளிக்கவேண்டுகின்றோம்' என விண்ணப்பஞ்செய்தனர்.

பிரஜைகள் இவ்வாறு புகன்றதுகேட்டுப் பிரமதேவன் அப்பிரஜைகளை நோக்கி, 'நீவிர் இதற்காக வருந்தற்க; வாயு இவ்வாறு கோபங்கொண்டு

---

* ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் - எனப் பிராணிகள் நான்கு விதம். கருப்பையினின்று உண்டாகும் மானிடர் மிருகம் முதலியன ஜராயுஜம்; முட்டையினின்று உண்டாகும் பக்ஷி ஸர்ப்பம் முதலியன அண்டஜம்; புழுக்கத்தினா லுண்டாகும் பூச்சி புழு முதலியன ஸ்வேதஜம்; பூமியைப்பிளந்து கொண்டு மேலெழுந்து உண்டாகும் செடிகொடி முதலியன உத்பிஜ்ஜம்.

தம்பித்துகின்றதற்குக் காரணமொன்று உளது; அக்காரணத்தைக் கூறுகின்றேன், கேளுங்கள்: தேவேந்திரன் இப்பொழுது ராகுவினது வார்த்தையைக் கேட்டு வாயுகுமாரனை யடித்துத் தள்ளினன்; அதனால் வாயு கோபங்கொண்டனன்: வாயு தனக்கொரு சரீரமில்லாதவ னாகவே ஸகல சரீரங்களிலும் புகுந்து பாதுகாக்கின்றனன்; வாயுவில்லையாயின், பிராணிசரீரம் பெருங் கட்டைப் போன்றதேயாகும். பிராணனும் வாயுவே, சுகமும் வாயுவே; இவ் வுலகம் முழுமையும் வாயுவையே ஆதாரமாக் கொண்டிருக்கின்றது.

வாயுவில்லையாயின் இவ்வுலகில் சுகமில்லையாம். உலகத்திற்குப் பிராணனாயிருக்கின்ற வாயு இப்பொழுது இவ்வுலகத்தை விட்டு நீங்கினமையின், இவ்வுலகத்திலுள்ளவை யாவும் உயிர்ப்பொழிந்து கட்டைகள் போலவும் சுவர்கள்போலவுமாயின. உங்களுக்கு இவ்விதமான உபாதியுண்டாக்கிய வாயு எவ்விடத்து இருக்கின்றனனோ, அவ்விடத்திற்கு யாம் இப்பொழுது செல்வோம்; வாயுவை நாம் வேண்டிக் களிப்புறச் செய்தாலன்றி உலகத்திற்கு உண்டாகிய இத்துன்பம் தீர வேறுவழியின்று' எனவுரைத்து, ஸகலமான பிரஜைகளோடும், தேவர் கந்தருவர் புஜங்கர் குஹ்யகர் முதலியவர்களோடும் கூடி மஹேந்திரனால் அடியுண்ட மகனை மடியில் வைத்துக்கொண்டு மாருதன் எவ்விடத்திருக்கின்றனனோ, அவ்விடத்திற் கேகினர். ஆங்கு வாயு தேவனது மடியிலே சூரியனெனவும் அக்கினி யெனவும் சுவர்ண மயமாகச் சொலித்துக்கொண்டு படுத்திருந்த சிறுமகனை நான்முகக்கடவுள், தேவர் கந்தருவர் யக்ஷர் ராக்ஷஸர் ரிஷிகள் ஆகிய அனைவருடனும் குளிரக்கடாக்ஷித்துக் கருணைகூர்ந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது ஸர்க்கம்.

பிரமதேவர் பவனகுமாரனைப் பரிசித்துப் பிழைப்பித்து,
தேவர்களுடனே அவனுக்கு அநேகமான வரங்கள் அளித்ததும்,
பிறகு மாருதி முனிவர்களது ஆச்சிரமங்களிற் சென்று தீமைகள்செய்ய,
அவர்கள் சபித்ததுமாகிய பலவும் கூறி முனிவர் விடைகொண்டதும்,
பின்னர் அம்முனிவரை ஸ்ரீராமபிரான் அடிக்கடி
தம்மிடம் வருமாறு வேண்டிக்கொண்டதும்.

---

தானிருக்குமிடந்தேடிப் பிதாமஹர் வந்தது கண்டு, தன்புத்திரன் அடியுண்டதனால் வருத்தமுற்றிருந்த வாயு தன் குமாரனை அங்ஙனமே கையிலெடுத்துக் கொண்டெழுந்து, தனது கிரீடகுண்டலங்களும் பூமாலைகளும் மற்றும் பல பொன்னாலாயபூணாரங்களுமசையப் பிரமதேவனை மூன்றுதரம் ஸாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து உபஸ்தானமுஞ் செய்தனன். அதுகண்டு

உத்தரகாண்டம்.

வாலி சுக்ரீவர்கள் ஜனனம்.





వాలిసుగ్రీవుల జననము.

ஸகல வேதவேதாந்தங்களு முணர்ந்த நான்முகக்கடவுள், வேதபதவினியா ஸஞ் செய்யப்பெற்ற விரல்நுனிகளையுடைய கைகளினால், ஆபரணங்கள் அழ காகத்துலங்க, வணங்கி நின்ற வாயுதேவனை வாரியெடுத்து அவனுடைய புத் திரனையும் பரிசித்தனர். பதுமயோனி பிரீதியுடன் விநோதமாகப் பரிசித்த வளவிலே பவநகுமாரன் நீர்பாய்ச்சப்பெற்ற பயிரெனப் பிழைத்தெழுந் தனன். தனது புத்திரன் பிராணனோடு பிழைத்தெழுந்தது கண்டு ஸகல பூதங்களுக்கும் பிராணதாரனான வாயுதேவன் அகமகிழ்ந்து முன்பு தான் ஸஞ்சாரமற்றிருந்த ஸகலசராசரங்களிலும் இனிதாக உலாவலாயினான்; வாயு பந்தத்தினால் பெருந்துன்ப முற்றிருந்த பல்லாயிரம் பிரஜைகளும் சீதத்தின் கொடுமை நீங்கிய தாமரைதடாகங்களென உடனே அத்துன்பம் நீங்கிப் பெருமகிழ்ச்சி கொண்டார்கள்.

புகழும் பேராற்றலும் அறிவும் திருவும் செல்வமும் வைராக்கியமு முடையவரும், மும்மூர்த்திகளில் முதன்மையானவரும், மூவுலகங்களையும் தமக்கு இடமாக்கொண்டவரும், ஸகலதேவதைகளாலும் பூஜிக்கப்பட்ட வருமான கமலயோனி வாயுதேவனுக்குப் பிரீதி செய்விக்கவேண்டுமென விருப்புற்றுத் தேவதைகள் அனைவரையும் நோக்கி, 'மஹேந்திரன், வரு ணன், யமன், தனதிபதிமுதலாகியதேவர்காள்! நீவிர்யாவும் உணர்ந்தவராயிருப் பினும் யானிப்பொழுது உங்களுக்கு இதமொன்று இயம்புகின்றேன்; இந்தச் சிசுவினால் உங்களுக்கு ஆகவேண்டிய காரியங்கள் அநேகமுள்ளன. ஆதலின் நாமனைவருமிப்பொழுது இவ்வாயுவின் பிரீதிநிமித்தம் இக்குமாரனுக்கு வேண் டிய வரங்கள் அளித்தல்வேண்டும்' என மொழிந்தனர்.

அதுகேட்டு ஸஹஸ்ரநயநன் அகமகிழ்ந்து முகமலர்ந்து தான் கழுத்தி லணிந்திருந்த பொற்றாமரைமாலையைக் கழற்றிக் கவிக்குழந்தையின் கழுத் தில் அணிந்து, 'யான்விடுத்தவஜ்ராயுதத்தினால் அடிபட்டு இச்சிசுவினது ஹநு (கவுள்) சூம்பிப்போயினமையின், இனி இவ்வாநரவீரனுக்கு ஹநு மானெனவே பெயர் பிரசித்தமாகக்கடவது; இனியிவனுக்கு ஒருகாலும், எனதுவஜ்ராயுதத்தினால் வதையுண்டாகாதிருக்குமாறு யான்மேலானவரமளிக் கின்றேன்' எனக் கூறினான். இருளையழிக்கும் உத்தமனான சூரியன் அதன் பிறகு, 'யான்எனது கிரணங்களில் நூற்றிலொருகலை இவ்விளைஞனுக்கு அளிப் பேன்; இனியிவனுக்குச் சாஸ்திரங்களைக்கற்கும் பருவம் வந்தபொழுது, இவனெல்லாக்கலைகளிலும் வல்லவனாகுமாறு யானிவற்குக்கற்பிப்பேன்; இவ னுக்குச் சாஸ்திர ஞானத்தி லிணையானவன் மற்றெவனுமில்லை யென்னுமாறு செய்வேன்' என வரமீந்தனன். வருணபாசத்தினாலும், தண்ணீரினாலும் இவ னுக்கு எந்நாளும் மரணமுண்டாகாதிருக்கக் கடவதென வருணன் வரமளித் தனன். யமதண்டத்தினா லிறுதியுண்டாகாமையும் அரோக திடகாத்திரமும் யமதர்மராஜன் அநுமானுக்கு வரமாகக் கொடுத்தனன். அமரில் இளைப்புறா மையும் தனதுகதையினால் செருக்களத்தில் சாவின்மையுமளித்து, தன்னா லும் மற்றுமுள்ள தனது படைக்கலங்களாலும் பிராணபயமில்லாதவாறு காக்ஷிபிங்களனான தனதிபதி மனமகிழ்ந்து வரமீந்தனன். அவ்வாறே

சங்கரனும், தனதுசூலம் பாசுபதாஸ்திரம் முதலியவற்றால் மரணமில்லாதவாறு மேலான வரங்களளித்தனன். பிரம்மசாபங்களாலும் பிரம்மாஸ்திரம் முதலிய வற்றாலும் இவனுக்கு அழிவு உண்டாவதில்லை யெனவும், தீர்க்காயுள் பெற்று மஹாநுபாவனாய்ப் பெருமையுடன் வாழக்கடவ னெனவும் விதாதா வர மளித்தனர். பாலசூரியனென மிகப் பிரகாசமாக விளங்கும் அச்சிசுவினைச் சிற்பிகளில் தலைவனான விச்வகர்மா கண்ணுற்று, என்னால் நிருமிக்கப்பட்ட திவ்வியமான சஸ்திரங்கள் எவையோ, அவையனைத்தாலும் இவ்விளைஞன் அமரில் ஊறுபடாதவனாகிச் சிரஞ்ஜீவியாக வாழக்கடவனென வரமளித்த னன்.

இவ்வாறு முக்கியமான தேவர்கள் பலருமளித்த வரங்களைப் பெற்றுப் பொலிவுற்று விளங்கும் வாயுநந்தனனை நோக்கி நான்முகக்கடவுள் மன மகிழ்ந்து பிறகு வாயுவைப்பார்த்து, 'ஹே மாருத! உனது கான்முளையான இக்குழவி சத்துருக்களைச் சங்கரிப்பவனும், மித்திரர்களை மகிழ்விப்பவனு மாகி எவராலும் வெல்வதற்கு அரியனாகுவான்; இவன்வேண்டியவாறு உருவ மெடுக்கவல்லவனும், வேண்டியவாறு வேண்டியவிடஞ் செல்லவல்லவனும், எவ்விடத்தும் தடையின்றித்தாவவும் செல்லவும்திறமையுடையோனுமாகி மிக்க புகழ்பெற்று விளங்குவான்; இராவணனழியவும் ஸ்ரீராமசந்திர னகமகிழவும் ஏதுக்களான அரியபெரிய காரியங்களை யமர்க்களத்திலிவன் இயற்றி வெற்றி வீரனாக விளங்குவான்' எனமொழிந்து வாயுவினிடம் விடைபெற்றுத் தேவர் குழாம் புடைசூழத் தம்முலகஞ் சென்றனர்.

அதன்பிறகு வாயுதேவன் புத்திரனை யெடுத்துக்கொண்டு இல்லஞ்சேர்ந்து அஞ்ஜனாதேவியினிட மளித்து, அவனுக்குக்கிடைத்தவரங்க ளனைத்தையும் அவளுடன் சொல்லிச் சந்தோஷத்துடனே சென்றனன். இவ்விதமான வரங் களைப்பெற்ற வாயுநந்தனன் விசேஷமான பராக்கிரமங்களையுடையோனாகி, ஸகலமும் அமைந்த ஸாகரமெனவிளங்கினான்.

இவ்வாறிருக்கையில், அனுமான் ஆற்றலதிகரித்தவனாகி அதற்கிரை யொன்றுமகப்படாது அச்சமொழிந்து அருகிலுள்ள மகரிஷிகளின் ஆச்சிரமங் களுக்குச் சென்று, பொறுமையே பெரியதனமாகக்கொண்ட முனிவர்களது சுருக்கு, பாண்டம் முதலான வேள்விக்கருவிகளையும், அக்கினிஹோத்திரம், மரவுரி, மான் தோல் முதலியவற்றையும் உடைத்தும் கெடுத்தும் அழித்தும் பலவிதமான தீமைகள் செய்யலாயினான். அவன் பிரம்மதண்டத்தினாலூறு படாதவனென அவனுக்குப் பிரமதேவனளித்த வரத்தினை யுணர்ந்து அவர் கள் அவன் செய்யும் தீமைகளைத் தம்மால் கூடுமானவளவு பொறுத்து, வாயு தேவனிடமும் கேஸரியினிடமும் அதனை அறிவித்தனர்கள். ஹே ரகுநாத! ஆஞ்ஜனேயன் அவர்கள்புத்திசொல்லித் தடுத்தும் கேளாமல் அளவுகடந்து கொடுமையிழைக்கப் புகுந்தமைகண்டு, பிருகு, அங்கிரசு என்னும் முனிவ களது மரபிற்றோன்றிய மகரிஷிகள் முனிந்து சபிக்கலாயினர். ஆயினு அவர்கள் அதிகமான சீற்றங்கொள்ளாது 'ஹே வானர! நீ எந்தவலியை துணை யாக்கொண்டு எம்மை இவ்வாறு வருத்துகின்றனையோ, அவ்வலியை நீ எங்க

சாபத்தினால் மோஹித்தவனாகி உணர வல்லமையற்றவனாகுக; யாவரேனும் உனது ஆற்றலையெடுத்துப்புகழ்ந்துபோற்றி உனக்கு அறிவுறுத்துவராயின், அப்பொழுதே அவ்வலி உனக்கு விருத்தியாகக் கடவதெனச்சாபமிட்டனர். இவ்வாறு முனிவரிட்ட சாபத்தின் மஹிமையினால் மாருதி தனதுபல பராக்கிரமங்கள் அழிந்தவனாகி, மறுபடியும் அம்முனிவராச்சிரமங்களிலேயே அடக்கமுடையனாய் அவர்களது அநுக்கிரஹத்திற்குப்பாத்திரனாகச் சஞ்சரித்துக்கொண்டிருந்தனன்.

இஃது இங்ஙனமாக, வாலி சுக்கிரீவர்களின் பிதாவான ரிக்ஷரஜஸனென்பான் சூரியனுக்கொப்பான ஸாமர்த்திய முடையனாகி ஸகலவாநரர்களுக்கும் அரசனாய் நெடுங்காலம் அரசுபுரிந்துவந்தனன். வாநரராஜாவான ரிக்ஷரஜஸன் காலதருமத்தை யடைந்தவளவில், ஆலோசனைத் திறமுடையோரான அமைச்சர்கள் பிதாவினது பதத்தில் வாலிக்குப் பட்டாபிஷேகஞ்செய்து, வாலியினது பதத்தில் சுக்கிரீவனுக்கு இளவரசுபட்டங் கட்டினார்கள். அக்கினிக்கும் வாயுவுக்கும்போல, அநுமானுக்கும் சுக்கிரீவனுக்கும் மாறுதலின்றி இளமைமுதற்கொண்டே இணைபிரியாததோழமை அமைந்திருந்தது. இவ்வநுமான் தனக்குநேர்ந்த சாபத்தின்மகிமையாலேயே தனதுவலியையுணர்ந்திலன். வாலி சுக்கிரீவர்களுக்கு வைரமுண்டான நாள்தொடங்கிச் சுக்கிரீவன் வாலியினால் பலவாறு துன்புறுத்தப்பட்டு வருந்துகையிலும், அவனது நண்பனை மாருதி முனிவரது சாபத்தின் மகிமையால் தனதுவலியுணராதவனாகி, யானைகளால் தடையுண்ட சிங்கமெனமயங்கிச் சும்மாவிருந்தனன். பராக்கிரமம், உற்சாகம், புத்தி, பிரதாபம், ஸௌசீலியம், மாதுரியம், நீதியநீதியுணர்தல், காம்பீரியம், சாதுரியம், வீரியம், தைரியம் ஆகிய இவற்றில் அநுமானை யதிசயித்தவன் இவ்வுலகில் எவனேனுமொருவனுளனோ?

இந்தவானரவீரன் வியாகரணசாஸ்திரத்தைச் சூரியனிடமப்பியஸிக்க ஆவல்கொண்டவனாகி, உதயகிரிமுதல் அஸ்தகிரிவரையும் அருக்கனோடுகூடவே சென்று, மிகப்பெரியதான புஸ்தகத்தைக் கையிற்கொண்டு வியாகரணசாஸ்திரத்தை யோதியுணர்ந்தனன். வியாகரணத்தில் சூத்திரம், சூத்திரார்த்தத்தை விளக்குவதான விருத்தி, வார்த்திகம், மஹாபாஷியம் முதலியவற்றைச் சுருக்கமாயும், விரிவாயும் ஓதியுணர்ந்தனர். இவ்வாறே நியாயசாஸ்திரம், சந்தசாஸ்திரம் முதலியவற்றிலும், மற்றுமுள்ள ஸகலமான கலைகளிலும் தேர்ச்சிபெற்றவனாகி; தேவகுருவுக்கு இணையானவனாயினன். நவவியாகரணங்களையும் நன்குணர்ந்த இவன் உமது அனுக்கிரஹத்தினால் பிரம்மாவும் ஆகுவான். பிரளயகாலத்தில் இவ்வுலகங்களனைத்தையும் முழுகப்பண்ணுமாறு மேலெழுந்து பொங்கிவருகின்ற பெருங்கடலும், உலகங்களனைத்தையு மெரிக்குமாறு எழுகின்ற அக்கினியும், உலகங்களைச் சங்கரிக்குமாறு செல்லும் காலாந்தகனாகிய இவர்கட்கெதிரேபோல இவ்வநுமானுக்கு முன்பு எவனேனுமொரு எதிர்த்து நிற்கவல்லவனோ? ஹே ராம! இவ்வநுமானைப்போலவே, கிரீவன், மைந்தன், துவிதன், நீலன், தாரன், அங்கதன், நளன், ரம்பன் தலான மேன்மைபெற்ற வாநரவீரர்களனைவரும் தேவரீர் பொருட்டே

தேவதைகளால் படைக்கப்பட்டவர்கள்; மஹாபலிஷடர்களான இவர்கள் அனைவரும் இராவணஸம்ஹாரநிமித்தமாகப் பூமியில் வந்து அவதரித்த தேவர்களே யன்றி வேறல்லர். வாநரர்கள் இப்பூமியில் தோன்றியதற்குக் காரணமான இந்த ரஹஸியம் தேவரீர் திருவுள்ளத்திற்குத் தெரிந்திருக்கவேண்டுமெனவே இதனையுமெடுத்துக் கூறினேன். தேவரீர் வினவிய அநுமானது விருத்தாந்தத்தையும், அவன் சிறுபிராயத்திலேயே செய்த ஸாஹஸமான காரியத்தையும் விளங்கக்கூறினேன்' என உரைத்து முடித்தனர்.

அகஸ்தியமாமுனிவர் மொழிந்த விருத்தாந்தங்களனைத்தையும் அயோத்தி மன்னன் வாநரராக்ஷஸர்கள் புடைசூழ இளையபெருமாளுடனே திருச்செவிசார்த்தி மிக்க மகிழ்ச்சி கொள்ளலாயினர். அதன் பின்னர் அகஸ்திய முனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி, 'ஹே ராம! எல்லாக்கதைகளும் கேட்டுக் களிகூர்ந்தீர்களன்றோ? நாங்களும் தேவரீரைத் தரிசித்து ஸம்பாஷணமுஞ் செய்து ஸந்தோஷமடைந்தோம், இனி யாங்கள் விடைகொள்ளுகின்றோம்' எனத் தம்மிடஞ்செல்ல அநுமதிகேட்டனர்.

அகஸ்தியர் தமது ஆச்சிரமத்திற்கேக எண்ணியதறிந்து ரகுநந்தனன் அவரைநோக்கி வணங்கிக் கைகூப்பிக்கொண்டு, ஹே ஸ்வாமிந்! இன்று தேவரீர்களுடைய தரிசனங் கிடைத்ததனாலே யாங்கள் மாத்திரமே யன்றி எங்களுடைய தேவதைகளும் பித்ருபிதாமஹர்களும் பந்துக்களுடனே பெருமகிழ்ச்சிகொண்டவராயினர். இனி யடியேன் விண்ணப்பஞ்செய்து கொள்ளவேண்டுவ தொன்றுளது; அதனைத் தேவரீர்கள் அடியேனிட மருள்புரிந்து பூர்த்திசெய்விக்க வேண்டுகின்றேன். அஃதென்ன வெனில், இப்பொழுது அடியேன் வனவாஸத்தினின்று திரும்பிவந்தவனாதலின், இந்நாடு நகரங்களையும் இங்குள்ள ஸகலமான பிரஜைகளையும் தத்தம் நிலைகுலையாது நன்கு ஒழுகுமாறு நிலைப்படுத்தி, அப்பால் தேவரீர்களது பிரபாவத்தையே பெருந்துணையாகக் கொண்டு வேள்விகள்செய்ய விருப்பங் கொள்ளுகின்றேன்; தவப்பெருமைபெற்ற தேவரீர்கள் அடியேனை யனுக்கிரகிக்குமாறு அந்த யாகங்களுக்கு மகிழ்ச்சிகொண் டெழுந்தருளிச் சபையை யலங்கரித்து நடப்பிக்க வேண்டுகின்றேன். தவம்புரிந்து புனிதர்களாக விளங்கும் தேவரீர்களது அநுக்கிரகம் பெற்றன்றோ யாங்கள் கடைத்தேற வேண்டும்; ஆதலின் தேவரீர்கள் அனைவரும் அடிக்கடி இவ்விட மெழுந்தருளி அனுக்கிரகித் தருள்க' எனப் பிரார்த்தித்தனர். அதுகேட்டு அம்முனிவர் அங்ஙனமே யாகுகவென உடன்பட்டு விடைபெற்று எழுந்து சென்றனர்.

பின்னர் ஸ்ரீராமபிரான் தம்பிமாருடனேகூடி முனிவர் மொழிந்தகதைகளையே சொல்லிக்கொண்டு மகிழ்ந்திருந்தனர். அங்ஙன மிருக்க, சூரியன் அஸ்தமிக்கும் தருணமாகவே, அங்குள்ள அரசர்களுக்கும் வாநரர்களுக்கு விடைகொடுத்தனுப்பி, ரகுவீரன் விதி முறைப்படி ஸந்தியாவந்தனஞ் செ தருளி, இராப்பொழுதானவுடனே திருக்கண்வளருமாறு அந்தப்புரத் கெழுந்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்.

மறுநாள்காலையில் பாடகர்கள் சுப்பிரபாதம் பாடிப்
பள்ளியுணர்த்தவெழுந்து காலைக்கடன்முடித்து
ஸ்ரீராமபிரான் ராஜசபைக் கெழுந்தருளியது.

ஸர்வஞ்ஞரான ஸ்ரீராமபிரான் தருமநெறிதவறாது பிதிர்வாக்கிய பரிபாலனஞ்செய்து ஸகலமான ஜனங்களும் பெருமகிழ்ச்சி கொள்ளுமாறு மகுடாபிஷேக மகோத்ஸவம் கண்டருளிய பின்னர் பிரதம தினத்தை இவ்வாறு முனிவர்களுடனே பேசிப்பொழுதுபோக்கி இராத்திரி அந்தப்புரத்தில் திருக்கண்வளர்ந்தனர். அவ்விரவு கழிந்து விடியற்காலமான வளவில், மகாராஜா திருப்பள்ளியெழுமாறு சுப்பிரபாதஞ்சொல்லிப் போற்றிப்புகழும் வந்திகள் ராஜமாளிகைவாயிலில்வந்து கூடினர். அவர்கள் அனைவரும் மிகவும் மதுரமான குரலோசையுடையவர்கள்; கின்னரர்களென நன்கு ஸங்கீதம்பாடப் பயின்றவர்கள். சுப்பிரபாதம் பாடுவோர்களான இவர்கள் பலரும் பெருமகிழ்ச்சியுடனே முறைப்படி மகாராஜாவைப்புகழ்ந்து பாடிப்பள்ளியெழுப்பலாயினர்.

వీరసౌమ్యవిబుధ్యస్వ కౌసల్యాప్రీతివర్ధన।
జగద్ధిసర్వంస్వపితి త్వయిసుప్తేనరాధిప॥

வீரஸௌம்யவிபுத்யஸ்வ கௌஸல்யாப்ரீதிவர்த்தந ।
ஜகத்திஸர்வம்ஸ்வபிதி த்வயிஸுப்தேநராதிப ||

'ஹே வீர! ஹே ஸௌமிய! கௌசலியாதேவிக்கு ஆநந்தம் விளைவிக்கும் உத்தமனே! பள்ளியெழுந்தருளாய்; ஸகலலோகநாதனான தேவரீர் 'பிராம்மே முகூர்த்தே' துயிலெழாது திருக்கண்வளர்ந்தால் 'யதாராஜாததா பிரஜா:' என்றவாறு இவ்வுலகமனைத்தும் தருமாநுஷ்டான மின்றித் துயில் கொள்ளலாகுமன்றோ?

విక్రమస్తేయథావిష్ణో ర్రూపంచైవాశ్వినోరివ।
బుధ్యాబృహస్పతేస్తుల్యః ప్రజాపతిసమోహ్యసి॥
క్షమాతేపృథివీతుల్యా తేజసాభాస్కరోపమః।
వేగస్తేవాయునాతుల్యో గాంభీర్యముదధేరివ॥

விக்ரமஸ்தேயதாவிஷ்ணோ: ரூபஞ்சைவாச்விநோரிவ ।
புத்யாப்ருஹஸ்பதேஸ்துல்ய: ப்ராஜாபதிஸமோஹ்யஸி ||
க்ஷமாதேப்ருதிவீதுல்யா தேஜஸாபாஸ்கரோபம: ।
வேகஸ்தேவாயுநாதுல்யோ காம்பீர்யமுததேரிவ ||

'ஹே மஹாப்ரபோ! தேவரீர் பராக்கிரமத்தில் ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கொப்பானவர்; வடிவழகில் அச்வினீதேவர்களை நிகர்த்தவர்; புத்தியில் பிருஹஸ்பதி போன்றவர்; பிரஜைகளைப் பரிபாலிப்பதில் பிரமதேவனுக்குச்சமமானவர்; பொறுமையில் பூமிதேவிபோன்றவர்; ஒளியில் அருக்கனுக்கிணையானவர்; வேகத்தில் வாயுவை வென்றவர்; காம்பீரியத்தில் கடலைக்கடந்தவர். சைல

மென எதற்கும் சலியாதவர்; சந்திரனெனக் குளிர்ந்த முகமுடையவர்; தேவரீரைப் போன்ற பார்த்திவர்கள் இதுவரையும் ஜனித்தவருமிலர், இனிஜனிப்பவருமிலர்; தேவரீர் எவராலும் வெல்வதற்கரியவர்; என்றும் தருமத்தையே துணையாக்கொண்டவர்; பிரஜைகளுக்கு இதமியற்றுதலிலேயே கருத்துடையவர். ஹே புருஷோத்தம! புகழும் திருவும் தேவரீரை விட்டு ஒருபொழுதும் நீங்குவனவல்ல. திருமகளும் தருமதேவதையும் என்றும் தேவரீரிடமே நிலைகொண்டிருக்கின்றனர்' என இவ்வாறு வந்திகள்புகழ்ந்து போற்றினர்கள். திருப்பள்ளியெழுப்புகின்ற ஸூதர்களும் திவ்வியமாகச் சுப்பிரபாதம் பாடிப்புகழ்ந்தனர்கள்.

இவ்வண்ணம் ஸ்துதிபாடகர்கள் பாடிய செவிக்கினிய சுப்பிரபாதங்களைச் செவியுற்றுச் சக்கரவர்த்தித் திருமகன் திருக்கண்மலர்ந்து, நாகசயனத்தினின்றும் எழுந்திருக்கின்ற ஸ்ரீமந்நாராயணனென, மேலே வெண்பட்டு விரித்த விசித்திரமான திருப்பள்ளியினின்று மெழுந்தனர். ஸ்ரீராமபிரான் பள்ளியெழுந்தவளவிலே, பரிசாரகர்கள் பலர் வணங்கிக் கைகூப்பிய வண்ணம் மிகப் பளபளப்பான பாத்திரங்களில் ஜலம் நிரப்பியெடுத்துக்கொண்டு வந்து காத்து நின்றனர்கள். உடனே ஸ்ரீராகவன் கைகால் சுத்திசெய்து நீராடி ஸந்தியாவந்தனம் முதலான அநுஷ்டானங்களைச்செய்து முடித்து ஔபாஸநமும் செய்தனர். பிறகு, இக்ஷ்வாகுமுதலான பூர்வ ராஜாக்கள் பலரும் பூஜித்து வந்த மிகப் பரிசுத்தமான தேவபூஜா கிருகத்தினுட் புகுந்து, ஆங்கு விதிமுறைப்படி தேவதைகளையும் பிதிருக்களையும் பிராமணர்களையும் பூஜித்தனர்.

இவ்வாறு காலையில் அனுஷ்டிக்கத்தகுவனவாகிய நித்தியகருமானுஷ்டானங்களனைத்தையும் செய்து முடித்துப் பரிஜனங்கள் புடைசூழ, ராகவன் அவ்விடம்விட்டு வெளியே இராஜஸபைக் கெழுந்தருளினர். அவ்விடத்துப் புரோகிதரான வஸிஷ்டபகவானும், மஹாத்துமாக்களான மந்திரிகளும் ஜொலிக்கின்ற அக்கினிகளென எதிர்கொண்டு வந்தார்கள். பற்பல தேசாதிபதிகளான ராஜாக்களும் ஸ்ரீராமபிரானைக் காணவந்து, தேவேந்திரனைச் சூழ்ந்த தேவர்களென, ஸ்ரீராகவனுக்கருகில் அவரவர்க்கேற்ற ஆஸனங்களில் வீற்றிருந்தனர். மிக்க புகழ்பெற்றவர்களான பரதசத்துருக்கினர்களும் இலக்குமணரும் மிக்க மகிழ்ச்சிகொண்டு, வேள்வியை மூன்று வேதங்களுமென, ஸ்ரீராமபிரானை உபாஸித்து நின்றனர். கிங்கரர்கள் பலர் மனமகிழ்ச்சியுடனே வணங்கிக் கைகூப்பிக்கொண்டு வேண்டிய உபசாரங்கள் செய்யலாயினர். மஹா பராக்கிரமசாலிகளும் காமரூபிகளுமான சுக்ரீவன் முதலான வாநரவீரர்கள்வந்து வீற்றிருந்தனர்; தனது மந்திரிமார் நால்வரும் சூழ விபீஷணன் அந்தஇராஜஸபைக்குவந்து, தனுதிபதியைக்குய்யகர்கள் உபாஸிப்பதுபோல, ஸ்ரீராமபிரானை உபாஸித்தனன்; உத்தம குலத்தில் உதித்தவர்களும் வேதமோதி யுணர்ந்தவர்களும் மஹா ஸமர்த்தர்களுமான பெரியோர்களும் பலர் இராஜஸபைக்குவந்து இராஜனை முடிதாழ்த்திவணங்கி அருகே உட்கார்ந்தனர்.

இவ்வாறு மிக்கமகிமைபெற்ற முனிவர்களும், பராக்கிரமப் பெருமைபெற்ற பார்த்திவர்களும், வாநரர்களும், இராக்கதர்களும் புடைசூழ இராஜ

ஸபையில் வீற்றிருந்த ரகுநந்தனன், தேவஸபையில் தேவர்களும் முனிவர்களும் புடைசூழ வீற்றிருந்த தேவேந்திரனிலும் பலமடங்கதிகமாக விளங்கினர். இங்ஙனம் அனைவரும் வீற்றிருந்த பின்னர், புராணங்கள் யாவுமுணர்ந்த மஹாத்துமாக்களான முனிவர்கள், தருமங்களை விளக்குவனவாகிய பற்பல மதுரமான கதைகளை யெடுத்துக் கூறலாயினர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துமூன்றுவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் வினவ,
அகஸ்தியர் வாலி சுக்ரீவர்களது பிறப்புவரலாறு கூறியது.

---

*அநந்தரம் ஸ்ரீராமபிரான் மறுபடி அகஸ்தியமாமுனிவரை நோக்கி, 'ஹே முனிபுங்கவரே! வாலி சுக்ரீவர்களுக்குத் தந்தை ரிக்ஷரஜசு என்பவனென அருளிச்செய்தீரே; அவன் யாவன்? அவர்களுடைய அன்னை இன்னுளென உரைத்திலீர். அவர்களுக்கு வாலி சுக்ரீவர்களெனப் பெயர் உண்டான காரணம் யாது? இவற்றைத் தெரிந்துகொள்ள அடியேனுக்கு அதிகமான ஆவலுண்டாகின்றது; விளங்கக்கூற வேண்டுகின்றேன்' என வினவினர்.

ஸ்ரீராகவன் இவ்வாறு வினவியது கேட்டு அகஸ்தியமாமுனிவர் அவற்றை முறையே மொழியலாயினர். 'ஹே ராம! அந்தக்கதையைக் கூறுகின்றேன் கேட்டருள்க. இவ்வரலாறு நாரதமுனிவர் மொழிய, யான்கேட்டது. நாரதமுனிவர் உலகஸஞ்சாரஞ்செய்துகொண்டு ஒருகால் எனது ஆச்சிரமத்திற்கு அதிதியாயெழுந்தருளினர். அவரை யான் சாஸ்திரவிதிப்படி முறையே பூசித்துப் பெருமகிழ்ச்சிகொண்டேன். யான் செய்த உபசாரங்களைப் பெற்று அம்முனிவர் ஆஸனத்தி லினிது வீற்றிருந்தபின்னர் யான் மிக்க விருப்புடனே இவ்வரலாறுகளைப் பற்றி வினவ, நாரதமுனிவர் திருவுள முவந்து உரைசெய்யலாயினர். அஃதென்னவெனில்,—

'சுவர்ணமயமான மேருவென்கிற சைலமொன்று உண்டு. எல்லாமலைகளுக்கும் மேலானதாகிய அம்மேருகிரியின்மத்தியில் எல்லாத் தேவர்களாலும் பூசிக்கப்பெற்றதான பெரியசிகரம் ஒன்றுளது. மேருமலையில் அம்மத்தியம் சிகரத்திலே சதயோஜனை விஸ்தீரணமுடையதாய் மிகவும் அழகியதாகிய பிரம்மஸபையொன்று உளது. அந்தச்சபை நான்முகக்கடவுள் என்றுமினிது வீற்றிருக்குமிடம். அவ்விடத்துத் தாமரையோன் யோகாப்பியாஸஞ் செய்துகொண்டிருக்கையில் அவரது கண்களில் நீர்த்துளி ததும்பியது. அந்நீர்த்துளியைப் பதுமயோனி கையாலெடுத்துக் கீழேயெறிந்தனர். பிரம

* இந்த ஸர்க்கம் முதல் 5 - ஸர்க்கங்கள் அதிக பாடமென்பர். ஆக, முன் 5 - ஸர்க்கங்களுடன் அதிகபாடம் மொத்தம் 10 - ஸர்க்கங்கள்.

தேவன் அதனைக் கீழே தெளித்தவளவிலே அந்நீர்த்துளி ஒருவாநரனாக மாறியது. விதாதா அந்த வாநரனைக்கண்டு இனியமொழிகள் மொழிந்து அவனை அகமகிழச்செய்து, ஹே வாநர! மிகப்பெரியதான இந்தப்பருவத்தைக் கண்ணெடுத்துப்பார், இஃது எப்பொழுதும் தேவர்கள் வாஸஞ்செய்யப்பெற்றது. மிக்க ரமணீயமான இம்மேருமலையிலேயே காய்கனிகளை உணவாகக்கொண்டு நீ என் அருகிலேயே வாஸஞ்செய்க. இவ்வாறு சிலகாலம் இவ்விடத்தில் நிலைத்திருப்பாயாகில், பிறகு உனக்குப் பெரியபாக்கிய மொன்றுண்டாகும் என்று கூறினர்.

பிரமதேவர் புகன்றது கேட்டு அந்த வாநரத்தலைவன் அவரது சாஸநத்தைச் சிரமேற்கொண்டு 'அங்ஙனமேயாகுக' என உடன்பட்டு அவரது திருவடிகளை வணங்கி விடைபெற்று மகிழ்ச்சிகொண்டு வெளியேசென்றனன். பிரமதேவருக்கு ஒப்பான மகிமையும் மிக்க வேகமுமுடையோனாகி, அம்மலையில் புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த விருக்ஷங்களடர்ந்த வனங்கள் தோறும் தாவித்திரிந்து, அங்குள்ள கனிகளையும் மதுவையும் மலர்களையும் அநேகமாய் அருந்தி ஆநந்தமடைந்து அவ்வாநரன் பிரதிதினம் ஸாயங்காலம் பிரமதேவரது ஸந்நிதானம் வந்துசேருவான். வருகையில் சிறந்த புஷ்பங்களையும் பலங்களையும் உபஹாரமாகக்கொண்டுபோய்ப் பிரமதேவரது ஸந்நிதியில் ஸமர்ப்பிப்பான். இவ்வாறு மேருவரையிலேயே அவ்வாநரன் வெகுகாலம் வாஸஞ்செய்துகொண்டிருந்தனன்.

இவ்வண்ணம் சிலகாலம் நிகழ்ந்து வருகையில், வாநரத்தலைவனான அப்பெருங்கரடி நாவறண்டு நீர்வேண்டி மேருவெற்பின் வடபாரிசஞ்சென்றது. அவ்விடத்துப் பற்பல பறவைகள் கூவிக்களித்து விளையாடப்பெற்ற மிகத் தெளிவான தண்ணீர் நிரம்பிய தடாகமொன்று தோன்றியது. கரடி தனது பிடரிமயிர்களை யுதறிக்கொண்டு அத்தடாகத்தின் தீரத்தினின்று தண்ணீரை யெட்டிப்பார்க்க, அதனுள் தனது நிழல் தோன்றுவதைக் கண்ணுற்றது. அதனைக்கண்டவளவிலே அந்தக்கரடி, தனக்குச் சத்துருவான மற்றொருகரடி அக்கயத்தினுள் குடிகொண்டு தன்னையிகழ்கின்றதெனக்கருதி அதன்மீது மிகக்கோபங்கொண்டதாகி, கெடுநினைவுகொண்ட இக்கரடியை நாம் கண்டிக்கவேண்டுமென்றெண்ணங்கொண்டது. குரங்குகட்குள்ள சபலபுத்தியினால் இவ்வாறு சிந்தைகொண்டு அந்தக்கரடி அதனை வெல்லுமாறு அம்மடுவிற் குதித்தது. குளத்தில் வீழ்ந்த கரடி அதில் மூழ்கி மறுபடி மெல்ல நீந்திக் கரையேறிய வளவில், ஓர் அற்புதமான அணங்காக மாறியது. காண்போர்மனத்தை மயக்கவல்ல அழகான ரூபமும், சௌந்தரியமும், பருத்துப்பரந்த ஜகனமும், காமனதுகணைபோன்ற புருவமும், கறுத்தகுழலும், புன்னகைவாய்ந்த வதனமும், விம்மிவீங்கிய கொங்கைகளு மமைந்தபுதுமையானதோர் பொற்கொடியென ஒருபெண்மணி அப்பொய்கைக்கரையிலே நின்றனள். அவள் அனைவருடைய உள்ளத்தையும் மயக்குமியல்பினளாய் திரிலோகசுந்தரியாய், தாமரைமலரை நீங்கிவந்த திருமகளெனவும், நிர்மலமான நிலவொளியெனவும், விளங்குகின்றவளாகி, இவள் 'திருமகளோ, கலைமகளோ, மலைமகளோ' என

யாவரும் ஐயுற்று அதிசயிக்கத்தக்க அற்புதமான தோற்றமுடையவளாயி னுள்.

தனது வடிவழகினுல் எல்லாத் திசைகளையும் ஒளிபெறச் செய்து கொண்டு அந்தப்பொய்கைக்கரையில் அப்பெண்மணி நிற்கும்ஸமயத்தில், தேவநாயகன் பிரமதேவரிடஞ் சென்று அவரையடிபணிந்து பூஜித்துத் திரும்பி அவ்வழியாக வந்துகொண்டிருந்தனன். அதே தருணத்தில் ஆதித் தன் எங்கும் சுற்றித்திரிந்து, இந்தச் சுந்தரி நிற்குமிடத்தருகே வரலாயினன். இந்திரனும் ஆதித்தனுமாகிய இரண்டு தேவர்களும் அவளை ஏககாலத்தில் கண்ணுற்றனர்கள். அவ்வழகியைக்கண்டவளவிலே அவர்களிருவரும் காமன் வழிப்பட்டவர்களாகி மெய்ம்மறந்து மனங்கலங்கித் தைரியமழிந்து நின்றனர். உடனே தேவேந்திரனது வீரியம் ஸ்கலிதமாக, அதனை அவன் அவளது சிரஸில் விழுமாறு செய்தனன். அஃது அவ்வாறு முடிமீது விழாது வாலிலே வீழ்ந்தது. தேவர்களது வீரியம் ஒருபொழுதும் வீணுவதின்ருத லின், உடனே அஃது மிக்க பலசாலியான ஒரு வாநரமாகமாறியது. வாலி னின்றுமுற்பவித்தகாரணத்தினுல் அவ்வாநரனுக்கு வாலியெனவே பெயர் பிர சித்தமாயிற்று. அருக்கனும் அவ்வாறே அநங்கனுக்கு வசமாகித் தனது வீரி யத்தை அவளது கழுத்தில் வீழ்த்தினன். கிரீவையில் (கழுத்தில்) வீழ்ந்த அவ்வீரியம் சுக்கிரீவனெனப் பெயர்பெற்ற வாநரமாகிவிட்டது. இவ்வாறு அவர்கள் இருவரும் மஹாபலிஷ்டர்களான இரண்டு வாநரங்களை உண்டாக் கியபின்னர், தேவேந்திரன் ஸகலகுண ஸம்பூர்ணமாய் அக்ஷயமான ஒரு காஞ்சனமாலையைத் தன்குமாரனுன வாலிக்குப் பரிசாய் அளித்துத் தேவ லோகஞ் சென்றனன். சூரியனும் தனது புதல்வன் பவநகுமாரனிடம் சேருவானென வுணர்ந்து தன் காரியத்திலே கண்ணுற்றவனுகி விண்ணிடையே சென்றனன்.

அன்றிரவுகழிந்து மறுநாள் காலையிலே கதிரவன் உதித்தவளவில், ஹே ராம! அவ்வநிதை மறுபடி வாநரமேயாயினள். ரிக்ஷரஜசு என்னும் அவ்வாநரன் தன் அருகே நின்ற காமரூபிகளான இரண்டு குமாரர்களையும் கண்ணுற்றுக் களிப்படைந்தவனுகி, அவ்விடத்திலுள்ள அமுதத்திற்கொப் பான மதுவை யருந்தச்செய்து, அந்தப்புதல்வர்களுடனே பிரமதேவனுடைய ஸந்நிதானம் போய்ச்சேர்ந்தனன். ஸகலலோக சிருஷ்டிகர்த்தாவான பிதாமஹர் புத்திரர்களுடனேகூடிவந்த தன் குமாரனைக்கண்டு களிப்புற்று அவனைப் பலவாறு கொண்டாடினர். பிறகு அருகிலிருந்த தேவதூதனெரு வனை நோக்கி, 'ஹே தூதா! யான் சொல்வதைக்கேள். நீ உடனே இவ் வாநரர்களை அழைத்துக்கொண்டு கிஷ்கிந்தாபுரிக்குச் செல்லுக. அந்நகரம் எல்லாச்சிறப்பும் பொருந்தி மிகமேன்மைபெற்று விளங்குகின்றது. அதுவே இவ்வாநரர் வசிப்பதற்கு ஏற்றவிடமாகும். அவ்விடத்து வாநரவீரர்கள் திரள்திரளாக வசிக்கின்றனர். முன்பு எனது கட்டளையின்படி விசுவகர் மாவினுல் நவரத்தினங்கள் நிரம்பப்பெற்ற மிகப்பெரிதான கடைவீதிகளு ள்ளதாகி அந்நகரம் அநேகவிதமான அரண்களுடனே நிருமிக்கப்பட்டுளது.

காமரூபிகளான வாநரர்கள் விசேஷமாக வசிக்கும் அவ்விடத்திற்கு நமது குமாரனை ரிக்ஷரஜஸனென்னும் இவ்வாநரனை இவனது புத்திரர்களுடனே அழைத்துக்கொண்டுபோய், அவ்விடத்துள்ள வாநரயூதபதிகளையும், மற்றும்பல ஸாதாரணமான வாநரர்களையும் அந்நகரத்திற்கு வரவழைத்துச் சபைசேர்த்து நமது சாஸந மின்னதென்பதை யறிவித்து, அவர்களுடைய மத்தியில் இவனைச் சிங்காஸனமேற்றி, அவ்வாநரர்கட்கு அரசனாய் அபிஷேகஞ்செய்க. இந்தரிக்ஷரஜஸைக் கண்டவளவிலே அவர்கள் இவனுக்கு அடங்கி ஆட்படுவார்கள்.' என்று கூறிக்கட்டளையிட்டனர்.

பிரமதேவர் இவ்வாறு விதித்ததுகேட்டுத் தேவதூதன் அங்ஙனமே யுடன்பட்டு அவ்வாநரராஜனை முன்னிட்டுக்கொண்டு புறப்பட்டு வாயுவேகமாகச்சென்று ஓர் குகைபோன்றதான கிஷ்கிந்தாபுரியிற்புகுந்து, பிதாமஹர் நியமித்தவாறே அவ்வாநரவீரனை அவ்விடத்திற்கு அரசனாக ஸ்தாபித்தனன். ரிக்ஷரஜசு ராஜாபிஷேக முறைப்படி மங்களஸ்நாநஞ்செய்து சிறந்த ஆடையாபரணங்களணிந்து மகுடாபிஷேகஞ்செய்துகொண்டு மிக்க மகிழ்ச்சிகொண்டவனாகி, ஸப்தத்வீபங்களடங்கிய கடலாற் சூழப்பட்ட இப்பூமியிலுள்ள வாநரர்கள் அனைவரையும் தனது ஆணைக்கு உட்படுத்தி ஆட்சி செலுத்தி வரலாயினான்.

இந்த ரிக்ஷரஜசு என்னும் வாநரனொருவனே இவ்வாறு வாலி சுக்கிரீவர்கள் இருவருக்கும் தந்தையும் தாயுமாகின்றனன். இஃது ஓர் புதுமையான புராணகதை. இக்கதையை எவர் கூறுகின்றனரோ, எவர் கேட்கின்றனரோ, அவர்கள் கோரியகாரியங்கள் அனைத்தும் இனிது நிறைவேறி அவர்கட்கு அளவற்ற ஆநந்தம் விளைவிப்பனவாகும். ஹே பிரபோ! தேவரீர் விருப்புடனே வினவியதனால், முன்பு அரக்கர்களின் உற்பத்தி வரலாறு கூறியவண்ணமே, வாநரர்களது வரலாறும் விவரமாக ஆதிமுதல் உள்ளபடி எடுத்து உரைக்கலாயினேன்.' என அருளிச்செய்தனர்.

உத்தரஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பத்துமூன்றுவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்துநாலாவது ஸர்க்கம்.

இராவணன் வைதேஹியை அபகரித்தகாரணத்தை
அகஸ்தியர் ஸ்ரீராமனுக்கு உரைக்கத் தொடங்கி,
இராவணன் ஸநத்குமாரரை அடுத்து,
யாவர்க்கும் மேலானபுருஷன் யாவனெனவும்,
போரில் பிராணனை விடுகின்றவர்களுக்குக் கிடைக்கும்
கதியாதெனவும் வினவியது கூறுகின்றனர்.

---

குடமுனிவர் கூறிய இந்தப்புராணகதையைத் திருச்செவிசார்த்திச் சக்கரவர்த்தித்திருமகன் சோதரர்களுடனே கூடி மிக்க மகிழ்ச்சிகொண்டவராகி, 'ஹே முனிபுங்கவ! தேவரீர் கூறிய இந்தக்கதை மிகப்பெருமை பெற்றதும்

புண்ணியமுமானது; தேவரீரது திருவருளினால் அடியேன் கேட்டுக் களிப்புறலாயினேன். வாலி சுக்ரீவர்களது உற்பத்தி மிக விசித்திரமானது. பிரம்மரிஷியே! இஃதென்ன ஆச்சரியம்! இந்திரனும் ஆதித்தனும் மஹாபலிஷ்டர்களான வாநரவீரர்களாய் அவதரித்தது மிகவும் அற்புதமன்றோ?' என வியந்துகூற, அதுகேட்டுக் கும்பயோனி, 'ஹே மஹாபாக! ஆம், இஃது மிகவியக்கத்தக்கதே; ஆயினும் இவ்வண்ணமே பூர்வம் இச்சரித்திரம் நடந்தேறியது. அயோத்திமன்னனே! புராதனமான மற்றொருகதை கூறுகின்றேன் கேளும்: ஹே ராம! வைதேஹியை இராவணன் முன்பு யாதுகாரணத்தினால் எடுத்துக்கொண்டு போயினனோ, அந்த வரலாறு கூறுகின்றேன், செவிகொடுத்துக் கேட்டருள்க' என உரைத்து அதனை யெடுத்துரைக்கலுற்றனர்:—

"ஹே ரகுநந்தன! ஹே ராம! பூர்வம் கிருதயுகத்திலே பிரம்மபுத்திரரான ஸனத்குமாரர் சூரியனெனச் சோதிமயமாக விளங்கிக்கொண்டு வீற்றிருப்பது கண்டு இராவணன் அதி விநயத்துடனே அவரருகிற் சென்று ஸேவித்துஅபிவாதனஞ்செய்து அஞ்சலிஹஸ்தனாய் நின்று அம்மகரிஷியை நோக்கி வினவலாயினான்: 'ஹே பகவன்! இவ்வுலகில் உத்தமபுருஷன் யாவன்? தேவர்கள் அனைவரிலும் அதிகமான ஆற்றலுடையவன் யாவன்? எவனைத் துணையாகக் கொண்டு தேவர்கள் ஸமரபூமியில் சத்துருக்களை வெல்லுகின்றனர்? ஜனங்கள் என்றும் எவனைக்குறித்து யாகஞ்செய்கின்றனர்கள்? யோகிகள் எவனை யென்றும் உள்ளத்திற்கொண்டு தியானிக்கின்றனர்கள்? ஹே தபோதனரே! இவைகளை அடியேனுக்கு விளங்குமாறு அருளிச் செய்யவேண்டுகின்றேன்' என வினவினான்.

அதுகேட்டு அம்முனிவர் தமது யோகதிருஷ்டியினால் இராவணனது கருத்து இன்னதெனக்கண்டறிந்து, அன்புடனே அதனை அவ்வரக்கனுக்கு அருளிச்செய்யலாயினர். 'வத்ஸ! விளம்புகின்றேன்கேள். இவ்வுலகங்கள் அனைத்திற்கும் ஆதாரமாயிருப்பவனெவனோ, எவனது உற்பத்தியை யாமறிகின்றிலமோ, தேவாசுரர்கள் அனைவராலும் என்றும் ஆராதிக்கப்பட்டவனெவனோ, ஹரி நாராயணன் முதலான திருநாமங்களால் ஓதப்பட்டவனெவனோ, எவனது நாபீகமலத்தினின்று பிரம்மதேவன் உற்பத்தியாயினனோ, இவ்வுலகங்கள் அனைத்திற்கும் நாயகனெவனோ, ஸ்தாவரஜங்கமரூபமான இவ்வுலகமெல்லாம் எவனால் சிருஷ்டிக்கப்பட்டதோ, அவனையே துணையாகப் பற்றித் தேவர்கள் யாகத்தில் ஹவிர்ப்பாகத்தை யேற்றுக்கொள்ளுகின்றனர்; அமிர்தபானமும் பண்ணுகின்றனர்; அவனையே யாவரும் என்றும் ஆராதிக்கின்றனர்; புராணம் வேதம் பாஞ்சராத்திரம் முதலான சாஸ்திரங்கள் அவனையே பிரதிபாதிக்கின்றன; யோகிகள் எப்பொழுதும் அவனையே தியானிக்கின்றனர்; வேள்விகள் புரிந்தும் பூஜிக்கின்றனர்; தைத்தியர் தானவர் இராக்கதர் முதலான தேவசத்துருக்கள் அனைவரையும் அவன் செருக்களத்தில் ஜயங்கொள்பவன்; ஸகலமான ஜனங்களாலும் அவனே ஸதா பூஜிக்கப்பட்டவன்' எனப் புகன்றனர்.

மகரிஷி இவ்வாறு மொழிந்ததுகேட்டு இராக்ஷஸ ராஜனான இராவணன் மறுபடி வணங்கி ஸனத்குமார முனிவரை நோக்கி, 'ஸ்வாமி! தேவரீர் அருளிச்செய்தவாறு தைத்தியர் தானவர் இராக்ஷஸர் ஆகிய சத்துருக்கள் செருக்களத்துச் சங்கரிக்கப்பட்டனராயின், பின்னர் அவர்கள் என்னகதியடைகின்றனர்? அவ்வண்ணம் விஷ்ணுவினால் வதையுண்டவர்கள் யாவர்? என வினவ, அம்முனிவர் மொழிகின்றனர்: ஹே ராக்ஷஸராஜனே! தேவதைகள் கையில் வதையுண்டவர்கள் எப்பொழுதும் தேவலோகஞ் செல்லுகின்றனர்; மறுத்தும் அவர்கள் அவ்வுலகத்தினின்று நழுவிப் பூலோகத்தில் வந்து வீழ்கின்றனர். அவர்கள் அனைவரும் பூர்வஜன்மத்திற் பண்ணிய பாப புண்ணியங்களுக் கேற்றபடி பிறந்து மிறந்தும் இன்பமும் துன்பமுமனுபவிக்கின்றனர். ஹே ராஜன்! சக்கரபாணியும் திரிலோகநாதனுமான ஜனார்த்தனனால் வதையுண்டவீரர்களோ, அங்ஙனமல்லர்; அவர்கள் அவனது ஸன்னிதானமே போய்ச் சேருகின்றனர். ஆதலின், அந்தக் கேசவனது கோபமும் அவர்கட்குக்கருணையே யாகின்றது' என வுரைத்தருளினர்.

ஸனத்குமாரர் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளிய வசனத்தைச் செவியுற்று நிசாசரராஜன் மிக்க மகிழ்ச்சியும் வியப்புமடைந்தவனாகி, யான் செருக்களத்தில் அந்தச்சார்ங்கபாணியின் எதிரேபோய் நிற்கும் வகை யாதென விசாரங்கொள்ளலாயினன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பத்து நான்காவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்.

ஸ்ரீமந்நாராயணனே இணையில்லாத உத்தமபுருஷனென்றும்,
அவன் கையினால் மடிகின்றவர் மோக்ஷம் பெறுவரென்றும்,
அவன் தசரதசக்கரவர்த்திக்குப் புதல்வனாய் அவதரித்துத்
தன் தம்பியுடனும் தருமபத்தினியுடனும் தண்டகாவனத்திற் புகுந்து
வஸிக்கப்போகின்றனரென்றும் ஸனத்குமாரர் கூறியதுகேட்டு
இராவணன் தேவரீர்கையினால் மரணமடைய விரும்பி,
தேவரீருடன் பகைகொள்ளும் நிமித்தமே
பிராட்டியைப் பற்றிக்கொண்டு போயினனென் அகஸ்தியர் கூறியது.

---

துராத்மாவான இராவணன் இவ்வாறு சிந்தைகொண்டிருப்பதுகண்டு ஸனத்குமாரமுனிவர் மறுத்தும் அவனை நோக்கி, 'ஹே மஹாபாஹோ! நீ உனது மனக்கவலை யொழிந்து களிகூர்வாயாக; உனது மனோரதம்யாதோ, அதனை நீ ஆயோதனத்தில் அடைந்து இன்புறுவாய்; அக்காலம் குறுகுமளவும் சற்றுப்பொறுத்திருக்க' எனப்புகன்றனர். முனிபுங்கவர் இவ்வாறு மொழிந்ததுகேட்டு, 'ஹே ஸ்வாமி! தேவரீர் அருளியது உண்மையேயாயினும், அதற்கு அறிகுறியாது? அடியேற்கு விளங்க அருளிச்செய்க' என இராவணன்வினவ, அம்முனிவர் மறுமொழி கூறலாயினர்.

'ஹே ராக்ஷஸபுங்கவ! யாவும் யான் உனக்கு விளங்கக்கூறுகின்றேன்; கேள். யானுரைத்த ஆதிதேவன் அவ்யக்தமாய் அதிசூக்ஷ்மமான சரீரத்துடனே எங்கும் அந்தர்யாமியாயிருப்பவன்; சராசரங்கள் அடங்கிய இம்மூவுலகங்களும் அவனால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ளன; அவன் பூமி ஆகாயம் பாதாளம் கிரிகள் காடுகள் ஸகலமான ஸ்தாவரங்கள் நாடுநகரங்கள் ஆகிய எல்லாவிடங்களிலும் அமைந்துளன்; பிரணவமும் அவனே, ஸத்தியமும் அவனே, ஸாவித்திரியும் அவனே, பிருதிவியும் அவனே, பாம்புகயிறுக்கடல்கடைந்தகாலத்து மந்தரமலையை மத்தாகத் தாங்கி நின்றதேவனுமவனே; இவனென்று மழிவில்லாதவனென ஓதப்பட்டவன்; பகலுமிவனே, இரவுமிவனே, இரண்டுசந்தியுமிவனே, திவாகரனுமிவனே, இயமனுமிவனே, ஸோமனுமிவனே, காலமுமிவனே, அக்கினியுமிவனே, வாயுவுமிவனே, நான்முகனுமிவனே, முக்கண்ணனுமிவனே, ஆறுமுகனுமிவனே; எங்கும் ஒளிவீசுகின்றவனிவனே, தீயாயெரிகின்றவன் இவனே, சூரியனைச் சொலிப்பவனிவனே, உலகங்களைப்பரிபாலிப்பவனிவனே, படைப்பவனிவனே, அழிப்பவனிவனே, அளிப்பவனிவனே; இவன் இத்தொழில்களைத் தனக்கு ஒரு லீலையாகவுடையவன்; அழிவில்லாத இவ்வுலகங்களுக்கு நாதனாய் எங்கும் வியாபித்தவனான இந்தப்புராணபுருஷனே பிறவிப்பெருங்கடலை யொழிக்க உபாயமாக நிற்பவன்.

ஹே தசாநந! பலவாறு புகன்றுவதென்னை? அவன் சராசரரூபமான இவ்வுலகமெங்கும் உள்ளும் புறமும் பரந்திருக்கின்றனன்; நீலோத்பலத்தின் இதழ்போன்ற நீலநிறமான திருமேனியும், தாமரைமலரினது கிஞ்சல்கமெனச் சிவந்த பீதகவாடையும் உடையனாகி, மாரிகாலத்து மின்னலோடு கூடிய கருமுகிலென விளங்குகின்றனன். அவன் செந்தாமரையெனச் சிவந்த திருக்கண்களையுடையவன். அவன் தனது திருமார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவிளங்க, மான்வடிவான மறுவமைந்த மதியென விளங்குகின்றனன். அவனது கருமுகில் போன்ற திருமேனியில், நீருண்டமேகத்திடையே தோன்றும் மின்னற்கொடியென, வெற்றிவடிவமான திருமாது என்றும் இணைபிரியாது வீற்றிருக்கின்றனள். அந்த மஹாபுருஷனைத் தேவர்களேனும் அசுரர்களேனும் பன்னகர்களேனும் காணுந் திறமுடையவரல்லர். எவர்களிடத்தில் அவன் அருள்புரிகின்றனனோ, அவர்களே அவனைக் காணவல்லவர்கள். ஹே வத்ஸ! அந்த பகவானைக் காண்பதற்குப் பலயாகங்கள் செய்யினும், பயனின்று; பலநாள் தவம்புரியினும், பயனின்று; தானதருமங்கள் செய்யினும், பூஜைபுரஸ்காரங்கள் செய்யினும், பயனின்று; தங்கள் பாதகங்கள் அனைத்தையும் தம் அறிவினாலொழித்து அந்த பகவானே தமக்குப் பிராணனென வெண்ணி அவனையே யென்றும் தம் உள்ளத்திற்கொண்டு அவனிடம் பக்தி பண்ணி அவனைத் தியானிப்பவர்களெவரோ, அவர்களுக்கே அவன் பிரத்தியக்ஷனாகுவான்.

இஃது இவ்வாறு இருக்க, ஹே ராக்ஷஸேந்திர! நீ அவனைக்காண விரும்புவையாகில், அதற்கு யானொன்று சொல்லுகின்றேன். அஃது உனக்குப்பிரியமாகில், அதனைக்கேட்டு அங்ஙனமேசெய்க. கிருதயுகம் கழிந்தபின்னர்

திரேதாயுகத்தின் துவக்கத்தில் தேவர்களுக்கும் மனுஷியர்களுக்கும் இதமியற்று மாறு இக்ஷ்வாகுகுலத்திலே தசரதனென ஒருராஜன் ஜனிப்பான்; அந்தத்தசரத மஹாராஜனுக்குப் புதல்வனாய் ஸ்ரீராமனென்னும் ஒரு மஹாநுபாவன் அவதரிக்கப் போகின்றனன். அவனது ஒளியும் அறிவும் ஆற்றலும் அழகும் ஊக்கமுமிணையில்லாதன; அவன் பொறுமையில் பூமிக்கு இணையானவன்; அவன் அமர்க்களத்தில் ஆதித்தியனென எதிரிகளால் கண்ணெடுத்துக் காணவும் கூடாத உக்கிரமமுடையவன். ஸ்ரீமந்நாராயணனே அங்ஙனம் தருமசொரூபியாய் ஸ்ரீராமனெனப் பெயர்பூண்டு மனுஷியாவதாரஞ்செய்து பித்ரு வாக்கிய பரிபாலனஞ் செய்தற்பொருட்டுத் தனதுஸகோதரனுடனே தண்டகாவனத்திற்குச் சென்று அவ்வனமெங்கும் ஸஞ்சரிக்கப் போகிறான். ஸ்ரீ மஹாலக்ஷ்மியே*ஸீதாதேவியெனப் பெயர்பூண்டு ஜநகமஹாராஜனுக்குப் புத்திரியாய்ப் பூமியினின்றும் உற்பத்தியாகி அவ்விராமனுக்குத் தருமபத்தினியாவாள். அவ்வுத்தமி அற்புதமான ஸௌந்தரிய முடையவள்; உத்தமஸ்திரீகளுக்குள்ள லக்ஷணங்கள்யாவும் அமைந்தவள்; சீலமும் ஆசாரமும் சற்குணமுமமைந்தவள்; தைரியமுடையவள்; நிசாகரனுக்கு நிலவுபோலவும், கதிரவனுக்குக் கிரகணம் போலவும், ஸ்ரீராமனை அநுசரித்திருப்பவள்; ஸ்ரீராமனுக்கு அவளை நிழலென்னலாம், இருவரும் ஒரேமூர்த்தியெனவும் தகும். ஹே ராவண! ஆதியந்தமில்லனாய் மஹாநுபாவனாகிய தேவதேவனைப் பற்றியயாவும் உனக்கு யான் விளங்கக்கூறினேன்' என உரைத்து முடித்தனர். ஸனத்குமாரர் இவ்வாறு கூறியதுகேட்டு ராக்ஷஸபுங்கவனான இராவணன் அம்முனிவரிடம் விடைபெற்று அவர் உரைசெய்த வார்த்தைகளை ஓயாதுசிந்தனைசெய்து கொண்டு மனமகிழ்ந்து, உம்முடன் பகைகொண்டு போர்புரிய விருப்புற்று இப்புவியெங்கும் திரியலாயினன்" என அகஸ்திய முனிவர் சொல்லி முடித்தனர்.

குடமுனிவர் இங்ஙனம் கூறியகதையைக் கேட்டு ரகுவீரன் ஆநந்த பரவசராகித் தலையசைத்துக் கண்கள்மலர மனமகிழ்ந்து மறுபடியும் அம்முனிவரைநோக்கி, 'இஃது நன்றுநன்று; அப்பால் நடந்ததென்ன' வென வினவினார். *

மிகுந்த கீர்த்திபெற்றவரான கும்பயோனி, இவ்வாறு கைகூப்பிக்கொண்டு வினவிய ஸ்ரீராமபிரானை நோக்கி, பிதாமஹர் மஹேசுவரனுக்கு மொழியுமாறு மற்றக்கதையும் விளம்பலாயினர். "ஹே ராம! சொல்லுகின்றேன் கேளும்:இக்காரணம்பற்றியே துராத்மாவான இராவணன் ஜனகமஹாராஜனது புதல்வியானபிராட்டியைப் பறித்துக்கொண்டு போயினனல்லது மற்றப்படி வேறெந்தக்காரணத்தினாலுமன்று. இஃது நாரதமுனிவர் மேருமலையில் முன்பு எனக்குச் சொன்னகதை. ஹே ராகவ! அதன்பிறகு அந்த நாரதமுனிவர் அக

---

* சில ஸ்ரீகோசங்களில் இங்கே சரு-ம்ஸர்க்கம் முடிவும், இப்போது சரு-ம் ஸர்க்கம் முடித்திருக்குமிடத்தில் சகூ-ம்ஸர்க்கம் முடிவுமாகக் காணப்படுகின்றது. அந்தக்கணக்கின்படியே சஎ-ம் ஸர்க்கமளவும் க0 ஸர்க்கங்கள் அதிகபாடமெனக் கூறப்பட்டதெனவறிக.

மகிழ்ந்து முகமலர்ந்து, அம்மலைமீதுள்ள தேவர், கந்தருவர், சித்தர், மகரிஷிக ளாகிய பலரும்கேட்க, மற்றுமுள்ளகதையை எனக்கு மொழிந்தனர். ராஜ ராஜனே! அந்தக்கதைகேட்போர்களுடைய கொடிய பாதகங்களையும் போக்க வல்லது. ஹே மஹாபாஹோ! அக்கதையைக்கேட்ட ரிஷிகளும் தேவதை களும் ஆநந்தமதிகரித்தவர்களாகி, இந்தச்சரிதத்தைச் சொல்லுகின்றவர்களும், செவிக்கொள்வோர்களும் இவ்வுலகில் புத்திர பௌத்திராதிகளுடனே கூடி இன்புற்று வாழ்ந்து, மறுமையில் சுவர்க்கலோகத்திலே மேன்மைபெற்று மகிழ்வார்களென்று கூறிக் கொண்டாடினார்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தாறுவது ஸர்க்கம்.

சுவேதத்வீபவாஸிகளின் மகிமையை நாரதர் கூறக்கேட்டு இராவணன் அவர்களுடன் அமராட ஆவல்கொண்டு அவ்விடஞ்சென்று அங்கிருந்த பெண்களால் பரிபவமடைந்ததும், பிறகு ஸனத்குமாரமுனிவரிடம் சுவேதத்வீபவாஸிகளின் பெருமையைப் பின்னும் நன்றாகக்கேட்டுணர்ந்து ஸ்ரீராமாவதாரகாலம் குறுகுவதை யெதிர்பார்த்திருந்ததும் கூறி அகஸ்தியர் முதலாயினோர் விடைபெற்றுச் சென்றது.

---

அநந்தரம் இராவணன் வெற்றிகொள்ள விருப்புடையோனாகி மஹா சூரர்களான ராக்ஷஸர்பலர் சூழப்பெற்று இப்பூமண்டலமெங்கும் ஸஞ்சரிக்க லாயினன். தைத்தியர்களிலாயினும் தானவர்களிலாயினும் இராக்கதர்களிலா யினும் எவன் பலிஷ்டனாயிருக்கின்றனனெனக் கேள்வியுறுகின்றனனோ, அவ னிடஞ்சென்று அவனைச்செருக்குடனே சமர்புரியவேண்டி யழைப்பான். அயோத்தியரசே! இவ்வண்ணம் இராவணன் இப்பூமியெங்கும் சுற்றித்திரிகை யில், பிரமலோகத்தினின்று திரும்பிவந்துகொண்டிருந்த நாரதரைக் கண்ணு ற்றனன். மற்றொரு சூரியனெனச் சோதிமயமாக மேகத்தின்மீதேறிவருகின்ற நாரதரைக்கண்டு களிப்புற்று இராவணன் அவரருகேசென்று கைகூப்பி வணங்கி அவரைநோக்கி, 'ஹே மஹாபாக! பிரமலோகம்வரையுமுள்ள எல்லா உலகங்களையும் தேவரீர் பலதரம் போய்ப்பார்த்தவரன்றோ? எந்த உலகத்தில் மிக்கபலிஷ்டர்களான மானிடர்கள் வஸிக்கின்றனர்? பராக்கிரமசாலிகளுடன் அடியேன் என்மனம்போனபடி அமர்புரிந்து இன்புற ஆவல்கொள்ளுகின் றேன். ஆதலின் அத்தன்மையோர் உள்ளவிடத்தை யடியேற்கு அருளிச் செய்யவேண்டுகின்றேன்' என வினவினன்.

துராத்துமாவான இராவணன் இயம்பியதுகேட்டு மஹாநுபாவரான நாரதமுனிவர் முகூர்த்தகாலம் மனத்தில் ஆலோசனைசெய்து மறுமொழி கூறுகின்றனர், 'ஹே ராக்ஷஸராஜனே! பாற்கடலின் பாங்கரில் மஹத்தான

தீவொன்று உளது. அந்தத்தீவிலே சந்திரனெனத்தகும் சோதியுடையவர்களாய் மஹாபலிஷ்டர்களான மானிடர்கள் வஸிக்கின்றனர். அவர்கள் மிகப் பெரிய சரீரமுடையவர்கள்; மிகுந்த வீரியமுடையவர்கள்; இடிமுழக்கம் போன்ற குரலோசை யுடையவர்கள்; மிகுந்த தைரியசாலிகள்; உழல்மரத்திற் கிணையான கைகளையுடையவர்கள். ஹே ராக்ஷஸராஜனே! நீ விரும்புகின்றவாறு இத்தன்மையரான பல பராக்கிரமசாலிகளான மானவர்களை யான் அந்த சுவேதத் வீபத்தினிடையே கண்டிருக்கின்றேன்' எனமொழிந்தனர்.

நாரதர் இவ்வாறு கூறியதுகேட்டு இராவணன் அவரைநோக்கி, 'முனிபுங்கவரே! அந்தத்தீவிலே மனிதர்கள் அவ்வாறு மஹாபலிஷ்டர்களாய்ப் பிறப்பது யாது காரணம்? அந்தமஹானுபாவர்களுக்கு சுவேதத்வீபம் உறைவிடமாய் அமைந்தது எதனால்? இவையாவும் அடியேற்கு உள்ளபடி அருளிச் செய்யவேண்டுகின்றேன். உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இவ்வுலகமனைத்தையும் தேவரீர் நேராகக்கண்டிருக்கின்றீரன்றோ?' எனவினவ, நாரதமுனிவர் உத்தரமருளிச்செய்கின்றனர். ஹே ராவண! அந்தமனிதர்கள் வேறுசிந்தனையின்றி எப்பொழுதும் நாராயணனையே மனத்திற்கொண்டு அவனே தமக்குத் தஞ்சமென்று உணர்ந்து, என்றும் அவனையே ஆராதித்து வருகின்றனர். இவ்வாறு நாராயணனே தமக்குப் புகலிடமெனத் துணிந்து மற்றொன்றையும் மனத்திற்கொள்ளாது அவனையே தியானஞ்செய்து கொண்டிருக்கும் அம் மஹானுபாவர்களுக்கு ஜன்மாந்தர சுகிருத விசேஷத்தினால் அந்தத்தீவிலே வசிக்கும்படியானபாக்கியம் அமைந்தது. சங்கொடுசக்கரமேந்துந் தடக்கையனான நாராயணன் தனது சார்ங்க மென்னும் வில்லைவளைத்துச் சமர்புரிய, அவன்கையில் அடியுண்டவர் எவரோ, அவர்களுக்கு எல்லாவற்றிற்கும் மேலான அவ்வுலகத்தில் வாஸம்கிடைக்கலாகும். அவ்வுலகம், தானம் தவம் வேள்வி முதலியவைகள் புரிந்தவர்களுக்கும், துறவறம் பூண்டவர்களுக்கும், எளிதிற்கிடைப்ப தரிதாகும்' எனவுரைத்தனர்.

நாரதமுனிவர் மொழிந்ததுகேட்டு தசக்ரீவன் மிக்க வியப்புற்றவனாகி, நெடுநேரம் ஆலோசனைசெய்து, யான் அந்த நாராயணனுடன் எதிர்த்துப் போர்புரிவேன் எனத் துணிந்து, நாரதமுனிவரிடம் விடைபெற்று, சுவேதத்வீபத்தை நோக்கிச் செல்லலாயினன். அதுகண்டு நாரதர் சற்று ஆலோசனை செய்து மிகுந்த குதூஹலமுடையராகி, அவ்விடத்து நடக்கும் அதிசயத்தைக் காணக்கருதி உடனே தாமும் அவ்விடத்திற்கு விரைந்து சென்றனர். நாரதமுனிவர் போர்புரிவதைப்பார்க்கப் பேராவல்கொண்டவராகி, ஆடவிட்டு நாடகம் பார்க்கும் அந்தணர்பெருமா னன்றோ? இவ்வண்ணம் நாரதரெழுந்து சென்றபின்னர், இராவணனும் அநேகம் இராக்கதர்களுடனே புறப்பட்டுப் பத்துதிசைகளிலும் பெரிய கோஷமுண்டாகுமாறு சிங்கநாதஞ்செய்து கொண்டு தேவர்களும் செல்வதற்கரியவிடமான சுவேதத்வீபம்போய்ச்சேர்ந்தனன். இராவணன் மஹாபலிஷ்டனாயினும், அத்தீவின் அருகே சென்றவளவில் அவனேறிச்சென்ற புஷ்பகவிமானம் அத்தீவினது ஒளியினால் எரிக்கப்பட்டதாகி, அங்குண்டாகிய காற்றினது வேகத்தினால் மோதப்பட்டுக்காற்றின்

வழிப்பட்ட காளமேகமென நிலைகொள்ளத் திறமையற்றதாகியது. கண்ணெடுத்துக் காணவும் அரியதாக விளங்கும் அத்தீவினிடஞ் சேர்ந்தவளவில் இராவணனது அமைச்சர்கள் அஞ்சி நடுங்கினவர்களாகி, இராவணனைநோக்கி, 'இராக்ஷஸராஜனே! யாங்கள் இவ்விடத்தை யணுகியவளவிலே அறிவும் ஆலோசனையுமிழந்து மூடர்களாயினேம்; நிலைத்துநிற்கவும் திறமையற்றுத் தவிக்கின்றேம்; அங்ஙனமாக யாங்கள் எதிர்த்து அமர்புரிதலெங்ஙனம்?' என்று கூறி யாவருமொன்றுகூடி யோடிப்போகலாயினர்.

இராவணனோ, இங்ஙனம் அமைச்சர்களால் கைவிடப்பட்டவனாகி, அத்தீவினுட்புகுந்து செல்லத் திறமையற்றிருக்கும் புஷ்பகவிமானத்தையும் விட்டிழிந்து மிகப்பயங்கரமான ரூபந்தரித்து, அந்த சுவேதத்வீபத்தினுட் பிரவேசிக்கலாயினன். இராக்ஷஸராஜன் அந்தத்தீவினுள் புகுந்தமாத்திரத்தில் பலபெண்கள் அவனைப்பார்த்தனர்கள். அவ்வணங்குகளிலொருத்தி இராவணனை நோக்கி நகைத்து, அவனது கையைப் பிடித்துக்கொண்டு, 'நீ இங்கு உற்றது யாதுகாரணம்? நீயார்? யாருடையமகன்? உன்னை இவ்விடம் வரவிடுத்தவன் யாவன்? இவற்றை விளங்கக்கூறுவாய்' எனவினவினள். அதுகேட்டு இராவணன் சினமூண்டு அவளைநோக்கி, 'யான் விச்ரவஸமுனிவரது புதல்வன், இராவணனெனப் பெயர்பூண்ட இராக்கதன், யுத்தம்செய்வதன்பொருட்டு இவ்விடம் வந்தனன், இங்கு என்னுடன் எதிர்த்துப் போர்புரிபவனொருவனையும் காணேனே' என்றுகூறினன்.

துராத்மாவான இராவணன் இங்ஙன மியம்ப, அங்கிருந்த கட்டழகிகள் யாவரும் பெருங்கோஷமுண்டாகக் குலுங்க நகைத்தனர்கள். அவ்வரிவையரிலொருத்தி கதம்விஞ்சி அவ்வரக்கனை ஒருகுழந்தையெனக் கையிலெடுத்து, அங்குள்ள தோழிமார் அனைவரும் கண்டு வியக்க, விநோதமாய் அவனைச்சுழற்றி மறுத்துமவனைக் கீழேவீழ்த்தி, மற்றொரு தோழியை யருகிலழைத்து, 'ஸகி! நீ இப்பூச்சியைப் பார்த்தனையோ? பத்துமுகமும் இருபதுகரமுமாய், இஃது மைபோலக் கருநிறமாயிருக்கின்றது' என்றுகூறி, அவனையெடுத்து மற்றொருத்தி கையிலெறிந்தாள், அவள் வேறொருத்திகையிலெறிந்தனள்; இங்ஙனம் அவர்கள் கைக்குக்கை வீசியெறிவதைத் தாங்கமுடியாது தசக்ரீவன் தவித்து ஆயாஸமடைந்தனன். அக்காலையில் அவன் மிகக் கோபங்கொண்டு ஒருகாரிகையைக் கையில் பற்களால் பற்றிக் கடித்தனன். அவ்வேதனைபொறுக்கமுடியாது அந்தமாது அந்தப்பத்துத்தலைப் பூச்சியைக் கீழேயெறிய, மற்றொருமங்கை அவனைக் கையிலெடுத்துக்கொண்டு வானத்திலெழுந்தனள். தசாநநன் மிக்க சினமூண்டு அவளை நகங்களால் நன்றாகப் பீறினன். அந்த நோயினால் அவளும் உடனே அவனைக் கீழேவிட்டுவிட, அவன் அங்கிருந்த அகாதமான கடலினிடையே, வஜ்ராயுதத்தினால் அடியுண்டவரையென வீழ்ந்து, அக்கடலின் மீதே மிதந்துகொண்டு கிடந்தனன். ஹே ராம! இவ்வண்ணம் இராவணன் சுவேதத்வீபவாஸிகளான வனிதையர்களால் வருத்தப்பட்டவனாகி மயங்கித் தவித்தனன். இராவணன் இவ்வாறு

அங்கனைகளால் அலைக்கழிக்கப்பட்டு அல்லாடுவதுகண்டு நாரதமுனிவர் மிக்க மகிழ்ச்சிகொண்டு நகைத்து நர்த்தனஞ்செய்தனர்.

அப்பால் இராவணன் உடம்புமுழுதும் நனைந்து தலைமயிரினின்றுந் தண்ணீர் சொட்டவெழுந்து மிக்க வியப்புற்று அக்கடலின் தென்கரை சேர்ந்து சிந்திக்கலாயினன்: அஃது என்னவெனில், 'யாம் உலகமெங்குஞ் சென்று ஜயம்பெற்றோம், நம்மை இதுவரையும் இங்ஙனம் அச்சுறுத்தியவரை எவ்விடத்தும் கண்டதில்லையே. இயற்கையிலேயே ஆற்றலில்லாதவர்களாய் அபலைகள்எனப் பெயர்பெற்ற பெண்களுக்கு இவ்விதமானசெய்கை இயல்புக்கு விரோதமானதன்றோ; இவ்வுலகத்து மனிதர்கள் ஸர்வவல்லமையுள்ளவர்கள்போலும். முன் நாரதமுனிவர் மொழிந்தவாறு அவர்களே இங்ஙனம் அரிவையர்களாக வேஷம்பூண்டு வந்திருக்கின்றன ரெனவெண்ணுகிறேன்; பலவந்தர்களுடன் ஸந்திசெய்துகொள்வதே சிறப்புடையது' என நன்கு ஆலோசித்துத் துணிந்தனன்.

அதன் பின்னரும் அவர்களுடைய வரலாற்றை நன்கு உணருமாறு அவன் அங்குள்ள வனமெங்கும் உற்றுநோக்கினன். ஆங்கோரிடத்துப் பிரம்ம புத்திரரான ஸனத்குமாரமுனிவர் வீற்றிருக்கக்கண்டனன். யோகிகள் அனைவரினும் உத்தமராய், ஆவுதிசெய்யப்பெற்ற அக்கினியெனத் தவத்தினல் ஓங்கியொளி வீசிக்கொண்டு தென்புறத்தில் ஒருகுகையிலே அம்முனிவர் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பதுகண்டு அவரருகே சென்று அந்தத்தபோவிருத்தரைத் தண்டனிட்டு அபிவாதனஞ்செய்து கைகூப்பிக்கொண்டுவெட்கித்தலைகுனிந்து அவரைநோக்கி, 'ஹே ஸ்வாமிந்! தபோதனரே! இந்த உலகம் எந்த மஹானுபாவனல் கற்பிக்கப்பட்டது? எல்லா முணர்ந்த பெரியோரே! இவ்வுலகத்தில் வஸிப்பவர்யாவர்? தேவரீர் எவரை உள்ளத்தில் தியானஞ்செய்துகொண்டு யோகாப்பியாஸஞ் செய்கின்றீர்? தேவரீர் ஸர்வஞ்ஞராதலின், இவை எல்லாவற்றையும் அடியேனுக்கு விளங்கக் கூறவேண்டுகின்றேன்' எனத்தசக்கிரீவன் வினவினன்.

இராவணன் இவ்வாறு உரைசெய்ததுகேட்டு ஸனத்குமாரமுனிவர் அவன் உள்ளத்திற் கருதியது இன்னதெனவுணர்ந்து புன்னகைகொண்டு அவனுக்கு விடை பகரலாயினர். 'வத்ஸ! விளம்புகின்றேன்கேள். சராசரங்களுள்ளிட்ட இவ்வுலகங்கள் அனைத்தையும் எவன்தாங்குகின்றனனே, எவனது ஆதியை எவரும் அறிந்திலரோ, வேதமோதியுணர்ந்த வித்வான்கள் எவனைத் தமசுக்குப் புறம்பானவனெனவும், ஆதித்திய ரூபியெனவும், மூப்பில்லாதவனெனவும், பரமாத்துமா எனவும், ஈசுவரனெனவு மியம்புகின்றனரோ, எனது பிதாவான பிதாமஹர் எவனது நாபிகமலத்தினின்று முற்பவித்தனரோ, அவர் முகமாகக் கைலாஸபதியான சிவபிரான் தேவேந்திரன் முதலாயினோரை யாவனொருவன் படைப்பித்தனனே, எவனைப் பெருந்துணையாகப் பற்றித் தேவர்கள் தைத்தியர்களைப் பரிபவப்படுத்தி வேள்வியில் வேதவிதிப்படி ஹவிர்ப்பாகம் பெற்று அமுதபானமும் பண்ணுகின்றனரோ, எவராலும் வெல்லப்படாத உன்னைப்பிடித்து மிகுந்தவேகத்துடனே கடலில் வீழ்த்திய குழலிகள்

எவனது சுவாஸவாயுவினின்று முற்பவித்தவர்களோ, வீரிய மதிகரித்தவர்க ளான தைத்தியர் தானவர் நைரிதர் முதலியோர் எவனால் பற்பலரூபமெடுத்து வதைக்கப்பட்டனரோ, லோகநாதனான அந்தமஹாநுபாவனாகிய கோவிந்தனால் தனக்கு வாஸஸ்தானமாக இந்த இடம் கற்பிக்கப்பட்டது. இத்தீவிலுள்ளவர் கள் நாராயணனே தமக்குத் தஞ்சமெனக் கொண்டு அந்த ஜகன்னாதனை ஆரா திக்கின்றனர்கள். அவர்கள் எல்லாப் பூதங்களிடத்திலும் பகைகொள்ளாத வர்களாகிக் கருணைகூர்ந்து யோகமே துணையாக்கொண்டு * பஞ்சமஹாயஜ்ஞங் களையு மனுஷ்டித்து, எப்பொழுதும் மதுசூதனனைக்குறித்தே பூஜைபுரஸ்காரங் கள் செய்துகொண்டும் அவனையே தியானித்துக்கொண்டும் ஸாத்துவிக சிரோ மணிகளாக வஸிக்கின்றனர்கள். புராணம் வேதம் பாஞ்சராத்திரம் ஸாங்கியம் யோகம் ஆகிய யாவும் எவனையே பிரதிபாதிக்கின்றனவோ, முனிவர்கள் எவனை எப்பொழுதும் தியானித்துப் பஜிக்கின்றனரோ, முனிவர்களும் தேவர்களும் எவனை பகவானென்று ஸ்தாபிக்கின்றனரோ, மதுகைடபர்களை வதைசெய்தவ னான அந்தநாராயணனையே நீ நாடக்கடவை. ஹே ராவண! பிதாமஹரும் அந் தத்தேவதேவனை அறிந்தவரல்லர். ஸர்வலோகநாதனும் ஸகலலோக பூஷணமு மான நாராயணனென்றும் ஹரியென்றுமோதப்பட்ட, அந்தப்புண்ணியபுரு ஷனை எவன் எப்பொழுதும் அறிகின்றனனோ, அவனுக்கு மோக்ஷவுலகம் கிடைப்பதற்கு ஐயமிலது' எனமொழிந்தனர்.

இவ்விதமாக ஸனத்குமாரமுனிவர் கூறியதுகேட்டுத் தசகந்தரன் மன மகிழ்ந்தவனாகி மறுத்தும் அம்முனிவரைநோக்கி, 'சுவாமி! அந்தத்தேவ தேவன் எவ்வாறு காணப்படுகின்றனன்? பூமியில் எவ்வாறு ஓதப்படுகின்ற னன்? உலகத்தில் அவன் எவ்வாறு விஹரிக்கின்றனன்? அவனைக்காணும் உபா யந்தான் யாது? ஹே பிரம்மன்! அடியேன் எத்தனைகாலம் தவம்புரிந்தால், இத் தேவருலகத்தில் அடிவைக்க வல்லவனாவேன்? இவையனைத்தையும் அடியே னுக்கு அருளிச்செய்ய வேண்டுகின்றேன். ஸகலமும் தேவரீருக்குத் தெரிந் தவையேயன்றோ' என வினவினான்.

இராவணன் இவ்வண்ணம் ஆவலுடனே வினவியதுகேட்டு எல்லா முணர்ந்த முனிவர் முறையே அவையாவும் எடுத்துரைக்கலாயினர். 'ஹே ராவண! அவ்யக்தனான அந்த ஆதிபுருஷன் ஸூக்ஷ்மரூபியாய், சராசரரூபமான இம்மூவுலகத்திலும் உள்ளும்புறமும் வியாபித்திருக்கின்றனன். அவன் மண் ணும் விண்ணும் பாதலமும் பருவதங்களும் கானகங்களும் கடல்களும் ஆறு களுமாகிய எல்லாவிடங்களிலும் வஸிக்கின்றனன். அல்லும்பகலும்இரண்டு சந்திகளும் சூரியனும் சந்திரனும் யமனும் காலமும் வருணனும் அக்கினியும், பிரமன் ருத்திரன் இந்திரன் முதலியோரும் அவனேயாம். பிரணவமும்அவனே; வியாஹ்ருதியுமவனே; காயத்திரியுமவனே; சந்தியுமவனே; அநந்தனெனப் பெயர்பூண்டு இப்பூமியைத் தரிப்பவனுமவனே; எல்லாவற்றையும் விளக்கு கின்றவனும், சொலிப்பவனும், மழைபொழிகின்றவனும், வாயுவாக வீசுகின்ற

---

* பஞ்சமஹாயஜ்ஞங்களாவன:—தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், பூதயஜ்ஞம், மனு ஷியயஜ்ஞம், ப்ரஹ்மயஜ்ஞம் என்னும் ஐந்துமாம்.

வனும், பாதுகாப்பவனும், கர்ஜிப்பவனும், எங்கும் ஸஞ்சரிப்பவனும், சூரிய ரூபியாய்த் தவிப்பவனும், அக்கினிரூபியா யெரிபவனும் அவனே; உலகங்களைப்படைத்துப் பரிபாலித்து இறுதியில் சங்கரிப்பவனும் அவனே; உலகத்திலுள்ள தைத்தியர்களைத்தொம்சம் செய்பவனுமவனே. தேவர்களாயினும் அசுரர்களாயினும் பன்னகர்களாயினும் எவர்க்கும் அவன்காணுதற்கரியவன்; யாவனிடத்தில் அவன் அருள்புரிகின்றனனோ, அவனொருவனே அத்தேவனைக்காணுந்திறமுடையவனாகுவான். அவனையே அடைக்கலம்புகுந்து அவனையே தஞ்சமெனவெண்ணி அவனிடமே மனத்தைச்செலுத்தி, காமக்குரோதம் முதலாகிய வைரிகளைவென்று, ஞானவிளக்கினால் அஞ்ஞானவிருளைப்போக்கிய பரிசுத்தாத்துமாக்களான மஹாபுருஷர்களே இவ்வுலகத்துள் புகுதற்கு யோக்கியதையுடையவர்களாவர். அப்பிராகிருதமான திவ்யசரீரம் பெற்று எவர்கள் இந்த அழிவில்லாத வீட்டிற் புகுகின்றனரோ, அவர்கள் இவ்விடத்திலேயே இந்தநாராயணனுடனேகூடிப் பிரம்மாநந்தமனுபவிக்கின்றனர். அவர்கள் பொருட்டே இம்மஹாநகரம் நிருமிக்கப்பட்டுள்ளது. இந்த வைவஸ்வதமன்வந்தரத்தில் இருபத்தெட்டாவது யுகம் வரும்பொழுது நீ விஷ்ணுவுக்கொப்பான விக்கிரமம் பெற்று இவ்வுலகத்தினுள் பிரவேசிப்பாய். ஹே ராக்ஷஸேச்வர! நீ என்னிடம் கேட்டுணர வேண்டுவது இவ்வளவேயன்றோ? யாவும் கேட்டுணர்ந்தனையே. இனியெழுந்து செல்லுக; உனக்கு மங்களமுண்டாகுக; நீ விரும்பிய நற்கதியை நீ பெற்று மகிழ்வாய்' என மொழிந்தனர்.

ஸனத்குமாரர் இவ்வண்ணம் சொன்னது கேட்டு 'அங்ஙனமே யாகுக' என்று உடன்பட்டு ராக்ஷஸராஜன் அவரைவணங்கிப் பூஜித்து விடைபெற்றுத் திரும்பித் தனதுசேனைகளிருக்குமிடஞ்சென்று அவற்றுடனே மனக்கவலையொழிந்து இலங்காபுரிபோய்ச் சேர்ந்தனன். நாரதமுனிவரும் அவ்விடத்து நடந்த விசேஷங்கள் எல்லாவற்றையும் ஆதியோடந்தமாகக் கண்குளிரக்கண்டு களிப்புற்றவராகி அவ்விடம்விட்டு விரைவாகச் சென்று மேருமலையிலுள்ள மஹாஸபை போய்ச்சேர்ந்தனர். அம்மகா ஸபையை யணுகியதும் அங்கு வீற்றிருந்த பிரமதேவரைத் தண்டன்ஸமர்ப்பித்து அபிவாதனஞ்செய்து அஞ்சலிபண்ணி, தேவர்கள் அனைவரும் கேட்டுக்களிக்க, தாம் கண்ட அதிசயத்தைப் பிரமதேவர் ஸன்னிதியில் விண்ணப்பஞ் செய்தனர்.

நாரதமுனிவர் மொழிந்த மகத்தான புண்ணிய சரிதத்தை முக்காலமுமுணர்ந்த மேதாவியாகிய பதுமயோனி செவியுற்று நாரதரை ஆலிங்கனஞ்செய்துகொண்டு இயம்பலாயினர்: 'ஹே நாரத! இந்தராக்ஷஸன் பூர்வம் ஹிரணியகசிபுவாகப் பிறந்திருந்தனன். அவன் பலவிதமான தவம்புரிந்து வேண்டியவரங்கள் பெற்று மஹாபலிஷ்டனாய் எவராலும் வெல்வதற் கரியனாயினன். அங்ஙனமிருக்க,அவனொருகால் அவனது ஸபையில் நரசிங்கமாய்த் தோன்றிய பதுமநாபனான நாராயணனை நிந்தித்து இகழ்ந்தனன். அதுகண்ட நரசிங்கமூர்த்தி அவ்விராக்கதனுடனே போர்தொடுத்து அவனைப்பிடித்திழுத்து, நகங்களால் அவனுடலைக்கிழிக்கலாயினர். அவ்வாறு கிழிக்கையில், நரசிங்கமூர்த்தி

அவ்வுடலினது உதிரத்தைப் பரிசித்த வளவிலே அவ்வவுணனுக்கு ஞானக் கண்மலர்ந்தது. அக்கணமே அவன் தனக்குப் பின்னருண்டாகும் இராக்கதப் பிறவியையும், மானிடப் பிறவியையும், அப்பால் தனக்கு நேரிடப்போகிற வதத்தையும் அந்தத் திவ்விய நேத்திரத்தினுல் நன்கு உணர்ந்து, அத்திருமாலினது மடியிற்படுத்தவாறே, அவரது உகிர்களால் உடல்பிளந்து பரிதபித்துக் கொண்டிருக்கையிலும், கைகூப்பிக்கொண்டு அவரைநோக்கி மெல்லமொழியலாயினன்: 'உருக்குப்பொன் நிறமான பிடரிமயிரும், எரியும் அக்கினிக்கு இணையான திருக்கண்களும், வஜ்ராயுதத்திற் கொப்பான நகங்களுமுடைய நரசிங்கமே! உன்னை நமஸ்கரிக்கின்றேன். கைடபாசுரனைக் கொன்ற கருணாநிதியே, ஹே ஹரே, ஹே தேவ, ஹே விஷ்ணோ, ஹே விபுலவிக்கிரம, ஹே பூதபவ்யேச, ஹே சரணாகதவத்ஸல! அடியேனைக் காத்தருள்க. அடியேனுக்கு இனி நேரிடுவதான ராக்ஷஸப்பிறவி தேவரீரது திருக்கரத்தினு லொழிந்து, அங்ஙனமே அதன்பிறகு உண்டாகும் மானிடப்பிறவியு மொழிந்தபின்னர், அடியேன் தேவரீரது ஸாமியத்தை யடைந்து முத்தியுலகம் பெறுமாறு அருள்புரிய வேண்டுகின்றேன். ஹே லோகநாத! அங்ஙனமே கடாக்ஷித்தருள்க.' எனப் பிரார்த்தித்தனன். ஹிரண்யகசிபு அவ்வாறு வேண்டியதைத் திருச்செவி சார்த்தி நரசிங்கமூர்த்தி அவ்வண்ணமே யாகுகவென்று அநுக்கிரகித்து, கிங்கிணிகள்கட்டி அன்னப்புட்கள் ஈர்த்துக்கொண்டு செல்லப்பெற்ற அற்புதமான விமானத்தின் மீதேறிச் சென்றனர். அவ்வாறே அந்த மஹாசுரனே மறுபடி இராவணனென்னும் இராக்ஷஸனாகப் பிறந்தனன்: அந்த ராக்ஷஸப்பிறவியிலும் எப்பொழுதும் அந்நாராயணனையே சிந்தையிற் சொண்டவனாகி நாள் கழிக்கின்றனன். இனி இவன் மானிடனாகப் பிறந்து உலகங்களை இம்சிக்கத் தலைப்படுவான். அந்த மூன்றாவது பிறவியிலும் விஷ்ணுவினது கையினுல் வதையுண்டு, பிரம்மவித்தான பிராம்மணர்கள் * கூறியவாறே விஷ்ணு ஸம்பந்தமான சோதியிற்புகுந்து சுவேதத்வீபத்தை அடைவான். அங்கு நீ கண்ணுற்றவை யாவும் யானிங்கிருந்த வண்ணமே நன்கு கண்டுணர்ந்தேன். தேவதேவனான பரமாத்மாவினது செயல்கள் யாவற்றையும் யானே மேற்கொண்டு செய்து வருகின்றேன். ஹே நாரத! ஸகலபாபங்களையும் போக்குவதான இந்தப் புண்ணியமாகிய வைஷ்ணவ சரித்திரத்தை எவன் நித்தியம் ஆதியோ

* பூர்வம் பிரம்மபுத்திரர்களான ஸநகாதிகள் திரிலோக ஸஞ்சாரம் செய்துகொண்டு ஐந்தாறு பிராயமுள்ள குழந்தைகளாக வேஷம்பூண்டு அரையி லாடையுமின்றி விஷ்ணுலோகத்திற்குச் சென்றனர்கள். அங்கிருந்த துவாரபாலகர்கள் இவர்களைச் சிசுக்களென அவமதித்து உள்ளே செல்லக்கூடாதென்று தகைந்தனர். அதுகண்டு அம்முனிவர்கள் முனிந்து, 'ரஜோகுணமும் தபோகுணமு மொழிந்த இந்த பகவானது பாதமூலத்தில் நீவிர் வஸிப்பதற்குரியரல்லீர்; அசுரயோனியிற் பிறக்கக்கடவீர்' எனச் சபித்தனர். அவர்கள் உடனே அவ்வுலகத்தினின்று நழுவி விழுவது கண்ட முனிவர்கள் கருணைகூர்ந்து, 'நீங்கள் மூன்று பிறவி பூமியிற் பிறந்து பின்னர் இவ்வுலகம் சேர்வீர்' என அனுக்கிரகித்தனர். அதனுல் அவர்களே முதலில், ஹிரணியன், ஹிரணியாக்ஷன் என்னு மிருவராகவும், பிறகு இராவண கும்பகர்ணர்களாகவும், கடைசியில் கிருஷ்ணாவதார காலத்திலே சிசுபால தந்தவக்கிரர்களாகவும் பிறந்தனரென வறிக.

டந்தமாகப் படிக்கின்றனனோ, அவன் மேலான கதியடைவான். விஷ்ணு ஸம்பந்தமாகிய இச்சரித்திரம் ஸகல பாபங்களையும் நாசஞ்செய்யவல்லது. நித்தியமிதனை யெவனொருவன் கேட்கின்றனனோ, அவனும் எல்லாப் பாதகங்களு மொழிந்து புனிதனாகுவான்; அன்றியும் அவனுக்கு மறுஜன்மத்தில் பிராமணஜன்மமும், உயர்குலமும், ஸர்வஞ்ஞத்துவமு முண்டாகும்; இதிற் சிறிதும் சந்தேஹமிலது' என்று இவ்வாறு அருளிச்செய்து நாராயணனைத் துதித்துக் கமலோத்பவர் தேவர்களிடம் விடைபெற்றுத் தம் உலகஞ்சென்றனர்.

நாரதமுனிவரும் அதன்பின்னர்அவ்விடம்விட்டுப் புறப்பட்டு மேருவெற்பை வலம்செய்துகொண்டு என்னை அநுக்கிரகிக்க வேண்டி எனது ஆச்சிரமத்திற் கெழுந்தருளினர். அதுகண்டு யான் அவர்க்கு விதிமுறைப்படி வந்தனை வழிபாடுகள்செய்தபின்னர், இந்தக்கதையை அவர் எனக்கு விளங்கக்கூறினர். மிகவும் பாவநமான பொருள்களுள்ளதும், செவிக்கினிய அமுதமென மனோஹரமுமான அந்தக்கதையை நானிப்பொழுது நீங்கள் யாவரும் கேட்குமாறு இந்தச் சபையிலெடுத்து உரைத்தேன். ஹே மஹாபாஹோ! இக்காரணம் பற்றியே துராத்துமாவான இராவணன் உம்மால் மரணமடைய மனோரதங் கொண்டவனாகி ஜமதிலியை யபகரித்துக்கொண்டு சென்றனன். ஆதலின் தேவரீர் சங்கம் சக்கரம் கதை சார்ங்கம் பதுமமென்னும் பஞ்சாயுதமும் தரித்த ஸாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணனேதவிர வேறொருவருமல்லர். எல்லாத்தேவர்களும் தொழுது பூஜிக்கப்பெற்ற பரமயோகி தேவரீரே! ஸ்ரீவத்ஸமென்னும் மறுவை மார்பில் தரித்தவனும், ஹ்ருஷீகேசனும், பத்மநாபனும், பத்தர்களுக்கு அபயமளிப்பவனும் தேவரீரே. இராவண ஸம்ஹார நிமித்தமே தேவரீர் இவ்வாறு மனுஷியாவதாரஞ் செய்தருளியது. ஹே ராம! தேவரீர் நாராயணனே யென்பதைத் தேவரீர் அறிந்திலீரோ? ஹே மஹாபாக! மயங்காதொழிக; தேவரீரே இதனைத் தேவரீரது சக்தியால் உய்த்துணர்க. எவராலும் அறியப்படாத மறைபொருளன்றோ தேவரீர்! இவ்வண்ணமே பிதாமஹர் புகன்றனர். மூன்று குணங்களும், மூன்று வேதங்களும், மூன்று உலகங்களும் தேவரீர்; முக்காலங்களினு மிருந்து அக்காலங்களுக்குரிய செயல்களைச் செய்பவர் தேவரீர்; மூன்று வித்தைகளும் தேவரீர்; தேவ சத்துருக்களைச் சங்காரஞ் செய்பவர் தேவரீர்; அதன் பொருட்டே தேவரீர் முன்பு மூன்றடிகளால் மூவுலகங்களையும் அளந்தீரன்றோ? அங்ஙனம் பலிச்சக்கரவர்த்தியைச் சிறைசெய்யுமாறு தேவரீர்அதிதியினது கர்ப்பத்தில் தேவேந்திரனுக்கு அநுஜனாக உபேந்திரனெனப் பெயர்பெற்று அவதாரஞ் செய்தருளியது. ஆதலின் ஆதிபுருஷனான ஸ்ரீமஹாவிஷ்ணுவே இப்பொழுது லோகாநுக்கிரஹ நிமித்தமாக இவ்வண்ணம் மனுஷியாவதாரஞ் செய்தருளியது. ஹே தேவராஜனே! இப்பொழுது தேவதைகளுடைய காரியம் செய்துமுடிக்கப்பட்டது: மாபாவியான பத்துத்தலையோன் புத்திர மித்திர பந்துக்களுடனே கொலைசெய்யப்பட்டனன்; தேவர்கள் முனிவர் தவசிகள் முதலியோர் மனமகிழ்ச்சி கொண்டனர். ஹே தேவநாத! தேவரீருடைய பிரஸாதத்தினால் இவ்வுலகங்களைப் பற்றிய பீடையொழிந்தது. இந்த ஸீதை ஸாக்ஷாத் ஸ்ரீமகா லக்ஷ்மியேயாம்; தேவரீர் பொருட்டே இவர்

இப்பூமியினின்று முற்பத்தியாகி ஜனகமஹாராஜனது மாளிகையில் வளர்ந்தனர். இவ்வா இராவணன் மிகப் பிரயாஸப்பட்டு இலங்காபுரிக்குக் கொண்டுபோய்த் தாயைப்போல வைத்துவெகுகருத்தாகப் பாதுகாத்தனன்.

ஹே ராம! முக்காலமு முணர்ந்த முனிவரான நாரதர் எனக்கு உணர்த்தவை யாவும் யான் தேவரீரிட மெடுத்துக் கூறினேன். இவையாவும் ஸனத்குமார் சொற்படிகேட்டு அதன்படி இராவணன்செய்த காரியமேயன்றி மற்றென்றுமல்ல. இதன் பெருமையை யுணர்ந்து எவன் இந்தச்சரித்திரத்தை சிராத்த காலத்தில் பிராம்மணர்களுடைய ஸன்னிதானத்தில் அவர்கள் கேட்குமாறு செய்கின்றனனோ, அவனுடைய பித்ருக்களுக்கு அநந்தமான அக்ஷயம் அளிக்கப்பட்டதாகும்'' எனக்கூறி முடித்தனர்.

திவ்வியமான இந்தக்கதையைக் கேட்டுச் செந்தாமரைக் கண்ணனை ஸ்ரீராமபிரான் தமது சகோதரர்களுடனே அளவில்லாத ஆநந்தங் கொள்ளலாயினர். அந்தக் சபையிலே கூடியிருந்த சுக்கிரீவன் முதலான வாநரர்களும், விபீஷணன் முதலான ராக்ஷஸர்களும், பற்பல ராஜாக்களும் மந்திரிகளும், பிராம்மணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர்களாகிய மற்றும் பலரும் அதனைக் கேட்டுக் கண்கள் மலர்ந்து களிப்புற்றவர்களாகிக் காகுஸ்தனையே கண்ணுற்று நின்றனர்கள். அப்பால் அகஸ்தியமாமுனிவர் ஸ்ரீராமசந்திரனை நோக்கி, 'ஹே ராம! தேவரீர் யாவும் கேட்டருளினீரன்றோ; யாங்களும் தேவரீரை ஸேவித்து ஸம்பாஷணமும் செய்து கிருதார்த்தர்களானோம்; இனி யாங்கள் போய்வருகிறோம்' என்றுகூறி விடைபெற்றுக் கொண்டனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில், நாற்பத்தாறுவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் தமது மாமனரான ஜநகமகாராஜன்,
அம்மானன கேகயராஜன்,
பிரியமித்திரனன காசிராஜன் முதலான பல ராஜாக்களுக்கும்
விடைகொடுத் தனுப்பியது.

---

ஸ்ரீராகவன் இவ்விதமாகவே பிரதிதினம், அநேகமான நகரங்களும் நாடுகளுமடங்கிய தமது ராச்சியத்திலுள்ள ஸகலகாரியங்களையும் நன்கு விசாரணை செய்துகொண்டு ராஜ்யபரிபாலனஞ் செய்து வந்தனர். இவ்வாறே சிலநாள் செல்லுகையில், ஸ்ரீராமபத்திரன் தமது மாமனரான மிதிலையரசனை யழைத்து அவனை வணங்கிக் கைகூப்பிக்கொண்டு, 'ஹே பிரபோ! எங்கள் அனைவருக்கும் தேவரீரேயன்றோ முக்கியமான கதி; தேவரீராலேயே யாங்கள் அனைவரும் பாதுகாக்கப்படுகின்றனம்; தேவரீருடைய உக்கிரமான தபோபலத்தினாலேயே இராவணனை யான் வதைசெய்தேன். இக்ஷ்வாகு

வமிசத்தரசர்களுக்கும் மிதிலாநகரத்தரசர்களுக்கும் இணையில்லாத விசுவாஸம் அநாதியாயுள்ளதன்றோ? ஸம்பந்தம் முதலியவையு மவ்வாறே. இப்பொழுது தேவரீர் இவ்விடம் எழுந்தருளி அதிகநாளாகின்றதே; ராஜ்யத்தை விட்டு வெகுநாள் வெளியிலே யிருப்பது உசிதமாகுமோ? உடனே வேண்டிய செல்வங்களை யெடுத்துக்கொண்டு தமது நகரத்திற்குச் செல்லுக; தேவரீருக்குத் துணையாய்ப் பரதனைக்கூடவே அனுப்புகிறேன்' எனத் தம்மாமனருக்கு விடையளித்தனர். அதுகேட்டு ஜநகமஹாராஜன் அகமகிழ்ந்து 'ஹே ஸீதாபதே! அங்ஙனமே யாகுக; யான் உன்னை இப்படி வெற்றிவீரனாகக் கண்டதனாலும் உனது ராஜநீதியினாலும் மிகவும் சந்தோஷமடைந்தவனாயினேன். அயோத்தி மன்னவனே! நீ எனக்கு அளித்த அருமையானபொருள்களெல்லாவற்றையும் என்புத்திரிக்கு யான் நன்கொடையாகக் கொடுக்கின்றேனாதலின் அவற்றை இவ்விடத்திலேயே வைத்துக் காப்பாற்றுக' என வுரைத்து விடைபெற்றுக்கொண்டு மிக்க மகிழ்ச்சியுடனே மிதிலா புரிக்குச் சென்றனர்.

அநந்தரம் அயோத்திமன்னன் தமது மாதுலனும் கேகய தேசாதிபதியுமான யுதாஜித்தை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு, 'மாதுலரே! இந்த இராஜ்யமும் அடியேனும் பரதனும் லக்ஷ்மணனுமாகிய யாவரும் தேவரீருடைய அதீனமேயன்றோ? எங்கள் அனைவருக்கும் தேவரீரே முக்கியமானகதி. ஆதலின் தேவரீரை விட்டுப்பிரிய எங்களுக்கு மனமிலதாயினும், பாட்டனார் அவ்விடத்தில் தேவரீரைப் பிரிந்ததனால் மிகவும் தவித்துத் துன்புறுவாரன்றோ? ஆதலின், தேவரீர் இப்பொழுதே தேவரீருடைய நகரத்திற்குச் செல்வது நலமெனத் தோற்றுகின்றது. லக்ஷ்மணன் தேவரீருக்கு அனுயாத்திரையாகத் தேவரீரைப் பின்பற்றி வருவான்; வேண்டிய ரத்தினங்களையும் தனங்களையும் எடுத்துக்கொண்டு தேவரீர் செல்லுக' என விடைகொடுத்தனர். அதுகேட்டு யுதாஜித்து தாசரதியை நோக்கி, 'ராமா! அங்ஙனமே நான்போய் வருகின்றேன்; நீ கொடுத்த ரத்தினங்களையும் தனங்களையும் நான் உனக்கே ப்ரீதியாகத்திருப்பிக் கொடுத்துவிடுகிறேன். அஃது உன்னிடத்திலேயே அக்ஷயமாயிருக்கக்கடவது' என்று கூறி, இராமனால் வலம்வந்து வணங்கிப் பூஜித்து வழிவிடப்பட்டவராகி மனமகிழ்ந்து பரிபூர்ண மனோரதராய், தாமுமிராமனைப் * பிரதக்ஷிணஞ்செய்து விடைபெற்று லக்ஷ்மணனை ஸஹாயமாக் கொண்டு கேகயதேசம் சென்றனர்.

விருத்திராசுரனை வதைசெய்து விஷ்ணுவுடனே வீற்றிருந்த வாஸவனென, இராவணவதைசெய்து தம்பிமார்களுடனே வீற்றிருந்த ஸ்ரீராமபிரான் இங்ஙனம் இவர்களுக்கு விடைகொடுத்தனுப்பி, அப்பால் தமது நண்பனை பிரதர்த்தனனெனப் பெயர்பெற்ற தீரனை காசிராஜனைக்கண்டு, அவனை இறுக ஆலிங்கனஞ் செய்துகொண்டு கூறுகின்றனர்: 'காசிதேசாதிபதியான நண்பனே! உனக்கு என்னிடமுள்ள பிரீதி விசுவாஸங்களை நீ நன்கு வெளி

* மாதுலராதலின் யுதாஜித்தை இராமன் முதலில் வணங்கினர். இராமன் மண்டலாதிபதியாக மகுடாபிஷேகம் பெற்றவராதலின், யுதாஜித்தும் அவனைப்பிறகு வலம்வந்து வணங்கினரெனவறிக.

யிட்டனை; நீ இராவணனை வதைசெய்யும் விஷயத்தில் பரதனுடனேகூடி, எனக்கு * உதவிபுரிய உத்தியோகஞ் செய்தனையன்றோ? உன்னைவிட உயிர்த் தோழன் எனக்கு வேறிலன்; இப்போது நீ நகரத்தைவிட்டு வந்து வெகு நாளாகின்றமையின், நீ பரிபாலித்து வருகின்ற நகரத்திற்குப் புறப்பட்டுச் செல்லுக' என்றுகூறி மறுபடி ஆஸனத்தினின்று மெழுந்து அம்மன்னவனை மார்புறத்தழுவி விடைகொடுத்தனர். இவ்வாறு கோஸலை மைந்தனிடம் விடை பெற்று எதற்குமஞ்சாத தீரனான காசிதேசாதிபதி களிகூர்ந்துவிரைந்து வாரணாஸிக்குச் சென்றனன்.

காசிதேசாதிபதிக்கு இவ்வண்ணம் விடைகொடுத்தனுப்பிய பின்னர் காகுஸ்தன் மற்றுமுள்ள முந்நூறு மன்னவர்களை நோக்கி மனமகிழ்ந்து முக மலர்ந்து புன் சிரிப்புடனே மதுரமான சொற்களாய் அருளிச்செய்யலாயினர். 'மகாராஜர்களே! உங்களுக்கு நம்மிடத்துள்ள பிரீதி அளவுகடந்தது; அஃது உங்கள் பராக்கிரமத்தினால் நன்கு பரிபாலிக்கப்படுகின்றது; உங்களது ஸத்தியமும் தருமமும் என்றும் ஒரு தன்மையானவை. உங்களது பிரபாவத்தினாலும், மஹாத்துமாக்களுடைய தபோபலத்தினாலும், துராத்துமாவும் துர்ப்புத்தியுடையவனுமான ராக்ஷஸாதமனாகிய இராவணன் வதையுண்டனன். அதற்குயான் நிமித்த மாத்திரமாக முன்னின்றவனே யொழியவேறல்லன்; உங்களது ஆற்றலினாலேயே அவன், புத்திரர் அமாத்தியர் பாந்தவர் முதலான கூட்டத்தாருடனே கொலையுண்டனன். தண்டகாவனத்தில் ஜாநகியை இராவணன் அபகரித்துக்கொண்டு சென்றது கேள்வியுற்று நீவிர் அனைவரும் அதற்குப் பரிஹாரம் தேடுமாறு பரதனிடம் ஒன்றுகூடி அவ்வரக்கன்மீது படையெடுக்க முயன்றீர்களன்றோ? நீங்கள் அங்ஙனம் படையெடுத்துவரு முன்னரே உங்களது பிரபாவத்தினால் அந்தப் பத்துத்தலைப்பாதகன் பிராணனை யிழந்தனன். இவ்வாறு என் விஷயத்தில் அதிகமான அபிமானமும் முயற்சியும் உடையவர்களான நீங்கள் அனைவரும் அவ்வவர்களது நகரங்களைவிட்டு வந்து வெகு நாளாயின வாதலின், அவரவரிடம் செல்லவேண்டுகிறேன்' என விடைகொடுத்தனர்.

ஸ்ரீரகுநந்தனன் இவ்வாறு வினயமாக விளம்பியதுகேட்டு அந்த ராஜாக்கள் அனைவரும் அதிகமான ஸந்தோஷமடைந்தவர்களாகி அவரைநோக்கி, 'ஹே ராம! தேவரீர் இவ்வண்ணம் வெற்றிபெற்றது எங்களுடைய பாக்கியமே; எங்களுடைய பாக்கிய விசேஷத்தினாலேயே இவ்வாறு பட்டாபிஷேகம் பெற்று விளங்குகின்றீர்; பிராட்டியைப் பகைவனிடத்தினின்று மீட்டுக் கொண்டுவந்ததும், பகைவனைப் பராஜயமடையச் செய்ததும் எங்களுடைய பாக்கியமே. (செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களும், அழகிய நாசியும், சிவந்த அதரமும், முத்துக்கோவையை நிகர்த்த வெண்மையான தந்தங்களும் அமைந்து சரத்கால சந்திரனெனச் சோதிபெற்று விளங்குகின்ற தேவரீரது திருமுகமண்டலத்தைத் தரிசித்து யாங்கள் தன்னியர்களாயினோம்.) தேவரீர்

* இவ்வாறு இங்கு அநுவாதஞ் செய்தமையின், இக்காசிவேந்தன் இராவணஸம்ஹாரத்திற்கு உதவிபுரியச் சென்றிருந்தனனென்பது விளங்கும்.

இவ்வண்ணம் வைரியை வதைத்து வெற்றி வீரராக விளங்குவதைக் கண்டு களிக்கவேண்டு மென்புதே எங்களுடைய மனோரதம்; அந்த மனோரதம் இப்பொழுது பரிபூர்ணமாகிப் பேரானந்தமடைந்தோம். எங்களை யிவ்வாறு பெருமைப்படுத்துதல் தேவரீருக்கே தகுந்ததாகும். எல்லாப்புகழுக்கும் பிறப்பிடமான பெரியோனே! இவ்வாறு போற்றிப் புகழவும் யாங்கள்அறிந்திலோம். நாங்கள் விடைபெற்றுப் போய் வருகின்றோம்; தேவரீர் எப்பொழுது மெங்கள் உள்ளத்திலேயே குடிகொண்டிருக்கின்றீர். ஹே மஹாப்ரஹோ! தேவரீரது வாத்ஸல்யத்தினாலேயே நாங்கள் இவ்வாறு வாழ்கின்றோம். மஹாராஜனே! தேவரீருடைய பிரீதி எங்களிடத்தில் என்றும் மாறாதிருத்தல் வேண்டும்' எனமொழிந்தனர்கள். ஸ்ரீராமனும் அங்ஙனமே யாகுகவென்று அருளிச்செய்ய, அம்மன்னவர்கள் அனைவரும் அவரால் பூஜிக்கப்பட்டவர்களாகி மிக்க மகிழ்ச்சியுடனே கைகூப்பிக்கொண்டு விடைபெற்றுத் தத்தம் தேசங்களுக்குச் செல்லலாயினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பத்தேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமன் அங்கதனையும் அனுமானையும் மிகக் கொண்டாடி
அவர்களுக்கு விசேஷமான பூஷணங்கள் அளித்து,
மற்றுமுள்ள வானரவீரர்களையும் அங்ஙனமே கொண்டாடிப் பரிசளித்து
அவர்களுடனே ஒருவருஷம் வாழ்ந்திருத்தல்.

நாநாதேசத்து அரசர்களும் ஸ்ரீராகவனுக்குத் துணைசெய்வதன் பொருட்டுப் பரதனுடைய கட்டளையினால் அநேகம் அக்ஷௌஹிணி சேனைகளைக் கூட்டிக்கொண்டு முன்னமே அயோத்தியாபுரிக்கு வந்திருந்தனர்; இப்பொழுது அவ்வேந்தர்கள் அனைவரும் ஸ்ரீராகவனிடம் விடைபெற்று அநேகமாயிரம் ரதங்களும் கஜங்களும் குதிரைகளுமடங்கிய சேனைகளுடனே மிகக் களிகூர்ந்தவராகிப் பூமியும் நடுங்குமாறு செல்லலாயினர். செல்லும் மார்க்கத்தில், அம்மன்னவர்கள் 'நாம் ராம ராவணர்கள் ரணகளத்தில் ஒருவரோடொருவர் எதிர்த்துப் போர்புரிவதைப் பார்த்து மகிழும் பாக்கியம் பெறாமற்போயினோமே; காரியம் முடிந்துபோயின பின்னர் பரதன் நம்மை வீணேவரவழைத்தனர். இம்மன்னவர்கள் யாவரும் கடலைக்கடந்து இலங்காபுரிபோய்ச் சேர்ந்திருப்பார்களாயின், இராமலக்ஷ்மணர்களுடைய பாகுபலத்தினால் பாதுகாக்கப்பட்டவர்களாகி அரக்கர்கள் எல்லோரையும் எளிதாகவே அதஞ்செய்திருப்பார்களென்பதற்கையமிலது' என இவ்வாறு பற்பல கதைகளைப் பேசிய வண்ணமே மிகக் களிப்புற்றவர்களாகித் தத்தம் இராச்சியம் போய்ச் சேர்ந்தனர்கள்.

எல்லாச் செல்வங்களும் நிறைந்து செழிப்புற்று விளங்குகின்ற தத்தம் நகரங்களுக்குச் சென்ற பின்னர் அந்தப்பார்த்திவர்கள் ஸ்ரீராமனுக்குப் பிரீதி செய்வதன் பொருட்டு நாநாவிதமான சிறந்த பரிகள், தேர்கள், கரிகள், உயர்ந்த சந்தனங்கள், திவ்வியமான ஆபரணங்கள், மணிகள், முத்துக்கள், பவழங்கள், அழகிகளான தாசிகள், தோலினுல் நிருமித்த உத்தமமான சயனங்கள் ஆகிய பலவும் தம்முடனே வந்த பரதன்முதலியோர்களிடம் உபஹாரமாகக் கொடுத்தனுப்பினுர்கள். பரதன், இலக்குமணன், சத்துருக்கினன் முதலியோர் அவைகளனைத்தையும் அன்புடனே பெற்றுத் தமது அயோத்தியா நகரத்திற்குத் திரும்பிவந்து அப்பொருள்கள் எல்லாவற்றையும் ஸ்ரீராமபிரான் ஸந்நிதியில் ஸமர்ப்பித்தார்கள். அயோத்திமன்னனும் அவற்றை அதிக ஆதரத்துடனே பெற்றுக்கொண்டு, தமக்குப் பேருதவிபுரிந்த மஹாராஜாவான சுக்கிரீவனுக்கும், விபீஷணுழ்வானுக்கும், தாம் வெற்றிபெறுதற்குத் துணைவராயிருந்த மற்றும் பல வாநரராக்ஷஸர்களுக்கும் பரிசாய் அளித்தனர். ரகுவீரர் அளித்த அணிகள் எல்லாவற்றையும் வாநரர்களும் இராக்கதர்களும் தங்கள் முடிகளிலும் தோள்களிலும் தரித்துக்கொண்டனர்கள். அதன்பின்னர் இக்ஷ்வாகுகுல நாதனுன ராமசந்திரன் மஹாபராக்கிரமசாலிகளான பவனதனயனையும் அங்கதனையும் அழைத்து மடிமீது உட்காரவைத்துக்கொண்டு சுக்கிரீவமகாராஜாவை நோக்கி, 'சுக்கிரீவ! இந்த அங்கதன் உனக்குநற்புதல்வனும், இவ்வனுமான் உனக்கு நல்லமைச்சனுமாக அமைந்தது உனது பாக்கியமே. இவர்கள் உனது நன்மையை எவ்வாறு கருதுகின்றனர்களோ, அவ்வாறே எனது நன்மையையும் அதிகமாகக் கோருகின்றனர்கள். ஆதலின், வாநரராஜனே! உன் பொருட்டாக இவர்களுக்கு எவ்வளவு உபசாரங்கள் செய்யினும் ஏற்கும்' என வுரைத்து, தாம் திருமேனியில் அணிந்துகொண்டிருந்த அநர்க்கமான திருவாபரணங்க ளெல்லாவற்றையும் கழற்றி அங்கதனுக்கும் அனுமானுக்கும் அணிந்து அழகுபார்த்தனர்.

அநந்தரம் அயோத்திமன்னன் நீலன், நளன், கேஸரி, குமுதன், கந்தமாதனன், சுஷேணன், பநஸன், மைந்தன், துவிதன், ஜாம்பவான், கவாக்ஷன், விநதன், தூமிரன், வலீமுகன், பிரஜங்கன், ஸன்னுதன், தரீமுகன், ததிமுகன், இந்திரஜானு என்னும் வானரசேனுவீரர்கள் அனைவரையும் அன்புடனே அருகில் அழைத்துக் கண்களால்குளிரக்கடாக்ஷித்து, 'நீவிர் அனைவரும் எனக்கு நண்பர்களும் சரீரமும் சோதரர்களுமாகின்றீர்கள். நீங்கள் வாநரர்களேயாயினும், என்னை மகத்தான விசனத்தினின்று கரையேற்றினீர்கள். உங்களைத் தோழர்களாகப் பெற்றுச் சுக்கிரீவ மாஹாராஜா மிகவும் மேன்மைபெற்றுவிளங்குகின்றனன்' என ஆதரத்துடனே அருளிச்செய்து அவரவருக்கு ஏற்றவாறு அற்புதமான ஆபரணங்களும் ஆடைகளும் அளித்து ஆலிங்கனமுஞ் செய்து கொண்டனர்.

அவ்வாநரர்கள் மிகவும் மதுரமான மது மாமிசங்களையும், நாநாவிதமான கிழங்குகளையும் காய்கனிகளையும், நல்லமணமுள்ள விசித்திரமான மலர்களையும் யதேஷ்டமாக அருந்தி அகமகிழ்ந்தவர்களாய் அயோத்தி நகரிலேயே

வஸித்துக் கொண்டிருந்தனர். இவ்வாறு விபவமாக வஸித்து வருகையில் ஒரு மாதத்திற்குமேலாகிவிட்டது. அவர்களுக்கிருந்த ராஜபக்தியினால் அந்த ஒருமாத காலமும் அவர்கட்கு ஒரு முகூர்த்தமாக விரைந்துசென்றது. மஹாபலிஷ்டர்களும் காமரூபிகளுமான வாநரர்களுடனும், அதிகமான ஆற்றலுடையவர்களான அரக்கர்களுடனுங்கூடி ஸ்ரீராமபிரானும் மனமகிழ்ந்திருந்தனர். இவ்விதமாக வாநரராக்ஷஸர்கள் அகமகிழ்ந்தவர்களாகி ஸ்ரீராமனுக்கு இதமியற்றிக்கொண்டு அயோத்தியாபுரியில் இனிது வஸித்துக்கொண்டிருக்கையில் ஓராண்டளவும் சென்று மறுபடி பங்குனி மாதம் வந்துவிட்டது.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் வாநரராக்ஷஸர்களுக்குத் தத்தமிருப்பிடம் போய்ச்சேரும்படி விடைகொடுத்தனுப்பியது.

---

இவ்வண்ணம் வாநரராக்ஷஸர்களுடனே இன்புற்று வாழ்ந்திருக்கையில், ஒரு நிமிஷமேனும் அயோத்தியரசன் அவர்களைவிட்டுப் பிரிய மனமின்றி எப்பொழுதும் அந்த நற்றோழர்களுடனேகூடிக் களிக்கலாயினர். இங்ஙனமிருக்கையில் ஒருநாள் ரகுவீரன் வாநரராஜனைநோக்கி, 'ஹே ஸௌம்ய, சுக்ரீவ! நீ உனது கிஷ்கிந்தாபுரியை விட்டுவந்து வெகுநாளாகின்றமையின் சீக்கிரமே அவ்விடம் சென்று, உனது அமைச்சர்களுடனே கூடி உனது இராஜ்ஜியத்தை உபாதிகளொன்றுமில்லாமல் இனிமையாக ஆட்சி செலுத்தி வரக்கடவை. ஹே மஹாபாஹோ! நீ அங்கதனை யொரு தனிக்கண்ணாகப் பார்த்து அதிகமான அன்புடனே ஆதரித்துவரக்கடவை. அங்ஙனமே மஹாபலிஷ்டர்களான அனுமான், நளன், உனது மாமனாரான சுஷேணன், தாரன், குமுதன், நீலன், சதவலி, மைந்தன், துவிதன், கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், ரிஷபன், மஹாபலபராக்கிரமசாலியான ஜாம்பவான் ஆகிய வாநர யூதபதிகளையும், இவர்களைப்போலவே என் விஷயத்தில் உயிரைத் திருணமாக மதித்து உதவி புரிந்த உத்தமர்களான மற்ற வாநரர்களையும் அதிகமான ஆதரத்துடனே போஷித்துவருக; இவர்கள் விஷயத்தில் நீ யொருபொழுதும் இதமல்லாத காரியம் செய்யாதொழிக' என இவ்வாறு இனிமையாகப் புகன்று அவனைப் பலதரம் மார்புறத்தழுவி, பின்னர் மற்றும் பல வாநரவீரர்களையும் தனித்தனியே ஆலிங்கனஞ் செய்துகொண்டு அகமகிழச் செய்தனர்.

அதன்பிறகு விபீஷணாழ்வானை நோக்கி, 'விபீஷண! நீ தருமங்களனைத்தையும் நன்குணர்ந்தவனென்பது எனதுதுணிபு. ஆதலின் நீ உனது பராக்கிரமத்தைக்கொண்டு அறநெறிதவறாது இலங்காபுரியைப் பரிபாலித்து வருக; உனது நகரத்திலுள்ளவர்க்கும், மற்றுமுள்ள ராக்ஷஸர்களுக்கும், உன் பிராதா

வான வைச்சிரவணனுக்கும் நீ உண்மையான விருப்பத்திற் கிடமானவ னன்றோ? ஆதலின் அவர்கள் திறத்தில் நீ விரோதமான செய்கையெதனையும் செய்யாதொழிக. எக்காலத்திலும் நீ அதருமமான காரியத்தில் புத்தியைச் செலுத்தாதிருத்தல் வேண்டும். புத்திசாலிகளான பார்த்திவர்களே பூமியை யென்றும் அழியாது அனுபவிக்கின்றனர். என்னையும் சுக்கிரீவனையும் நீ என்றைக்கும் மறவாது உள்ளத்தில் வைத்து அதிகமான அன்புபாராட்டி வரவேண்டும்; இனி நான் உனக்கு விடைகொடுக்கின்றேன்; நீ உடனே புறப் பட்டு இலங்காபுரம் செல்லுக' என மதுரமாக மொழிந்து அனுமதியளித்த னர்.

இவ்வாறு ரகுராமன் கூறியது கேட்டு, கரடிகள் வானரர்கள் ராக்ஷஸர்க ளாகிய யாவரும் நன்று நன்றெனக் கொண்டாடி 'ஹே மஹாபாஹோ! தேவரீ ருடைய பராக்கிரம மெங்ஙனமோ, அங்ஙனமே புத்தியும் மிக அற்புத மானது; சுயம்புவுக்குப்போலவே தேவரீருக்கும் வாக்கில் மாதுரியம் நித்திய மாகவே குடிகொண்டிருக்கிறது' என ஸ்ரீராமபிரானைப் பலவாறு புகழ்ந் தனர்கள்.

வானரர்களும் இராக்கதர்களும் இவ்வாறு மொழிந்து மகிழ்கையில், அனுமானெழுந்து ஸ்ரீராகவனை நோக்கி முடிதாழ்த்தி வணங்கி, 'ஹே ராஜன்! அடியேனுக்குத் தேவரீரிடம் என்றைக்கும் அழியாத * சினேஹமும் பக்தி யும் நிலைத்திருக்கவேண்டுகின்றேன்; அடியேனது மனம் தேவரீரை விட்டு மற் றெவ்விடத்திலும் என்றைக்கும் செல்லாதிருத்தல் வேண்டும். ஹே வீர! அடி யேன் சிரஞ்சீவிப் பட்டம் பெற்றிருப்பினும், இந்த ராமகதை இப்பூதலத்தில் எவ்வளவுகாலம் நிகழ்கின்றதோ, அவ்வளவு காலமே அடியேனது சரீரத்தில் இந்தப் பிராணன்கள் நிலைகொண்டிருக்கும், அதற்கையமிலது. ஹே ரகுநந் தன! தேவரீரது திவ்வியமான சரித்திரத்தையும் கதையையும் அடியேன் செவியுற்றுச் சந்தோஷிக்குமாறு அரம்பையர்கள் என்றும் என்முன் பாடிக் கொண்டிருக்கக் கடவர்கள்; ஹே தேவ! அடியேன் தேவரீரது சரிதமாகிய அவ்வமுதத்தைச் செவிகளால் பருகி அடியேனது ஆசையைத் தணித்துக் கொள்வேன்' எனவேண்டிப் பிரார்த்தித்தனர்.

ஆஞ்ஜநேயர் இவ்வாறியம்பியது கேட்டு அயோத்திமன்னன் திடீரென்று ஆஸநத்தினின்றுமெழுந்து அவரை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, அன் பின் மிகுதியால் ஒரு வார்த்தை யருளிச்செய்தனர். 'ஹே வானரவீர! நீ கோரியவண்ணமே யாவும் நிறைவேறும், சந்தேகமில்லை. இவ்வுலகத்தில் எனது சரித்திரம் எவ்வளவுகாலம் நிகழ்கின்றதோ, அவ்வளவுகாலம் உனது புகழும் நீடித்திருக்கக்கடவது; உனது சரீரத்தில் ஜீவனும் நிலைத்திருக்கும். இவ்வுலக மெவ்வளவு காலம் நீடித்திருக்குமோ, அவ்வளவுகாலம் எனது கதையும் இங்கழியாதிருக்கும். ஆஞ்சநேய! நீ செய்த ஒவ்வொரு உப காரத்திற்கும் கைம்மாறாக யான் என் உயிரை அளித்தாலும் போதுமோ?

* சமமானவரிடமுள்ள விசுவாஸம் சிநேகம்; மேலோரிடமுள்ள விசுவாஸம் பக்தி; தாழ்ந்தவரிடமுள்ள விசுவாஸம் கிருபை.

கைம்மாறு செய்வதற்கு ஆபத்காலமே ஏற்றதருணமாகும்' என அருளிச்செய்து, தாம் கழுத்திலணிந்துகொண்டிருந்த சீதகிரணனுக்குச் சமமான சோதிபெற்ற அற்புதமான ஹாரமொன்றைக் கழற்றி அனுமானது கழுத்தில் அணிந்தனர். வைடூரியத்தை நாயகமணியாகக்கொண்ட புதுமையான ஹாரத்தைக் கழுத்தில் அணியப்பெற்ற அனுமான், சிகரத்தின்கீழாகச் சந்திரனொளி வீசும் சுவர்ணசைலமென விளங்கினர்.

ஸ்ரீராமபிரான் இவ்வண்ணமருளிச் செய்ததுகேட்டு வானரர்கள் எல்லோருமெழுந்து சக்கரவர்த்தித் திருமகனை முடிதாழ்த்தி யடிபணிந்து விடைகொள்ளலாயினர். சுக்கிரீவமஹாராஜாவும் அம்மன்னவனை மார்புறத்தழுவி அவனைவிட்டுப் பிரியவேண்டுமென்ற துயரத்தினல் மெய்ம்மறந்தவராகிப் பிறகு ஸ்ரீராமனல் சமாதானஞ்செய்யப்பெற்று விடைகொண்டனர். ஸகலமான வானரர்களும் இராக்கதர்களும் உடலைவிட்டுச் செல்லும் உயிரென அடங்காத துக்கத்துடனே கண்ணீர் தாரை தாரையாப்பெருக, ஸ்ரீராமனை வணங்கி விடைபெற்றுத் தத்தமிருப்பிடம் போய்ச் சேரலாயினர். *

– உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பதாவது ஸர்க்கம்.

குபேரனிடஞ் சென்ற புஷ்பகவிமானம் அவனது கட்டளையினல்
ஸ்ரீராகவனுக்கே வாஹனமாகும்படி திரும்பிவந்து வேண்ட,
தாம் நினைக்கும்பொழுது தம்மிடத்திற்கு வருமாறு நியமித்து
ஸ்ரீராகவன் அதனைக் குபேரனிடமே செல்ல விடைகொடுத்தனுப்பியது.

---

இயற்கையிலேயேஅழியாத ஆனந்தம்பெற்றிருப்பவரான சக்கரவர்த்தித் திருமகன் இவ்வாறு வானரராக்ஷஸர்களுக்கு விடைகொடுத்தனுப்பியபின்னர், தம் பிராதாக்களுடனேகூடித் தம் அடியார்களுக்கு உண்டான இடுக்கண்களைக் களைந்ததனல் பின்னும் அதிகமான ஆநந்தம்பெற்றுக் களிப்புற்றிருந்தனர். ஒருநாள் பிற்பகலில் அவ்வண்ணம் தாசரதி தம்பிமார்களுடனே விநோதமாகப் பொழுது போக்கிக்கொண்டிருக்கையில், ஆகாயத்தில் அற்புதமான வாக்கு ஒன்று கேட்டது. அஃதென்னவெனில், 'ஹே ஸௌமிய, ஹே ராம! அடியேனைத் திருமுகமலர்ந்து கடாக்ஷித்தருள்க. ஹே பிரபோ! அடியேன் குபேரனது நகரத்தினின்று விடைகொண்டு வந்தவன்; புஷ்பகமெனப் பெயர்பெற்றவன்; முன்பு அடியேன் தேவரீரிடம் நியமனம் பெற்றுக் குபேரனுக்கு அடிமைசெய்தற்பொருட்டு அவரது மாளிகைக்குச் சென்றேன்; அக்காலையில் அடியேனை நோக்கி அவர் உரைத்ததாவது :—அயோத்திமன்னனை

---

* வானரராக்ஷஸர்களுக்கு ஸ்ரீராமசந்திரன் விடைகொடுத்தனுப்பியது இவ்விடத்திலேதான். முன்பு யுத்தகாண்டத்திறுதியில் விடைகொடுத் தனுப்பியதாகக் கூறியது காண்டத்தின் கதையைச் சுருக்கமாய் முடிப்பதற்காக வென்றறிக.

மஹாநுபாவனுகிய ஸ்ரீராமபிரானல் எவராலும் வெல்வதற்கரியனுயிருந்த அரக்கர்தலைவனுன இராவணனை வதைத்து அவனிடமிருந்து நீ பெற்றுக்கொள்ளப்பட்டவன்; துராத்துமாவான அவ்விராவணன் குடும்பத்துடனும் இனத்தாருடனும் கொலைசெய்யப்பட்டது எனக்கும் அதிக ஸந்தோஷமே, பரமாத்துமாவான ஸ்ரீராமபிரானே அவ்விராவணனை வென்று உன்னைச் சுவாதீனஞ்செய்துகொண்டனராதலின் நீ அவருடைய பொருளே யாகின்றனை; ஆகையால் நீ இனி அவருக்கே வாஹனமாகுக. நீ அந்த ரகுநந்தனனுக்கே வாஹனமா யிருத்தல்வேண்டுமென்பது எனது மநோரதம்; நீ சந்தோஷமாய் அவரிடமேசென்று அவ்வுத்தமருக்கு வேண்டியவிடஞ் செல்லச்சிறந்தஸாதனமாகுக' என்று நியமன மளித்தனர். மஹாநுபாவரான தனதிபதியினது சாஸனத்தைச் சிரமேற்கொண்டு இப்பொழுது அடியேன் தேவரீரிடம் விடைகொண்டனன். ஆக்ஷேபனையின்றி யடியேனை யங்கீகரித்தருள்க. தனதிபதியினது நியமனத்தினுலும் தேவரீரது பிரபாவத்தினுலும் தேவரீரது ஆஞ்ஞையைப் பரிபாலனஞ் செய்துகொண்டு ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் அடியேன் உலகமெங்கும் ஸஞ்சரிப்பேன்' என விளம்பி வேண்டிக்கொண்டது.

புஷ்பகவிமானதேவதை தம்மிடம் திரும்பிவந்து இவ்வாறு உரைத்தது கேட்டு ரகுவீரன் அத்தேவதையை நோக்கி, 'விமானங்களிற் சிறந்த புஷ்பக விமானமே! அங்ஙனமாயின் உனக்கு நலமுண்டாகுக' என்று அருளிச்செய்து, பொரிகளாலும் சுகந்தமான புஷ்பங்களாலும் தூபதீபங்களாலும் அதனை ஏற்றபடி பூஜித்து மறுபடியும் அதனை நோக்கி, 'அந்தத் தனேசன் நமக்கு நண்பனே யாதலின், நீ யாரிடத்தில் வஸித்திருப்பினும் வித்தியாஸமிலது. தற்காலம் நீ அவனிடமே போய்ச் சேருக; யான் உன்னை யெப்பொழுது உள்ளத்தில் நினைக்கின்றேனே அப்பொழுது என்னிடம் வந்து சேர்ந்து வேண்டிய விடங்களுக்கு ஆகாயமார்க்கமாய் என்னை வகித்துக்கொண்டு செல்லுக; நீ பத்துத்திசைகளிலும் உனக்கிஷ்டமானபடி செல்லலாம்; நீ செல்லுமளவில் உனக்கு எவ்விடத்தும் தடையுண்டாவதின்று' என்று அருளிச்செய்து அனுமதி யளித்தனர். அங்ஙனமே யாகுக வென்று விடைபெற்றுப் புஷ்பக விமானம் தனக்கு இஷ்டமான விடத்திற்குப் போய்விட்டது.

இவ்வாறு புண்ணியாத்துமாவான புஷ்பகவிமானமானது விடைபெற்று மறைந்துபோனபிறகு பரதாழ்வான் கைகூப்பிக்கொண்டு காகுத்தனைநோக்கி ஒரு விண்ணப்பம் செய்யலாயினர்: 'ஹே ரகுவீர! இப்பொழுது தேவரீர் இராஜ்யபரிபாலனஞ் செய்யத்தொடங்கி ஒரு மாதத்திற்குமேல் சிறிதளவே யாகின்றதாயினும், இதற்குள் அடிக்கடி புஷ்பகவிமானம் முதலான அமாநுஷமானபூதங்கள் தோன்றித் தேவரீரை மேலாகக் கொண்டாடுகின்றன; தேசமெங்கும் துன்பமின்றி யின்புற்று வாழ்வதாக விளங்குகின்றது; உடல் தளர்ச்சியடைந்த வளவினும் ஒரு பிராணிக்கும் மரணமென்பது ஸம்பவிப்பதில்லை. ஹே ராகவ! ஸ்திரீகளனைவரும் சுகமாகப் பிரஸவித்துப் பிள்ளைகளுடனே நோயற்று வாழ்கின்றனர்; புருஷர்களெல்லோரும் நன்கு வளர்ந்த சுந்தரமான சரீரமுடையவர்களாக விளங்குகின்றனர்; இந்நாட்டார் நகரத்தாரனைவ

ரும் ஆநந்த மதிக்ரித்து உல்லாஸமா யிருக்கின்றனர்; மேகங்கள் காலந்தவருது மாதம் மும்மாரிபொழிந்து அமுதத்திற் கொப்பாகிய இனிப்பான தண்ணீரைத் தருகின்றன; காற்றுக் குளிர்ந்து சுகமாக வீசுகின்றது; இத்தன்மையனுன நல்லரசனே நமக்கு என்றும் அழிவில்லாது அமைந்திருப்பானுக வென்று இவ்வண்ணமே ஸகலமான ஜனங்களும் எப்பொழுதும் ஒருவரோ டொரு வர் பேசிக்கொள்கின்றனர்' எனமொழிந்தனர். பரதாழ்வான் இவ்வாறு மொழிந்த மதுரமான வார்த்தைகளைக்கேட்டு ரகுநந்தனன் திருவுள்ளமுவந்து ஆமோதித்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தோராவது ஸர்க்கம்.

*ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியாருடன் சிங்காரவனத்திற்சென்று ஸந்தோஷமாயிருப்பதும், அக்காலத்தில் சீதை கர்ப்பம் தரிக்கலானதும், அப்பொழுது கங்காதீரத்திலுள்ள முனிவ ராச்சிரமங்களைக் கண்டு களிக்கப் பிராட்டி காதல் கொண்டதும்.*

---

அயோத்தியரசன் இவ்விதமாகப் புஷ்பகவிமானத்திற்கு விடைகொடுத் தனுப்பியபிறகு விநோதமாய் உலாவிப் பொழுது போக்குமாறு ஒரு நாள் தமது உத்தியான வனத்திற்குச் சென்றனர். அவ்வனத்திலே சந்தனக்காடு களும், அகருக்காடுகளும், மாந்தோப்புகளும், சுரபுன்னைக் காடுகளும், ரத்த சந்தன வனங்களும், தேவதாரு வனங்களும் நாற்புறமும் அமைந்து அற்புத மாக விளங்கின. அன்றியும் அவ்வுத்தியான வனத்தில் சண்பகம், அசோ கம், புன்னுகம், மதூகம், பனஸம், பாரிஜாதம், லோத்திரம், நீபம், அர்ச்சு னம், நாகம், ஸப்தபர்ணம், அதிமுத்தகம், மந்தாரம், கதளி, பிரியங்கு, கதம் பம், வகுளம், ஜம்பு, தாடிகம், கோவிதாரம் முதலான பற்பல விருக்ஷங் களும் செடிகளும் கொடிகளும் எங்கும் நிறைந்திருந்தன. விருக்ஷங்களை யேற்றபடி விளங்கச்செய்யவல்ல சிறந்த சிற்பியாகிய ருதுக்கள்பலவும் அமை ந்து அவ்வுத்தியானவனம் எப்பொழுதும் தளிர்களும் மலர்களும் அதிமதுர மான காய்கனிகளும் நிறைந்து, மதுவுண்டு மதித்தவண்டுகள் ரீங்காரஞ் செய்ய வும், குயில்களும் மற்றும் பற்பல வர்ணமான பறவைகளும் மதுரமாகக் கூவிக் களித்து விளையாடவும் வெகு விசித்திரமா யிருந்தது. அதில் அநேகம் விரு க்ஷங்கள் சுவர்ணமயமான சோதியையுடையனவாயும், சில அக்கினி சிகையை நிகர்த்த நிறமுள்ளனவாயும், சில மைபோன்ற மேனியுடையனவாயும் விளங் கின. மதுநிறைந்து மணம் வீசுகின்ற தாமரை நெய்தல் முதலான மலர்கள் மலர்ந்த நாநாவிதமான வாவிகள் தெளிந்தநீர் நிறையப்பெற்று அங்கங்கே அதிசயமாகத் தோற்றின. அவ்வாவிகளெங்கும் மாணிக்கக் கற்களால் படித்துறைகள் கட்டிப் படிகக்கற்களால் மறைசுவரெடுத்து நீராடுந்துறை கள் அமைத்து அழகு பெற்றிருந்தன. அவ்வாவிகளில் மலர்ந்த தாமரைக் காட்

டிலே சக்கரவாகம், பரதபக்ஷி, ஹம்ஸம், ஸாரஸம் முதலான பற்பல நீர்ப் பறவைகள் சிறகடித்துக் கூவிக்களித்துக் விளையாடிக் கொண்டிருந்தன; அவற்றின் கரையோரங்களில் விதம்விதமான பூஞ்செடிகள் அமைத்து அவற்றைச் சுற்றிலும் நாநாவிதமான மதில்களும் மேழே அதிரமணீயமான கல்தரைகளும் நிருமிக்கப் பட்டிருந்தன. அவ்வுத்தியான வனத்திலே சிலவிடங்களில் பச்சைக்கற்கள் அமைத்ததுபோலப் பசும்புற்கள் அழகாக வளர்ந்திருந்தன; சிலவிடங்களில் பெரிய விருக்ஷங்களினின்றும் அவற்றின்கீழ்ப் படுப்பதற்கு அமைத்த மழமழப்பான கற்றரைகளில் மலர்கள் நிறையவுதிர்ந்து நக்ஷத்திரங்கள் நிறைந்த ஆகாயமண்டல மெனவும் பூம்பள்ளியமைத்த பூமண்டல மெனவும் தோற்றின.

இவ்விதமான அழகுவாய்ந்த அங்கங்கே அநேகவிதமான ஆஸனங்களும் சிறுமாளிகைகளும் லதாகிருகங்களும் அமைந்து பிரம்மாவினுல் நிருமிக்கப்பட்ட தாகித் தேவேந்திரனது நந்தனவனமெனவும் குபேரனது சைத்திரரதமெனவும் விளங்கும் உத்தியானவனத்தினுட் புகுந்து ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியுடன் ஆங்கோரிடத்தில் தமக்கென நிருமித்திருந்த அழகான ஆஸனத்திலெழுந்தருளி யிருந்தனர். எழுந்தருளியபின்னர் காகுஸ்தன் தமது காதலியைக் கையிற்பிடித்துக்கொண்டு, இந்திராணிக்கு இந்திரன் அளிக்குமாறு மைரேயம் என்கிற மதுரமான ஒருவகை மத்தியத்தை அம்மைதிலிக்கு உண்பிக்கலாயினர். அப்பொழுது ஸ்ரீராகவனுக்கு அமுதுசெய்வதற்காகச் சிறந்த மாமிசத்தையும் நாநாவிதமானகனிகளையும் கிங்கரர்கள்கொண்டுவந்தளித்தனர். அத்தருணத்தில், ஆட்டம் பாட்டுக்களில் தேர்ச்சிபெற்றவர்களான அழகிய இளம்பெண்கள் மதுபானஞ்செய்து மதித்தவர்களாகி ஸ்ரீராகவனெதிரே வந்துதோன்றி யாடிப்பாடிப் புகழ்ந்தனர்கள். அகங்களிக்கச் செய்பவர்களான அவ்வழகிகளைக் கண்ணுற்றுக் காகுஸ்தன் தமது காதலியுடனே கூடியின்புற்று மகிழ்ந்தனர். இவ்வாறு சீதாபிராட்டியாருடனே ஸ்ரீராமபிரான் வீற்றிருந்தது, அருந்ததிதேவியுடனே வசிஷ்டமாமுனி வீற்றிருப்பதெனத் தோற்றியது. இவ்வண்ணமே வைதேஹியுடன்கூடி ரகுவீரன் ஒழிந்தவேளைகளில் உத்தியான வனத்திற்குச்சென்று நாடோறும் விநோதமாகப் பொழுதுபோக்கிவந்தனர். இங்ஙனம் விஹரித்து வருகையில் அவர்களுக்கு * மற்றொரு சிசிரருதுகழிந்து வஸந்தருது வரலாயிற்று.

ஸகலபோக பாக்கியங்களும்பெற்று வாழும் ஜாநகிரகுநாயகர்களுக்கு இவ்விதமாகவே பிறகு பதினயிரமாண்டுகள் பெருமையாகச்சென்றன. அக்காலத்தில் ஸ்ரீராமபிரான் பிரதிதினம் முற்பகலில் ராஜாங்க ஸம்பந்தமான ஸகல காரியங்களையும் நீதிமுறைதவறாது நிறைவேற்றி, அதன்பின்னர் அந்தப்புரஞ்சென்று பிராட்டியுடன் அகமகிழ்ந்திருப்பார். சீதாபிராட்டியும் ஒவ்வொரு நாளும் காலையில் தாம் செய்யத்தகுவனவாய தேவகாரியங்கள் அனைத்தையும்

* முன்பு வாநரர் முதலிய நண்பர்களுடனே பேசிப் பொழுதுபோக்கியது ஓராண்டளவு, இப்பொழுது இல்லாளுடன் அகமகிழ்ந்திருந்தது ஓராண்டளவு; ஆக அபிஷேகமானபின் இரண்டாண்டுகள் கழிந்தனவென்க.

இனிது செய்துமுடித்து மாமிமார்கள் எல்லோரையும் ஏற்றபடி பூஜித்துப் பிறகு விசித்திரமான வஸ்திரபூஷணங்கள் அணிந்து, தேவலோகத்தில் இந்திராணி தேவேந்திரனை யுபசரிக்குமாறு, தம் பிராணநாதனை ரகுநாதனை நண்ணுவாள்; விசித்திரமாகக் கோலஞ்செய்து கொண்டுவரும் காதலியைக் கண்ணுற்று ஸ்ரீராகவனும் நன்று நன்றெனக் கொண்டாடிக் களிகூருவார்.

இவ்வாறு நிகழ்ந்துவருகையில் சீதாபிராட்டி கர்ப்பம் தரிக்கலாயினள். அப்பொழுது ஒருநாள் ஸ்ரீராமபிரான் ஜாநகியைநோக்கி, 'ஹே வைதேகி! நீ வயிறுவாய்த்திருப்பது எனக்குச் சாலக்களிப்பைத் தருகின்றது; இப்பொழுது நீ யாதுவிரும்புகின்றனை? நீ யாதுவேண்டினும் அதனையான் நிறைவேற்றுவேன்' எனக் கூறினர். அதுகேட்டு ஜநகராஜன்மகள் சிறிதுபுன்னகைகொண்டு பர்த்தாவை நோக்கி, 'ஸ்வாமி! ஸகல சற்குணங்களும் வாய்ந்த இப்படிப்பட்ட மஹாபுருஷனை நாயகனாகப்பெற்ற அடியாளுக்கு வேறென்ன விருப்பமுளது; ஆயினும் தேவரீரே இங்ஙனம் வினவுகின்றமையின் ஒன்று வேண்டுகிறேன்; முன்போல இன்னும் ஒருதரம் கங்கைக்கரையிலுள்ள மிகப் பரிசுத்தமான தபோவனங்களிற்சென்று ஆங்கு கனிகிழங்குகளையே உணவாகக்கொண்டு விளங்கும் மகரிஷிகளுடைய பாதமூலத்திற் பணிவிடை செய்துகொண்டு அவ்விடத்தின் அழகை அநுபவிக்க வேண்டுமென்னுமாசையொன்றுஉளது. பலநாள் போயிருக்க இயலாதாயினும், ஒருநாளாயினும் அவ்விடம் போயிருந்து வரவேண்டுமெனக் கருதுகின்றேன்' என மொழிந்தனள். அதுகேட்டு அந்த ராஜசிகாமணி சீதாபிராட்டியை நோக்கி, 'ஹே ஜாநகி! அங்ஙனமே யாகுக, யான் சொல்லுவதை உறுதியாக நம்பியிரு; நாளைய தினமே அவ்விடம் போய்வரலாம், இதற்கையமின்று' என்று அருளிச்செய்து அகமகிழ்ந்திருந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்தோராவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்.

ஹாஸ்யக்காரர்கள் ராஜஸபைக்குவந்து பற்பலவிநோதங்கள் செய்து இறுதியில், இராவணனெடுத்துச் சென்ற சீதையை ஸ்ரீராமன் ஸந்தோஷமாய் அழைத்துவந்து வைத்திருக்கின்றனர் - என ஊரார் இகழ்ச்சியாகச் சொல்வதையெடுத்துரைத்ததும், அதுகேட்ட ஸ்ரீராமன் சோகமுற்றதும்.

---

இவ்வாறு விநோதமாயிருக்குமளவில் ஒரு நாள் தாசரதி மந்திரி முதலானோர் புடைசூழ ராஜஸ்பையில் வீற்றிருக்கையில் விஜயன், மதுதத்தன், காசியபன், பிங்களன், கடு, சுராஜன், காளியன், பத்திரன், தந்தவக்திரன், சுமாகதன் முதலான ஆசியக்காரர்கள் வந்து பலவிதமான பரிஹாஸக்கதைகள் பேசி அரசனுக்கு ஆநந்தம் விளைவித்து வந்தனர். அப்பொழுது ராமபத்திரன் அவர்களை நோக்கி, நல்லது, இதனை இவ்வளவோடு நிறுத்துக; ஹே பத்திர!

நகரத்திலாயினும் நாட்டிலாயினும் நகரத்தாரும் நாட்டாரும் நம்மைப்பற்றி என்னசொல்லுகின்றனர்கள்? சீதையைப்பற்றி யாது புகலுகின்றனர்? பரதன், லக்ஷ்மணன், சத்துருக்கினன், நம்தாயான கைகேயி இவர்களைப்பற்றி யென்ன பேசிக்கொள்ளுகின்றனர்கள்? நாட்டுக்குப் புதிதாக ராஜன் ஒருவன் ஏற்படுகையில் அவனைப்பற்றிப் பிரஜைகள் ஏதாவதொன்று சொல்லிக் கொள்வது உலகவழக்கமன்றோ?' என வினவினர்.

அதுகேட்டுப் பத்திரன் கைகூப்பிக்கொண்டு ஸ்வாமியை நோக்கி, 'ஹே ராஜன்! நகரவாஸிகள் அனைவரும் தேவரீரைப்பற்றி நல்லகதைகளையே பேசிக் கொள்ளுகின்றனர்கள். தேவரீர் தசக்கிரீவனை வதைத்து வெற்றி பெற்றுவந்ததை இந்நகரத்தாரனைவரும் மிகவும் ஏற்றமாகவே எடுத்து உரைக்கின்றனர்' என்றான். ஸ்ரீராமபிரான் அதனைச் செவியுற்று 'ஹேபத்திர! இது மாத்திரமோ, இன்னுமேதேனு முளதோ? நன்மையோ தீமையோ, நகரவாஸிகள் கூறு மெல்லாவற்றையும் ஒன்று கூடவிடாது யாவும் உண்மையாக நீ எடுத்து உரைத்தல்வேண்டும். நன்மையோ புன்மையோ, நமக்குத் தெரியுமாயின், தீமையைக் களைந்து நன்மையை நாம் நடத்தமுயலலாகுமன்றோ? ஆதலின், நீ நிர்ப்பயமாகத் தைரியத்துடனே நாட்டாரும் நகரத்தாரும் நம்மைப்பற்றி சொல்லிக் கொள்ளுகிற வார்த்தைகளை விளங்கக் கூறுவாய்' என நியமித்தருளினர்.

ஸ்ரீராமபத்திரன் இவ்விதமாக மதுரமாய் மொழிந்தது கேட்டுப் பத்திரன் அஞ்சலி ஹஸ்தனாய் அவரை நோக்கி மிகுந்த வணக்கத்துடனே விண்ணப்பஞ் செய்யலாயினன். 'ஹே மஹாப்பிரபோ! சொல்லுகின்றேன், திருச்செவிசார்த்தியருளுக. நற்சந்திகளிலும், கடைவீதிகளிலும், ராஜவீதிகளிலும், வனங்களிலும், உபவனங்களிலும் நகரத்துப் பிரஜைகள் பலரும்பேசிக்கொள்வது யாதெனில், ஸ்ரீராமபிரான் ஸமுத்திரமத்தியில் சேதுபந்தஞ்செய்தது எவரும் செயற்கரிய செய்கையேயாம்; கடலில் அணைகட்டுவதென்பதை முன்னோர்கள் காதினால் கேட்டுமறியார்; தேவதானவர்களும் இதுவரை யிதனைக் கேட்டவர்களல்லர். எவர்க்கும் அஸாத்தியனான இராவணனையும் எல்லாப் படைகளோடும் போரில் அவர் மடித்தனர்; குரங்குகளையும் கரடிகளையும் இராக்கதர்களையும் தமக்கு அடிமைகளாக்கிக்கொண்டனர்; இராவணனை வதைத்துத் தமது இல்லாளான சீதையையும் சிறைமீட்டுக் கொண்டு வந்தனர். இவையாவும் மிகப் பெருமையாகக் கொண்டாடத் தக்கவையே; ஆயினும், அவர்க்கு ரோஷமென்பது சிறிது மில்லாமற் போனதுமாத்திரமே ஒருபெருங்குறை. அந்தச் சீதையை அவர் மறுபடி தமது கிருகத்திற்கு அழைத்துக் கொண்டுவந்து சேர்ந்தனரே! அம்மனையாளிடத்து அவர்க்கு என்ன மோஹமோ! முன்னர் இராவணன் வலிய வெடுத்து மடிமீது வைத்துக்கொண்டு இலங்காபுரங்கொண்டு சேர்த்து அவளை அசோகவனத்தில் வெகுநாள் வைத்துக்கொண்டிருந்தனனே. இங்ஙனம் இராக்கதர் வசத்தில் வெகுநாள் இருந்த இல்லாளை இவ்விராமன் ஏன் வெறுக்காது வைத்துக் குலாவுகின்றனரோ, யாமறியோம். இதனை நோக்குகையில், நமது பெண்டிர்கள் இங்ஙனம் பிறர்

வீட்டிற்போயிருந்து வரினும், யாமும் அதனைப் பொறுக்க வேண்டிய தாகின்றதே! அரசன் செல்லுகிற வழியேயன்றோ குடிகளும் செல்லும் - என இவ்வாறு நாடுகளிலும் நகரங்களிலுமுள்ள ஜனங்கள் பலவாகப் பேசிக்கொள்ளு கின்றனர்கள்' என விண்ணப்பஞ் செய்தனன்.

பத்திரன் இவ்வண்ணம் புகன்றதுகேட்டு ஸ்ரீராகவன் கிஞ்சித்து விசன மடைந்தவர் போலாகிச் சபையிலுள்ள நண்பர்கள் எல்லோரையும் நோக்கி, 'இது விஷயத்தில் உங்களுடைய கருத்து யாது?' என வினவினர். அது கேட்டு அவர்கள் அவ்வேந்தனை முடிதாழ்த்தி வணங்கி, 'ஆம், ஸ்வாமி! அவர் கள் அங்ஙனம் சொல்லிக்கொள்வது உண்மையே; சாதாரண ஜனங்கள் உட் காரியமறியமாட்டார்களே' என மறுமொழி கூறினர். அதனைச் செவியுற் றவளவில் ஸ்ரீராமபிரான் சோகமடைந்தவராகி, அங்கிருந்த நண்பர்கள் அனைவருக்கும் விடைகொடுத்தனுப்பினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

தமக்கு நேர்ந்த லோகாபவாதத்தைப்பற்றி ஆலோசிக்கும் பொருட்டுத்
தம் பிராதாக்களைத் தாசரதி தம்மிடம் வரவழைத்தல்.

---

சிநேகிதர்க ளெல்லோரையும் செலவு கொடுத்தனுப்பிய பின்னர் ஸ்ரீராகவன் சற்றுத்தனியே ஆலோசனை செய்து ஸமீபத்திலிருந்த வாயி லோனையழைத்து, 'ஸேவகா! நீ உடனேசென்று லக்ஷ்மண சத்துருக்கினர்களை யும் பரதனையும் நம்மிடத்திற்கு அழைத்துவருக' என ஆஜ்ஞாபித்தனர். மன் னவனது கட்டளையை முடிமேற்கொண்டு அவ்வாயிலோன் அஞ்சலிஹஸ்தனாய் உடனே புறப்பட்டு இளையபெருமாளது திருமாளிகைக்கு விரைந்துசென்று, தடுப்பவரொருவருமின்றிச் சரேலென உட்புகுந்து ஆங்கு அவரைக்கண்டு கை கூப்பி வணங்கி வாழ்த்திய பின்னர் 'மஹாராஜா தங்களைக் காணவேண்டு மெனத் தங்கள் வரவை வழிபார்த்திருக்கின்றனர்; உடனே அவ்விடம் செல் லுக' என விண்ணப்பஞ் செய்தனன். சக்கரவர்த்தித் திருமகனாரது சாஸ னத்தைக்கேட்டவுடனே இளையபெருமாள் தக்ஷணமே யெழுந்து திருத்தே ரூர்ந்து தமையனாரது அரண்மனை போகப் புறப்பட்டனர். ஸௌமித்திரி சீக்கிரமே யெழுந்து சென்றதுகண்டு துவாரபாலகன் அவ்விடம் விட் டுப் பரதாழ்வானது பவனத்திற்குச் சென்று அவரைக்கண்டு கைகூப்பி வணங்கி வாழ்த்தி வெகு விநயத்துடனே, 'தாசரதி தங்களைக் காண வேண்டுமெனக் காதல் கொண்டிருக்கின்றனர்' என மொழிந்தனன். ஸ்ரீராம பிரானது சாஸநத்தைச் செவிக் கொண்டவளவிலே பரதாழ்வான் சரே லென்று ஆஸநத்தினின்று மெழுந்து கால் நடையாகவே காகுஸ்தன் ஸன் னிதிக்குச் செல்லலாயினர். இவ்வாறு பரதாழ்வான் எழுந்து சென்றது

கண்டு ஸேவகன் சத்துருக்கினனது ஸதனஞ் சென்று, அவரைக் கைகூப்பி வணங்கி, 'ஸ்வாமி! நம்மரசர் தேவரீரைக் காணவேண்டுமென வரவழைக்கின்றனர்; இளையபெருமாளும் பரதாழ்வானும் முன்னரே அவ்விடத்திற்கெழுந்து சென்றனர்கள்' என வுரைத்தனன். அதனைச் செவியுற்றவளவில் சத்துருக்கினனெழுந்து அவ்விடத்திலேயே ஸ்ரீராகவனைத் திக்குநோக்கி நமஸ்கரித்து, அவரதுமந்திரநோக்கிச் சென்றனர்.

இவர்கள் மூவரும் அதிசீக்கிரமே ஸ்ரீராமபிரானது அரண்மனை வாயிலிலே போய்ச்சேர, அங்கிருந்த துவாரபாலகன் இவர்களதுவரவை வேந்தனிடம் சென்று விண்ணப்பஞ் செய்தனன். தம்பிமார்கள் மூவரும் வந்திருப்பதுகேட்டுத் தாசரதி சற்றுச் சிந்தைகலங்கியவராகித் தலை குனிந்துகொண்டு அவனை நோக்கி, 'அவர்களை விரைவில் இவ்விடம் வரவிடுக; எனது ஜீவன் அவர்களிடமேயுள்ளது; அவர்களே எனக்கு அத்தியந்தம் பிரியமான பிராணனுருவர்' என நியமித்தருளினர். தமையனரது நியமனத்தைச் செவியுற்ற வளவில் தம்பிமார்கள் வணங்கிக் கைகூப்பிக்கொண்டு ஸ்ரீராமபிரானது ஸன்னிதானஞ் சென்றனர். சமீபத்திற்சென்று அவரது திருமுகமண்டலம் ராகுவினல் பிடிக்கப்பட்ட சந்திரனெனவும், ஸந்தியாகாலத்துச் சூரியனெனவும் ஒளியிழந்திருக்கவும், அவரது திருக்கண்கள் கண்ணீர் நிறைந்து கலக்கமுற்றிருக்கவும் கண்டு, அவரது திருமுகம் சோதியிழந்த தாமரை மலரென வாட்டமுற்றிருப்பதையும் கண்ணுற்றுக் கலங்கினவர்களாகி விரைந்து அருகிற்சென்று தமையனரது திருவடிகளில் ஸாஷ்டாங்கமாகநமஸ்கரித்து அபிவாதனஞ்செய்து நின்றனர்கள். ஸ்ரீராமபிரான் அநுஜர்களைக்கண்டு கண்ணீர் பெருக்கி அவர்களையணைத்து ஆலிங்கனஞ்செய்துகொண்டு அருகிலுள்ள ஆஸநங்களில் உட்காரும்படி யனுமதியளித்தனர். அனைவரும் உட்கார்ந்த பின்னர் அவர்களைநோக்கி, 'எனது செல்வச் சகோதரர்களே! எனக்கு எல்லாப் பொருளும் நீங்களே; எனக்குப்பிராணனும் நீங்களே; உங்களுக்காகவே நீங்கள் கொடுத்த இவ்விராச்சியத்தை யான் பரிபாலிக்கின்றேன்; நீவிர் எல்லா நூல்களும் கற்றுத்தேர்ந்தவர்கள்; புத்தியிலு மிணையில்லாதவர்கள். ஆதலின், நீங்கள் அனைவரும் ஒன்றுகூடி யான்கருதிய காரியத்தை நன்கு ஆராய்ந்து உரைக்கக்கடவீர்' என மொழிந்தனர். காகுஸ்தன் இவ்வாறு கூறியதுகேட்டுத் தம்பிமார்கள் மூவரும் மனங்கலங்கியவர்களாகி, இம்மன்னவர் யாது உரைக்கக் கருதியிருக்கின்றனரோ வென அதிகமான அவதானத்துடனே யெதிர் பார்த்திருந்தனர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்துமூன்றுவது ஸர்க்கம்

முற்றிற்று.

## ஐம்பத்து நான்காவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் தமது கருத்தைத் தம்பிமார்களுக்குத் தெரிவித்து, முன்பு மைதிலி கருதியிருந்த காரணத்தையே வியாஜமாகக்கொண்டு மறுநாள் உதயகாலத்தில் அவளை யழைத்துக்கொண்டுபோய்க் கங்காநதிதீரத்தில் வால்மீகிமுனிவ ராச்சிரமத்தருகே விட்டுவிடுமாறு இளையபெருமாளுக்கு நியமித்தருளியது.

---

ரகுவீரரது திருவாக்கில் என்ன வார்த்தை வரப்பெறுமோ வென்று எதிர்பார்த்து மிகுந்த விசாரத்துடன் உட்கார்ந்திருந்த தம்பிமார்களை நோக்கித் தாசரதி வாடிய முகத்துடனே விசனமுற்றுக் கூறுகின்றனர். 'ஸகோதரர்காள்! யான் சொல்வதைச் சற்று ஸாவதானமாகச் செவிகொடுத்துக் கேளுங்கள், மனத்தை மற்றெங்கும் செலுத்தாது கவனித்துக் கேளுங்கள்: சீதையைப்பற்றிப் பட்டணத்தார் பேசிக்கொள்வதை நீங்கள் அறிவீர்களோ? நமக்கு நாடுநகரமெங்கும் லோகாபவாதம் மிகப் பிரபலமாக ஸம்பவித்திருக்கின்றது. மந்தபுத்திகளான மானிடர்கள் சீதையினது சீலத்தையுணராதவர்களாகி, நாம் நீதிதவறி நடப்பதாகக் கூச்சலிடுகின்றனர். ஊரார் என்னையிங்ஙனமிகழ்ந்து ஏளனமாகப் பேசுவது எனது உள்ளத்தை யறுக்கின்றது. யான் மஹாநுபாவர்களான இக்ஷ்வாகுராஜாக்களின் மரபிற் பிறந்தவன்; ஸீதா தேவியும் ஜநகமஹாராஜாவினது நற்குலத்தில் உதித்தவள். அந்தச் சீதையை இராவணன் வலியக்கைக்கொண்டு போயினன்; யான் அவனை வதைத்தனன். வதைத்தபின்னர், இத்தனைகாலம் அயலான் அகத்திலிருந்த இல்லாளை நாமெங்ஙனம் நமது நகரத்திற்குக் கொண்டுசெல்வதென்று எனக்கே இவள் விஷயத்தில் கவலையுண்டாகியது. அக்காலையில், தான் குற்றமற்றகுணவதியென யாவருக்கும் மெய்ப்படுமாறு மைதிலி அக்கினிப்பிரவேசஞ்செய்தனள். ஹேஸௌமித்ரே! அப்பொழுது உன்னெதிரிலேதானே, தேவர்கள் அனைவரும் ஆகாயத்தில் வந்து கூடியிருக்க, அக்கினிதேவன் இத்தேவியைக் களங்கமில்லாத கற்புடையாளெனக் கூறி எடுத்துவந்து தந்தனன்; வாயுதேவனும் ஆகாயத்தினின்று அங்ஙனமே யியம்பினுன்; தேவர்கள் முன்னிலையிலும் மகரிஷிகளுடைய முன்னிலையிலும், சந்திரசூரியர்கள் இவள் பரிசுத்தமானவளேயெனச் சாக்ஷி பகர்ந்தனர்கள். இவ்வாறு மிகத்தூய்மையுடையவளென யாவரும் துதிக்க, தேவகந்தருவர்களுடைய ஸன்னிதானத்திலே தேவேந்திரன் இலங்கைத்தீவில் இவளைக் கைக்கொள்ளுமாறு என்னிடமளித்தனன். ஸீதை மிகப் பரிசுத்தையானவளென என் மனத்திற்கே நன்ருகத்தெரியும். ஆனதுபற்றியே யான் இவளை யங்கிருந்து இவ்வயோத்தியாபுரிக்கு அழைத்துவந்தனன்.

இப்பொழுது இவ்வூராரது பேச்சைக் கேட்கையில் எனக்கு மனம் மறுகுகின்றது; லோகாபவாதம் மிகப் பெரியதாகிவிட்டதே!

No. 17. சீதையைவால்மீகிமுனிவர் ஆச்சிரமத்திற்கு, அழைத்தேகியது.



సీతనువాల్మీకిముని ఆశ్రమునకు పిలుచుకపోవుట.

అకీర్తిర్యస్యగీయేత లోకేభూతస్యకస్యచిత్।
పతత్యేవాధమాన్లోకాన్ యావచ్ఛబ్దఃప్రకీర్త్యతే॥
అకీర్తిర్నిన్ద్యతేదేవైః కీర్తిర్లోకేషుపూజ్యతే।
కీర్త్యర్థన్తుసమారంభ స్సర్వేషాంసుమహాత్మనాం॥
అప్యహంజీవితంజహ్యాం యుష్మాన్వాపురుషర్షభాః।
అపవాదభయాద్భీతః కింపునర్జనకాత్మజాం॥

அகீர்த்திர்யஸ்யகீயேத லோகேபூதஸ்யகஸ்யசித் ।
பதத்யேவாதமாங்லோகாங் யாவச்சப்தஃப்ரகீர்த்யதே ॥
அகீர்த்திர்நிந்த்யதேதேவைஃ கீர்த்திர்லோகேஷுபூஜ்யதே ।
கீர்த்யர்த்தந்துஸமாரம்பஸ் ஸர்வேஷாம்ஸுமஹாத்மநாம் ॥
அப்யஹம்ஜீவிதம்ஜஹ்யாம் யுஷ்மாங்வாபுருஷர்ஷபாஃ ।
அபவாதபயாத்பீதஃ கிம்புநர்ஜநகாத்மஜாம் ॥

வசைச்சொல் ஒருவற்கு உலகில் வழங்கத்தலைப்படுமாயின், அச்சொல் உலகில் வழங்குமளவும் அவன் இழிவான உலகங்களையடைந்து அல்லலுறுவான். அபகீர்த்தியை அமரர்களும் இகழ்கின்றனர்: கீர்த்தியை எல்லாவுலகத்தவரும் ஏற்றமாகக்கொண்டாடுகின்றனர். இவ்வுலகினில் மேலோர்களான பலரும் பாடுபடுவதெல்லாம் புகழ்பெறுவதற்கேயாம். யான் லோகாபவாதத்திற்கு மிகவும் பயந்தவன்; அதனை விலக்கிக்கொள்ளுமாறு யான் என் உயிரையுமொழித்து விடுவேன்; புருஷசிங்கங்களான உங்களையும் கைவிடுவேன்; அங்ஙனமாக, இந்த ஜநகராஜன்புதல்வியைப் பரித்தியாகஞ் செய்யக் கேட்கவேண்டுமோ? இந்த லோகாபவாதமென்காதிற்பட்டது முதல் யான் சோகஸாகரத்தில் மூழ்கியிருக்கின்றேன்; இதனிலும் கொடியதான விசனம் ஒருகாலுமுண்டாவதின்று. ஆதலின், நீங்கள் யான் கூறுவதற்கு உடன்படுக' எனவுரைத்து, இளையபெருமாளை நோக்கி, 'ஹேஸௌமித்ரே! நீ நாளையுதயகாலத்தில் சுமந்திரரை ரதம்சித்தம்செய்யுமாறு கட்டளையிட்டு அதன்மீது சீதையை யேற்றிக்கொண்டுசென்று நமது நாட்டுக்கு அப்பால் சேர்த்துவிடுக. கங்காநதிக்கு அப்பால் தமஸாநதிதீரத்திலே வால்மீகிமஹாமுனிவரது அழகான ஆச்சிரமமிருக்கின்றது. அஃது ஜனஸஞ்சாரமில்லாத ஏகாந்தமான வனம். அவ்விடத்தில் இவளைக்கொண்டுபோய் விடுத்து விரைந்து திரும்பி வருக. யான் சொல்லுகிறபடியே செய்தல்வேண்டும். இது விஷயத்தில் ஒருவரும் எதிர்மொழிபேசலாகாது. ஹேஸௌமித்ரே! நீ இதனைப்பற்றியொன்றும் விசாரணைசெய்யாமலே உடன்பட்டுச்செல்லுக; இதற்கு நீ யெதிர்மொழிபேசுவையாயின் எனக்குக் கோபமுண்டாகும்; என் புஜங்களாணை, என் உயிராணை; யான் சொல்வதைத் தடுத்து நல்வார்த்தை சொல்லி என்னை வேண்டமுயல்கின்றவர், என் இஷ்டத்திற்கு விரோதஞ்செய்கின்ற பகைவர்களே யாவர். நீங்கள் என் சொற்படிக் கேட்டு நடப்பவர்களாயின், என்னைப் பெருமைப்படுத்துங்கள்; ஸீதையை இப்பொழுதே இந்நகரத்தைவிட்டு வெளி

யே அழைத்துக்கொண்டுபோய் விடுங்கள்; என் சொல்லை யேற்றுக்கொள்ளுங்கள். இந்தச்சீதை தான் கங்காதீரத்திலுள்ள முனிவராச்சிரமங்களைப் போய்ப்பார்க்கவேண்டுமென முன் ஒருநாள் என்னுடன் உரைத்தனள். அந்த மனோரதத்தை யிப்பொழுது பூர்த்திசெய்க' எனப்புகன்றனர். மஹாதருமாத்மாவான காகுஸ்தன் இவ்வாறு அருளிச்செய்து, கண்களில் நீர்ததும்ப விசனத்தினால் வருந்தியமனமுடையராகி, மதயானையெனப்பெருமூச்செறிந்து கொண்டு, பிராதாக்களுடனே யெழுந்து சென்றனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்துநான்காவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்.

இளையபெருமாள் பிராட்டியைத் திருத்தேரிலேற்றிக்கொண்டு
அரணியத்திற்குப் புறப்பட்டதும்,
வழியில் அநேகம் அபசகுனங்களைக்கண்டு சீதை சிந்தைகலங்க,
இலக்குமணர் அவரைத்தேற்றி அன்றிராத்திரி கோமதி நதியினருகே நின்று,
மறுநாள் கங்கைக்கரைபோய்ச் சேர்ந்ததும்.

---

அன்று இரவுகழிந்து மறுநாள் உதயகாலமாயிற்று. அப்பொழுது இளையபெருமாள் மிகுந்த விசனமடைந்தவராகி வாடியமுகத்துடனே சுமந்திரனை வரவழைத்து, 'ஹே ஸாரதே! சீக்கிரமே குதிரைகள்கட்டித் தேரை யிவ்விடத்திற் கோட்டிக்கொண்டு வருக; அத்தேரில் ஸீதாதேவி யெழுந்தருளி யிருப்பதற்குச் சிறந்த ஆஸநம் அமைத்து அலங்காரஞ் செய்க. புண்ணியாத்துமாக்களான மகரிஷிகளுடைய ஆச்சிரமங்களுக்குப் பிராட்டியை யழைத்துக்கொண்டு செல்லுமாறு அரண்மனையில் உத்தரவாயிருக்கின்றது; ஆதலின் அதி சீக்கிரமாக ரதத்தை யோட்டிக்கொண்டு வருக' என உத்தரவு அளித்தனர்.

சுமந்திரர் 'அங்ஙனமே யாகுக' என்று உடன்பட்டுச் சென்று அற்புதமான ராஜ ரதத்தில் சீதாபிராட்டி சுகமாக வீற்றிருப்பதற்குச் சிறந்த ஆஸநம் போட்டுச் சீக்கிரமே தேரை யோட்டிக்கொண்டு வந்து நிறுத்தி, இதோ ரதம் சித்தமாக வந்துவிட்டதென இளையபெருமாளுக்கு அறிவித்தனர். சுமந்திரரது சொல்லைச் செவியுற்றவளவிலே ஸௌமித்திரி ராஜமாளிகையிற் புகுந்து பிராட்டியை நோக்கி, 'ஹே தேவி! முனிவர் ஆச்சிரமங்களைத் தரிசித்துவர வேண்டுமெனத் தேவரீர் மன்னவனை வேண்டினீர்களாம்; மஹாராஜாவும் அங்ஙனமே செய்வதாகச் சம்மதித்தாரன்றோ? அவ்வாறே செய்விக்க இன்று அடியேனுக்கு நியமனமாயிருக்கிறது. இப்பொழுது தேவரீர் எழுந்தருளினால் கங்காதீரத்தில் முனிவர்கள் ஆச்சிரமம் நிறைந்த அரணியத்திற்கு அழைத்துக்கொண்டுபோகின்றேன்' என விண்ணப்பம் செய்தனர்.

இளையபெருமாள் இவ்வாறு மொழிந்தது கேட்டு மைதிலி மிகுந்த மன மகிழ்ச்சி கொண்டவராகி, அங்ஙனமே செல்லச் சித்தமாயினர். உடனே பிராட்டி சிறந்த ஆடையாபரணங்களை யெடுத்துக்கொண்டு, 'இவ்வாபரணங்களையும் மற்றும் விசேஷமான பொருள்களையும் யான் அவ்வனத்திலுள்ள முனி பத்தினிகளுக்கு அளிப்பேன்' என அருளிச்செய்து பிரயாணமாயினர். 'திருவுள்ளப்படி செய்க' வென்று விண்ணப்பஞ்செய்து இலக்குமணன் பிராட்டியைத் திருத்தேர்மீதேற்றிக்கொண்டு, ஸ்ரீராமபிரானது நியமனத்தை மனத்திற்கொண்டு துரகங்களைத் தீவிரமாகச் செலுத்தி விரைவாகச் செல்லலாயினர்.

அவ்வாறு செல்லுகையில் பிராட்டி நடுவழியே இளையபெருமாளை நோக்கி, 'ஹே ரகுநந்தன! இப்பொழுது அசுபங்கள் அநேகம் காணப்படுகின்றன: எனது கண் துடிக்கின்றது; உடல் நடுங்குகின்றது; உள்ளமும் நிலைகொள்ளாமல் கலக்கமுறுகின்றது; முனிவர்கள் ஆச்சிரமத்தைக் காண வேண்டுமென்னும் ஆவலும் அதிகரிக்கின்றது; அதனுடன் அதைரியமும் அதிகமா யுண்டாகின்றது; இப்பூமிமுழுமையும் எனக்குச் சூனியமாகவே காணப்படுகின்றது. (பிராதாவினிடத்தில் அன்புமாறாத உத்தமரே! உமது தமையனுருடைய திருமேனியையே யான் எப்பொழுதும் நினைக்கிறேன்; அவர் எனது உள்ளத்தினின்றும் ஒரு நிமிஷமேனும் அப்புறம் விலகுவதில்லை.) உமது தமையனுர்க்கு ஒரு குறையு மில்லாதிருக்குமா? மாமிமார்களுக்கும், மற்றும் நாடுநகரங்களிலுள்ள ஸகலமான பிரஜைகளுக்கும் துன்பமொன்று மில்லாதிருக்கவேண்டும்' என்று இவ்விதமாக உரைத்துக் கைகூப்பிக்கொண்டு தம்மிஷ்டதேவதைகளை வேண்டிக்கொண்டனர்.

பிராட்டி இவ்வாறு புகன்றதுகேட்டு இளையபெருமாள் அவரை அடிபணிந்து, உள்ளத்தில் அடங்காத்துயரங் கொண்டிருந்தனராயினும் அதனை வெளிவிடாது சந்தோஷமாகவே, 'அனைவர்க்கும் மங்களமுண்டாகுக' என மொழிந்தனர். பிறகு அவர்கள் அன்றிராத்திரி கோமதி நதிக்கரையில் ஓராச்சிரமத்திலே வஸித்திருந்தனர். மறுநாள் உதயத்தில் ஸௌமித்ரி யெழுந்து சூதரை யழைத்து, சுமந்திரரே! சீக்கிரம் தேரில் துரகங்களைப் பூட்டுக; நான் உடனே புறப்பட்டுக் கங்காநதிபோய்ச் சேர்ந்து, முன்பு இமயமலைமீது சிவபிரான் தம்முடியில் தரித்தவாறு யானும் இன்று கங்காதீர்த்தத்தைச் சிரசில் தரிப்பேன்' என ஆஞ்ஞாபித்தனர். சுமந்திரர் மனோவேகமாகச் செல்லவல்ல நான்கு வாஜிகளையும் விரைவாகத் தேரில் கட்டிக் கைகூப்பிக்கொண்டு பிராட்டியினிடஞ் சென்று 'ரதத்தின்மீது எழுந்தருளலாம்' என அறிவித்தனர். அதைக் கேட்டவுடனே பிராட்டி திருத்தேர்மீதேறி யருள, பிறகு இளையபெருமாளும் ஏறிக்கொண்டனர். சீக்கிரமே சீதை ஸௌமித்ரி சுமந்திரர் ஆகிய மூவரும் கங்காநதிபோய்ச் சேர்ந்தனர்கள். அங்கு அவர்கள் போய்ச் சேருமளவில் நடுப்பகலாகியது. அப்பொழுது இளையபெருமாள் கங்காநதியைக் கண்ணுற்றவளவிலே விசன முள்ளடங்காமல் உரத்துக் குரல் பாய்ச்சிக் கதறலாயினர்.

இலக்குமணர் இவ்வாறு அழுது புலம்புவதுகண்டு பிராட்டி அவரை நோக்கி, 'ஹே ராகவ! யான் வந்து பார்க்கவேண்டுமென வெகுநாளாக விருப் புற்றிருந்த இந்தக் கங்கைக்கரைக்கு இப்பொழுதுதான் வந்துசேர்ந்தோமே, இச்சமயத்தில் நீர் இவ்வாறு விசனப்படுவது யாதுகாரணம்? அகங்களித்தற் கேற்ற காலமான இத்தருணத்தில் எனக்கு நீர் இவ்விதமாக விசனத்தை விளைக்கலாகுமோ? நீர் எப்பொழுதும் இராமனைவிட்டு இணைபிரியா திருந்தவ ராதலின், இன்றிரண்டு நாள் அவரைவிட்டுவந்த வியோகத்தைப் பொறுக்க முடியாது புலம்புகின்றீரோ? பெருமாள் எனக்கும் பிராணனிலும் பிரிய மானவரன்றோ? யான் உம்மைப்போல இவ்விதமாக விசனமுறுகின்றே னில்லையே! நீர் இப்படி யறியாதவர்போல ஆயாஸமுறுவது தகுதியன்று. சீக்கிரமே யென்னை இக்கங்காநதியின் அக்கரைசேர்ப்பித்து அங்குள்ள முனி வர்களை யெனக்குக் காட்டுக. யான் அம்முனிவர்களுக்கு வஸ்திர பூஷணாதி களை யளித்து, விதிமுறைப்படி அவர்களுக்கு அபிவாதனமும் செய்கின்றேன். அவ்விடத்தில் ஒரு இராத்திரி வஸித்திருந்து பிறகு பட்டணத்திற்குத் திரும்பு வோம். செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களும், சிங்கத்தினது மார்பை நிகர்த்தமார்பும், கிருசமான உதரமு முடையராய்க் காண்போர் கண்களைக் கவர்கின்றவரான ரகுராமனைக்காண எனது மனமும் துரிதப்படுகின்றது' என அருளிச்செய்தனர்.

பிராட்டி இவ்வண்ணம் புகன்றதுகேட்டு இளையபெருமாள் திருக்கண் களைத் துடைத்துக்கொண்டு ஓடக்காரர்களை யழைத்து ஓடம்கொண்டு வரு மாறு கட்டளையிட, அங்ஙனமே அவர்கள் சிறந்த ஓடமொன்று அருகே கொண்டுவந்து நிறுத்தினர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்தாருவது ஸர்க்கம்.

கங்காநதியின் அக்கரைசேர்ந்ததும்
இளையபெருமாள் மிகுந்தவிசனத்துடனே ராஜசாஸனத்தைச்
சீதாதேவியினிடம் விண்ணப்பஞ்செய்தது.

---

அநந்தரம் இளையபெருமாள் குஹப்பெருமா ளனுப்பிய மிக விசால மாகிய அழகானஓடத்தில் முதலிலே பிராட்டியை யேற்றுவித்துப் பிறகுதாமும் ஏறிக்கொண்டு, திருத்தேரை அவ்விடத்திலேயே வைத்திருக்குமாறு சுமந்திர ருக்குக் கட்டளையிட்டு, துயரத்தினல் தவிப்புண்டவராகி யோடத்தை யோட் டும்படி படகோட்டிகளுக்கு அனுமதி யளித்தனர். அங்ஙனமே அவர்கள் அதிசீக்கிரத்தில் அக்கரைகொண்டு சேர்த்தனர்கள். கங்காநதியின் தென் கரை சேர்ந்த பின்னர் இளையபெருமாள் பிராட்டியை நோக்கிக் கண்களில்

நீர்ததும்பக் கைகூப்பிக்கொண்டு, 'ஹே வைதேஹி! அடியேன் உள்ளத்தில் ஒளித்துவைத்திருக்கின்ற மிகவும் குரூரமான ஒருசெய்தியை இப்பொழுது தேவரீரிடம் விண்ணப்பம் செய்ய நேரிட்டிருக்கின்றது. இஃது நம் மையரது கட்டளை. இத்தன்மையதான கொடியகாரியஞ்செய்வதற்கு உடன்பட்டு அடியேன் உலகத்தார் பழித்தற் காளாயினேன்; இஃது என்மனத்தில் ஆணிபோலத்தைக்கின்றது. உலகநிந்தனைக் கிடமானஇக்கொடிய செய்கை செய்யப்புகுந்த அடியேனுக்கு இத்தருணத்தில் மரணமேனும் மிருத்தியுவாயினும் ஸம்பவிக்குமாகில், அதுவே மிகச்சிறப்புடைய தாகும். தேவரீர் அடியேன்மீது அருள்புரிக; அருந்ததியு மொப்பாகாதவுத்தமி! அடியேன் விஷயத்தில் திருவுள்ளங்கலங்கலாகாது' என இவ்வாறு விண்ணப்பஞ் செய்த வண்ணமே கைகூப்பியவாறே கீழேவீழ்ந்தனர். தமக்கு மரணமே மேலானதென்று மொழிந்து அஞ்சலிஹஸ்தராய் அழுது புலம்புகின்ற மைத்துனரை நோக்கி மைதிலி மிகவும் மனங்கலங்கியவராகி, 'லக்ஷ்மணா! இஃது என்னபுதுமை! எனக்கொன்றும் விளங்கவில்லையே! நடந்தவிருத்தாந்த மென்ன? நீர் இவ்வாறு வருந்தவேண்டுவ தென்னை? மஹாராஜாவுக்கு ஏதேனும் பொல்லாங்கு நேர்ந்ததோ? பெருமாள் உம்மிடத்தி லேதேனும் சீற்றங்கொண்டனரோ? நீர் ஏன் இங்ஙனம் ஆயாஸமுறல்வேண்டும்? உண்மையை யென்னிட மியம்புக' எனவேண்டினர்.

வைதேஹி இவ்வண்ணம் வினவியதுகண்டு சுமித்திராநந்தனன் சிந்தை கலங்கியவராகவே கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகத் தலைகுனிந்துகொண்டு விண்ணப்பஞ்செய்யலாயினர். 'ஜநகமஹாராஜன் பெற்றபாக்கியமே! தேவரீர் விஷயத்தில் நாட்டாரும் நகரத்தாரும் சொல்லிக்கொள்ளுகின்ற மிகக்கொடியதான அபவாதத்தை இராஜஸபையில் சிலர் சொல்லத்திருச்செவிசார்த்திய சக்கரவர்த்தித்திருமகனர் மனந்துடித்து அடியேனிடம் சில வார்த்தைகள்மொழிந்து திருமாளிகைக் கெழுந்தருளினர். ஹே தேவி! அப்பொழுது அவர் சொன்னவார்த்தைகள் தேவரீர் ஸன்னிதியில் அடியேன் விண்ணப்பஞ்செய்வதற்குரியனவல்ல; அந்த லோகநாதன் லோகாபவாதத்திற் கஞ்சியே மாசற்றமகிஷியான தேவரீரைத்துறக்குமாறு அடியேனுக்கு இக்கொடிய காரியத்தை நியமித்தனர்; தேவரீர் திருவுள்ளத்தில் வேறுவிதமாக நினைக்கலாகாது. இப்பொழுது அடியேன் இராஜசாஸநத்தை மறுக்கமுடியாமல் தேவரீரை இவ்வாச்சிரமங்களினருகே விட்டுச்செல்ல வந்திருக்கின்றேன். தேவரீரும் வயிறுவாய்த்திருக்கு மித்தருணத்தில் மகரிஷிகளைத் தரிசிக்கவேண்டுமென விருப்புற்று வேண்டினீராதலின், இதற்கு அதுவு மொருகாரணமாகின்றது. இதோ கங்கைக்கரையில் மகரிஷிகளின் தபோவனம் காணப்படுகின்றது; இஃது புண்ணியமாயும் ரமணீயமாயு மிருக்கின்றது. தேவரீர் சோகிக்கவேண்டா; நமது தந்தையான தசரதசக்கரவர்த்திக்குப் பிரியமான நண்பராகிய வால்மீகிமுனிவர் இங்கு வஸிக்கின்றனர்; அவர் அருளே வடிவெடுத்து வந்தவர்போன்ற அந்தணர் பெருமான்; அவரது திருவடிவாரஞ்சேர்ந்து தேவரீர் இங்குச் சுகமாகவாழ்க. (தேவரீர் எம்மையரிடத்தில் என்றும் உள்

என்புமாறுத உத்தமியாதலின், சிந்தை நொந்து சோகிக்கவேண்டா.) தேவரீர் பதிவிரதாசிரோமணி யாதலின், பர்த்தாவையே யென்றும் திருவுள்ளத்தில் தியானித்துக்கொண்டு விரதம்பூண்டு உபவாஸமிருந்து இனிதுவாழ்க; (எங்ஙனமாயினும் குலமகட்குத் தெய்வங் கொழுநனேயன்றோ?) இங்ஙனமே அனுஷ்டித்து வருவீராயின், உமக்கு நன்மையே விளையும்' என விண்ணப்பம் செய்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்தாறுவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்.

தம்மைக் காட்டில் விட்டுவரும்படிக் காகுஸ்தர் கட்டளையிட்டதுகேட்டுச் சீதாதேவி சோகஸாகரத்தி லாழ்ந்தவளாகிச் சற்றுத் தேற்றிக்கொண்டு, இலக்குமணருக்கு விடைகொடுத்தனுப்பித் தனியே புலம்பியது.

---

இளையபெருமாள் இவ்வாறு விளம்பிய மிகக்கொடியவார்த்தை செவிப்பட்டமாத்திரத்தில் வைதேஹி விசனமதிகரித்தவராகித் திடீரென்று தரையில் வீழ்ந்தனர். ஒரு முகூர்த்தகாலஞ்சென்ற பின்னர் சற்று மூர்ச்சைதெளிந்து கண்ணுங் கண்ணீருமாய் இலக்குமணரை நோக்கி மிகப்பரிதாபமான மொழிகள் மொழியலாயினர். 'லக்ஷ்மணா! என்னைப் பிரமதேவன் துக்கத்திற்கென்றே ஒருபெண்ணாகப் படைத்தனன் போலும்; எனது தேகம் முழுவதுமே துக்கவடிவமாகவே யன்றோ காணப்படுகின்றது! யான் முற்பிறப்பில் என்னபாபஞ் செய்தேனோ? எவரைப் பெண்டிரோடு சேரவொட்டாமற் பிரித்தேனோ? அங்ஙன மில்லையாயின், ஒருபாபமும் அறியாது கணவனே கதியெனக்கொண்டு நல்வழியிலொழுகு மென்னை யிங்ஙனம் நம்மன்னவர் துறக்கநேரிடுமோ? முன்புயான் ரகுநாதன் திருவடிகளைப்பற்றிக் கொண்டு கானகத்தில் வசித்தேன்; அக்காலத்துநேர்ந்த துயரமெல்லாம் பட்டது போதாமல் இப்பொழுது அதினும் கொடியதான துன்பம் அனுபவிக்கநேர்ந்ததே! யாருமில்லாத இவ்வரணியத்தில் இப்பொழுதுயான் எவ்வாறு வஸிப்பேன்? இப்பெருந்துக்கத்தை யாரிடஞ்சொல்லியாறுவேன்? ஆஹார விஹாரங்களை யாயினும் எவ்வாறு யான் ஏற்றுக்கொள்வேன்? முனிவர்களிடம் யான் யாது சொல்வேன்? யாது நற்செய்கை செய்யத்துணிவேன்? இராகவன் ஏதோ ஒருகாரணம்பற்றி யென்னைத்துறந்தனர்; இஃது பொறுக்கத்தகுவதன்றாதலின், யான் *இப்பொழுதே இக்கங்கையில்வீழ்ந்து உயிரையொழித்து விடலாம்; ஹே ஸௌமித்திரே! அங்ஙனஞ் செய்வேனாயின், அஃது களங்கமற்ற மஹாகுலத்

---

* இப்பொழுதே யென்றதனால், பிரஸவமானபின் உயிரைவிடுவது திண்ணமென்பது குறிப்பித்ததாயிற்று.

திற் பிறந்த எனது பர்த்தாவுக்கு ஒருபெரிய † பழிப்பாகு மாதலின், அங்ஙனஞ்செய்யத்துணிகின்றிலேன். இனிச்செய்வ தென்னே? ஸம்பவிக்கவேண்டுவது ஸம்பவித்துவிட்டது. நீர் ராஜசாஸநத்தை யொருபொழுதும் கடக்கவேண்டாம்; உமது தமையனார் நியமித்தவண்ணமே செய்க. இப்பொழுதுயான் சொல்வதைமாத்திரம் சற்றுக்கவனித்து அங்ஙனமே செய்தல்வேண்டும். என் மாமிமார் அனைவரையும் யான்கைகூப்பி முடிதாழ்த்தி வணங்கியதாக விண்ணப்பஞ் செய்தல்வேண்டும்; சக்கரவர்த்தித் திருமகனாரையும் தண்டன் ஸமர்பித்து யான் குசலம்வினவியதாக விண்ணப்பஞ் செய்தல் வேண்டும்; இங்ஙனமே மற்றுமுள்ள நமதுபந்து மித்திரர்களையும் யான்வணங்கி விசாரித்ததாகச் சொல்லிக் கடைசியில், தருமத்தை ஒருபோதும் கைவிடாதவரான உமது தமையனார் ஸன்னிதியில் என்பேச்சாய் மிக்க வினயத்துடனே ஒன்று உரைசெய்தல்வேண்டும். அஃதென்ன வெனில், ஹே ராகவ! இத்தனைகாலம், அடியாளுடன்பழகி, எனது உள்ளமு மொழுக்கமும் தூய்மையும் பக்தியும் இத்தன்மையன வென்று தேவரீர் நன்கு உணர்வீர்; ஆயினும், அபகீர்த்திக்கு அஞ்சி அடியாளை யரணியத்திற்கு ஓட்டிவிட்டீர். ஹே வீர! லோகா பவாதத்தினால் தங்களுக்கு ஏதேனும் அபகீர்த்தி யுண்டாகுமாயின், அதனைப் பரிஹரிப்பது அடியாளுக்கும் கடமையேயாகும்; கற்புடையமகளிருக்குக் கணவனேயன்றோ முக்கியமானகதி. ஸ்வாமி! யான் மற்றொன்று முக்கியமாக வேண்டிக்கொள்கின்றேன்: அறநெறிதவறாது அரசு புரிந்து, தங்கள் பிராதாக்களிடத்திற்போலவே மற்றெல்லாப் பிரஜைகளிடத்திலும் எப்பொழுதும் பிரீதி பாராட்டிவரல்வேண்டும்; இதுவே உமக்கு முக்கியமான தருமமாகும்; அழியாப்புகழுண்டாவதற்கு இதுவே முதன்மையான ஸாதனமாகும். ஹே லோகநாதா! எனது சரீரத்தைப்பற்றி யான் அத்தனையாகக் கவலையுறுகின்றேனில்லை; ஹே ரகுநந்தன! லோகோபவாதத்திற்கே யானும் அதிகமாக அஞ்சியாயாஸமுறுகின்றேன்.

పతిర్హి దేవతానార్యాః పతిర్బన్ధుఃపతిర్గురుః।
ప్రాణైరపిప్రియస్తస్మా ద్భర్తుఃకార్యంవిశేషతః॥

பதிர்ஹிதேவதாநார்யாঃ பதிர்பந்துঃபதிர்குருঃ।
ப்ராணைரபிப்ரியந்தஸ்மாத் பர்த்துঃகார்யம்விசேஷதঃ॥

ஸ்திரீகளுக்குக் கணவனே தெய்வம், கணவனே பந்து, கணவனே குரு; ஆதலின் கணவனது காரியம் பெண்களுக்குப் பிராணனிலும் பிரியமானதாகும்' என இவ்வாறு யான் சொன்னதாகச் சக்கரவர்த்தித்திருமகனார் ஸன்னிதியில் விண்ணப்பஞ்செய்க. இப்பொழுது யான் ருதுகாலம் நீங்கிக் கர்ப்பக்குறி யுடையளாயிருக்கின்றேன்; என்னை நன்கு யுற்றுப்பார்த்து இதனைத் * தெரிந்துகொண்டு செல்லுக' என அருளிச்செய்தனள்.

---

† பழிப்பு - ஸ்திரீஹத்தி செய்தாரென்கிற அபகீர்த்தி. கருவுற்றிருக்கின்ற இத்தருணத்தில் யான் உயிரை விடுவேனாயின், எனது பார்த்தாவினது குலம் இவ்வளவோடு அழிந்துவிடு மாதலின் - என்பதும் இதற்குப் பொருளாகும்.

* மறுபடியும் இராமன் தன்மீது அபவாதஞ் சொல்லாதிருத்தற்காக வென்றபடி.

பிராட்டி இவ்வாறு புகன்றதுகேட்டு இளையபெருமாள் சிந்தைகலங்கியவராகிப் பேச நாவெழாமல் ஸாஷ்டாங்கமாகத் தரையில் வீழ்ந்து நமஸ்கரித்துப் பெருங்குரல்பாய்ச்சி யழுதுகொண்டே பிராட்டியைப் பிரதக்ஷிணஞ்செய்து, பிறகு சற்றுநேர மாலோசித்து அவளை நோக்கி, 'குற்றமற்ற குணபூஷணி! தேவரீர் அடியேனை நோக்கி இவ்வாறு உரை செய்யலாகுமோ? இதுவரையில் அடியேன் தேவரீருடைய திருவடிகளைத் தவிரத் திருமேனியை ஒருபொழுதும் ஸேவித்தவனல்லனே! ஸ்ரீராமபிரானைவிட்டுப் பிரிந்திருக்குமித்தருணத்தில் இவ்வரணியத்திலே தேவரீர் திருமேனியை அடியேன் எவ்வாறு நோக்குவேன்?' என விண்ணப்பஞ்செய்து மறுபடியும் அவளை நமஸ்கரித்து விடைபெற்றுப் புறப்பட்டுத் திரும்பிப் படகேறி, படகை விடுமாறு படகோட்டிக்குக் கட்டளையிட்டனர். வடகரை போய்ச் சேர்ந்து படகைவிட் டிறங்கி, பிராட்டியைத்துறந்த விசனந் தாங்காதவராகி மதிமயங்கி, அநாதை போல் எதிர்க்கரையினின்று அல்லாடுகின்ற சீதாதேவியைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்று தேர்மேலேறினர். தென்கரையில் தனியே விடப்பட்ட பிராட்டி, தூரத்திற் செல்லும் மைத்துனரையும்தேரையும் பலதரம் பார்த்துத் துயரமதிகரித்தவராகி, தமக்குத் தஞ்சமானவ ரொருவரையும் காணாது, மயில்கள் ஆடுகின்ற அம்மஹாரணியத்திலே கோவென்று கதறிப் புலம்பலாயினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்தேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

சீதாதேவி தனியே புலம்பித்தவிப்பதை ரிஷிகுமாரர்களால் கேள்வியுற்ற வால்மீகிமுனிவர் உடனே அவ்விடம்சென்று சீதையைச் சமாதானப்படுத்தித் தமது ஆச்சிரமத்திற்கு அழைத்துவந்து, அங்குள்ள ரிஷிபத்தினிகளிடமொப்புவித்து அவளைக் கருத்துடனே காத்துவருமாறு கட்டளையிட்டது.

---

ஸீதாபிராட்டி இவ்வாறு புலம்புவதுகேட்டு அக்காட்டில் திரிந்துகொண்டிருந்த முனிமக்கள் அங்கு வந்து அவளைக் கண்ணுற்று உடனே வால்மீகி மகாமுனிவ ராச்சிரமத்திற்கு அதிவேகமா யோடி அவரை யடிபணிந்து தாம் கண்டவை யாவும் அவரிடம் விண்ணப்பஞ் செய்தனர்கள். 'ஸ்வாமி! இவ்வரணியத்தில் ஒரு உத்தமஸ்திரீ புலம்புகின்றனள்; அத்தன்மையளான அணங்கை யிதுவரை யெங்கும் கண்டதில்லை; அவள் எந்த மஹாநுபாவருடைய பத்தினியோ யாமறியோம்; பார்வைக்கு ஸ்ரீ மஹாலக்ஷ்மி போலவே தோற்றுகின்றனள். அவள் இப்பொழுது மதிமயங்கி முகம் வாடி வீரிட்டுக் கதறுகின்றனள்; வானத்தினின் றிழிந்து வந்த தேவமகளிர் போலவே விளங்குகின்றனள். அவள் ஆற்றங்கரையில் அநாதைபோலத் தனியே நின்று சோகம் மேலிட்டவளாகிப் புலம்புவதை யாம் கண்ணாரக் கண்டோம். அவ

No. 18. ஸீதையைவால்மீகிமுனிவர் தம்மாச்சிரமத்திற்கு அழைத்துக்கோண்டுசென்றது. 



వాల్మీకిముని తన ఆశ్రమమునకు సీతను పిలుచుకవచ్చుట.

ளைப் பார்க்கையில் அத்தன்மையதான துயரம் அவளுக்கு ஒருபோதும் தகா தெனவே தோற்றுகின்றது. அவள் மானிட மகளிரென எங்கள் மதிக்குத் தோற்றவில்லை; அவள் தேவரீரது ஆச்சிரமத்தருகே வந்து தேவரீரையே சரணமடைந்திருத்தலின், அவளை யுடனே யழைப்பித்து வேண்டியவாறு உபசரித்து அவளது விசனத்தை யாற்றுக; தனக்குத் தஞ்சமாவாரையே அவள் தேடுகின்றமையின், தேவரீரே தஞ்சமாகிப் பாதுகாத்தருள்க' என வேண்டிக்கொண்டனர்.

முனிவர் மக்கள் மொழிந்ததுகேட்டு வால்மீகி மஹரிஷி தமது ஞான திருஷ்டியினால் உற்றுநோக்கி நடந்தவரலாற்றை உணர்ந்து உடனே மைதிலி யிருக்கு மிடத்திற்கு விரைந்தோடினார். அவர் செல்வதுகண்டு அவரது சிஷ்ர்களும் அவரைப் பின்றொடர்ந்து சென்றனர்கள். செல்லும் பொழுது அம்முனிவர் மைதிலிக்கு அர்க்கியமும் கையிலெடுத்துக் கொண்டு சென்ற னர். அதி சீக்கிரத்தில் அவர் கங்கைக்கரை சேர்ந்து அவ்விடத்து ஸ்ரீராகவ னது தருமபத்தினியான சீதா பிராட்டியாரைக் கண்ணுற்றனர். அப்பொழு தும் அவள் அநாதைபோலவே விசனத்தினால் வீரிட்டுக் கொண்டிருந்தனள். அவளைக் கண்டவுடனே வால்மீகி முனிவர், தமது தேஜஸினாலேயே அவளை யகமகிழச் செய்பவராகி மிகவும் மதுரமாக மொழியலாயினர். அதாவது, 'பெண்ணே! நீ தசரதமஹாராஜன் மருமகள், இராகவனது காதலி, ஜநக மஹாராஜன் புதல்வி; நீ மஹா பதிவிரதா சிரோமணி. உனக்கு ஒரு குறையு மிலது, நீ யிங்கு வருகையிலேயே எனதுயோக திருஷ்டியினால் உனது வர லாற்றை யான் உணர்ந்தேன். இங்ஙனமாவதற்குக் காரணமும் நானறிவேன்; ஹே மஹாபாகே! உனது கற்பு நிலைகெடாத சற்குணத்தையும் நான் நன்கு அறிந்திருக்கின்றேன். இம்மூவுலகங்களிலும் நடக்கின்றவையாவு மெனக்கு நன்றாகத்தெரியும்.

అపాపాంవేద్మిసీతేత్వాం తపోలబ్ధేనచక్షుషా।
విస్రబ్ధాభవవైదేహి సాంప్రతంమయివర్తసే॥

அபாபாம்வேத்மி ஸீதேத்வாம் தபோலப்தேநசக்ஷுஷா।
விஸ்ரப்தாபவ வைதேஹி ஸாம்ப்ரதம் மயிவர்த்தஸே॥

ஹேஸீதே! நீ குற்றமற்ற குணபூஷணியென யான் எனது தபோபல த்தினாற் பெற்ற ஞானக்கண்ணினாற் கண்டிருக்கின்றேன்; விதேஹராஜன் பெற்ற பெண்மணி! இப்பொழுது நீ என்னிடத்தி லிருக்கின்றமையால், இனிச்சோகந் தெளிந்து மனந்தேறுக. எனது ஆச்சிரமத்திற் கருகில் பல பெண்டிர்கள் தவம் புரிந்துகொண் டிருக்கின்றனர்கள். வத்ஸே! அவர்கள் உன்னைத் தங்களுடைய பெண்போலவே பாவித்துப் பாதுகாத்து வருவார் கள்; மனக்கவலை யொழிந்து தைரியங்கொண்டு, இதோ இந்த அர்க்கியத்தை நீ கைக்கொள்ளுக. உனது சொந்த மாளிகையிற் போலவே நீ இவ்விடத் தில் வசித்துவருக; விசனத்தை இவ்வளவோ டொழித்துவிடுக' என மொழிந் தனர்.

வால்மீகிமுனிவரது செவிக்கின்பமான சிறந்த வார்த்தையைச் செவியுற்றுச் சீதாபிராட்டி அவரது திருவடிகளை வணங்கிக் கைகூப்பிக்கொண்டு, அங்ஙனமே யாருக வென்று உடன்பட்டனள். அதுகேட்டு அம்முனிவர் தவசிப் பெண்டிர்கள் தவம்புரியும் ஆச்சிரமத்திற்குச் செல்ல, பிராட்டியும் கைகூப்பிக்கொண்டே அவரைப் பின்பற்றிச் சென்றனள். வைதேஹியுடனே வால்மீகி முனிவர் புறப்பட்டு வருதல் கண்டு அந்த முனிபத்தினிகள் அவரையெதிர்கொண்டு வந்து அவரை நோக்கி நல்வரவு கொண்டாடி, 'முனிபுங்கவரே! ஏன் இவ்வளவு நாழிகைதாமதம்? தேவரீரது வரவை * வெகுநேரமாயெதிர் பார்த்திருக்கின்றோமே; நாங்கள் அனைவோரும் நமஸ்கரிக்கின்றோம். யாங்கள் தமக்குச் செய்யவேண்டிய காரியமேதேனும் உளதாயின் நியமித்தருள்க; செய்யக் காத்திருக்கின்றோம்' என்று கூறினார்கள். அவர்கள் அவ்வாறு மொழிந்தது கேட்டு வால்மீகிமுனிவர், 'இப்பெண்மணியை நீங்கள் அறிவீர்களோ? இவள் மகாதருமிஷ்டரும் புத்திசாலியுமான ஸ்ரீராம சந்திரனது தருமபத்தினி, தசரதசக்கரவர்த்தியின் மருகி, ஜநகமஹாராஜனது புதல்வி; ஸீதையெனப் பெயர்பூண்டவள். பழிபாபமொன்று மில்லாத இவளைப் பர்த்தா துறந்தமையின், இவள் இங்கு வந்துசேர்ந்தனள்; இவளை யென்றுங் கைவிடாது பரிபாலிப்பது எனது முக்கியமான கடமையாம். இவளிடத்தில் நீவிர் அதிகமான அன்புவைத்து இவளை யொருகண்ணுகப் பார்த்துவரல்வேண்டும்; இவளிடம் உங்களுக்குள்ள கௌரவத்தினுல் நீங்கள் இவளைப் பூஜிப்பது ஒருபுறமிருக்க, யான் இவ்வாறு கேட்டுக் கொள்வதனுல் எனக்காகப் பின்னும் சற்றுவிசேஷமாகப் பூஜித்து வருவீராக' எனஇவ்வாறு உரைத்து, மிக்க புகழ்பூண்டவரான முனிபுங்கவர் பலதரஞ்சொல்லிப் பிராட்டியை யவர்களிட மொப்புவித்து, சீஷர்களுடனே தமதாச்சிரமத்திற் கெழுந்தருளினார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்தெட்டாவது ஸர்ககம்

முற்றிற்று.

---

## ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

வைதேஹியை வனத்தில்விட்டுத் திரும்பிவந்த இலக்குமணர் ரதத்திலேறிக்கொண்டு மிகுந்த விசனமுற்று வருந்தியதுகண்டு சுமந்திரர், சக்கரவர்த்தித்திருமகனுக்கு இவ்விதமான ஸங்கடங்கள் ஸம்பவிக்குமாறு முற்காலத்திலுண்டான பிருகுமுனிவர் சாபத்தைச்சொல்லிச் சமாதானப்படுத்திக்கொண்டு சென்றதும், அன்றிரவை அவர்கள் கேசினிநதியினருகே போக்கியதும்.

---

இஃது இங்ஙனமாக, சீதையை விட்டுச்சென்ற ஸௌமித்ரியானவர், ஸீதாபிராட்டி ஆச்சிரமத்துட் புகுந்து கண்ணுக்குத் தோன்றாது மறைந்தது கண்டு சிந்தை நொந்து சாரதியான சுமந்திரரை நோக்கிக் கூறலாயினர்.

---

* வெகுநேரமென்றதனுல், சீதையைச்சமாதானப் படுத்தல் முதலியவைகளுக்குச் சற்றுத் தாமஸமாகியதென விளங்கும்.

'என்னபாரும் சுமந்திரரே! நமது மன்னவர்க்கு முன் பட்டது போதாமல் மறுபடி ஸீதாவியோகம் பிரபலமாக நேரிடலாயிற்றே! இதினும் கொடிய துயரம் அவர்க்கு வேறென்ன வேண்டும்? மிகப்பரிசுத்தமாகிய ஒழுக்கமுடையளான தரும பத்தினியாகிய ஜாநகியாரைத் துறந்து ரகுகுல திலகரான நம்மையர் தனியே யிருக்க நேர்ந்தது ஏதோ, ஜன்மாந்தர பாபவிசேஷமெனவே யான் எண்ணுகின்றேன். ஹேஸாரதே! விதியை வெல்ல யாவராலும் முடிவதில்லை பாரும். தேவர், கந்தர்வர், அசுரர், இராக்கதர் ஆகிய அனைவரையும் அமர்க்களத்தில் அதஞ்செய்ய வல்லவரான இராகவன் இந்த விதிக்கு வசமாயினரன்றோ? முன்னம் நம்மன்னவர் பித்ருவாக்கிய பரிபாலனஞ் செய்யும் நிமித்தம் நிர்மானுஷியமான தண்டக வனத்திலே ஒன்பதோடு ஐந்தாண்டுகளும் வஸிக்கலாயினர். இப்பொழுது சீதையைத் தனியே ஆரணியத்திற்கோட்டியது அதினும் மிகக் கொடிய துயரமன்றோ? ஏதுமறியாத சாதாரணமான நகரத்தாருடைய வசனத்தைச் செவியுற்று ஸ்ரீராமபிரான் இங்ஙனம்செய்தது மிகக் குரூரமானதெனவே என் புத்திக்குத் தோற்றுகின்றது. ஹேசூத! ஒன்றுமறியாத பட்டணத்தார் ஏதோ பிதற்றினர்களெனக்கொண்டு அதே காரணமாக, மைதிலி விஷயத்தில் அபகீர்த்திக் கிடமாகிய இவ்வகைக்கொடிய செய்கையைத் தருமத்தையே துணையாக்கொண்டவனான எவனேனும் செய்யத்துணிவனோ?' என இவ்விதம் பலவாகக் கூறி வருத்தமுற்றனர்.

இவ்வாறு இளையபெருமாள் அருளிச்செய்த வசனத்தைச் செவியுற்றுச் சுமந்திரர், இதனுண்மை யுணர்ந்தவராதலின், மிகுந்த விசுவாஸத்துடனே அவர்க்கு மறுமொழி கூறலாயினர். அஃதென்னவெனில், 'ஹேஸௌமித்ரே! நீர் மைதிலியைப்பற்றி இவ்வண்ணம் மனமறுகுவது வீணாகாரியம். ஸ்ரீராமபிரான் இவ்விதமாய் அற்பபாக்கிய முடையராகித் துன்பமே யதிகமாக அனுபவிப்பரென்பது முன்னமே முனிவர்களால் உமது தந்தையினது ஸன்னிதானத்தில் நிர்ணயிக்கப்பட்ட தேவரகசியம். இஷ்டஜன வியோகம் இவர்க்கு விசேஷமாகச் சம்பவிக்கும்; இப்பொழுது பதிவிரதையான பத்தினியை விட்டுப் பிரிந்தது மாத்திரமேயன்று; உம்மையும் சத்துருக்கினனையும் பரதனையும் விட்டு வெகு காலம் பிரிந்திருக்கப் போகிறார். இந்த ரகசியத்தை உம்மிடத்திலேனும் பரதனிடத்திலேனும் வெளியிடலாகாதென்பது உமது பிதாவினது கட்டளை. இந்த விருத்தாந்தம் உம்முடைய பிதாவின் ஸன்னிதியில் யானும் வஸிஷ்டருமிருக்கும்பொழுது துர்வாஸமுனிவர் மொழிந்தது. அம்முனிவர் இதனை மொழிந்தது கேட்டுச் சக்கரவர்த்தி என்னை நோக்கி, 'ஹேசூத! இந்த ரகசியத்தை நீ யாரிடத்திலும் வெளியிடலாகாது' என எனக்கு உத்தரவு பண்ணினர். அங்ஙனமே யாகுகவென்று யான் அதற்குடன்பட்டு அந்த ராஜ சாஸனத்தை யிதுவரையும் அவ்வாறே பரிபாலித்துவருகின்றேன். இப்பொழுது யான் அதனைப் பொய்யாக்கலாகுமோ? ஆதலின், அஃது ஸர்வப்பிரகாரத்தாலும் உம்மிடம் வெளியிடத்தகுவதன்று. ஆயினும் நீர் இவ்வாறு விசனமுறுவதனால், தந்தை யிதனை யெவரிடத்திலும் வெளியிடலாகாதென விதித்திருப்பினும், உமக்கு அதனைக் கேட்டு உணர

வேண்டுமென அதிகமான விருப்பமுளதாயின், சொல்லுகின்றேன் கேளும். யான்சொல்லாமல் மறைப்பதனால்,விதிவசத்தால் வருவது வாராதொழியுமோ? ஆயினும் நீர் இதனைப் பரதனிடத்திலேனும் சத்துருக்கின னிடத்திலேனும் எப்பொழுது மெடுத்துரை யாதிருத்தல் வேண்டும்' எனப் புகன்றனர். இவ் வண்ணம் சுமந்திரர் சொன்ன ஸாரமான சொல்லைச் செவியுற்று ஸௌமித்ரி, 'அங்ஙனமே யாகுக, இந்த ரஹஸியத்தை எனக்கு அறிவிக்க வேண்டுகின் றேன்' என வினவினர். மஹானுபாவரான இளையபெருமாள் இவ்வண்ணம் வினவியது கேட்டுச்சாரதி முன்னம் மகரிஷி மொழிந்தவரலாற்றை விளம்ப லாயினர்.

'ஹே ஸௌமித்ரே! சொல்லுகிறேன், கேளும். பூர்வம் அத்திரிமகரிஷி யின் புதல்வரான துர்வாஸ மஹாமுனி * சாதுர்மாஸியஸங்கற்பத்திற்காக வஸிஷ்டரது ஆச்சிரமத்திற் கெழுந்தருளி ஆங்கு வஸித்திருந்தனர். புரோ ஹிதரைத் தரிசிக்கவேண்டி உமது தந்தையும் அப்பொழுது அவ்வாச்சிரமத் திற்குச் சென்றனர். அங்கு வஸிஷ்டமா முனிவரது இடதுபாரிசத்தில் சூரியனெனச் சொலித்துக்கொண்டு வீற்றிருந்த மகரிஷியைக் கண்ணுற்று உமது தந்தை அத்தவசிகளிருவரையும் தண்டனிட்டு அபிவாதனஞ் செய்த னர். பிறகு அவர்கள் நல்வரவு கொண்டாடி அளித்த அர்க்கியம் பாத்தியம் ஆஸனம் முதலான உபசாரங்களையும் பலமூலாதிகளையும் பெற்றுக்கொண்டு சக்கரவர்த்தி அவர்களுடனே வீற்றிருக்கையில், அன்று மத்தியான்னத்திற்கு மேல் மதுரமான பற்பல கதைகளைப் பேசிப்பொழுதுபோக்கலாயினர். அப் படிக் கதைகள் சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில் சக்கரவர்த்தி கைகூப் பிக்கொண்டு அத்திரிபுத்திரரான பிரம்மரிஷியை நோக்கி, 'ஹேபகவன்! அடி யேனது வமிசம் எவ்வளவுகாலம் நீடித்திருக்கும்? அடியேன் குமாரனிராம னுக்கு வயதெத்தனை? மற்றக்குமாரர்களுக்கு வயதெத்தனை? இராமனுக்குப் புதல்வர்கள் எத்தனைபேர்? அவர்களது வயதென்ன? இவைகளை யடியே னுக்கு விவரமாக எடுத்துரைக்க வேண்டுகின்றேன்' என வினவினர். தசரத சக்கரவர்த்தி இவ்வாறு வேண்டியது கேட்டுத் துர்வாஸமுனிவர் மறுமொழி கூறலாயினர்.

## ஸ்ரீமந் நாராயணனுக்குநேரிட்ட பிருகுமுனிவர்சாபம்.

---

'ஹேராஜன்! பூர்வம் நடந்த விருத்தாந்தமொன்று விளம்புகின்றேன், கேளும்: முன்னம் தேவாசுரயுத்தம் நடந்தகாலத்தில் அசுரர்கள் தேவர்களால் அடித்தோட்டப்பட்டவர்களாகிப் பிருகுமுனிவரது மனையாளை யடைக்கலம் புகுந்தனர். அவள் அவ்வசுரர்கட்கு அஞ்சன்மினென்று அபயமளிக்க, அவர் கள் அச்சமொழிந்து அவ்விடத்திலேயே இனிது வாழ்ந்திருந்தனர். பிருகு பத்தினி அசுரர்கட்கு இவ்வாறு அபயமளித்ததை யுணர்ந்து தேவநாதனை

* கிராமைக ராத்திரமாக வஸிக்கும் முனிவர்கள் வருஷாகாலத்திற்காக ஆடிமா தம் முதல் நான்குமாதம் ஒரே இடத்தில் நிலையாய் வஸிப்பதாகச் சங்கற்பித்துக் கொண்டு அங்ஙனமே செய்வது சாதுர்மாஸிய மென்னப்படும்.

ஸ்ரீமகாவிஷ்ணு தமது சுதர்சனமென்னும் சக்கரத்தை விடுத்து அவளது சிரத்தையறுத்துத்தள்ளினர். பிருகு மகரிஷி தமது தருமபத்தினி தலையறுப்புண்டதுகண்டு கோபங்கொண்டு அந்நாராயணனை நோக்கி, 'ஹேஜநார்த்தன! நீவீணன வைரங்கொண்டு வதைக்கத்தகாதவளான எனது வாழ்க்கைத் துணைவியை வதஞ்செய்தனை யாதலின், நீ பூலோகத்திலே மானிடனாகப்பிறந்து அவ்விடத்திலே பல வாண்டளவும் பத்தினிவியோகமடைந்து பரிதவிப்பாயாக' எனச்சாபமிட்டனர். சிற்றங்கொண்டு இவ்வாறு சபித்தபின்னர் அம்முனிவர், ஒகோ! மதிமயங்கி யிங்ஙனம் பகவானைச் சபித்தனமே! இஃது வீணுகுமாயின் யாது செய்வதெனப் பச்சாத்தாப மடைந்தவராகி, அந்தப் பகவானையே தவத்தினுல் ஆராதிக்கலாயினர். பக்தவத்ஸலனான பரம புருஷன் அதுகண்டு அம்முனிவரிடம் அருள்புரிந்து அவரை நோக்கி, முனிபுங்கவரே! நீர் சபித்தசாபம் உலகத்திற்கு உபகாரத்தின் பொருட்டே யாகும்; ஆதலின் நீர் இதைப்பற்றிச் சிந்தையுறு தொழிக - என மொழிந்தனர்.

உலகனைத்தையும் ஆளுமரசே! இவ்வாறு பூர்வம் உபேந்திராவதாரத்தில் பிருகுமுனிவர் சபித்தசாபத்தினுலேயே ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீராமனெனப் பெயர்பூண்டு இவ்விடத்து உமக்குப் புத்திரனுக வந்து அவதரித்தனன். அம் முனிவர் சாபத்தின் பயனை யிவன் பூர்ணமாகவே யனுபவிக்கப் போகின்றனன். இவ்விராமன் அயோத்தியாபுரியில் நெடுங்காலம் அரசுபுரிவான். இவனுலாளப்பட்டவர்கள் அனைவரும் எல்லாச்செல்வமும் பெற்றுச் சுகமாக வாழ்வார்கள். இராகவன் மிகப்பெருமையாகப் பதினோராயிரமாண்டு ராஜ்யபரிபாலனஞ்செய்து பிறகு பிரம்மலோகத்திற்குச் செல்வான். அரசுபுரியுமளவில் எவராலும் வெல்வதற்கரியனாகி, இவன் அச்வமேதம் முதலாய யாகங்கள் பலவும் இயற்றுவான்; இந்நாட்டில் அநேகம் ராஜவம்சங்களை ஸ்தாபிப்பான்; ஸ்ரீராமனுக்குச் சீதையினிடம் இரண்டு குமாரர்கள் ஜனிப்பார்கள்; இவ்வயோத்தியிலன்று, இந்நகரத்திற்கு வெளியே வேறோரிடத்தில் அவதரிப்பார்கள்; இது ஸத்தியம், ஸந்தேகமில்லை. பிறகு மைதிலியின் மக்களுக்கு மண்டலாதிபதியாக உமது மைந்தன் மகுடாபிஷேகஞ்செய்வான்' என இவ்வாறு இந்த ராஜவமிசத்து வரலாறுகள் அனைத்தையும் விவரமாயெடுத்துரைத்து முடித்தனர்.

துர்வாஸ முனிவர் இவ்வாறு மொழிந்தது கேட்டுத் தசரதசக்கரவர்த்தி அம்மஹாநுபாவர்களை முடிதாழ்த்தி வணங்கி விடைபெற்றுத் திரும்பித் தமது பட்டணம் வந்து சேர்ந்தனர். அம்மகரிஷி முன்னம் மொழிந்த இவ் வரலாற்றை யான் அவ்வண்ணமே கேட்டு ஞாபகத்தில் மறவாது வைத்திருக்கின்றேன். அவர் கூறியது அவ்வாறே நடந்துதான்தீரும்; நீர் வீணுக விசாரமுறுதொழிக; ஸ்ரீராகவன் விஷயத்திலும் சீதாபிராட்டி விஷயத்திலும் சிந்தையுருது சித்தத்தையுறுதிப்படுத்துக' எனப்புகன்றனர். ஸாரதி சொன்ன மிகவும் ஸாரமான ஸமாசாரத்தைச் செவியுற்று, நன்றுநன்றெனக் கொண்டாடி ஸௌமித்ரி மிகவும் மகிழ்ச்சிகொள்ளலாயினர். சுமந்திரரும் ஸௌமித்ரியும் இவ்விதமாக ஸம்பாஷணை செய்துகொண்டே செல்

லுகையில், கேசினியாற்றினருகே சூரியாஸ்தமய மாகிவிட்டது; அன்றிராத்திரி அவ்விடத்திலேயே நிற்பதாக நிச்சயித்து அவர்கள் அங்கே யிறங்கினர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## அறுபதாவது ஸர்க்கம்.

*பிராட்டியை வனத்தில்விட்டு வந்தசெய்தியை யிளையபெருமாள் திரும்பிவந்து விண்ணப்பஞ்செய்து, சோகமுற்றிருந்த ஸ்ரீராகவனை தேற்றியது.*

---

பிராட்டியைக் காட்டில்விட்டுத் திரும்பியதினம் பொழுதுபட்டபின் கேசினிநதிக்கரையில் நிசியை நீத்து மறுநாள் உதயமானவுடனே புறப்பட்டு அன்று நடுப்பகலில் இளையபெருமாள் அயோத்தியாபுரி போய்ச்சேர்ந்தனர். அந்நகரத்தாரனைவரும் எல்லாச்செல்வமும்பெற்றுப்பெருவாழ்வும்பெருமகிழ்ச்சியுங் கொண்டு கோலாகலமாயிருக்க, இவ் விளையபெருமாள், தாசரதியினது திருவடிவாரஞ் சென்று யாது விண்ணப்பஞ்செய்வதென விசாரமுற்றவராக வேசெல்லுகையில், எதிரே பூர்ணசந்திர னுதயமானதுபோல மிகப்பிரகாசமாய் ஸ்ரீராமபிரானது திருமாளிகை தோற்றியது. மன்னவனது மாளிகைவாயில் சேர்ந்தவளவில் ஸௌமித்ரி திருத்தேரினின்று மிறங்கித் தடையின்றியே தலை குனிந்துகொண்டு வாடிய முகத்துடன் உட்சென்று, இரண்டு கண்களிலும் தண்ணீர் ததும்பச் சிந்தை நொந்து ஆஸனத்தி லெழுந்தருளியிருந்த தமையனரைத் தரிசித்து, அவரது திருவடிகளில் தண்டன் ஸமர்ப்பித்துக் கைகூப்பிநின்று தீனமான வார்த்தையாக விண்ணப்பஞ் செய்யலாயினர். 'ஹே ஸ்வாமி! அடியேன் ஆரியரது ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு சென்று ஜாநகியாரைத் தாம் குறித்தவண்ணமே கங்காதீரத்தில் மிகப் பரிசுத்தமான வால்மீகிமுனிவரது ஆச்சிரமத்தருகே விட்டுத் திரும்பித் தேவரீரது திருவடிவாரம் வந்து சேர்ந்தனன்.

మాశుచఃపురుషవ్యాఘ్ర కాలస్యగతిరీదృశీ।
త్వద్విధానహిశోచన్తి బుద్ధిమన్తోమనస్వినః॥
సర్వేక్షయాన్తానిచయాః పతనాన్తాస్సముచ్ఛ్రయాః।
సంయోగావిప్రయోగాన్తా మరణాన్తంచజీవితం॥
తస్మాత్పుత్రేషుదారేషు మిత్రేషుచధనేషుచ।
నాతిప్రసఙ్గఃకర్తవ్యో విప్రయోగోహితైర్ధ్రువం॥

மாசுச:புருஷவ்யாக்ர காலஸ்யகதிரீத்ருசீ |
த்வத்விதாநஹிசோசந்தி புத்திமந்தோமனஸ்விந: ||
ஸர்வேக்ஷயாந்தாநிசயா: பதநாந்தாஸ்ஸமுச்ச்ரயா: |
ஸம்யோகாவிப்ரயோகாந்தா மரணாந்தஞ்சஜீவிதம் ||
தஸ்மாத்புத்ரேஷுதாரேஷு மித்ரேஷுசதநேஷுச |
நாதிப்ரஸங்க:கர்த்தவ்யோ விப்ரயோகோஹிதைர்த்ருவம் ||

புருஷசிங்கமான தேவரீர் இதுவிஷயத்தில் சிந்தைகலங்கிச் சோகிக்க லாகாது; காலகதி யித்தன்மையானது. தேவரீரைப்போன்ற புத்திமான்க ளான மகான்கள் சோகமுறார்களன்றோ? எவ்விதமான செழிப்புக்கு மிறுதி யில் அழிவென்பது ஒன்று உண்டு; உயரவெழுகின்றவையாவும் இறுதியில் கீழே விழுகின்றவையே; அவ்வாறே ஸம்யோகத்திற்கு வியோகமும், உயிர் வாழ்க்கைக்கு மரணமும் அவசிய முண்டாகின்றவையேயாம். ஆதலின், புத்திரகளத்திரமித்திராதிகளிலும் தனத்திலும் அதிகமான மனப்பற்று வைக்க லாகாது; என்றைக்கேனும் அவர்களது வியோகம் ஸம்பவிக்குமென்பது நிச்சயம். ஹே காகுஸ்த! தேவரீர் இச்சித்தமாத்திரத்திலே ஸகல லோகங் களையும் இந்த ஸம்ஸாரதுக்கத்தினின்று விலக்க வல்லவராயிருக்க, இந்தச் சோகத்தைத் தணித்துக்கொள்வது தேவரீருக்கு ஒரு பெரிய காரியமோ? எல்லா முணர்ந்தவர்களும் ஸத்துவகுணமுடையவர்களுமான தேவரீரைப் போன்ற மஹாபுருஷர்கள் இவ்விதமான விஷயங்களில் மனநிலை கலங்கார்களன் றோ? தேவரீர் இவ்வாறு மனங்கலங்கினால், ஹேராகவ! மறுபடியும்*லோகாபவா தம் வந்து விளையுமன்றோ? எந்த அபவாதத்தை விலக்குவதற்பொருட்டு மைதிலியார் துறக்கப்பட்டனரோ, அதே அபவாதம் வேறு விதமாக இப் பொழுது உண்டாகத்தலைப்படுமே! ஆகலின், புருஷ சிங்கமான தேவரீர் தைரியத்தைக் கைக்கொண்டு, இம்மனத் தளர்ச்சியை யொழித்துவிடுக; வீணான விசனத்தை விலக்கியருள்க' என அறிவித்தனர்.

இளையபெருமாள் இங்ஙனம் உரைத்ததுகேட்டு அடியார்களிடத்தில் அன்புடையரான ராமசந்திரன் ஸௌமித்திரியை நோக்கி மிக்க மகிழ்ச்சி கொண்டவராகி, 'ஹேலக்ஷ்மணா! நீ உரைத்தவையாவும் உண்மையே; என் வாக்கைத்தவறாது நான் சொன்ன வண்ணமே நீ செய்து வந்தது எனக்கு மிகுந்த ஸந்தோஷத்தை விளைவிக்கின்றது. நீ சொன்ன மதுரமான வார்த் தைகளைக்கேட்டு நான் மனக்கவலை யொழிந்து களிப்புறலாயினேன்' என அருளிச்செய்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

* ஸ்ரீராமன் மனையாளிடத்தில் அதிகமான மனப்பற்றுடையவர்: அவளைவிட்டு விடமனம் வராமல் மிகவும் துக்கிக்கின்றனர் - என நிந்திப்பார்களென்றபடி.

## அறுபத்தோராவது ஸர்க்கம்.

இராஜாக்கள் தம்மிடம் வருபவர்களுடைய குற்றங் குறைகளை
உடனுக்குடனே கேட்டு விசாரிக்கவேண்டுமென்றும்,
இல்லாவிடின் அநர்த்தம் விளையுமென்றும் கூறி,
அதற்குத் திருஷ்டாந்தமாக நிருகராஜனுக்கு வந்த விபத்தை
ஸ்ரீராமபிரான் இளையபெருமாளுக்குக் கூறியது.

---

இளையபெருமாள் உரைத்த அற்புதமான வார்த்தையைத் திருச்செவி சார்த்தி ஸ்ரீராமபிரான் சந்தோஷமடைந்தவராகி அவரைநோக்கி யருளிச் செய்யலாயினர். 'ஹே ஸௌமிய, லக்ஷ்மண! இவ்வுலகில் உன்னைப்போல் இவ்விதமாக மனத்திற்கினியனான உறவினன் கிடைப்பதருமை. என் கருத்திற் கிசைந்த பந்துவாக நீயொருவனே யெனக்கு வாய்த்தனை. இப்பொழுது யான் கருதியிருக்கின்ற காரியமொன்று கூறுகின்றேன்; அதனைக் கருத்தாகக் கேட்டு அவ்வண்ணமே செய்தல்வேண்டும். நாம் நான்கு தினங்களாக ராஜகாரியங் களொன்றும் விசாரியா திருக்கின்றோம்; அங்ஙனம் விசாரியாதிருப்பது என் மனத்தை யதிகமா யறுக்கின்றது. ஆதலின் உடனே பிரகிருதிகளையும், புரோகிதர்களையும், மந்திரிகளையும், ஸ்திரீகளோ புருஷர்களோ, தங்கள் காரியத்தின் பொருட்டு வந்த ராஜ்யத்துப் பிரஜைகள் அனைவரையும் இவ்விடம் வரவழைத்தல் வேண்டும். பட்டணத்துப் பிரஜைகளுடைய காரியத்தைப் பிரதிதினம் எந்தராஜன் கேட்டு விசாரிப்பதில்லையோ, அவனுயிரிழந்தபின் காற்றுமுட்புக வழியில்லாத மிகக்கொடிய நரகத்தில் வீழ்ந்து வருந்துவான், இது நிச்சயம். இலக்ஷ்மணா! இதைப்பற்றி முன் நடந்த கதையொன்று கூறுகின்றேன், கேள்:—

### நிருகராஜனுக்கு நேரிட்ட சாபம்.

பூர்வத்தில் நிருகனென மிகப் புகழ்பெற்றோங்கிய பார்த்திவனொருவன் இருந்தனன். அவன் தெய்வபக்தியும் ஸத்தியமும் நல்லொழுக்கமு முடையனாகிப் பூமியைப் பரிபாலித்துவருகையில் ஒருகால் கன்றுகளுடனேகூடிய ஒருகோடி பசுக்களைப் பொன்னாபரணங்களால் அலங்கரித்துப் பூமி தேவர்களான பிராமணர்களுக்குப் புஷ்கர க்ஷேத்திரத்தில் தானஞ்செய்தனன். அவ்வாறு அளிக்கப்பட்ட பசுக்களில், உஞ்சவிருத்திசெய்து ஜீவிக்கும் மஹா தரித்திரனும் ஆஹிதாக்கினியுமான ஒரு அந்தணனுக்கு அளிக்கப்பட்ட ஒரு பசு மற்றப் பசுக்களுடனே கூடி வேறிடம்போய் விட்டது. பசியால் வருத்தமுற்ற அவ்வேதியன் தனதுகோவைக் காணாது தேடப்புகுந்து பல வாண்டளவு பற்பல தேசங்களிலும் சென்று தேடினான். அவ்வாறு தேடுகையில் இறுதியிலே கனகலமென்னு மொருகிராமத்தில் ஒரு வேதியன் வீட்டிலே அந்தப் பசுவைப் பார்த்தனன்; அதுவும் அதன்கன்று மிகவுமிளைத்து அன்றே யிறந்துபோவன போலிருந்தன. தனது பசுவைப் பார்த்தவுடனே

பிராமணன் அதனைப் பெயரிட்டுத் தன்னிடம் வருமாறு கூவ, அப்பசு அவ் வேதியனது குரலையறிந்துகொண்டு அவனருகே போய்ச்சேர்ந்து அவனைப் பின்றொடர்ந்து செல்லலாயிற்று. அதுகண்டு அப்பசுவைப் போஷித்து வந்த பிராமணன் அதனைத் துரத்திக்கொண்டோடி, அப்பசுவை யோட்டிக் கொண்டு செல்லும் அந்தணனை நோக்கி, 'இஃது எனது கோவாயிற்றே; நிருகராஜன் எனக்குத் தானங் கொடுத்தது' என்றான். அதுபற்றி யெல் லாம் உணர்ந்த பண்டிதர்களான பிராமணர்களிருவருக்கும் பெரிய விவாதமுண் டாகியது. அவ்வண்ணமே அவர்களொருவர்க் கொருவர் விவாதஞ்செய்து கொண்டு அதனுண்மையைத் தெரிந்துகொள்ளுமாறு அவ்வாவை யீந்த வேந்த னிடம் போய்ச் சேர்ந்தனர்கள்.

ராஜமாளிகைவாயிலிற் சென்றபொழுது உள்ளேபுக அவர்கட்கு அநுமதி கிடைக்கவில்லை; அங்கேயே அநேகநாள் காத்திருந்தனர்கள்; எத்தனைநாள் காத்திருந்தும் அவர்களுக்கு ராஜதரிசனமாகவில்லை. அதுகண்டு மஹாநுபாவர் களான அவ்வந்தணர்களிருவரும் மிகவும்மனந்தவிப்புண்டு அதிகமானகோபங் கொண்டவர்களாகி, 'உன்னிட மொருகாரியத்தை வேண்டி வந்த ஏழைக ளுக்கு நீ இப்பொழுது கண்ணிற்படாது மறைந்திருக்கின்றமையின், நீ யொரு ஓணாகி யொருவர் கண்ணுக்கும் தோற்றாது ஒருகுழியில் வீழ்ந்து அவ்விடத்திலேயே அநேகமாயிரமாண்டளவு வஸித்திருப்பாயாக' எனச்சபித் தனர்கள். ஆயினும் அவர்கள் உடனே அவனிடத்தில் அருள்புரிந்து, 'கலியுகம் வருதற்குமுன்னே பூபாரத்தை யொழிப்பதற்காக நரநாராயணர்க ளிருவரும் இப்பூமியில் வந்தவதரிக்கப் போகின்றனர்; அவ்விருவரில் நாராயணன் யது வமிசத்திலே வாசுதேவனெனப் பெயர்பூண்டு அவதரிப்பான்; அவனைத் தரி சித்தவளவிலே உனக்கு இப்பாவம் நீங்கி நாங்கள் இட்டசாபமும் நிவர்த்தி யாகும்' எனக் கூறி விவாதமொழிந்தவர்களாய் அவ்வேதியர் இருவரும் சேர்ந்து துர்ப்பலையான அந்தக் கிழப்பசுவை மற்றொரு பிராம்மணருக்குத் தானங்கொடுத்துத் தம்மிடம் சென்றனர். அந்த ராஜன் மிகக் கொடியதாகிய அந்தச் சாபத்தை யிப்பொழுது அநுபவித்துக்கொண்டிருக்கின்றனன். தம் மைத் தேடிவருகிறவர்களுடைய காரியத்தை விசாரியாது வருந்தச்செய்வது வேந்தர்களுக்குப் பெரிய பாதகமாகும். ஆதலின், நம்மிடம் காரியமாக வந் திருப்பவர் எவரேனு முளராயின், அவர்களை அதிசீக்கிரத்தில் இவ்விடம் வர விடுக. அரசனானவன் தனது ராஜ்யத்துப் பிரஜைகளுக்கு நன்மையைநாடி அதனால் உண்டாகும் நற்பயனைப் பெறுதல்வேண்டும். ஆகையால், நம்மிடத் துக் காரியமாக வந்திருப்பவ ருளராயின் விசாரித்து வரவழைக்க' என நிய மித்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்தோராவது ஸர்க்கம்

முற்றிற்று.

# அறுபத்திரண்டாவதுஸர்க்கம்.

நிருகராஜன் சாபமனுபவித்த வகை கூறுகின்றது.

ஸ்ரீராமபிரான் இவ்வாறு அருளிச்செய்தது கேட்டு உண்மையுணர்ந்தவ ரான இளையபெருமாள் கைகூப்பிக்கொண்டு அவ்வரைநோக்கி, 'ஸ்வாமி! செய்த அபராதம் மிகவும் அற்பமாயிருக்க, அதற்கு யமதண்டமென இங்ஙனம் மிகக் கொடியதாகிய சாபம் அவ்வேதியர்கள் கொடுத்தது தகுமோ? அந்தணர்கள் இவ்வாறு உக்கிரமான சாபமிட்டது கண்டு நிருகராஜன் யாதுசெய்தான்? அதனை அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டுகிறேன்' என வேண்ட, ஸ்ரீ ராமபிரான் திருவாய்மலர்ந்தருளியதாவது,—'லக்ஷ்மணா! பிறகு நடந்த வர லாற்றைக் கூறுகின்றேன், கேள்:—அம்முனிவர்கள் வந்து இவ்வண்ணம் தனக்குச் சாபங்கொடுத்துச் சென்றதைத் தனது யோகதிருஷ்டியினால் கண்டு நிருகராஜன், மந்திரிகள் நகரத்தார் புரோஹிதர் பிரகிருதிகள் ஆகிய யாவரையும் வரவழைத்து மிகவும் துக்காக்கிராந்தனாகி யவர்களை நோக்கி, 'நண்பர்காள்! நான் சொல்வதைச் சற்றுக் கவனமாகக் காதுகொடுத்துக் கேளுங்கள்: நாரதர், பருவதர் என்னும் முனிவரிருவரு மிங்குவந்து எனக்குக் கொடியசாபமிட்டு வாயுவேகமாகத் தேவலோகஞ் சென்றனர்கள். இனியான் செய்யவேண்டுவதென்னை? இப்பொழுதே எனது குமாரனான வசுவுக்குப் பட் டாபிஷேகஞ்செய்யுங்கள்; சிற்பிகளை யுடனேவரவழைத்து யான் சுகமாக வசிப்பதற்கேற்றபடி சிறந்த குழியொன்று நிருமிக்குமாறு கட்டளையிடுக. யான் அதிற்புகுந்திருந்து எனக்கு நேரிட்ட பிராம்மணசாபத்தைப் போக்கு கின்றேன். வருஷாகாலத்தில் வசிப்பதற்கொன்றும், பனிநாளில் வசிப்பதற் கொன்றும், கோடைகாலத்தில் வசிப்பதற்கொன்றுமாக மூன்றுகுழிகள் நிருமிக்கக்கடவர்கள். அவற்றைச்சுற்றிலும், காய்கனிமரங்களும், பூங்கொடி களும், நிழல்தரும் செடிகொடிகளுமாகிய நாநாவிதமான விருக்ஷவகைகள் அமைத்து, அக்குழிகளுக்கு எப்புறத்திலும் அதிரமணீயமாயிருக்குமாறு செய்யுங்கள்; இச்சாப முள்ளளவும் யான் சுகமாக அவ்விடத்தே வாஸஞ் செய்கின்றேன். யானிருக்கு மிடத்திற்குச் சுற்றிலும் அரையோஜனை தூர மெப்பொழுதும் மணமுள்ள மலர்கள் நிறைந்திருக்குமாறுசெய்க' எனவிதித் தனன்.

இவ்வாறு மந்திரிமார்களுக்கு விதித்த பின்னர் தன்மகனையழைத்து அம் மன்னவன், 'ஹே வத்ஸ! நீ யெப்பொழுதும் தருமத்திலேயே நோக்குடையவ னாகி ராஜநீதி தவறாது பிரஜைகளைப் பரிபாலித்துவருக. பிராம்மணர்கள் வந்து எனக்குச் சாபமிட்டதை நீ நேராகவே கண்டனையே. யான் செய்த அபராதம் மிகவும் அற்பமாயினும் இங்ஙனம் அதியுக்கிரமான சாபமிட்டனர்க ளன்றோ? இனி நீ யென்னைப்பற்றியும் சோகிக்கவேண்டா; ஈச்வரனெல்லா முணர்ந்தவன்; அவனே இவ்விதமான விசனங்களை விளைவிக்கின்றனன்.

ప్రాప్తవ్యానేవప్రాప్నోతి గన్తవ్యానేవగచ్ఛతి।
లబ్ధవ్యానేవలభతే దుఃఖానిచసుఖానిచ॥

ப்ராப்தவ்யாநேவப்ராப்நோதி கந்தவ்யாநேவகச்சதி |
லப்தவ்யாநேவலபதே துக்காநிசஸுகாநிச ||

ஹேவத்ஸ! ஒவ்வொருவனும் பூர்வஜன்மத்திற் செய்த பாபபுண்ணியங்களுக்கு ஏற்றவண்ணம் அவனவன் பெறத்தகுவனவற்றையே பெறுகின்றனன்; செல்லத்தகு மிடங்களுக்கே செல்லுகின்றனன்; அநுபவிக்கத் தகுவனவாகிய சுகதுக்கங்களையே அநுபவிக்கின்றனன். அதற்குமாறாக மற்றொன்றும் நடப்பதின்று. ஆதலின் அது விஷயத்தில் நீ விசனமுறுவதுவீண்' என இவ்வாறு அவ்வேந்தன் தன் மைந்தனுக்குப் புத்திகூறி, உடனே ஓணகை மாறித் தான் வசிப்பதற்காகச் சிறந்த ரத்தினங்களிழைத்து அற்புதமாக நிருமிக்கப்பட்ட பள்ளத்திற் புகுந்து தனக்கு அவ்வேதியர்கள் கொடுத்த சாபத்தை யநுபவிக்கலாயினன்' என வருளிச் செய்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்திரண்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## அறுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

நிமிசக்கரவர்த்தி சபிக்கப்பெற்று வருந்தியதும்,
அதற்குப்பிரதி யவர் தமது குருவான வஸிஷ்டரைச் சபித்ததும்.

---

நிருகராஜன் சாபம் பெற்றகதையை யிவ்வாறு சொல்லி முடித்து ஸ்ரீராமபிரான் பிராதாவை நோக்கி மறுபடியும், 'இலக்ஷ்மணா! இஃதொன்று மாத்திரமேயன்று, இதற்குத் திருஷ்டாந்தமாக மற்றொரு கதையுமுண்டு; உனக்குக் கேட்கவேண்டுமெனை விருப்பமுளதாயின் 'அதனையும் கூறுகின்றேன், கேள்' என, இளையபெருமாள், 'ஸ்வாமி! இத்தன்மையவாகிய ஆச்சரியமான கதைகள் எத்தனை கேட்கினும் அடியேனுக்கு அவற்றில் திருப்தியுண்டாவதில்லை யென்பது திருவுள்ளத்திற்குத் தெரியாததோ' என வுரைத்து அக்கதையைக் கேட்பதில் தமக்குள்ள அதிகமான ஆஸ்தையை வெளியிட்டனர். இளையபெருமாள் இவ்வண்ணம் உரை செய்தது கேட்டு ஸ்ரீரகுநந்தனன் அருளிச்செய்யலாயினர்.

### நிமிசக்கரவர்த்திக்கு நேர்ந்த சாபம்.

"மஹாத்துமாவான இக்ஷ்வாகு மஹாராஜாவுக்குப் பன்னிரண்டாவது புத்திரராகிய நிமியென்னும் சக்கரவர்த்தி யொருவரிருந்தனர். அவர் மஹா பராக்கிரமசாலி, தரும நெறி தவறாதவர். அவர் மஹா சவுரியமுடையராகி கௌதம முனிவராச்சிரமத்திற்கருகே அமராவதி பட்டணத்திற்கு நிகராக வைஜயந்தமெனப் பெயர்பெற்ற அற்புதமான நகரமொன்று நிருமிக்கச்

செய்து அதில் வஸிக்கலாயினர். அங்ஙன மிருக்கையில் அவருக்கு தீர்க்க ஸத்திரம் எனப்பெயர்பெற்ற யாகமொன்று செய்யவேண்டு மென்கிற விருப்ப முண்டாகியது. அதன்பொருட்டு மனுபுத்திரரும் தமது தந்தையுமான இக்ஷ்வாகு மஹாராஜாவினது அனுமதிபெற்று, அதற்குப் புரோஹிதராயிருந்து நடப்பிக்குமாறு வஸிஷ்டமுனிவரை முதலில் வேண்டிக்கொண்டனர். அதன் பின்னர் அத்திரி, அங்கிரசு, பிருகு முதலான தபோதனர்களை வரிக்கலாயினர். ஏனெனில், முதலில் வஸிஷ்டமாமுனிவரை வரித்தபொழுது அவர், 'தேவேந்திரன் இதற்குமுன்பே தனது வேள்விக்கு வருமாறு என்னை வேண்டியிருக்கின்றனன்; அதுமுடிந்த பின்னர் நீ யாகம் ஆரம்பிக்கலாம்' என மொழிந்துசென்றனர். இந்திரனது யாகத்தின் பொருட்டுத் தேவலோகம் சென்ற வஸிஷ்டர் திரும்பி வருமளவும் பொறுத்திருக்க மனமிலராகி நிமிசக்கரவர்த்தி மற்றவேதியர்களை வரவழைத்து இமயமலைச் சாரலில் தமது நகரத்திற்கருகே கௌதம முனிவரைக்கொண்டு வேள்விபுரியலாயினர். அவர் அதன் பொருட்டு ஐயாயிரமாண்டு தீக்ஷைகொண்டு அளவற்ற பொருள் செலவு செய்து வெகுசிறப்புடனே தீர்க்கஸத்திரம் செய்யத் தொடங்கினர்.

இஃது இங்ஙனமாக, அமரருலகஞ்சென்ற அருந்ததிபதி விண்ணவர்தலைவனதுவேள்விமுற்றுப்பெற்றவுடனே, தம்மரசனுன நிமிசக்கரவர்த்திக்குயாகஞ் செய்வித்தற் பொருட்டு அவரிடம் விரைந்து வந்தனர். வந்தவிடத்தில் தமக்குப் பிரதியாகக் கௌதமமுனிவர் வேள்வியை நடத்துவதாக வுணர்ந்து பிரம்ம புத்திரரான வஸிஷ்டர் மிகக்கோபங்கொண்டவ ராயினர். ஆயினும் அக்குரிசிலைக் காணவேண்டுமெனக் கருதி அவரது அரண்மனைவாயிலிற் சென்று ஒரு முகூர்த்தகாலம் காத்திருந்தனர். அப்பொழுது அவ்வரசர் இளைப்பினல் அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்தனர். அதுகண்டு வஸிஷ்டர், வேந்தன் உடனே தம்மைவந்து எதிர்கொள்ளாது காக்கவைத்திருக்கின்றனனெனக் கோபமதிகரித்தவராகி, 'அரசனே! நீயென்னை யவமதித்து வேறொரு முனிவரை வரித்து வேள்வியை நடத்துகின்றமையின், உனது உயிர் உடலை விட்டுப் பிரியக்கடவது' எனச் சாபமிட்டனர்.

அதன்பின்னர் நிமிசக்கரவர்த்தி துயிலெழுந்து தமக்கு நேர்ந்த சாபத்தை யுணர்ந்து அவரும் அதிகமாகச் சீறிச்சினந்து, 'யான் உடம்பு தெரியாமல் துயிலுமளவில், நீர் சினத்தினல் சிந்தைகலங்கி யமதண்டமென மிகக் கொடியதான சாபமெனக்குத் தந்தமையின், உமது அற்புதமான உடலும் ஜீவனெழிந்ததாகக் கடவது' எனப் பிரம்ம புத்திரருக்குக் கொடியசாபம் கொடுத்தனர். இவ்வண்ணம் மஹாப்பிரபாவசாலிகளான அந்தணர்பெருமானும் அரசர்பெருமானுமாகிய இருவரும் உள்ளங்கலங்கி ஒருவர்க்கொருவர் சாபமளித்தவளவில், இருவரும் உடலைவிட்டு உயிர் நீங்கினவர்களாயினர்' எனவருளிச்செய்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்துநான்காவது ஸர்க்கம்.

வஸிஷ்டமாமுனிவர்தமக்குச்சரீரமுண்டாகுமாறு பிரமதேவனை வேண்ட,

அவர் அதற்கு உபாயமுணர்த்தது.

---

ஸ்ரீராமபிரான் இவ்வாறு மொழிந்தது கேட்டு இளையபெருமாள் மறுபடியும் அஞ்ஜலிஹஸ்தராய் அண்ணனை நோக்கி, 'ஸ்வாமி! இவ்வண்ணம் அவ் வேதியரும் வேந்தனும் உடலொழிந்தவர்களாயின், மறுத்துமெவ்விதமாக அவர்கள் சரீரம்பெற்றுப் பெருமையாக வாழ்ந்தனர்? இவ்விஷயத்தை அடியேற்கு விளங்கக்கூற வேண்டுகின்றேன்' என விண்ணப்பம் செய்ய, ரகுவீரன் விளம்பலாயினர். 'அக்கதையைக்கேளப்பா லக்ஷ்மண! மஹாதருமிஷ்டர்களான வேந்தனும் விப்பிரனுமாகிய இருவரும் இவ்வண்ணம் ஒருவர்க்கொருவர் சாபமிட்டு உடலைநீத்து வாயுவடிவமாக மாறினரன்றே? அதன் பின்னர் வஸிஷ்டமஹாமுனிவர் தமக்கு வேறொரு சரீரத்தை வேண்டித் தமது பிதாவான பிரமதேவரிடஞ்சென்றனர். அவ்விடத்து அவர் வாயுவடிவமாகவே நின்று நான்முகனை நமஸ்கரித்து நவில்கின்றனர். 'ஹே லோகநாத, ஹே மஹாதேவ, ஸ்ரீமகாவிஷ்ணுவினது நாபீகமலத்தினின்று முண்டான உத்தமனே! அடியேன் நிமிசக்ரவர்த்தியினது சாபத்தினல் சரீரமில்லாதவனுயினேன். சரீரத்தை யிழந்தவர்களுக்குப் பெருந்துன்பமுண்டாகுமன்றே? சரீரமொழிந்தவர்கள் இம்மைமறுமையின் பயன்களைப்பெறுமாறு ஒருநற்செய்கையும் செய்வதற்கு உபாயமொன்றுமிலதே. ஆதலின் அடியேனுக்கு வேறொரு தேகமுண்டாகுமாறு அனுக்கிரகிக்கவேண்டுகின்றேன்' எனப்பிரார்த்தித்தனர்.

அதுகேட்டுக் கமலயோனி கூறுகின்றனர். 'வத்ஸ, வஸிஷ்ட! அங்ஙனமே யாகுக; இப்பொழுது நீ மித்திராவருணர்களது வீரியத்தில் பிரவேசிப்பையாகில், அதினின்று நீ * அயோனிஜனுக உற்பவித்து மஹாதருமிஷ்டனுகி எனக்குப் பிரியனுன புத்திரனேயாகுவை' என அனுக்கிரகித்தனர். அதுகேட்டு அம்முனிவர் அப்ஜயோனியை யபிவாதனஞ்செய்து வலம்வந்து விடைபெற்று விரைவாக வருணனது ஆலயமான ஸமுத்திரத்திற்கு எழுந்தருளினர். அக்காலத்தில் மித்திரனென்னும் ஒருதேவன் வருணனுக்கு மித்திரனுகி அவனுக்கு இணங்கியவனுகவே ஆங்கு அவ்வுலகத்தைப் பரிபாலித்து வந்தனன்.

இஃது இங்ஙனமாக, அத்தருணத்தில் ஊர்வசியென்னும் தெய்வப்பெண் தன்தோழிமார்களுடனே கூடிக் கையிற் குடமேந்திக் கடற்கரைக்கு வந்து விளையாடலாயினள். அற்புதமான அழகுவாய்ந்த அவ்வணங்கினைக் கண்ணுற்ற

---

* அயோனிஜன் - ஒருசரீரத்தின் வழியாகப்பிறவாது வேறுவிதமாக உற்பவித்தவன்.

வளவில் * வருணனுக்கு அவள்மீது அதிகமான காதலுண்டாகியது. அதனல் அவன் அகமகிழ்ச்சிகொண்டு ஊர்வசியின் அருகேசென்று, செந்தாமரையிதழ் போன்ற கண்களும் முழுமதிபோன்ற முகமுமமைந்த அவ்வழகியை நோக்கி ‘கண்மணி! நீ யென்னுடன் புணர்ந்து எனக்குப்பேரின்பம் விளைவிப்பாயாக’ எனவேண்டினன். அவ்வுரையைச் செவியுற்ற ஊர்வசி வருணனைநோக்கிக் கைகூப்பிக்கொண்டு, ‘ஸ்வாமி! அடியாளை முன்னமே மித்திரன் நேராக வரித்திருக்கின்றனனே; இனியான் செய்யத்தகுவதுயாது?’ எனமொழிந்தனள். வருணன் அதுகேட்டு அநங்கனது அம்புகளால் அடியுண்டு ஆற்றுதவனுகி அவளைநோக்கி, ‘பெண்மணி! உனக்கு என்னுடன் புணர்ந்து மகிழமனமில்லையாயினும், இப்பொழுது யான் உன்மீது காதல்கொண்டது காரணமாக எனது வீரியம் ஸ்கலிதமாயினமையின், இஃது வீணுகாவண்ணம் இதனைத் தெய்வத் தன்மையுடையதான உனது கும்பத்தில் விட்டு யான் எனது காதல் தணிகின்றேன்’ என வுரைத்தனன். திக்குப்பாலகனன வருணன் இவ்வாறுவேண்டியது கேட்டு ஊர்வசி அகமகிழ்ந்தவளாகி, ‘ஸ்வாமி! அங்ஙனமே யாகுக; அடியாளது கருத்தெல்லாம் தேவரீரிடமேயுள்ளது; காதலும் தேவரீடம் அதிகமே. சரீரமொன்று மாத்திரமே மித்திரனுக்கு அடிமைப்பட்டுப் பராதீனமாயிருக்கின்றது’ என்று கூறினுள். ஊர்வசி யிவ்வாறு விளம்பியது கேட்டு வருணன் எரிகின்ற அக்கினி ஜ்வாலைபோன்றதாய் மிகவும் அற்புதமாகிய மகிமை பொருந்திய தனது வீரியத்தை ஊர்வசியினது குடத்தில் விடுத்துப் போயினுன்.

---

* குடத்தைக் கையிலேந்தித் தோழிமார்களுடனே ஊர்வசி யொருகாலத்தில் விளையாடக் கடலோரஞ் சென்றனள். மித்திரன் அவளை முதலில் கண்ணுற்று மோகித்தனன். அத்தருணம் புணரவியலாது அவர்களிருவரும் மனத்தின் கண்ணே காதல் கொண்டிருந்தனர்கள். அதனல் ஸ்கலிதமான மித்திரனது வீரியத்தை ஊர்வசி தனது குடத்தில் ஏற்றுக்கொண்டனள். அதன் பின்னர் வருணன் அவளைக் கண்ணுற்றுக் காதல்கொண்டு அவளுடன் இன்பம் நுகர ஆவல் கொண்டனன். அதுகண்டு ஊர்வசி தான் முன்னமே மித்திரனுக்கு உடன்பட்டுப்போயின செய்திகூறி, அதுகாரணமாக வெளிப்பட்ட வருணனது வீரியத்தினையும் தன் குடத்திலேயே ஏற்றுக்கொண்டனள். தமக்குச்சரீரத்தை வேண்டிப் பிரமதேவரிடம் விடைபெற்றுச் சென்ற வாயுவடிவமான வஸிஷ்டர் அத்தருணத்தில் அக்கடற்கரை சேர்ந்து பிரமதேவர் அனுக்கிரஹித்தவாறே ஊர்வசியினது குடத்திலிருந்த மித்திரா வருணர்களது வீரியத்திற் புகுந்தனர். அதினின்று முதலாவது அகஸ்தியரும் இரண்டாவது வஸிஷ்டரும் உற்பவித்தனர்கள். அகஸ்தியரும் வஸிஷ்டருமாகிய இருவரும் மித்திரா வருணர்களுடைய வீரியத்தினின்று தோன்றியவர்க ளாதலின், மைத்ராவருணர் எனவும், கும்பத்தினின்று தோன்றியவராதலின் கும்பஸம்பவர் எனவும், ஊர்வசி காரணமாக உதித்தவர்க ளாதலின் ஊர்வசி புத்திரர் எனவும் பெயர்பெற்று விளங்குகின்றனர்; ஒரே இடத்தில் தோன்றியவர்களாதலின், அவர்கள் ஸோதரரு மாகின்றனர்; மானிட சரீரத்தினின்று முற்பவித்தவரல்லராதலின், அயோநிஜாரகவு மெண்ணப் படுகின்றனர். பிறகு மித்திரனிடஞ் சென்ற ஊர்வசி, அவள் வருணனை விரும்பிய காரணத்தால் அம்மித்திரனல் சபிக்கப் பட்டவளாகிப் பூலோகத்தில் புரூரவ சக்கரவர்த்தியைச் சேர்ந்து அவனிடம் ஆயுவென்னும் புத்திரனைப் பெற்றனள் என்பது புராணகதை.

அதன் பின்னர் அவ்வரம்பைமகள் அவ்விடம் விட்டு மித்திரனிடஞ் சென்றாள். அவளைக்கண்டபோது மித்திரன் மிகக் கோபங்கொண்டவனாகி அவ்வணங்கை நோக்கி, 'பெண்ணே! நீ முதலில் என்னைப் புருஷனாக வரித்து அதன்பின்னர் மற்றொருவனை மனத்தில் கணவனாகக் கொண்டமையின், நீ கற்பழிந்தவளாகி எனது கோபத்திற்குப் பாத்திரமாயினை; நீ செய்த இக்குற்றத்தினால் நீ இத்தேவலோகத்தை விட்டு மனுஷியலோகம் சேர்ந்து அங்கே சிலகாலம் வஸித்திருப்பாயாக. ஆங்கு புதனது புத்திரனான புரூரவன் என்னும் அரசன் காசிராஜனாக விளங்குகின்றனன். அவன் உனக்குப் புருஷனாகுவான். மதிகெட்டமாதே! நீ அவ்வேந்தனிடம் சென்றுவாழ்க' எனச் சபித்தனன்.

மித்திரன் கொடுத்த சாபத்தின் கொடுமையால் ஊர்வசி பிறகு பூலோகத்தில் புதனது புத்திரனான புரூரவசக்கரவர்த்தியினிடம் போய்ச் சேர்ந்தனள். அவ்வரசனுக்கு ஊர்வசியினிடம் ஆயுவென்னும் உத்தமகுமாரனொருவன் உற்பவித்தனன். அந்த ஆயுவுக்குத் தேவேந்திரனுக்கொப்பான ஆற்றலுடையவனாய் நகுஷனென்னும் நற்புதல்வன் பிறந்தனன். தேவேந்திரன் விருத்திராசுரனை வதைத்து வருந்தியகாலத்தில் அந்த மஹாநுபாவனான நகுஷன் இந்திரபதம் பெற்று அநேகமாயிரமாண்டு இந்திரலோகம் ஆண்டான். மஹாரூபவதியாகிய தெய்வப்பெண்ணான ஊர்வசி இவ்வண்ணம் மித்திரன் கொடுத்த சாபத்தின் கொடுமையால் தேவலோகத்தைவிட்டுப் பூலோகஞ் சேர்ந்து பலவருஷகாலம் அங்கேவஸித்திருந்து, அச்சாபமொழிந்த பின்னர் தேவலோகம் போய்ச்சேர்ந்தனள்' என்றுகூறினார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தைந்தாவது ஸர்க்கம்.

அருந்ததீபதி உடம்பு பெற்றதும், நிமிசக்கரவர்த்தி தேவர்களளித்த வரத்தினால் பிராணிகளது கண்ணிமையில் வசிக்கலானதும்.

---

ஸ்ரீராமபிரான் இவ்வண்ணம் உரைசெய்த அற்புதமான விருத்தாந்தத்தைச் செவியுற்றுச் சுமித்திராநந்தனன் ஸந்தோஷமடைந்தவராகி, 'ஸ்வாமி! கதையைக் கேட்கக் கேட்கப் பேராநந்தமாயிருக்கின்றது. சரீரத்தை நீத்துச் சென்ற நிமிசக்கரவர்த்தியும் வஸிஷ்டமாமுனிவரும் மீளவும் எவ்வாறு தேகம் பெற்றனரோ, அதனை விளங்கக் கூறவில்லையே' என வினவ, மஹாநுபாவரான வஸிஷ்டருடைய மற்றுமுள்ள கதையை விவரமாகக் கூறலாயினார். 'லக்ஷ்மணா! சொல்லுகிறேன், கேள்: மஹிமைபெற்றவர்களான மித்திராவருணர்களுடைய வீரியம் ஊர்வசி காரணமாக வெளிப்பட்டு அவளது கும்பத்தில் புகுந்ததல்லவா? அஃது பரிபூர்ணமாகி அதினின்றும் சோதிமயமாய் இரண்டு முனிவர்கள் உற்பவித்தனர்கள்; முதலில் அதினின்றும் அகஸ்தியர் தோன்றி

ஞர். தோன்றினவளவிலே அம்முனிவர் மித்திரனை நோக்கி, 'யான் உனது புத்திரனல்லன்' எனப்புகன்று புறப்பட்டுபோயினர். அந்தக்கும்பத்தில் முதலிலே மித்திரனது வீரியமும் அதன்மேல் வருணனது வீரியமும் வைக்கப்பட்டனவன்றோ? அகஸ்தியர் வருணனது வீரியத்தினின்றுமே தோன்றினராதலின் அவர் அங்ஙனமுரைக்கலாயிற்று. அதன்பின்னர் சிலகாலஞ் சென்று அந்த மித்திராவருணர்களது வீரியத்தினால் இக்ஷ்வாகுகுலத்திற்கு முக்கிய புரோஹிதரான வஸிஷ்டமாமுனிவர் உற்பவித்தனர். மிகப் பரிசுத்தரான அம்முனிவர் பிறந்தமாத்திரத்திலே இக்ஷ்வாகுமஹாராஜா அவரிடஞ்சென்று அவ்வந்தணர்பெருமானைத் தங்குலத்திற்குப் புரோஹிதராயிருக்குமாறு வேண்டிக்கொண்டனர்.

தம்பி, லக்ஷ்மணா! வஸிஷ்டமாமுனிவர் அபூர்வமான புதியசரீரம் பெற்ற வரலாறு கூறினேன். இனி நிமியின் கதை கூறுகின்றேன் கேள்: அவ்வேந்தனது உடலினின்றும் உயிர்பிரிந்துபோயினமைகண்டு அங்கிருந்த முனிவர்கள் பிரகிருதிகளுடனே கூடி அவ்வுடலைப் புஷ்பசந்தனாதிகளாலும் ஆடையாபரணங்களாலும் அலங்கரித்து, அஃது அழியாதவண்ணம் சுகந்தமிட்டுத் தைலகடாஹத்தில் வைத்துப் பரிபாலித்தனர்; பிறகு அவ்வேந்தன் துவக்கிய வேள்வியைக் குறைவற நிறைவேற்றி அவனது யாகதீக்ஷையையும் பூர்த்தி செய்தார்கள். அப்பால் பிருகுமகரிஷி அம்மன்னவனது ஆவியைநோக்கி, 'ராஜனே! யான் உன் விஷயத்தில் அகமகிழ்ந்தவனாயினேன்; உன் உயிர் உடலோடு கூடுமாறு அனுக்கிரகிக்கின்றேன்' என்று கூறினர். வானவர்களும் நிமிசக்கரவர்த்தி செய்த யாகத்தினால் அவனிடத்தில் சாலவும் உவப்பெய்தியவர்களாகி அவ்விறையை நோக்கி, 'அரசர்பெருமானே! உன் விஷயத்தில் யாங்கள் மிகவும் களிப்புற்றவர்களானோம்; உனக்கு விருப்பமான வரத்தை வேண்டுக; உனது ஜீவன் எவ்விடத்துக் குடிபுகுந்திருக்கவேண்டுமென நீ கருதுகின்றனை?' என வினவினர்கள். விண்ணவர்கள் இவ்வண்ணம் வினவியது கேட்டு வேந்தன் வானத்தவர்களை நோக்கி, 'தேவர்காள்! இனி அடியேனுக்குத் தேகம் வேண்டுவதின்று, பிராணிகளுடைய நேத்திரங்களில் வசித்திருக்க வரம்வேண்டுகின்றேன்' என்று கூறினன். அதுகேட்டு அமரர்கள் 'அங்ஙனமே யாகுக; நீ வாயுவடிவமாகவே யிருந்து எல்லாப் பூதங்களுடைய நேத்திரங்களிலும் ஸஞ்சரிக்கக்கடவை. ஹே பார்த்திவ! அங்ஙனம் நீ சமீரணவடிவமாகச் சஞ்சரிக்கையில், எல்லாப் பூதங்களும் இளைப்பாறுதற் பொருட்டாக அடிக்கடி கண்களை * இமைகொட்டுவார்கள்' எனவுரைத்துத் தம்மிடஞ் சென்றனர்.

இஃதிங்ஙனமாக, நிமியினது உடலைப் பாதுகாத்து வந்த முனிவர்கள், அந்தச் சரீரத்தை யெடுத்து வந்து அவனுக்குப் புத்திரனுண்டாவதன் பொருட்டு மந்திரங்களோதி ஓமஞ்செய்து அவ்வுடலை யரணிகொண்டு கடையலாயினர். அவ்வாறு கடையுமளவில் அதினின்று மொரு மஹாபுருஷர்

* நிமியினால் உண்டானமை பற்றி இமைகொட்டுதலுக்கு நிமிஷமென்றபெயர் வழங்கலாயிற்று.

உற்பவித்தனர். மதனம் (கடைதல்) செய்து உண்டானமையின் மிதியெனவும், ஜனித்ததனுல் ஜநகரெனவும், விதேஹனுல் (உடலில்லாதவனுல்) உண்டானமையின் விதேஹரெனவும் அவருக்குப் பெயர்கள் பிரஸித்தமாயின. அவர் மஹாபுண்யாத்துமாவாகி என்றும் யாகஞ் செய்வதிலேயே கருத்துடையவராயினர். இந்த விதேஹராஜனே ஜநககுலத் தலைவரான முதலரசர். இவராலேதான் அந்நாட்டிற்கே மிதிலையெனப் பெயர் பிரஸித்தமாகியது. இந்த மிதியின் குலத்தில் தோன்றியவராதலின் ஜநகமஹாராஜருக்கு மைதிலரெனவும் நாமதேயமாகியது' என வருளிச்செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தாறுவது ஸர்க்கம்.

பொறுமையின் பெருமை விளங்குமாறு ஸ்ரீராமபிரான் இளையபெருமாளுக்கு யயாதி சரித்திரம் சொல்லத்தொடங்கி, யயாதிக்குச் சாபம்வந்த வரலாறு கூறியது.

---

ஸ்ரீராமபத்திரன் இவ்வாறு புகன்றதுகேட்டு இளையபெருமாள் அவனை நோக்கி, 'ஸ்வாமி! விதேஹராஜாவின்பூர்வசரித்திரம் மிகவும் ஆச்சரியமானது; வஸிஷ்டர் நிமியென்னு மிருவருடைய வரலாறும் மிக வியக்கத்தக்கதே. ஆயினும் இதிலொன்று கேட்க விரும்புகின்றேன்: நிமிசக்கரவர்த்தி மஹாசூரரான க்ஷத்திரியரன்றோ? அதனுடனே முக்கியமாக யாகதீக்ஷைகொண்டவர்; அங்ஙனமாக, தமது குலகுருவான மஹாநுபாவராகிய வஸிஷ்டமாமுனிவரிடத்தில் பொறுமைகொள்ளாமற் சீற்றங்கொண்டது யாதுகாரணம்?' என வினவ, எல்லாநூல்களும் கற்றுக் கரைகண்டவரான ஸௌமித்திரியை நோக்கி ஸ்ரீராகவன் மறுமொழி யருளிச்செய்யலாயினர்.

---

### யயாதி சரித்திரம்.

---

'லக்ஷ்மண! கேள் அதன்வரலாற்றை: க்ஷமையென்பது யாவருக்கும் கைகூடுமோ? கோபத்தையடக்குவதருமை. ஸத்துவகுணமேமேலிட்டவராகிய யயாதிமஹாராஜா பொறுத்தவாறு மற்றெவரும் பொறார். * அவருடைய கதையைக் கூறுகின்றேன், அவதானத்துடனே கேள்: முற்சொன்ன நகுஷமஹாராஜாவின் புத்திரர் யயாதியென்பவ ரொருவரிருந்தார். அவர்க்கு மஹா

* மாமரம் யாதெனவினவினவ னொருவனுக்குப் பலாமரமின்னதெனப் புகலுமாறுபோல், நிமிசக்கரவர்த்தியேன் பொறைகொண்டிலரென வினவிய ஸௌமித்திரிக்கு ஸ்ரீராமன் யயாதிசரித்திரம் சொல்லத் தொடங்கியது பொருந்துமோவெனில், பொருந்தும். பிறரிடமுள்ள தோஷங்களைச் சிந்திப்பது கூடாதெனத் திருவுள்ளம்பற்றி அதை யவ்வளவோடு நிறுத்தி, பொறுமையென்னும் நற்குணத்தின் பெருமையையும், அருமையையும் அருளிச்செய்யலாயின ரெனவறிக.

ரூபவதிகளாய் இரண்டு மனைவிகள் வாய்த்தனர். அவர்களுள் ஒருத்தி அசுர ராஜனான விருஷபர்வாவினது மகள், சர்மிஷ்டையெனப் பெயர் பூண்டவள்; மற்றொருத்தி சுக்கிராசாரியருடைய புதல்வி, தேவயானி யென்பவள். இவளிடத்தில் அரசனுக்கு அவ்வளவாகப் பிரீதி யதிகமில்லை. அம்மன்னனுக்கு அம்மனைவிக ளிருவரிடத்திலும் அற்புதமான வடிவழகுள்ளவர்களாய் இரண்டு குமாரர்கள் பிறந்தனர்: சர்மிஷ்டையின் புத்திரன் பூரு என்பவன்; தேவயானியின் மகன் யதுவென்பவன். இவர்களில் பூரு சிறந்த சற்குணமுள்ளவனாயிருந்தமையாலும், அவனது தாயினிடமுள்ள அன்பின் மிகுதியாலும், இளையாள்மகனான அவனை யரசன் அதிகமாகப் பாராட்டிவரலாயினன். அதனைப் பார்க்கப் பொறுது யதுவானவன் விசன மதிகரித்தவனாகித் தன்மாதாவினிடஞ்சென்று, 'அம்மா! தந்தையானவர் என்னை அநாதரணைசெய்து இளையாள் மகனை மேலாகக் கொண்டாடுகின்றனரே! உயர்குலத்தவரான சுக்கிராசாரியரது வயிற்றிற்பிறந்த நீ பொறுத்தற்கரியதான இவ்வகை அவமானத்தையெவ்வாறு சகித்துக்கொண்டிருக்கின்றனை? நாம் இருவரும் ஒன்றுகூடி இப்பொழுதே தீக்குளித்து உயிரை விடுவோம்; அரசன் அசுரராஜன்மகளுடனே மகிழ்ந்து வாழ்க. இவ்வவமானத்தை யிவ்வண்ணமே பொறுத்துக்கொண்டு வாழவேண்டுமென உனக்கு விருப்பமாயின், எனக்கு விடைகொடு; நீ பொறுத்துப்பிழைத்திரு; நான் பொறுத்திரேன்; உடனே உயிரையொழித்து விடுகின்றேன்; இஃது உண்மை' என உரைசெய்தனன். இவ்விதமாகப் புத்திரன் மிகப்பரிதபித்துப் புலம்பியவாறே புகன்றதுகேட்டுத் தேவயானி மிக்க சினங்கொண்டவளாகித்தந்தையைமனத்தில்நினைத்தனள். தன்செல்வப்புதல்வி சோகமும் சினமுங்கொண்டு வருந்துவதுணர்ந்து சுக்கிராசாரியர் அப்பொழுதே அம்மகளிருக்குமிடத்திற்கு விரைந்துசென்றனர். அத்தருணத்தில் அப்பெண் மனநிலைமாறி மிகத்துன்புற்றிருப்பதுகண்டு 'குழந்தாய், நீ இங்ஙனம் சிந்தைகலங்கிச் சந்தோஷமின்றிச் சோகமுற்றிருப்பது யாதுகாரணம்?' என வினவினர். எத்தனைதரம் வேண்டிவினவியும் மறுமொழி கூறாதிருந்து இறுதியில் அம்மகள் மிகமுனிந்து, கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகத் தட்டித்தடுமாறிய சொற்களுடனே, 'அண்ணா! யான்விஷத்தையாயினும் அருந்தியுயிர்விடுகின்றேன்; அல்லது தீக்குளிக்கின்றேன்; தண்ணீரில் வீழ்ந்தாயினும் பிராணனைப்போக்குகின்றேன்; அங்ஙனமன்றி ஒருநிமிஷமேனுமினி யுயிரை வைத்திருக்க விரும்பேன். யான் இவ்விதமான அவமானமடைந்து துக்கத்தையனுபவித்துக்கொண்டிருக்க, நீர் இதனையுணராது உமதுகாரியத்தி லிருக்கின்றீர். விருக்ஷத்தினிடமுள்ள அலக்ஷியத்தினாலன்றோ, ஒருவன் அதனிடமுள்ள இலை தழைமுதலியவற்றை யழிக்கப்புகுவது? அங்ஙனமே இந்த ராஜரிஷி உம்மிடமுள்ள அலக்ஷியத்தினால் உம்மை அவமதித்தற்பொருட்டு, என்னை மேலாகமதியாது இவ்வண்ணம் அவமானப் படுத்துகின்றனன்.' எனப்புகன்றனள். புத்திரி யிவ்வாறு வருத்தமுற்று விளம்பியதுகேட்டு அசுரகுருவான பார்க்கவர் மிக்க சீற்றங்கொண்டவராகி நஹுஷன்மகனான யயாதியைநோக்கி, 'அரே நஹுஷபுத்திரா! நீ துர்ப்புத்தியுடையோனாகி

என்னை யவமதிக்கின்றமையின், நீ உடனே உடம்புதளர்ந்து மூப்புமேலிட்டு மனம் வருந்துக ' எனச்சபித்து, தம்புத்திரியைச் சோகந்தணியச் சமாதானப்படுத்தித் தம்மிடத்திற்குச் சென்றனர். அது தெரிந்து வேந்தன் அவரிடஞ் சென்று வணங்கி வேண்டிக்கொள்ள, அவர், யானிட்டசாபம் ஒருபொழுதும் மாறாது; எவனேனுமொருவன் உனது மூப்பை மாற்றிக் கொள்ள உடன்படுவானாயின், உனது மூப்பை அவனுக்குக் கொடுத்து அவனது வயதை நீ பெற்று, உனக்கு வேண்டிய இன்பங்களை நுகரலாம் என வரமீந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்தாறுவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லியிராத விஷயம்.

பிராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்னும் நான்கு வருணத்தவரில் மேற்குலத்திற் பிறந்த புருஷர் தாழ்ந்த குலத்தில் பிறந்த பெண்ணை விவாஹம் செய்து கொள்ளலாம்; தாழ்ந்த குலத்தவர் மேற்குலத்துஸ்திரீயைக் கலியாணம் செய்து கொள்ளலாகாதென்று சாஸ்திரமிருக்க, க்ஷத்திரியனான யயாதி பிராம்மணரான சுக்கிராசாரியர் மகளை மணந்து கொண்டது எங்ஙனமெனில், கேளுங்கள்:

அசுரராஜனாகிய விருஷபர்வாவின் மகளான சர்மிஷ்டையானவள் ஒருகால் தன் தோழிமார்களுடனும் குருபுத்திரியான தேவயானியுடனும் உத்தியானவனத்திற் சென்று பொழில்விளையாட்டு விளையாடினாள். அக்காலையில் அவர்கள் ஆடைகளைக்களைந்து கரைமீது வைத்து ஆங்குள்ள தாமரைத்தடாகத்தில் ஜலக்கிரீடை செய்யலாயினர். அத்தருணத்தில் பரமசிவன் பார்வதிதேவியுடனே விருஷபாரூடராய் அவ்விடத்து ஆகாயமார்க்கமாய் எழுந்தருள, அவரைக்கண்டு அக்கன்னியர்கள் வெட்கி உடனே கரைமீதேறி ஆடைகளையணிந்து கொண்டனர். சர்மிஷ்டை அவசரத்தில் அறியாமல் தனதெனவெண்ணித் தேவயானியின் புடவையை யெடுத்து உடுத்துக்கொண்டனள். அதுகண்டு சுக்கிராசாரியர்மகள் மிகமுனிந்து, நாம்பிரம்மகுலமென்றும் முக்கியமாகக் குருபுத்திரியென்றும் உணராது நமது வேலைக்காரியான இவள், யாகத்தில் ஹோமஞ்செய்வதற்காக வைத்த பொருளை ஒருநாய் வந்து கவ்வுவதுபோல, எடுத்துத் தரித்துக்கொண்டனளே! இதென்ன அக்கிரம மென்றனள். அதுகேட்டுச் சர்மிஷ்டை சீறிச் சினந்து பல்லைக்கடித்துக்கொண்டு தேவயானியை நோக்கி, 'அடி, பேதாய்! நீ உனது நிலையை உணராது ஏனிங்ஙனம் பிதற்றுகின்றனை? காலையிலெழுந்தவுடனே காக்கைகள்போல் எங்கள் வீட்டிற்கு ஓடிவந்து பிச்சையெடுத்தாலன்றி உங்களுக்குப் பிழைப்புவேறுண்டோ?' என்றிப்படிப் பலவிதமா யிகழ்ந்துபேசி ஆடையின்றியே அவளை ஆங்குள்ள ஒருகிணற்றில் தள்ளிவிட்டு வீட்டுக்குப்போய்விட்டனள்.

இஃது இங்ஙனமாக, தற்செயலாய் யயாதிமஹாராஜன் வேட்டையாடிக் கொண்டு, அத்தருணம் அங்குவந்து நீர்வேட்கைகொண்டு தண்ணீருக்காகத்

தேவயானி வீழ்ந்திருந்த கிணற்றை யெட்டிப்பார்த்தனன். அவ்வாவியில் அவ் வணங்கினைக் கண்ணுற்றுக் கருணைகூர்ந்து அவளுக்கு அரையி லாடையில்லா மைகண்டு தன்மேலுத்தரீயத்தைக்கொடுத்து அணிந்து கொள்ளச்செய்து அவ ளைக் கையைப்பிடித்துத் தூக்கிக் கரைமேலேற்றிவிட்டனன். கரையேறிய பிறகு தேவயானி யயாதியைப்பார்த்து, 'மஹாபிரபு! இப்பொழுது நீர் என் கையைப்பிடித்ததனால் இனியான் மற்றொருவருக்கு மனையாளாக மனங்கொள் ளேன். கிணற்றில் வீழ்ந்திருக்கு மடியாளைத் தேவரீர் இப்பொழுது இங்குவ ந்து கண்டு கைதூக்கி விடும்படியானது தெய்வச்செயலேயன்றி மானிடராலா கிய காரியமன்றே. ஆதலின் தெய்வமே தேவரீரை யெனக்குக் கணவனாகக் கொண்டுவந்து கொடுத்தது போலும். அன்றியும் எனக்குப் பிராம்மணன் பர் த்தாவாகக் கூடாதென்று ஒருசாபமும் உண்டாயிருக்கின்றது. அஃதென்ன வெனில் சொல்லுகிறேன் கேளுங்கள்:

பிரஹஸ்பதியின் குமாரனான கசனென்பவன் எனது தந்தையினிடம் மிருதஸஞ்சீவினியென்னு மொரு அருமையான வித்தையை அப்பியஸித் துக்கொண்டனன். அப்பொழுது யான் அவனை எனக்குப் பர்த்தாவாகும் படி வேண்டினேன்; குருபுத்திரியாதலின் உன்னை யான் கலியாணஞ்செய்து கொள்ளலாகாதென அவன் மறுத்தனன். அதுகண்டு நான் கோபித்து என் தந்தைகற்பித்தவித்தை உனக்குப் பயன்படாமற் போகக்கடவதென அவனைச் சபித்தேன். அதற்குப் பிரதியவன், எனக்குப் பிராம்மணன் பர்த்தாவாகாமற் போகக்கடவதெனச் சபித்தனன். அதனால் தேவரீரே அடியாளுக்கு ஏற்ற கணவனாகுகவென வேண்டினாள். அதுகேட்டு யயாதி அந்த விவாஹம் சாஸ் திரவிருத்தமானது பற்றித் தனக்கு அஸம்மதமேயாயினும், இஃது ஒருதெய் வச்செயலென்று உணர்ந்து, அவளது மனம் தன்னிடமே அதிகமாகப்பற்றி யிருப்பதையும் அறிந்து அவளது வேண்டுகோளுக்கு உடன்பட்டு விடை பெற்றுக்கொண்டு போயினான்.

அதன் பிறகு தேவயானி கோவென்று கதறிக்கொண்டு பிதாவினிடம் போய்ச் சர்மிஷ்டை சொன்னவை செய்தவையாவும் விளங்கக் கூறி அவருக் குக் கோபமுண்டாகுமாறு செய்தனள். அது கேட்டுச் சுக்கிராசாரியர் சீற் றங்கொண்டு தமது புரோஹிதத்தொழிலை வெறுத்துத் தன்புத்திரியுடனே பட்டணத்தைவிட்டு வெளியேபோய்விடப் புறப்பட்டனர். அசுரகுருவான சுக்கிராசாரியர் அசுரராஜனிடம் விரோதப்பட்டது கண்டு தேவர்கள் அவ ரைச் சந்தோஷப்படுத்தித் தம்மிடம் அழைத்துக்கொள்ளக் கருதினர்கள். அதுகண்டு விருஷபர்வா மிகவுமஞ்சி உடனே ஓடிச் சுக்கிராசாரியர் திருவடி களில் வீழ்ந்து வணங்கித் தன்பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினான். சீரொழுகு சான்றோர் சினம் விற்பிடித்து நீர்கிழிய வெய்தவடுப்போல மாறு மாதலின், அசுரகுரு அக்கணமே கோபந்தணிந்து, 'வத்ஸ! என்னாலாவதொ ன்றுமிலது; யான் உனது வேண்டுகோளுக்கு உடன்பட்டேன். ஆயினும் யான் எனது மகளை விட்டுவிட என்னாலாவதன்று; ஆதலால் நீ அவளது மனோரதத்தைப் பூர்த்திசெய்க' என்றனர். அங்ஙனமே யாகுகவென்று அசுர

ராஜன் அதற்கு உடன்பட்டனன். அதுகேட்டுத் தேவயானி, எவ்விடத்தில் என்னை எனது தந்தை கன்னிகாதானம் செய்து கொடுக்கின்றனரோ, அவ்விடத்துச் சர்மிஷ்டை தன் தோழிமார்களுடனே வந்து எனக்கு என்றைக்கும் வெள்ளாட்டி வேலைசெய்து கொண்டிருத்தல் வேண்டுமென விரும்பினள். வேறு விதியின்றிக் காரியகௌரவத்தை நோக்கிச் சர்மிஷ்டை அங்ஙனமே செய்துவர உடன்பட்டனள். பிறகு சுக்கிராசாரியார் தேவயானியை யயாதி மஹாராஜாவுக்கு விவாஹம் செய்துகொடுக்க, அவள் சர்மிஷ்டை முதலான வேலைக்காரிகளுடனே யயாதியினிடம் போய் வாழ்ந்திருந்தனள்.

இவ்வாறிருக்கையில் ஒருகால் சர்மிஷ்டை புத்திரனைப்பெறவிரும்பி ருதுகாலத்தில் யயாதி மஹாராஜாவினிடம் மோஹங்கொண்டு தன்னை மணந்துகொள்ளுமாறு வேண்டினள். அங்ஙனமே அவ்வரசன் அதற்கு உடன்பட்டதனால், அவனுக்குச் சர்மிஷ்டையினிடத்தில் புத்திரர் பிறந்தனர். அதுகண்டு தேவயானி கோபித்து, கணவன் தன் காலைப் பிடித்துக்கொண்டு பலவாறு வேண்டியும் கேளாமல், தன் தந்தையினிடஞ் சென்று முறையிட்டுக்கொண்டனள். அதனால் அசுரகுரு கோபமதிகரித்து அவனுக்கு அப்பொழுதே மூப்பு மேலிட்டு மெய்தளர்ச்சி யடையச் சபித்தனர்.—என்பது ஸ்ரீபாகவதத்தில் கூறப்பட்டுள்ள கதை.

## அறுபத்தேழாவது ஸர்க்கம்.

யயாதிமஹாராஜா தன்னைச் சபித்த சுக்கிராசாரியர் மீது சினமுறாது பொறுத்ததும், அந்தச் சாபத்தினால் தனக்கு வந்த மூப்பைத் தன்மகனான பூருவுக்குக் கொடுத்து அவனது வயதைத் தான்பெற்றுப் பலகால மின்புற்றிருந்து மறுத்தும் தனது ஜரையைத் தான் பெற்றுக்கொண்டதும் கூறியது.

அந்தணர் பெருமானான அசுரகுருவானவர் தேவயானியினது துயரத்தைத் தணிக்குமாறு இவ்வாறு சபித்தவளவிலே யயாதி மகாராஜன் தனது யௌவனமொழிந்து மூப்பை மேற்கொண்டவனாயினன். தனக்கு மூப்பு மேலிட்டதுகண்டு அவ்வேந்தன், சுக்கிராசாரியர் சீறிச்சபித்த சாபத்தை யுணர்ந்து மிகவருத்தமுற்றவனாகி, தன்புத்திரனான யதுவையழைத்து, 'மகனே! குழந்தாய், நீ ஸகலதருமங்களு முணர்ந்தவனன்றோ? ஆதலின், உன்னை யான் ஒன்றுவேண்டுகின்றேன்; எனக்குச் சிற்றின்பங்களில் ஆசை யின்னு மொழிந்திலது; அஃதொழிவதற்கு முன்னமே அதனை யனுபவித்தற்குப் பெருந்தடையாக என்சரீரத்தில் ஜரைவந்து புகுந்தது. இந்தவார்த்தகத்தை நீ யேற்றுக்கொண்டு உனது யௌவனத்தை யெனக்குக்கொடுப்பாயாகில், யான் இன்னும்சிலகாலம் வேண்டுமளவு காமபோகங்களை யனுபவித்துத் திருப்தி யடைந்து அதன்பிறகு உனதுபருவத்தை உனக்களித்து எனதுமூப்பை யான் ஏற்றுக்கொள்ளுகின்றேன்' எனவேண்டினன். யயாதி இங்ஙனம்

உரைத்ததைக்கேட்டு யதுவானவன், 'நீர் அன்புபாராட்டிக்கொண்டாட உமக்குப் பிரியனான புத்திரன் பூரு இருக்கின்றனனே; அவன் உமது கிழத்தனத்தைக் கைக்கொள்ளலாகாதோ? நீர் என்னை ஏற்றமாகக் கொண்டாடாதிருப்பது மன்றி அருகிலும் வரலாகாதென்று அவமதித்திருக்கின்றீரே; அப்படி உமக்கு வேண்டாப்பிள்ளையான யான் இந்தப் பீடையைப் பெறுதற்கு மாத்திரம் வேண்டுமோ? உம்மோடுகூடவே உண்டுடுத்துக் களிப்புற்றிருக்கின்ற குமாரனே இதனைக் கைக்கொள்ளட்டும்' எனக் கூறினன். புத்திரனான யது இவ்வண்ணம் புகன்றதுகேட்டு யயாதி பூருவைவரவழைத்து 'ஹே மஹாபாஹோ! நீ எனது ஜரையைக் கைக்கொண்டு உனது யௌவனத்தை யெனக்குத்தருக' என வேண்டினன். பிதா இவ்வண்ணம் ஆசையுடனே கேட்டதுகண்டு பூருவானவன் அஞ்சலிஹஸ்தனாய், 'அடியேன் தன்னியனாயினேன்; அநுக்கிரகிக்கப் பெற்றவனாயினேன்; தேவரீரது நியமனப்படி நடக்கச்சித்தமாயிருக்கின்றேன்' என மறுமொழி கூறினன்.

இவ்வாறு பூரு புகன்றவார்த்தையைக்கேட்டு யயாதி அதிகமான ஆநந்தமடைந்தவனாகித் தனது வாத்தின்மகிமையினால் தன்னிடமுள்ள மூப்பு மகனிடமொட்டுமாறு செய்து அம்மகனது பருவத்தைத் தான் பெற்றுக்கொள்ளலாயினன். இவ்விதமாக யௌவனம்பெற்ற யயாதி ஆயிரக்கணக்காக யாகங்கள் செய்து அநேகமானஇன்பங்களு மனுபவித்துப் பலவாண்டளவு பூமியைப் பரிபாலித்துவந்தனன். இப்படி வெகுகாலஞ்சென்றபின்னர் யயாதிமஹாராஜன் பூருவையழைத்து 'வத்ஸ! யான் உன்னிடம் வைப்பாக வைத்திருக்கும் ஜரையை நீ இப்பொழுது என்னிடம் திருப்பிக்கொடுத்துவிடு; அந்த மூப்பை மறுபடி யான் பெற்றுக்கொள்வதாகவே உன்னிடம் வைத்திருந்தேனாதலின் அதனை மறுபடி பெற்றுக்கொள்வது எனது கடமையாகும். ஆதலால் அக்கிழத்தனத்தை யெனக்கு அளித்து உனது பருவத்தைப் பெற்றுக்கொண்டு நீ இனி யின்புற்றுவாழ்க. வத்ஸ! நீ யெனது சாஸநத்தை மேலாகமதித்து என்சொல்லைத் தவறாது நடந்தமையின், யான் உன் விஷயத்தில் பிரீதியதிகரித்தவனாயினேன். எனது அன்பின் மிகுதியால் யான் உன்னையே எனது இவ்விராச்சியத்திற்கு அரசனாக அபிஷேகஞ்செய்விக்கின்றேன்' என்று கூறினன். அதன் பிறகு தேவயானியின் புத்திரனை வரவழைத்து அவனிடத்துக் கோபங்கொண்டவனாகி, அடேகுமாரா! நீ ஒருராக்ஷஸன்; எவர்க்கும் அடங்காதவன்; என்வயிற்றில் எனக்குப் பிள்ளையாக வந்துபிறந்தனை; நீ எனது ஆஞ்ஞையை அலக்ஷியஞ்செய்தனை யாதலின், உனக்கு இராச்சியம் முதலியவை யொன்றும் இல்லாமற்போகக்கடவது. உனக்குப் பிதாவும் குருவுமான என்னை நீ யிகழ்ந்தனை யாதலின், உன்னிடத்தில் மிகக்கொடியர்களான இராக்கதர்கள் அநேகர் உற்பவிப்பார்கள். இனி நீ சந்திரகுலத்தரசனாகாய். இனி உன்னிட முற்பவிக்கும் சந்ததியாரும் உனக்கு நிகரானவர்களாகவே விநயமில்லாதவர்களாவார்கள்' என வுரைத்துப் பூருவுக்கு உடனே பட்டாபிஷேகஞ் செய்வித்துத் தான் வானப்பிரஸ்தாச்சிரமம்பூண்டு தவம்புரியலாகி, ஆயுள் முடிவில் உடலை நீத்துத் தேவலோகஞ் செல்லலாயினன்.

யயாதியினது சற்புத்திரனான பூருவென்பவன் மஹாதருமிஷ்டனாகி மிக்க புகழ்பெற்றுக் காசிராச்சியத்தில் பிரதிஷ்டானமென்னும் பட்டணத்தில் அரசாட்சிசெய்து வந்தனன். யதுவென்பவனோ இராஜவம்சத்தினின்று பஹிஷ்காரஞ்செய்யப்பட்டவனாகி, மஹாதுர்க்கமான கிரௌஞ்சவனத்திலே குடிபுகுந்திருந்தனன். அவனிடத்தினின்றும் அநேகம் இராக்கதர்கள் உற்பத்தியாயினர். இவ்வாறு யயாதிமஹாராஜா க்ஷத்திரியதருமத்தை மேற்கொண்டு பொறையுடையோராகி, சுக்கிராசாரியரிட்ட சாபத்தைப் பொறுத்திருந்தனர்; நிமிசக்கரவர்த்தி யிவ்வாறு பொறுத்திலர்.

லக்ஷ்மணா! அரசர்களிடம் காரியமாக வருகின்றவர்களை வரவழையாது உபேக்ஷைசெய்வதனாலாய தீமை இப்படிப்பட்டதென விவரமாகக் கூறினேன். ஆதலின் நிருகராஜனுக்கு நேர்ந்தவாறு நமக்குக் குற்றமொன்று முண்டாகாவண்ணம் நாம் நடந்துகொள்ளவேண்டும்' என அருளிச்செய்தனர். முழுமதிபோன்ற முகமண்டல முடையவரான ஸ்ரீராமபிரான் இவ்வாறு பற்பல கதைகள் சொல்லிக்கொண்டிருக்கையில், வானத்து விண்மீன்கள் ஒவ்வொன்றாக மறையலாயின. கீழைத்திசையானது குசும்பா தோய்த்த ஆடையைப் போர்த்துக்கொண்டதென, சூரியனது சிவந்தகிரணங்கள் பரவிச்சோதிமயமாக விளங்கியது.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்தேழாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## * அறுபத்தெட்டாவது ஸர்க்கம்.

ஒருநாய் தனக்குச்சம்பவித்த துன்பத்தை முறையிட்டுக்கொள்ளுமாறு ஸ்ரீராமபிரானது அரண்மனைக்கு வருதல்.

---

அவ்வாறு கதிரவனுதித்தவளவில் ஸ்ரீராமபிரான் செய்தற்குரியனவாய காலைக்கடன்கள் அனைத்தையும் செய்துமுடித்து ராஜ்யபரிபாலனத்தின் பொருட்டு ராஜசபைக்குச் சென்று சிங்காதனத்து வீற்றிருந்தனர். அக்காலையில் பிராம்மணர்களும் நகரத்துப் பிரபுக்களும், புரோஹிதரான வஸிஷ்டரும், காசியபமுனிவரும், வியவஹாரங்களை நன்குணர்ந்த மந்திரிமார்களும், தருமமும் நீதியு முணர்ந்த ஸபிகர்களான மற்றும்பலரும், பலராஜாக்களும் ராஜஸபையில் வந்து கூடினார்கள். அச்சமயத்தில் ராஜசிங்கமான ஸ்ரீராமபிரானது ஸபையானது தேவேந்திரனது ஸபையும், யமதருமராஜனது ஸபையும், வருணனுடைய ஸபையுமென விளங்கியது.

அநந்தரம் ஸ்ரீரகுநந்தனன் சுமித்திரா நந்தனனை நோக்கி, 'லக்ஷ்மணா! காரியார்த்திகள் அநேகர் வாயிலில் வந்து காத்திருப்பார்கள். நீ உடனே சென்று அவர்களை இவ்விடம் அழைத்துவருக' என நியமித்தருளினர்.

---

* இதுமுதல் மூன்றுஸர்க்கங்கள் வியாக்கியானஞ் செய்யப்படாமையின், இந்தக் காவியத்தில் சேர்ந்தவையல்லவென அநேகர் அபிப்பிராயப்படுகின்றனர்.

அதுகேட்டு இளையபெருமாள் அப்பொழுதே புறப்பட்டு அரண்மனைவாயில் சென்று 'ராஜசமுகத்தில் விண்ணப்பஞ்செய்துகொள்ள வந்தவர் யாவரேனு முளரோ' எனக்கூவினர். அவர் எவ்வளவு நேரம் உரத்துக் கூவியும் 'இதோ யான் வந்திருக்கின்றேன்' என மறுமொழி கூறினவன் ஒருவனேனுமிலன்; ஏனெனில், ஸ்ரீராமன் இராச்சிய பரிபாலனஞ் செய்கையில், உலகத்திற்கு ஒரு விதமான துன்பமும் உண்டாவதில்லை; வியாதிகளுமொன்றுந் தோன்றுவதில்லை, பூமியெங்கும் ஸகல தானியங்களும் நன்றாக விளைந்து, ஸகலமான ஓஷதிகளும் ஸம்பூர்ணமாயிருந்தன. பாலியத்திலாயினும் யௌவனத்திலாயினும் கௌமாரவயதிலாயினும் எவரும் மரணமடைவதில்லை. இவ்வுலகம் முழுமையும் தருமமாகவே பரிபாலிக்கப்பட்டதாதலின், எவர்க்கும் எவ்விதமான பீடையும் உண்டாவதில்லை. ஸ்ரீராமபிரான் இவ்வாறு ராஜ்யபரிபாலனஞ் செய்யுநாளில் ராஜசபைக்கு முறையிட்டுக்கொள்ள வருபவர் ஒருவரும் காணப்படார். ஆனது பற்றி வெளியே சென்ற ஸௌமித்திரி அங்கொருவரையும் காணாதுதிரும்பிவந்து தாசரதியினிடம் அவ்வரலாற்றை அஞ்சலிஹஸ்தராகச் சென்று விண்ணப்பஞ்செய்தனர்.

அதனைச் செவியுற்றுச் சக்கரவர்த்தித் திருமகன் சந்தோஷமடைந்தவராகி, ஸௌமித்திரியை நோக்கி 'தம்பி! நீ சொல்வது சரியே; ஆயினும் ஒருவருமில்லை யென்று உபேக்ஷையாயிருக்கலாகாது; அடிக்கடி வெளியே போய் விசாரித்து வரல்வேண்டும். நீதி நன்குநடத்தப்படுமாயின், அதருமமென்பது எவ்விடத்தும்தலைகாட்டாது ஒழிந்து போய்விடும். இப்பொழுது நமது ராஜ்யத்துப் பிரஜைகள் அரசனிடமுள்ள அச்சத்தினாலேயே ஒருவரையொருவர் பாதுகாத்துக் கொள்ளுகின்றனர்போலும். யான்விடுத்த பாணங்கள்போல, இவ்விடத்துப் பிரஜைகளே தம்மைப் பாதுகாத்து வருகின்றனர்கள். ஆயினும், நீ வெகுஜாக்கிரதை யுடையனாகநின்று யாவரையும் விசாரித்துப் பரிபாலித்தல் வேண்டும்' என நியமித்தருளினர்.

சக்கரவர்த்தித் திருமகனது ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு ஸௌமித்திரி மறுபடியும் அப்பொழுதே அரண்மனையினின்று வெளிப்பட்டு வாயிலிடம் சென்றனர். அத்தருணத்தில் அவ்விடத்து ஒரு நாய் வந்து நின்று காத்திருந்தது. அஃது இளையபெருமாளைக் கண்டவளவில் அவரையே விடாது நோக்கிப் பலதரம் குரைத்துக்கூவியது. அதுகேட்டு அவர் அதனை நோக்கி, 'நீ இங்குவந்த காரியமென்ன? அஞ்சாமல் உரைசெய்க' என வேண்டினர். இளையபெருமாள் இவ்வாறு வினவியது கேட்டு நாய் அவரை நோக்கி, 'ஸகலமான பூதங்களுக்கும் சரணமானவரும் ஸகலசற்குணங்களுமமைந்தவரும், பயமுண்டாகுமிடத்து அஞ்சலென்று அபயமளிப்பவருமான சக்கரவர்த்தித் திருமகனார் ஸன்னிதியில் ஒன்று விண்ணப்பஞ்செய்ய விரும்பி வந்திருக்கின்றேன்' என்று கூறியது. அதுகேட்டு இளையபெருமாள், 'அவ்வாறு உனக்கு ராஜாவினிடம் நேராகச் சொல்லவேண்டிய ஸங்கதியுளதாயின், ராஜஸபைக்கு வந்து சொல்லிக்கொள்க' என்று அந்த நாயை உள்ளே வருமாறு அழைக்க, அஃது கூறலுற்றது;

దేవాగారే నృపాగారే ద్విజవేశ్మసు వై తథా।
వహ్నిశ్శతక్రతుశ్చైవ సూర్యోవాయుశ్చతిష్ఠతి॥
నాత్రయోగ్యాస్తుసౌమిత్రే యోనీనామధమావయం।
ప్రవేష్టుంనాత్రశక్ష్యామో ధర్మోవిగ్రహవాన్నృపః॥

தேவாகாரேந்ருபாகாரே த்விஜவேச்மஸுவைததா ।
வஹ்நிச்சதக்ரதுச்சைவ ஸூர்யோவாயுச்சதிஷ்டதி ॥
நாத்ரயோக்யாஸ்து ஸௌமித்ரே யோநீநாமதமாவயம் ।
ப்ரவேஷ்டும் நாத்ரசக்ஷ்யாமோ தர்மோவிக்ரஹவாந்ந்ருப: ॥

மஹாப்ரபோ! தேவாலயங்களிலும், அரசர்களின் அரண்மனைகளிலும், பிராமணர்களது மாளிகைகளிலும், அக்கினி, இந்திரன், சூரியன், வாயு ஆகிய தேவர்கள் வாஸஞ்செய்கின்றனர்கள். ஆதலின், தாழ்ந்தயோனியில் ஜனித்த யாங்கள் அத்தன்மையவான விடங்களில் புகுதற்கு யோக்கியதை யுடையவர்களல்லோம். அன்றியும், நம் மன்னவரான தாசரதி தேகம் பெற்றிருக்கிற தருமமே யாதலின், இவ்வரண்மனைக்குள் நுழைய நாங்கள் திறமை யுடையோமல்லோம். ரகுகுலதிலகரான ஸ்ரீராமன் ஸத்தியவாதி, ரணசூரர், ஸகல பூதங்களுக்கும் இதத்தையே நாடுகின்றவர், ஷாட்குணிய பரிபூர்ணர், நீதியை நடத்துகின்றவர், எல்லாமுணர்ந்தவர், எல்லாம் கண்ணுற்கண்டவர், யாவரையும் ரஞ்ஜிப்பிக்கின்றவர்; ஸோமனுமிவரே, மிருத்தியுவுமிவரே, யமனுமிவரே, தனதிபதியுமிவரே, அக்கினியுமிவரே, இந்திரனுமிவரே, சூரியனுமிவரே, வருணனுமிவரேயாம். ஆதலின், ஹேஸௌமித்ரே! அத்தன்மையரான லோகபாலகரது அனுமதியின்றி யான் இவ்வரண்மனைக்குள் புகுதற்குப் பிரியப்படுகின்றிலேன்' எனப்புகன்றது.

அந்த நாய் இவ்வாறு நவின்றது கேட்டு இளையபெருமாள் அதனிடம் அருள்புரிந்து அப்பொழுதே அரண்மனைக்குட் புகுந்து ஸ்ரீராமபிரானை நோக்கி, 'ஹேகௌஸல்யாநந்தன! அடியேன் செய்யுமொருவிண்ணப்பத்தைச்சற்றுத் திருச்செவி சார்த்த வேண்டுகின்றேன்: ராஜசாஸநத்தைச் சிரமேற்கொண்டு யான் ராஜமாளிகை வாயிலிடஞ் சென்றேன்; நம்மிடம் ஏதோ ஒரு காரியத்தைக் கருதி ஒருநாய் அவ்விடத்து வந்து நிற்கின்றது' என்று விண்ணப்பஞ்செய்ய, அதைக்கேட்ட வளவிலே காகுஸ்தன், 'அங்ஙனமாயின் அதனை அதிசீக்கிரமே இவ்விடம் வரவிடுக' என நியமித்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்தெட்டாவது ஸர்க்கம்

## அறுபத்தொன்பதாவது ஸர்க்கம்.

*சக்கரவர்த்தித் திருமகனது ஸபைக்குவந்த சுனகம் அம்மகாராஜனைப் போற்றிப் புகழ்ந்து, தன்னை யோரந்தணன் ஒருகாரணமுமின்றி முடிமீது புடைத்தவரலாறுகூறி, அதற்குத் தண்டனையாய் அவனை யொரு தருமபரிபாலகனாக நியமிக்குமாறு கூறியது.*

---

ஸ்ரீராமபிரான் இங்ஙன மருளிச்செய்ததுகேட்டு இளையபெருமாள் விரைந்து வாயிலிடஞ்சென்று நாயை யழைத்து வந்து ஸ்ரீராகவன் ஸந்நிதியில் விண்ணப்பஞ் செய்தனர். அந்த நாயை நோக்கி ரகுநந்தனன், நீ இங்கு வந்தகாரியம் யாது? நீ சொல்ல வந்த ஸங்கதியை விளங்கக்கூறுக; எதற்கும் நீ அஞ்சாது உரைசெய்க' எனவினவ, மண்டையுடைபட்ட அந்த நாய் அவரை நோக்கிக் கூறத்தொடங்கியது. 'ஹேஸ்வாமி! அனைவரும் அயர்ந்து நித்திரை செய்கையில் அரசனே விழித்துக் காத்திருக்கின்றனன்; இராஜன் பிரஜைகளனைவரையும் பரிபாலிக்கின்றனன்; ராஜ்யம் முழுமையும் அமைப்பவனும் பாதுகாப்பவனும் இராஜனே; உலகமனைத்திற்கும் பார்த்திவனே பிதாவாகின்றனன். காலமும் ராஜனே; யுகமும் ராஜனே; இவ்வுலகமெல்லாம் ராஜனேயாம். நன்கு செலுத்தப்பட்ட நீதி முறையினால் ராஜனே தருமத்தை ரக்ஷிக்கின்றனன். பார்த்திவனெப்பொழுது பாதுகாவாதொழிகின்றனனோ, அப்பொழுதே பிரஜைகள் அனைவரும் நாசமுறுகின்றனர். தரிப்பதனாலே தருமமென வழங்குகின்றனர்; தருமத்தினாலேயே பிரஜைகள் யாவரும் தரிக்கப்படுகின்றனர். சராசரங்களுள்ளிட்ட மூவுலகங்களையும் இங்ஙனம் தரிப்பதே தருமமென்பது எனது துணிபு. மறுமைக்கும் இதுவே பெரிய தருமமாகின்றது. தருமத்தினால் அடைதற்கருமையானதுஒன்றுமிலதென நிச்சயித்திருக்கின்றேன். தானம், தயை, பெரியோர்களைப் பூஜித்தல், செங்கோன்மை ஆகிய இவைகளே மேலான தருமங்களாம். இம்மை மறுமை இரண்டிடத்தும் இவைகளே நன்மைக்கு வித்தாகும். 'ஹேராகவ! தேவரீரோ ஸகலமான பிரமாணங்களுக்கும் மேலான பிரமாணமாம். மேலோர்கள்கைக்கொண்டு அநுஷ்டித்த தருமமின்னதென்பது தேவரீருக்கு நன்றாகத் தெரிந்ததேயன்றோ? ஸகலமான தருமங்களும் குடிகொண்டிருக்கும் உத்தமமானவிடம் தேவரீரே; தேவரீரைக் குணக்கடலென்னலாம். ராஜாதி ராஜனே! அடியேன் அறியாமையால் என்னென்னவோ பிதற்றினேன்; முடிதாழ்த்தி வணங்குகின்றேன்; திருவுள்ளத்தில் சீற்றங்கொள்ளலாகாது' என்றிவ்வாறு விண்ணப்பஞ் செய்தது.

நாய் சொன்ன சொற்களைச் செவியுற்று ஸ்ரீரகுநாயகன் 'இப்பொழுது இவ்விடத்தில் உனக்கு ஆகவேண்டிய காரியமேதேனுமுளதாயின் அதனை அஞ்சாது உரைசெய்க' என நியமித்தருளினர். அதுகேட்டு அந்தநாய் அவரை நோக்கி 'ஸ்வாமி! ராஜனானவன் தருமத்தினாலேயே இராச்சியத்தைப்

பெறுகின்றனன்; தருமத்தினாலேயே இராச்சியத்தைப் பரிபாலிக்கின்றனன்; தருமத்தினாலேயே ராஜன் ஸகலமான ஜனங்களுக்கும் சரணியனாகிப் பிரஜைகளுடைய பயத்தைப் போக்குகின்றனன். இதனை உணர்ந்த தேவரீர் அடியேனுடைய விண்ணப்பத்தைத் திருச்செவிசார்த்த வேண்டுகின்றேன்: ஹே ராகவ! ஸர்வார்த்தஸித்த னென்கிற பிக்ஷுகனான ஒரு பிராம்மணன் ஒரு பாபமும் அறியாத அடியேனை ஒருகாரணமு மின்றி வீணாய் அடித்து வருத்தினான். அச்செய்தியை இராஜஸன்னிதானத்தில் அறிவித்துப் போகவந்தேன்' என்றது.

சுனகஞ்சொன்ன சொல் செவிப்பட்ட வளவிலே சக்கரவர்த்தித் திருமகன் அவ்வேதியனை உடனே யழைத்து வருமாறு துவார பாலகனுக்கு நியமித்தருள, வாயிலோன் அப்பொழுதே புறப்பட்டுச் சென்று ஸர்வார்த்தஸித்தனென்னும் அந்தணனை அழைத்துவந்தனன்.

அவ்வேதியன் வேந்தனது அரண்மனைக்கு வந்து ரகுநந்தனனை நமஸ்கரித்து, 'மஹாபிரபோ! அடியேனை இப்பொழுது இவ்விடத்திற்கு வரவழைத்த காரணம் யாதோ, நியமித்தருள வேண்டுகின்றேன்' எனப்பிரார்த்தித்தனன். வேதியன் விண்ணப்பஞ் செய்ததுகேட்டு ஸ்ரீராமபிரான் அம்மறையோனை நோக்கி, 'பெரியோய்! நீர் ஒரு பிராம்மண ராயிருக்க, இந்த எளிய நாயை அடித்தது யாதுகாரணம்? இஃது உமக்கு யாது அபகாரஞ்செய்தது? நீர் ஏன் இதனை இவ்வண்ணம் புடைத்து வருத்தினீர்?

క్రోధఃప్రాణహరశ్శత్రుః క్రోధోమిత్రముఖోరిపుః।
క్రోధోహ్యసిర్మహాతీక్ష్ణ స్సర్వంక్రోధోపకర్షతి॥
తపతేయజతేచైవ యచ్చదానంప్రయచ్ఛతి।
క్రోధేనవైసంహరతి తస్మాత్క్రోధంవిసర్జయేత్ ॥
ఇన్ద్రియాణాంప్రదుష్టానాం హయానామివధావతాం।
కుర్వీతధృత్యాసారథ్యం సంహృత్యేన్ద్రియగోచరం॥
మనసాకర్మణావాచా చక్షుషాచసమాచరేత్।
శ్రేయోలోకస్యచరతో నద్వేష్టినచలిప్యతే॥
నతత్కుర్యాదసిస్తీక్ష్ణ స్సర్పోవావ్యాహతస్తథా।
అరిర్వానిత్యసంక్రుద్ధో యథాత్మాదురనుష్ఠితః॥
వినీతవినయస్యాపి ప్రకృతిర్నవిధీయతే।
ప్రకృతింగూహమానస్య నిశ్చయేప్రకృతిర్ధ్రువమ్॥
స్నానందానంతథాహోమః స్వాధ్యాయఃపితృతర్పణం।
యస్మాద్యత్క్రియతేవిప్ర క్రోధనస్యనిరర్థకం॥

க்ரோத꞉ப்ராணஹரச்சத்ரு꞉ க்ரோதோமித்ரமுகோரிபு꞉ |
க்ரோதோஹ்யஸிர்மஹாதீக்ஷ்ணஸ் ஸர்வம்க்ரோதோபகர்ஷதி ||
தபதேயஜதேசைவ யச்சதானம்ப்ரயச்சதி |
க்ரோதேநவைஸம்ஹரதி தஸ்மாத்க்ரோதம்விஸர்ஜயேத் ||
இந்த்ரியாணாம்ப்ரதுஷ்டாநாம் ஹயாநாமிவதாவதாம் |
குர்வீதத்ருத்யாஸாரத்யம் ஸம்ஹ்ருத்யேந்த்ரியகோசரம் ||
மநஸாகர்மணாவாசா சக்ஷுஷாசஸமாசரேத் |
ச்ரேயோலோகஸ்யசரதோ நத்வேஷ்டிநசலிப்யதே ||
நதத்குர்யாதஸிஸ்தீக்ஷ்ணஸ் ஸர்போவாப்யாஹதஸ்ததா |
அரிர்வாநித்யஸங்க்ருத்தோ யதாத்மாதுரநுஷ்டித꞉ ||
விநீதவிநயஸ்யாபி ப்ரக்ருதிர்நவிதீயதே |
ப்ரக்ருதிங்கூஹமாநஸ்ய நிச்சயேப்ரக்ருதிர்த்ருவம் ||
ஸ்நாநந்தாநந்ததாஹோம꞉ ஸ்வாத்யாய꞉பித்ருதர்ப்பணம் |
யஸ்மாத்யத்க்ரியதேவிப்ர க்ரோதநஸ்யநிரர்த்தகம் ||

கோபமென்பது பிராணனைப்போக்குகின்ற பகைவனாகும்; கோபமென்பது நமக்கு மித்திரனெனவேஷம்பூண்ட சத்துருவாம்; குரோதம் கூரியகத்தியாகும்; குரோதமானது எல்லாவற்றையும் அபஹரிக்கின்றது; எவ்வளவு தவஞ் செய்யினும், வேள்விபுரியினும், தானதருமங்கள்செய்யினும், கோபமொன்று உண்டாகுமாயின், அவையாவும் அழிக்கப்பட்டனவேயாகும்; ஆதலின், கோபத்தைக்கைவிடல் வேண்டும். ஐம்பொறிகள் அடக்குதற்கு அரியனவாய் ஓடுகின்ற அச்வங்களுக்கு ஒப்பானவை; அவற்றைத் தத்தம் புலன்களின் வழியே செல்லவிடாது வெகுதீரத்துடனே ஸாரத்தியஞ் செய்தல்வேண்டும். பகையென்பதை யொழித்து யாவனொருவன் மனத்தினாலும் வாக்கினாலும் கண்களாலும் காரியங்களாலும் உலகத்திற்கு இதத்தைச் செய்கின்றனனோ, அவனே எவ்விதமான தோஷத்தினாலும் தீண்டப் படாதவனாவான்; தீய வழியிலொழுகு மொருவன் தனக்கு எத்துணைத்தீமை தேடிக்கொள்வனோ, அத்துணைத் தீங்கு, கூரியகத்தியும் செய்யவல்லவ தன்று, நன்கு அடியுண்ட நச்சரவமுஞ் செய்வதன்று, தீராக்கோபமுள்ள சத்துருவும் செய்யவல்லவனல்லன். நன்கு சிக்ஷிக்கப்பெற்ற நல்லொழுக்க முடையோனாயினும், ஒருவனது இயற்கைமாறுவது மிகவும் கடினமானதே; ஆயினும் தனது துஷ்ட ஸ்வபாவத்தை வெளிக்காட்டாது அடக்கி அனைவருக்கும் இதமாக ஒழுகத் துணிகின்றவனே நன்மை பெறுகின்றவனாவான். ஓ அந்தணர்பெருமானே! பலவாறு புகன்றுவ தென்னே? கோபத்தைக் கைவிடாதவன், ஸ்நானம் தானம் ஹோமம் வேதாத்தியயநம் பித்ரு தர்ப்பணம் முதலிய நற்செயல்கள் எவ்வளவு செய்யினும், அவ்வளவும் வீணானவையேயாகும்' என அருளிச்செய்தனர்.

ஸ்ரீராமபிரான் இவ்வாறு விளம்பியது கேட்டு அந்த ஸர்வார்த்த ஸித்தனென்கிற வேதியன் விண்ணப்பஞ் செய்யலுற்றனன்: 'ஸ்வாமி! அடியேன் கோபத்தினால் கலங்கிய மனமுடையோனாகி இந்த நாயை யடித்தேனென்பது உண்மையே. யான் பிக்ஷை யெடுத்துக்கொண்டு வீதி வழியே சென்றேன்;

நாழிகையாகி விட்டது. அத்தருணத்தில் இந்த நாய் நடுவழியிலே நின்று ஒருபுறமு மொதுங்காமல் உபத்திரவப்படுத்தியது; 'அப்பால் ஒதுங்கு ஒதுங்கு!' என்று யான் பலதரம் கூவினேன்; அதுகேட்டு இந்தச்சுனகம் தானகவே சிறிதுதூரஞ் சென்று அந்தத் தெருக்கோடிவாயில் போய் ஆங்கு என்னை எதிர்த்து நின்றது. ஹே ராகவ! அப்பொழுது அடியேனைப் பசியுமொருபுறம் வருத்தியதனால், கோபமதிகரித்து இந்த நாயைப் புடைக்கலானேன். யான் செய்தது பெரியகுற்றமே; இதற்குத் தக்கதண்டனை யடியேனுக்கு விதித்தருள்க. இங்குத் தேவரீரால் தண்டிக்கப் படுவேனாயின், பிறகு பரத்தில் அடியேனுக்கு நரகபயமில்லா தொழியுமன்றோ?' என மொழிந்தனன்.

வேதியன் விண்ணப்பஞ்செய்த வார்த்தையைச் செவியுற்று ஸ்ரீராமபிரான் ஸபையாரை நோக்கி, 'ஸபிகர்களே! இப்பொழுது யாம் செய்யத் தகுவது யாது? இவ்வேதியர்க்கு விதிக்கவேண்டிய தண்டனை யின்னதென ஆராய்ந்து உரைசெய்க. குற்றத்திற்குத் தக்கவாறு தண்டனை விதித்தலே பிரஜைகளை நன்கு பரிபாலித்தலாகும்' என விளம்பினர். அப்பொழுது அந்த ராஜசபையில் பிருகு, அங்கிரஸர், குத்ஸர், வஸிஷ்டர், காசியபர் முதலாய முனிவர்களும், முக்கியரான தரும பரிபாலகர்களும், மந்திரிமார்களும், பட்டணத்துப் பிரபுக்களும் பண்டிதர்களுமாகிய பலர் வந்து கூடியிருந்தனர். நீதிசாஸ்திரமும் ராஜதருமமுமுணர்ந்தவர்கள் அனைவரும் ஸ்ரீராமபிரானை நோக்கி 'ஸ்வாமி! பிராம்மணருக்கு வதைதண்டனை விதிக்கலாகாதெனத் தரும சாஸ்திரமுணர்ந்தவர் முறையிடுகின்றனர்' என்று கூறினார்கள். அதன்பிறகு அங்கிருந்த முனிவர்கள் யாவரும், 'ஹே ராகவ! ஸகல லோகங்களையும் சிக்ஷிப்பவன் ராஜனேயன்றோ? அதில் தேவரீர் ஸகல ராஜாக்களுக்கும் மேலான ராஜனாயிருக்கின்றீர். ஆய்ந்து நோக்குகையில், தேவரீர் திரிலோகங்களையும் சிக்ஷித்துப் பரிபாலிக்கின்ற அநாதி புருஷனான ஸ்ரீமகாவிஷ்ணுவே யாகின்றீர்' என மொழிந்தனர்.

ஸபையிலுள்ளோர் அனைவரும் இவ்வாறு சொன்னது கேட்டு அந்த சுவானம் ஸ்ரீராமபிரானை நோக்கி, 'ஹே மஹாபிரபோ! அடியேன் வேண்டுவதைச் செய்து முடிப்பதாக முன்னமே சபைநடுவே திருவாக்களித்தவாறு, என்னிடம் தேவரீர் திருவுள்ளமிரங்கி எனக்கு வேண்டிய வரமளிக்க விருப்பங்கொண்டவராயின், யான் கேட்டுக்கொள்ளுவதைச் செய்விக்கப் பிரார்த்திக்கின்றேன். இந்தப் பிராம்மணருக்குக் குலபதி யென்கிற தருமபரிபாலனாதிகாரம் அளிக்க வேண்டுகிறேன்.' என்று கேட்டுக்கொண்டது. அதனைக் கேட்டருளிய காகுஸ்தன் அங்ஙனமே அவ்வந்தணருக்கு அவ்வதிகாரத்தில் அபிஷேகஞ் செய்வித்தனர். தமக்குக் கிடைத்த மேலான அதிகாரத்தினால் அந்தப் பிராம்மணர் மிகவும் மகிழ்ச்சிகொண்டு யானைமீதேறி அனைவராலும் பூஜிக்கப் பட்டவராகி, ஆநந்தமாகச் சென்றனர்.

அபராதியான அந்தணருக்கு உத்தமமான அதிகார மளித்ததுகண்டு ஸ்ரீராமபிரானது மந்திரிமார்கள் மிக்க வியப்புற்றவர்களாகி அவரை நோக்கி

'ஹே மஹாப்பிரபோ! இப்பொழுது இந்தக் குற்றவாளிக்கு மேலான அனுக்கிரஹமேயன்றோ அளிக்கப்பட்டது? இஃது ஒரு நிக்கிரஹமாகுமோ?' என விண்ணப்பஞ் செய்தனர்கள். சக்கரவர்த்தித் திருமகன் அதனைச் செவியுற்று, 'நீங்கள் நீதிசாஸ்திரம் உணர்ந்திலீர்போலும்; இதனுண்மையை இந்த நாய் நன்கு உணர்ந்திருக்கின்றது; இதுவே இதனை விளங்கக்கூறும்; நீவிர் கருத்தாகக் கேட்டுணர்க' என மொழிந்து, அதன்வரலாற்றை யாவருக்கும் நன்கு விளங்க எடுத்துரைக்குமாறு நாய்க்கு நியமித்தருளினார். அங்ஙனமே அந்தச் சுவானம் சொல்லத் தொடங்கியது.

'ஸ்வாமி! அடியேன் பூர்வத்தில் ஒரு குலபதியாகித் தருமாதிகாரிபதம் பெற்றிருந்தேன்; அக்காலையில் அடியேன் தேவபூஜைகளிலும் பிராம்மண பூஜைகளிலும் மிகுந்த அன்னத்தைப் போஜனம் செய்வேன்; தேவதாஸிகளுடனும் தேவதாஸர்களுடனுங்கூடிக் களிப்புற்றிருப்பேன்; அவர்களுடன் எல்லாவற்றிலும் பகுதிபெற்றுக்கொள்வேன்; தேவத்திரவியங்களைக் கருத்தாகக் காப்பாற்றினேன்; அன்றியும், விநயமும் நல்லொழுக்கமு முடையவனாகி எல்லாப் பிராணிகளுக்கும் நன்மையையே நாடிவந்தேன். அக்காரணம்பற்றி அடியேனுக்கு இந்தக் கோரமான அவஸ்தையும் அதமமானஜன்மமும் கிடைத்தன. கோபங்கொண்ட பிராம்மணருக்கும், தருமநிலை தவறித் தீமையிழைக்கத் துணிந்த வேதியர்க்கும் இதேகதிதான். ஹே ராகவ! சினங்கொண்டவனும், ஜீவகாருணிய மில்லாத கொடியனும், அறிவில்லாதமூடனும், அதர்மிஷ்டனுமான புருஷன் ஏழேழுஜன்மமும் தன்குல மழியுமாறு தீமையைத் தேடிக்கொள்ளுகிறான். ஆதலின் எவனும் எவ்விதமானநிலை நேர்ந்த காலத்திலும் தருமாதிகாரஞ்செலுத்தலாகாது.

యమిచ్ఛేన్నరకంనేతుం సపుత్రపశుబాన్ధవం।
దేవేష్వధిష్ఠితంకుర్యా ద్గోషుచ బ్రాహ్మణేషుచ॥
బ్రహ్మస్వం దేవతాద్రవ్యం స్త్రీణాంబాలధనంచయత్।
దత్తంహరతియోభూయః ఇష్టైస్సహవినశ్యతి॥

బ్రాహ్మణద్రవ్యమాదత్తే దేవానాంచైవరాఘవ।
సద్యఃపతతిఘోరేవై నరకేవీచిసంజ్ఞితే॥
మనసాపిహి దేవస్వం బ్రహ్మస్వంచహరేత్తుయః।
నిరయాన్నిరయేచైవ పతత్యేవనరాధమః॥

யமிச்சேந்நரகம்நேதும் ஸபுத்ரபசுபாந்தவம் |
தேவேஷ்வதிஷ்டிதங்குர்யாத் கோஷுசப்ராஹ்மணேஷுச ||
ப்ரஹ்மஸ்வந்தேவதாத்ரவ்யம் ஸ்த்ரீணாம்பாலதனஞ்சயத் |
தத்தம்ஹரதியோபூய: இஷ்டைஸ்ஸஹவிநச்யதி ||
ப்ராஹ்மணத்ரவ்யமாதத்தே தேவாநாஞ்சைவராகவ |
ஸத்ய:பததிகோரேவை நரகேவீசிஸம்ஜ்ஞிதே ||
மநஸாபிஹிதேவஸ்வம் ப்ரஹ்மஸ்வஞ்சஹரேத்துய: |
நிரயாந்நிரயேசைவ பதத்யேவநராதம: ||

யாவனொருவனைப் புத்திரர்களுடனும் பாந்தவர்களுடனும் அவனைச்சேர்ந்தபசுக்களுடனும் நரகத்தில் வீழ்த்தவிரும்புகின்றனரோ, அவனையே தேவஸ்தானங்களுக்கும் பசுபரிபாலன ஸ்தானங்களுக்கும் பிராம்மணரக்ஷண ஸ்தானங்களுக்கும் அதிகாரியாகச் செய்யக்கடவர்கள். எவன் பிராம்மணர்களது பொருளையும், தேவஸ்தான திரவியத்தையும், ஸ்திரீகளின் செல்வத்தையும், சிறுபிள்ளைகளின் தனத்தையும் அபஹரிக்கின்றனனோ, எவனொருவன் தானஞ்செய்து கொடுத்துவிட்டதை மறுபடி பறித்துக்கொள்ளுகின்றனனோ, அவன் தன்னிஷ்டர்களுடனே விநாசமுறுகின்றனன். ஹே ராகவ! பிராம்மணர் பாக்கியத்தையும் தேவத்திரவியத்தையும் எவன் எடுக்கின்றனனோ, அவன் அப்பொழுதே வீசியென்கிறகோரமான நரகத்தில் வீழ்ந்தழிகின்றனன். தேவதைகளின் திரவியத்தையும் அந்தணர்களின் அரும்பொருளையும் உள்ளத்தினாலுமெவனொருவன் அபஹரிக்கின்றனனோ, அவன் மானிடர்களில் அதமனாகி எல்லாநரகங்களிலும் ஒவ்வொன்றாக வீழ்ந்து வருத்தமுறுவான்' என விளம்பியது.

இவ்வாறு சுனகஞ்சொல்லிய ஸாரமான வசனத்தைச் செவியுற்று ஸ்ரீராகவன் மிகவும் மகிழ்ச்சிகொண்டு திருக்கண்கள் மலர்ந்து பெரிதும் உவப்பெய்தினர். மிக்க மகிமை பெற்றதான நாயும் விடைபெற்றுக்கொண்டு வெளியேசென்றது. அஃது நீசஜாதியில் ஜனித்ததாயினும் பூர்வஜன்ம ஸ்மரண முடையதாகிக் காசிக்ஷேத்திரஞ்சென்று அவ்விடத்துப் பிராயோபவேசஞ்செய்து உடலை நீத்தது.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் அறுபத்தொன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## எழுபதாவது ஸர்க்கம்.

ஒருகழுகும் கோட்டானும் தம் இருப்பிடத்தைப்பற்றிக் கலக்கப்பட்டு
இராஜசபைக்குவந்து முறையிட்டுக்கொண்டதும், அதனை
யுள்ளபடி விசாரித்து ஸ்ரீராமபிரான் சரியாகத் தீர்மானஞ்செய்ததும்.

---

பருவதப்பிராந்தமான ஒரு ஆற்றங்கரையிலே, சிங்கம் புலி முதலாய மிருகங்கள் எங்குமோடியுலாவவும், குயில்முதலான பலவகைப் பறவைகள் நெருங்கிக் கூவிக் களிப்புற்றிருக்கவும், மிகவும் அற்புதமாயிருக்கின்ற நாநாவிதமான விருக்ஷங்களடர்ந்த அழகான ஒரு அரணியத்தில் பலவாண்டுகளாக ஒரு கழுகும் கோட்டானும் கலகமிட்டுக்கொண்டு குடிபுகுந்திருந்தன. கலகத்திற்குக் காரணமென்னவெனில், கெடுமதியுடையதான கழுகு கோட்டானது கூட்டிற்குச் சென்று, அஃது தன்னுடையதென்று சொல்லி அதனுடனே போராடத் தொடங்கியது. இஃது இங்ஙனமாக, அவையிரண்டும் ஒருமனப்பட்டு, 'இப்பொழுது ஸகலலோகநாயகனான புண்டரீகாக்ஷனாகிய ரகுநாயகன் அரசு செலுத்திவருகின்றனர்; அவரிடஞ்சென்று முறையிட்டுக்கொள்வோம்; அவர்

இஃது யாருடைய கூடெனத் தீர்மானிக்கின்றனரோ, அங்ஙனமே நாம் உடன்படுவோம்' எனச் சம்மதித்து, அந்தப்பறவைகளிரண்டும் அஞ்ஞானத்தினுல் ஒன்றுக்கொன்று பகைகொண்டனவாகி அதிககோபத்துடனே ஸ்ரீராமபிரானது ஸந்நிதானத்திற்குச்சென்று அவரதுதிருவடிகளில் வீழ்ந்துதண்டனிட்டன. முதலில் கழுகு காகுஸ்தனைநோக்கிக் கூறத்தொடங்கியது.—

'ஹே மஹாபிரபோ! தேவரீர் தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும் மேலானவரென அடியேன் மதித்திருக்கின்றேன்; தேவகுருவான பிரஹஸ்பதியையும் அசுரகுருவான சுக்கிராசாரியரையும் தேவரீர் அதிசயித்திருக்கின்றீர்; பூதங்களில் பரம் அவர மிரண்டினையும் தேவரீர் நன்கு உணர்ந்திருக்கின்றீர்; சோபையில் மற்றொருசந்திரனுக விளங்குகின்றீர்; சூரியனெனக் கண்ணெடுத்துக்காண்பதற்கரிய காந்தியுடையராகின்றீர்; கௌரவத்தில் இமயமலைக்கு இணையானவர்; காம்பீரியத்தில் கடல்போன்றவர்; உலகங்களைப் பரிபாலிப்பதில் யமதருமராஜனுகின்றீர்; பொறுமையில் பூமிபோன்றவர்; வேகத்தில் வாயுவுக்கிணையானவர்; யாவர்க்கும் குருவானவர்; எல்லாநற்குணங்களுமமைந்து அழியாப்புகழ்பெற்றவர்; எதிரிகளிடத்தில் அடங்காதகோபமுடையவர்; எவராலும் வெல்வதற்கரியவர்; எவரையும் எளிதில் வெல்லுகின்றவர்; அஸ்திரசஸ்திர வித்தைகளைக் கரைகண்டுணர்ந்தவர். ஆதலின் தேவரீருடைய ஸன்னிதியில் ஒன்று விண்ணப்பஞ்செய்யவேண்டி வந்தனன்; அடியேன் விண்ணப்பஞ்செய்வதைத் திருவுள மிரங்கித் திருச்செவிசார்த்தவேண்டுகின்றேன். அடியேன் நெடுநாளாகக் குடிபுகுந்து வஸித்துவருகிற எனது இருப்பிடத்தை இந்தக்கோட்டான் தனதென்று சொல்லி வலியவந்து வாது செய்கின்றது; இது விஷயத்தில் அடியேனைப் பாதுகாத்தருள்க' என்று கூறியது.

கழுகு இங்ஙனம் கூறியபின்னர் கோட்டான் சொல்லலுற்றது:—'ஹே ராம! சந்திரசூரியர்கள், இந்திரன், குபேரன், யமன் ஆகிய தேவர்களுடைய அம்சமாகவே அரசன் உற்பவிக்கின்றனன்; மன்னவரிடத்தில் மனிதருடைய அம்சம் மிகவும் சொற்பமாகவே யிருக்கின்றது. அவ்வேந்தர்களில் தேவரீர் முக்கியமாகத் தருமரூபியான தேவதையாம்; மற்றொரு நாராயணனெனவே தேவரீர் விளங்குகின்றீர். தேவரீர் குளிர்ந்தமுக முடையராய் அனைவரும் காண்பதற்கினியராகிப் பக்ஷபாதமின்றி நடப்பதனுல், சந்திரனதுஅம்சமென்பது மிகத்தெளிவாக விளங்குகின்றது. பிரஜைகளுடைய பாவங்களையும் பயங்களையும் போக்குவதன்பொருட்டே கோபமும் தண்டமும் தானமுமுடையோராகி உலகங்களைப் பரிபாலிக்கின்றமையின் தேவரீர் இந்திரனுகின்றீர். எவராலும் வெல்வதற்கரியராய் அக்கினிக்கொப்பான ஒளிபெற்றவராகி உலகமெங்கு மெப்பொழுதும் பிரகாசிக்கின்றமையின் சூரியனென விளங்குகின்றீர். தேவரீர் எல்லாச்செல்வங்களும் பெற்றிருத்தலின் தனுதிபதிக்கிணையாயிருக்கின்றீர். ஆலோசிக்குமளவில், இலக்ஷ்மியென்றைக்கும் தேவரீரிடமே நிலைபெற்றிருத்தலின், தனுதிபதியினும் தேவரீர் சிறந்தவராகின்றீர். 'ஹே ரகுகுலசிகாமணி! சராசரங்களுள்ளிட்ட ஸகலமான பூதங்களிடத்திலும்

சத்துரு மித்திரர்களிடத்திலும் ஸமதர்சியாயிருக்கின்றீர். தருமந்தவறாதபடி சாஸனஞ்செய்கின்றீர்; நீதிநூல்முறைப்படி நியாயவிசாரணை நடத்துகின்றீர்; எவன்விஷயத்தில் தேவரீர் திருவுள்ளம் கலங்குகின்றதோ, அவனிடம் அக்கணமே மிருத்தியு விரைந்தோடுகின்றது; ஆதலின் தேவரீர் அதிசயமான விக்கிரமமுடையோராகி யமதருமராஜனுக் கிணையானவராகின்றீர். ஹே ராஜாதிராஜனே! இங்ஙனமாயினும், தேவரீருடைய ஸௌலப்யமும் கருணையும்பொறுமையும் விளங்க இந்தமானுஷவேஷத்தைப் பூண்டிருக்கின்றீர். துர்ப்பலரும் நாதனற்றவருமானவர்களுக்கு ராஜனேயன்றோ சிறந்தபலம்? கண் இல்லாதவனுக்கு ராஜனே சிறந்தகண்ணாகிறான்; கதியற்றவனுக்கு அரசனே சிறந்தகதியாகின்றான்; பறவையினமான எங்களுக்கும் தேவரீரே நாதனாகின்றீர்; ஆதலின் மஹாதருமிஷ்டரான தேவரீர் அடியேனது விண்ணப்பத்தை அருள்புரிந்து திருச்செவிசார்த்தவேண்டுகிறேன்: ராஜனே! இந்தக்கழுகு எனது கூட்டினுள்வந்து புகுந்து எனக்குப் பலவிதமானவருத்த முண்டாக்குகின்றது. தேவர்களையும் மனிதர்களையும் தண்டிப்பவர் தேவரீரே யாதலின், அடியேன் விஷயத்தில் நியாயம் விளைவிக்கவேண்டுகிறேன்' என்றுசொல்லி முறையிட்டுக்கொண்டது.

கோட்டான் இவ்வாறு கூறியதுகேட்டுக் காகுஸ்தன் திருஷ்டி, ஜயந்தன், விஜயன், ஸித்தார்த்தன், ராஷ்டிரவர்த்தனன், அசோகன், தருமபாலன் என்னும் மந்திரிமார்களை வரவழைத்தனர். இவர்கள் தசரதர்காலந் தொடங்கி மந்திராலோசனைத் தலைவர்களாயிருந்து ஸ்ரீராமனுக்கும் அமைச்சராய் அமைந்தவர்கள்; நீதி தவறாதவர்கள், தருமசாஸ்திரங்களையாய்ந்து உணர்ந்தவர்கள், அனைவரிடத்தும் அன்புடையவர்கள், உத்தமகுலத்தி லுதித்தவர்கள், நியாயத்திலும் மந்திராலோசனையிலும் நன்றாய்த்தேர்ந்தவர்கள். இந்தஅமாத்தியர்கள்அனைவரும் வந்துசேர்ந்தபின்னர், கழுகும் கோட்டானுமாகிய இரண்டு பறவைகளுடைய விவாதத்தை மறுபடி விசாரிக்கத் தொடங்கி, முதலில் கழுகை நோக்கி, 'நீ இந்தக் கூடுகட்டிக்கொண்டு இதில் எத்தனை வருஷகாலமாக வஸித்து வருகின்றனை? அச்செய்தி உனக்குத் தெரியுமாயின் உள்ளதையுள்ளவாறு உரைசெய்க' என ரகுவீரன் வினவினர். அதுகேட்டுக் கழுகு அவரை நோக்கி, ஹே ராகவ! இப்பூமியில்மானிடர் உற்பத்தியாகியெங்கும்எப்பொழுது பரவினர்களோ, அன்றுதொட்டு இஃது எனது கிருகமாகவே யிருக்கின்றது' என்று இயம்பியது. அதன்பின்னர் உலூகம் ஸ்ரீராகவனைப்பணிந்து, 'ராஜாதிராஜனே! இப்பூமியில் எப்பொழுது பாதபங்கள் செழித்துவளரத் தொடங்கினவோ, அக்காலந் தொடங்கி இஃது எனது இல்லமாயிருக்கின்றது' எனக் கூறியது.

அப்பறவைகள் புகன்றபேச்சுக்களைத் திருச்செவி சார்த்திய சக்கரவர்த்தித் திருமகன் ஸபையாரை நோக்கிச் சொல்லலுற்றனர்.

నసాసభాయత్రనసన్తివృద్ధాః నతేవృద్ధాయేనవదన్తిధర్మం।
నాసౌధర్మోయత్రనసత్యమస్తి నతత్సత్యంయచ్ఛలేనానువిద్ధం॥

நஸாஸபாயத்ர நஸந்திவ்ருத்தா: நதேவ்ருத்தாயே நவதந்திதர்மம் |
நாஸௌதர்மோயத்ரநஸத்ய மஸ்தி நதத்ஸத்யம்யத் சலேநாநுவித்தம் ||

'ஸபையோர்களே! எந்தச் சபையில் மூதறிஞரான முதியோரிலரோ, அஃது ஸபையன்று; எவர்கள் தருமமுரைக்கின்றிலரோ, அவர்கள் முதியோரல்லர்; எதில் ஸத்தியமிலதோ, அஃது தருமமன்று; எது தவறு உளதாகின்றதோ, அஃது ஸத்தியமன்று. இதனை யுணர்ந்து ஸபையோர்கள் ஏற்ற தருணத்தில் உள்ளதை உரைசெய்யாது மனத்தில் ஆலோசனை செய்து கொண்டு மௌனமா யிருப்பார்களாயின், அவர்கள் அனைவரும் அஸத்திய வாதிகளே யாவர். தெரிந்திருந்தும் காமத்தினலோ, கோபத்தினலோ, பயத்தினலோ, கேட்டகேள்விகளுக்கு எவர்கள் விடையகர்ந்திலரோ, அவர்கள் ஆயிரம் வருணபாசங்களைத் தம்மேல் ஏற்றுக்கொண்டவராவர். அதன் பின்னர் அப்பாசங்கள் நழுவ, ஒவ்வொரு பாசத்திற்கு ஒவ்வொரு ஸம்வத்ஸரகாலமாகின்றது. ஆதலின் வஸ்து தத்துவத்தை யுணர்ந்தவர்கள் உடனே உண்மை யுரைத்தல் வேண்டும்' என அருளிச்செய்தனர்.

அதனைச்செவியுற்ற ஸசிவர்கள் ஸ்ரீராமபிரானை நோக்கி, 'மேதையிற் சிறந்த மன்னனே! உலகமே உண்மையுடையதாக விளங்குகின்றது; கழுகு வீணைவாதஞ் செய்துவருத்துகின்றது. இதற்குத் தேவரீரே பிரமாணம்; எல்லாவற்றிற்கும் அரசனேயன்றோ உத்தமமானகதி. ஸகலமான பிரஜைகளும் பார்த்திவனையே பற்றினவையாகும். அநாதியான தருமம் அரசனேயாம். எவர்கள் ராஜதண்டனையைப் பெறுகின்றனரோ, அவர்கள் ஒருபோதும் துர்க்கதியடையார்கள்; அப்பொழுதே அவர்கள் யமன்கையினின்று விடுபட்ட வுத்தமபுருஷர்களாவார்கள்' என மொழிந்தனர்கள்.

இவ்வாறு அமைச்சர்கள் உரைசெய்ததைத் திருச்செவி சார்த்திய ஸ்ரீராமபிரான் அவர்களை நோக்கி யருளிச்செய்கின்றனர்: 'மந்திரிகாள்! இதைப்பற்றிய புராணகதை யொன்றுஉளது, உரைக்கின்றேன், அவதானமாகக் கேளுங்கள்: சந்திர சூரியர்களுடனும் நக்ஷத்திரங்களுடனுங் கூடிய ஆகாயமும், பருவதங்களும் பெருங்காடுகளும் கடல்களுமமைந்த ஸகல சராசரங்களுடனே கூடிய மூவுலகங்களும் ஆதியில் ஒன்றாகவே யிருந்தது. அக்காலையில் இப்பூமிதேவி பெரியபிராட்டியாருடன் கூடி ஸ்ரீமகாவிஷ்ணுவினது திருவுதரத்தினுட் புகுந்தனள். அவ்வாறு இவ்வுலகங்கள் எல்லாவற்றையும் தம்முதரத்தினுட்கொண்ட ஆதிபுருஷனை நாராயணன் அலைகடலின் மீது அநேகமாண்டளவு படுத்துத் துயின்றனன். ஸ்ரீமஹாவிஷ்ணு அங்ஙனம் யோகநித்திரை கொண்டவளவில், பிரமதேவனும் அவரது வயிற்றினுட் புகுந்தனன். பிறகு அப்பிரமன் ஸ்ரீமஹாவிஷ்ணுவினது திருவுந்தியிற்பூத்த பொற்றாமரை மலரின் வழியே வெளித்தோன்றி மஹாயோகியாகி, முதலில் மிகப்பெரியதாகிய இப்பூமியையும், அதன்மீது மலைகளையும் மரங்களையும் படைத்து, அப்பூமியைச்சுற்றி வாயுவையும் சிருஷ்டித்தனன். அப்பால் அதில் மானிடர்களும் மிருகங்களும் ஸர்ப்பஜாதிகளும் முதலான ஜராயுஜங்களும் அண்டஜங்களுமாகிய அநேகமாயிரம் உயிர்களைப் படைக்கலாயினர்.

அக்காலையில் அவரது சுரோத்திரமலத்தினின்றும் மதுவென்றும் கைடபரென்றும் பெயர்பூண்ட இரண்டு அசுரர்கள் தோன்றினர்கள். அவ்வவுணர்கள் மஹாவீரியமுடையவர்கள், பயங்கரமானரூபமுடையவர்கள், எவர்க்கும் அடங்காதவர்கள். அவ்வசுரர்கள் அயனைக்கண்டு கடுஞ்சினங் கொண்டவர்களாகி அவன்மீதே விரைந்து பாய்ந்தனர்கள். அவர்களைப்பார்த்துப் பிரமதேவன் நடுநடுங்கிப் பயங்கரமாகப் பெருங்கூச்சலிட்டனன். அக்கூச்சல் கிளம்பின நிமிஷமே ஸ்ரீமஹாவிஷ்ணு அந்ததைத்தியர்களை யெதிர்த்துத் தமது சக்கரத்தைப் பிரயோகித்து மதுகைடபர்களை மாய்த்தனர். அவர்களது உடலினின்று மொழுகிய மேதஸ் என்கிற நிணநீர் முதலியன இப்பூமி முழுமையும் பாய்ந்து பரவியது. அதன்பின்னர் இவ்வுலகம் அனைத்தையும் தாங்குகின்ற உத்தமனான மஹாவிஷ்ணு இம்மேதினியை மறுத்தும் மிகப்பரிசுத்தமாக்கி, எவ்விடத்தும் விருக்ஷங்கள் விசேஷமாக விருத்தியடையச்செய்தனர்; ஆங்கு பற்பல விதமான பயிர்பூண்டுகளும் அநேகமான ஓஷதிகளும் உற்பத்தியாயின. மதுகைடபர்களின் மேதஸ்ஸினதுநாற்ற மெங்கும் பரவியதுபற்றி இப்பூமிக்கு மேதினியெனவும் ஒருபெயர் வழங்கலாயிற்று. ஆதலின், இஃது கழுகினது கிருகமன்று; உலூகத்தினது இல்லமேயென நான் நிச்சயிக்கின்றேன். மற்றொருவருடைய மனையை மோசமாகக் கைக்கொள்ளக் கருதிய கொடும்பாவியான இக்கழுகு கொடிய தண்டனைக்குரியதே, இஃது இறுமாப்புற்று அன்னியருக்கு உபத்திரவஞ் செய்கிற மஹாபாபியாம்' என அருளிச்செய்தனர்.

அயோத்திமன்னன் இவ்வாறுஉரைக்குமளவில் ஆகாயவாணியொன்றுண்டாகியது. அஃதென்னவெனில் 'ஹே ரகுகுலநாத! முன்னரே தபோபலத்தினால் தஹிக்கப்பட்டிருக்கின்ற இப்பறவையை மறுத்து மொருதரம் தேவரீர் வதைசெய்யாதருள்க. இஃது பூர்வகாலத்தில் பிரமதத்தனெனப் பெயர்பூண்ட ஒரு பார்த்திவனும். அவன் மிகுந்த செல்வமுடையவன், மஹாசூரன், ஸத்தியமே விரதமாக்கொண்டவன், மிகப்பரிசுத்தமான செய்கையையுடையவன். ஒருகால் அவனதுகிருஹத்திற்குக் கௌதமரென்னும் ஒருமுனிவர் போஜனஞ்செய்யுமாறு எழுந்தருளினர்; நூறாண்டளவு அவ்விடத்திலே இனிதுண்டு வாழ்ந்திருக்க வேண்டுமென விரும்பி அவர் அவ்விடம் வந்தவர். அந்தப் பிரம்மரிஷியைப் பார்த்தவுடனே பிரம்மதத்தன் மிக்க மகிழ்ச்சிகொண்டவனாகி அவருக்குத் தானே அர்க்கியம் பாத்தியம் முதலான உபசாரங்கள் செய்து, போஜனத்திற்கு மாமிசங்களை மிகுதியாக வரவழைத்தளித்தனன். அதுகண்டு அம்முனிவர் மிக முனிந்து, இக்கணமே நீ பிணந்தின்னும் கழுகாகுகவெனச் சாபமொன்று கொடுத்தனர். அதன்பின்னர் அம்முனிவரே இராஜன்மீது அருள்புரிந்து, 'செந்தாமரைக் கண்ணனான ஸ்ரீமகாவிஷ்ணு இக்ஷ்வாகுகுலத்தில் ஸ்ரீராமனெனப் பெயர்பூண்டு திருவவதரிக்கப் போகின்றனர்; அவரது திருக்கரம் உன்மீது பட்டமாத்திரத்தில் இந்தப் பாபஜன்மமொழிந்து நீ மிகப்புனிதனாகுவை என வரமீந்தனர்' என்று அவ்வாகாயவாணி கூறியது.

அந்தத் தேவவாக்கைத் திருச்செவி சார்த்தியவளவிலே ஸ்ரீராமபிரான் அக்கழுகின்மீது கருணைகூர்ந்து தமது திவ்யமான ஹஸ்தத்தினால் அதனைத் தொட்டுத் தடவிக்கொடுத்தனர். தாசரதியினது திருக்கரம் மேலே பட்ட வளவிலே அக்கோமகன் கழுகு வடிவம்போய் அற்புதமான ஆடையாபரணங்களணிந்து கலவைச்சாந்து பூசிய திவ்வியரூபம் பெற்ற புருஷனாயினான். அப்பால் அந்த மஹாபுருஷன் அயோத்திமன்னனை யடிபணிந்து வணங்கி, 'ஹே ராகவ! மஹாதருமிஷ்டரான தேவரீரது கடாக்ஷத்தினால் அடியேன் இப்பொழுது கொடிய நரகத்தினின்றும் விடுபட்டவனாயினேன்; அடியேனது சாபமும் விமோசனமாகிவிட்டது' என்றுகூறி வாழ்த்தி விடைபெற்றுத் தம்மிடஞ் சேர்ந்தனன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபதாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

அதிகபாடம் முற்றுப்பெற்றது.

## எழுபத்தோராவது ஸர்க்கம்.

யமுனையாற்றங்கரையில் வஸிக்கும் முனிவர்கள் தமக்கு நேர்ந்துள்ள குறையை முறையிட்டுக் கொள்ளுமாறு ஸ்ரீராமனது ஸன்னிதானத்திற் கெழுந்தருளியது.

---

இவ்வாறு ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் பலவிதமான வியவஹாரங்களை விசாரித்து அரசுசெலுத்தி வருகையில், ஒருகால் வஸந்தகாலத்தில், அதிகமான வெப்பமும் குளிர்ச்சியுமின்றிச் சுகமா யின்பம் விளைவிப்பதான இராப்பொழுது நீங்கி மறுநாள் உதயமாயிற்று. அப்பொழுது, ஸ்ரீராமபிரான் பிராதக்காலத்தில் செய்யக்கடவனவாய காலைகடன்கள் அனைத்தையும் செய்து முடித்து, முறைப்படி ராஜகாரியங்களை விசாரித்தற்பொருட்டு இராஜஸபைக்கு எழுந்தருளினார். ஸ்ரீராமசந்திரன் ராஜ சிங்காதனத்து வீற்றிருந்த வளவில் சுமந்திரர் அவ்விடத்துவிரைந்து வந்து, 'ஹே ராகவ, ராஜராஜேந்திர! யமுனை நதிக்கரையில் வாஸஞ்செய்கின்ற தவசிகள்பலர் பிருகுபுத்திரரான சியவன முனிவரை முன்னிட்டு வந்து வாயிலில் காத்திருக்கின்றனர்கள்; தேவரீரைத் தரிசிக்க விரைகின்றனர்கள்' என விளம்பினார். சுமந்திரர் சொன்ன வார்த்தையைச் செவியுற்று ஸ்ரீரகுநந்தனன், 'பார்க்கவர் முதலான பிரம்மகுலத்தவர்களை இக்கணமே இவ்விடம் வரவிடுக' எனநியமித்தருள, ராஜசாஸனத்தைச் சிரமேற்கொண்டு வாயிலோன் அஞ்ஜலிஹஸ்தனாக வெளியே சென்று, ஆங்கு ஒளிபெற்றுவிளங்கும் வேதியர்களிடம் ராஜசாஸநத்தைத் தெரிவித்து அவர்களை அரண்மனைக்குள் செல்லவிடுத்தனன். அதுகேட்டு அங்குநின்ற நூற்றுக்கணக்கான வேதியர்கள், மந்திரங்கள்ஜபித்த புண்ணியதீர்த்தங்கள் நிறைந்த பூரண கும்பங்களையும், கனிகிழங்குகளான பற்பல உபஹாரங்களை

யும் கையிற்கொண்டு ராஜஸன்னிதானத்திற் சென்று, அவைகள் அனைத்தையும் ஆசீர்வதித்து ஸ்ரீராகவனது ஸன்னிதியில் ஸமர்ப்பித்தனர்கள்.

அதுகண்டு கோமகன் அவர்கள்அளித்த புண்ணிய தீர்த்தங்களையும் பலவகைப் பழங்களையும் பெற்றுக் கொண்டு பேருவகைபூண்டவராகி அவர்களெல்லோரையும் ஏற்றவாறு உபசரித்து அவரவர்க்கேற்ற ஆஸனங்களில் எழுந்தருளியிருக்குமாறு அநுமதியளிக்க, அங்ஙனமே யாவரும் பொன்மயமான பற்பல ஆஸனங்களில் இனிதுவீற்றிருந்தனர்கள். அதன்பின்னர் அயோத்திவேந்தன் அவ்வேதியர்களைநோக்கிக் கைகூப்பியவண்ணமே வினவலாயினர். 'முனிவர்காள்! ஸ்வாமிகள் இப்பொழுது இவ்வளவுதூரம் எழுந்தருளுதவற்குக் காரணம்யாது? அடியேனால்செய்யத்தகுவது யாதேனுமுளதாயின் ஆஞ்ஞாபிக்க வேண்டுகின்றேன்; மஹரிஷிகள் யாதுவிரும்பினும் அதனைச் செய்துமுடித்தற்குச் சித்தனாயிருக்கின்றேன். இவ்விராச்சியம் முழுமையும், இத்தேஹத்தினுள் இருக்கின்ற உயிரும் ஆகியயாவும் அந்தணர் பொருட்டேயன்றி வேறன்று, இஃது உண்மையே' எனஅருளிச்செய்தனர்.

தாசரதி திருவாய்மலர்ந்தருளியதைச் செவியுற்றவளவில் யமுனைக்கரை முனிவர்கள் யாவரும் 'நன்றுநன்று' எனக்கொண்டாடி, அகமகிழ்ந்தவர்களாகி அம்மன்னவனைநோக்கி, 'ஹே பார்த்திவ! காகுஸ்தசிங்கமாகிய உமக்கே இங்ஙனமுரைக்கத்தகும், இப்புவியில் மற்றெவர்க்கு மொவ்வாது. இதுகாறும் யாம் இப்புவியில் பூபதிகள் பலரிடஞ்சென்றோம்; அவர்கள் அனைவரும் காரியம்செய்து முடித்தற்கு அரியதாகுமென வுணர்ந்து, இங்ஙன முறுதிபேச அஞ்சினர்கள். தேவரீரோ, அங்ஙனமின்றி, காரியம் யாதாகுமோவென்பதைச்சற்றேனும் ஆலோசனைசெய்யாது, பிராம்மணர்களிடமுள்ள கௌரவத்தையே முதன்மையானகாரணமாக்கொண்டு சொன்னகாரியத்தைச் செய்துமுடிப்பதாகப் பிரதிஞ்ஞைசெய்தீர். ஆதலின், தேவரீரே ராஜகேஸரி; இங்ஙனம் பிரதிஞ்ஞைசெய்துகொடுக்கத் துணிந்த தேவரீர், முயன்ற காரியத்தை முடிக்கத் திறமுடையீர் என்பதிற் சிறிதும் ஸம்சயமின்று. ஆதலின் இம் முனிவர்களுக்கு நேர்ந்துள்ள மஹாபயத்தைப் போக்கி யாவரையும் பாதுகாத்தருள வேண்டுகின்றோம்' எனப் பிரார்த்தித்தனர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபத்தோராவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## எழுபத்திரண்டாவது ஸர்க்கம்.

யமுனாதீரவாஸிகளான முனிவர்கள், மதுவின்மகிமையையும்,
அவனதுமகன் லவணாசுரனது கொடுமையையுங்கூறி,
தங்களுக்கு அபயமளிக்குமாறு ஸ்ரீராகவனை வேண்டியது.

---

முனிவர்கள் இவ்வாறுமொழிந்ததுகேட்டுத் தசரதநந்தனன் அவர்களைநோக்கி, 'இப்பொழுதுநீவிர்யாதுகாரணம்பற்றி இவ்விடம்எழுந்தருளினீர்கள்?

அதனை யருளிச்செய்க; நீங்கள் கொண்டிருக்கும் அச்சத்தை யிவ்வளவோடு ஒழித்துவிடுக' எனவேண்டிக் கேட்டனர். காகுஸ்தன் அவ்வாறுகூறியது கேட்டு பார்க்கவமுனிவர் மறுமொழிகூறத் தொடங்கினர்.

---

## லவணசுரவிஜயம்.

'ஹே ராஜனே! எமக்கு உண்டாயிருக்கும் அச்சத்திற்குக் காரணமின்ன தென உரைக்கின்றேன், திருச்செவிசார்த்துக. பூர்வம் கிருதயுகத்திலே லோலே யென்பவளுக்கு மூத்தகுமாரனை மதுவெனப்பெயர்பூண்ட மஹாசுரனொருவ னிருந்தனன். அவ்வசுரன் பிரம்மஞானமுடையவன், அடைக்கலம் புகுந்தோரை யாதரிக்கு மியல்புடையோன், சிறந்தபுத்தியுடையோன்; ஆனதுபற்றி அவன்தேவர்களிடத்திலும் அதிகமான பிரீதியுடையவனு யிருந்தனன். அந்தமதுவானவன் தைரியசௌரிய பராக்கிரமங்களுடனே தருமத்திலும் அதிகமான ஊற்றங் கொண்டவனுகிப் பல்லாயிரமாண்டளவு ருத்திர தேவனைக் குறித்துஅரியதவம் புரிந்தனன். அவ்வசுரன்புரிந்த தவப்பெருமையால் சிவபெருமான் அவனிடத்தில் கருணைகூர்ந்து அவனுக்குப் பிரஸன்னராகி அற்புதமானவரமீந்தனர். அன்றியும், தமதுசூலா யுதத்தினது சக்தியை யாரோபித்துச் சிறந்தவீரியமும், சிறந்தசோதியுமுடையதான சூலமொன்றை அதிகமான ஆதரத்துடனே அவனுக் களித்தனர். அதனையளித்தபின்னர் அவர் அவ்வசுரனிடம் அன்புகூர்ந்து அவனைநோக்கி, 'யான்மிகவும் ஸந்தோஷிக்குமாறு நீ சிறந்த தருமமனுஷ்டித்தனை யாதலின், உன்னிடத்தில் யான்அத்தியந்தம்பிரீதனுகி உத்தமமான இவ்வாயுதத்தை யுனக்குஅளிக்கின்றேன்; நீ எவ்வளவுகாலம் தேவர்களுடனும் வேதியர்களுடனும் விரோதங்கொள்ளாதிருக்கின்றனையோ, அதுவரையுமே இஃது உன்னுடையதாகும்; மாறுகொள்வாயாகில் உடனேஇஃது உன்கையினின்று நீங்கிவிடும்; நீ நேராய் ஒழுகுவையாயின், உன்மீது எவன் எந்த ஆயுதத்தை யெய்தவளவிலும், அவ்வாயுதத்தை யிந்தச்சூலம் சென்று எரித்துச் சாம்பலாக்கி உடனேஉன்னிடம் சேர்ந்துவிடும்' எனவருளிச்செய்தனர்.

சிவபெருமானிடம் இவ்வாறு சிறந்தவரம் பெற்றபின்னர் மதுவென்னும் மஹாசுரன் அம்மஹாதேவனை மறுபடி யடிபணிந்து, 'ஹே ஸ்வாமி! தேவரீரே தேவர்களுக்கும் ஈசனன்றே? ஆதலின் தேவரீரை மற்றுமொருவரம் வேண்டுகின்றேன்: தேவரீர் கருணைகூர்ந்தருளிய இணையில்லாத இவ்வாயுதம் அடியேனுக்கு மாத்திரமேயன்றி, அடியேனது வமிசத்தவர்களுக்கு முரியதாயிருக்குமாறு அனுக்கிரகிக்க வேண்டுகின்றேன்' எனப் பிரார்த்தித்தனன். அதனைச் செவியுற்ற சிவபெருமான், 'அங்ஙனமொருபோதுமாவதின்று. ஆயினும் யான் உன்னிடம் அதிகமான உவப்புற்றேனுதலின், உனது வேண்டுகோள் வீணுகாதிருக்குமாறு ஒன்று கூறுகின்றேன்; உனது மைந்தனொருவனுக்கு மாத்திரம் இஃது ஆயுதமாகக்கடவது. இந்தச் சூலாயுதம் எவ்வளவுகாலம் கையிலிருக்கின்றதோ, அவ்வளவு காலம் உனது குமாரன்

'ஒருவராலும் வெல்லக்கூடாத வலிமைபெற்றவனாவான்' என அநுக்கிரகித்தனர். மஹாதேவனிடம் இவ்விதமான வரம்பெற்று அவ்வவுணன் சாலக்களிப்பெய்தி அவரிடம் விடைபெற்றுச்சென்று மிகச் சிறந்ததான மாளிகை யொன்று நிருமாணஞ் செய்துகொண்டு அதில் இனிது வாழ்ந்திருந்தனன்.

இம்மதுவினது மனத்திற்கினிய மனையாள் * கும்பீனஸியென்பள்; விச்வாவசு என்பவனுக்கு அனலையினிட முற்பவித்தவள். இந்தக் கும்பீனஸியினிடம் மதுவுக்கு மிகக்கொடியனும் மஹாவீரிய முடையோனுமான லவணனென்னும் புத்திரனொருவன் பிறந்தனன். அவன் சிறுபிராயம் முதற்கொண்டு மஹா துஷ்டனாகிப் பாவங்களையே புரிந்து வந்தனன். புத்திரன் இவ்வண்ணம் துர்விநீதனாயிருத்தல் கண்டு மது கோபமும் சோகமு மடைந்தவனாகி அம்மகனிடமொன்றும் பேசமாட்டாமல் தனது சூலத்தை யவன் கையிலே கொடுத்துத் தான் பெற்ற † வரத்தின் பெருமையையும் அவனிட முரைத்து இவ்வுலகத்தை விட்டு வருணலோகஞ் சென்றனன். அன்று தொட்டு அந்த லவணாசுரன் சூலத்தின் மகிமைபற்றியும் இயல்பான தனது கொடுமைபற்றியும் மூவுலகங்களையும் மிகவருத்துகின்றனன்; அவற்றிலும் ஒருதலையா முனிவர்களையே மிகத்துன்புறுத்துகின்றனன். இத்தன்மையன் ஐயா லவணன், அத்தன்மையது அவன் சூலம்; அதனால் உம்மையன்றி வேறுகதியில்லாமல் தேவரீரையே தஞ்சமென வந்தடைந்தோம். இனித் தேவரீர் திருவுள்ளப்படி நடத்துக. முனிவர்கள் பலர் அஞ்சி யகங்குலைந்தவராகி இதுகாறும் பல பார்த்திவர்களிடஞ்சென்று அபயமளிக்குமாறு வேண்டினர்கள்; அஞ்சலென்று அபயமளிப்பவரெவரையும் காண்கிலேம். தேவரீர் இப்பொழுது ஸகலமான ஸேனைகளுடனும் அத்திறத்தனான இராவணனை வதைத்து வெற்றிவீரரா யெழுந்தருளியதுகேட்டுத் தேவரீரேயெமக்கு மடைக்கலமாகுவீரெனத் துணிந்து வந்தனம்; தேவரீரொருவரையன்றி யெம்மை ரக்ஷிக்கவல்லவர் இப்புவியில் யாம் மற்றெவரையும் காண்கிலோம். ஆதலின் லவணாசுரனிடத்தில் அச்சமுற்றிருக்கின்ற எம்மைப் பாதுகாத்தருள வேண்டுகின்றோம். ஹே ராம! எமக்கு உண்டாயிருக்கும் அச்சத்தின் காரணமின்னதென்பதை ராஜஸன்னிதானத்தில் விண்ணப்பம் செய்து விட்டோம்; அதனைப் போக்கி யெம்மைப் பாதுகாக்கும் பேராற்றல் தேவரீரிடமுள்ளதென்பதற்கு ஐயமிலது; இனித்திருவுள்ளத்தின்படி செய்தருள்க' என வேண்டி விண்ணப்பஞ் செய்தனர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

* இவளே மால்யவானது மகளான அநலையினது புத்திரி; இராவணனது சகோதரி. மதுவென்பவன் அபஹரித்துக்கொண்டு சென்றனனென முன்னம் இராவணனிடம் விபீஷணன் கூறியது இவளையேயாம். [உத்தர ராமாயணம் ௧௬௰ம்பக்கம்பார்க்க.]

† வரத்தின் பெருமையாவது, சூலம்கையிலிருக்குமளவுமே எவராலும் கொல்லப்படா திருப்பானென்பது.

## எழுபத்துமூன்றுவது ஸர்க்கம்.



ஸ்ரீராமபிரான் லவணாசுரனது வரலாறுகேட்டு, அவ்விடம்சென்று அவனை வதைக்குமாறும், அவனது நகரத்திலேயேயிருந்து ராஜ்யபரிபாலனஞ்செய்து வருமாறும் சத்துருக்கனனுக்கு நியமித்தருளியது.

---

லவணாசுரனிடமுண்டாகிய மஹாபயத்தைப் போக்கிப் பாதுகாத் தருளுமாறு யமுனைக்கரைமுனிவர்கள் இங்ஙனம் கூறியதுகேட்டுக் காகுஸ்தன் அவர்களைநோக்கிக் கைகூப்பிக்கொண்டு 'ஸ்வாமிகாள்! நல்லது, அந்த லவணன் எத்தன்மையான ஆஹாரமுடையவன்? எத்தன்மையான ஆசாரமுடையவன்? எவ்விடத்து வதிகின்றனன்?' என வினவினர். ஸ்ரீராகவனது வசனத்தைச் செவியுற்று அம்முனிவர்கள் அனைவரும் லவணாசுரன் வளர்ந்த வரலாறு கூறத்தொடங்கி, 'அக்கொடியோன் ஸகல பிராணிகளையுமே தனக்குப் போஜனமாகப்பிடித்துப் புஜிக்கின்றனன்; முதன்மையாகத் தவசிகளையே உணவாகத் தேடுகின்றனன்; என்றும் தீமை செய்தலே அவனுக்கு ஆசாரமாயிருக்கின்றது; அவன் மதுவனத்தில் வஸிக்கின்றனன். சிங்கம், புலி, மான், மதயானை முதலானவைகளை யாயிரமாயிரமாய் அடித்துத்தின்றும் போதாது நாள்தோறும் மானிடர்களை மிகுதியாகக் கொன்று தின்னுகின்றனன்; இடையிடையே இன்னும் அநேக முயிர்களையும் அருந்துகின்றனன். அவன் சங்கரிக்க முயல்வனாகில், வாயைத்திறந்துகொண்டு வருகிற வைவஸ்வதனெனவே விளங்குவான்' என விண்ணப்பஞ் செய்தனர்கள்.

அவர்கள் அவ்வாறு விளம்பியதைச் செவியுற்றுச் சக்கரவர்த்தித் திருமகன், 'முனிவர்காள்! இனி நீவிர் அஞ்சன்மின், யான் அவ்வசுரனைக் கொலை செய்கின்றேன்' என அம்மஹாநுபாவர்களுக்கு உறுதிமொழிகூறி, உடனே தமது பிராதாக்கள் அனைவரையும் அருகில் அழைப்பித்து, 'தம்பிகாள்! இப்பொழுது மதுவனஞ்சென்று வீரனான லவணாசுரனை வதைக்கும் புண்ணியத்தை யேற்றுக்கொள்ள விருப்பமுடையவர் யாவர்? பரதா! நீ போய் வருகின்றனையா? அல்லது சத்துருக்கினன் போய் வருவனா?' என வினவினர்.

அதனைச் செவியுற்றுப் பரதாழ்வான் எழுந்து 'ஸ்வாமி! இந்தக் கைங்கரியத்தை யடியேனுக்கு நியமித்தருள்க, அடியேன் சென்று அவனை வதைத்து வருகின்றேன்' என விண்ணப்பஞ் செய்தனர். பரதாழ்வான் இவ்வாறு தைரியசௌரியங்களுடனே கூறியதுகேட்டு இலக்குமணனது ஸகோதரரான சத்துருக்கனாழ்வான் சுவர்ணமயமான சிங்காதனத்தினின்று மெழுந்து சக்கரவர்த்தித் திருமகனார்க்குத் தண்டன் ஸமர்ப்பித்து அஞ்சலிஹஸ்தராகநின்று, 'ஸ்வாமி, ரகுகுலசிகாமணி! இந்தப் பரதாழ்வான் முன்பே மிகப் பெரிய காரியஞ் செய்திருக்கின்றனர். அதாவது, தேவரீர் முன்பு வனவாஸ

மெழுந்தருளினபோது ஆரியரில்லாத இவ்வயோத்தியாபுரியைப் பரிபாலிப்ப தாகிய பெரிய பாரத்தைத் தாங்கினர். அன்றியும் அக்காலத்தில் இவர் மரவுரியும் சடைமுடியுமாய்க் காய்கனிகளையே யமுதுசெய்துகொண்டு நல்ல பாய்படுக்கையின்றிப் பதினன்கு ஸம்வத்ஸரம் பலவிதமான துன்பங்களை யனுபவித்துக்கொண்டு தேவரீர் எழுந்தருளுவதை யெதிர்பார்த்து நந்திக்கிரா மத்திலே வஸித்திருந்தனர். இத்தன்மையவாய துன்பங்களை யனுபவித்தவர் மறுத்தும் துன்புறுதல் தகுதியாகுமோ? தாஸன் இதோ ஒருவன் காத்திருக் கின்றேன், இந்தக் கைங்கரியத்தை யடியேனுக்கு நியமிக்கலாகாதோ?' என விண்ணப்பஞ் செய்தனர்.

சத்துருக்கனுழ்வான், இவ்வாறு சொல்லியதைத் திருச்செவி சார்த்திய சக்கரவர்த்தித் திருமகனர் அவரை நோக்கி, 'சத்துருக்ன! அங்ஙனமே யாருக; பரதனுக்கு வருத்தங் கொடுக்கலாகாதென்பது உனது கருத்தா யின், நீயே சென்று லவணுசுரனைவெல்லுக. அதனுடனே யான் சொல்லு மின்னெரு வார்த்தையையும் நீ தடைசொல்லாது ஏற்றுக்கொள்ளல்வேண்டும். மதுவினது மேலான நகரத்திற்கு ராஜனுக உனக்கு இவ்விடத்திலேயே யான் அபிஷேகஞ் செய்கின்றேன்; அவ்விடத்திலே யிருந்து நீ அரசுபுரிந்து வருக. நீ மஹாசூரனும் ஸமர்த்தனும் நீதிசாஸ்திரமுணர்ந்தவனுமாகின்றனை. யாவ னெருவன் சத்துருவை வதைத்த பின்னர் அந்த ராஜ்யத்தில் பிரஜைகளைப் பரிபாலிக்க மற்றொருராஜனை நியமிக்கின்றிலனே, அவன் நரகத்திற்கு ஆளாகு வான். ஆதலின் நீ என் வார்த்தையை மேலாக மதிக்கின்றவனயின், மது வின் மகனும் மாபாவியுமான லவணனை வதைசெய்து அந்த ராச்சியத்தை நீயே நீதிமுறைதவ்றாது நன்கு பரிபாலித்துவருக; என் வாக்குக்கு மறுவாக்கு உரையாது உடன்படுக. மூத்தோர் சொன்னவாறு செய்தல் இளையோர் கடமையாம். வஸிஷ்டர் முதலான முனிவர்களைக்கொண்டு விதிமுறைப்படி யான் இப்பொழுது செய்விக்கும் பட்டாபிஷேகத்தை நீ பெற்றுக் கொள்ளுக' என நியமித்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபத்து மூன்றுவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## எழுபத்து நான்காவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் சத்துருக்கனனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து, லவணசுரனை வதைக்குமுபாய மருளிச்செய்தது.

---

ஸ்ரீராமபிரான் இவ்வாறு விதித்துரைத்தது கேட்டு மஹாசூரரான சத் துருக்கனுழ்வான் இஞ்சித்து நாணங் கொண்டவராகி மூத்தவரை நோக்கி

மெதுவாக மொழியலாயினர். 'அண்ணு, ரகுகுலசிகாமணி! மூத்தோ னிருக்க இளையோன் அரசாளல் கோத்தருமமல்லவெனக் கேட்டிருக்கின் றேனே. ஆயினும் தேவரீரது நியமனத்தை யொருபொழுதும் அதிக்கிரமிக்க லாகாது, அதனை முடிமேற்கொண்டு நடப்பது அடியேனது கடமையே யாகும்; இதனைத் தேவரீரிடமும் கேள்வியுற்றிருக்கின்றேன், வேதங்களும் முறையிடுகின்றன. பரதாழ்வான் முன்னம் மொழிந்ததை யடியேன் ஏனோ மறுத் துரைத்தேன்? லவணுசுரனை யடியேன் வதைக்கின்றேனென அடியேன் வாய்க்கொழுப்பன்றோ கூறநேரிட்டது? ஹே புருஷர்ஷப! அவ்வாறு மறுத்து மொழிந்ததன் பயனே இங்ஙனம் விபரீதமாக வந்து விளைந்தது போலும். மூத்தவரான பரதாழ்வான் மொழிந்தபோழ்து அடியேன் அதருமஸஹிதமாயும் பரலோக விருத்தமாயும் அதற்கு மறுமொழி கூறியது பிசகு. ஹே காகுஸ்த! அடியேன் அங்ஙனம் ஒருதரம் மாறுரைகூறி அந்த அபசாரத்திற் குத்தண்டனையாக இராஜ்யாபிஷேகம் பெற்றுக் கைங்கரியத்தை யிழக்க நேரிட்டது போதும்; மறுபடி தேவரீர் திருவாக்குக்கு மறுவாக்கு உரைக்கத் துணி கின்றிலேன்; அதற்காக மற்றொரு கொடியதண்டனை யடியேற்கு விதிக்க வேண்டா. ஹே நரசார்த்தூல, ஹே ராஜன்! ஸ்வாமி நியமனத்தை உல்லங் கனஞ்செய்தால் யாது விளையுமோவென நடுங்கி யாதும்புகலத் திறமின்றி வருந்துகின்றேன். ஸ்வாமி நியமனப்படி நடக்கின்ற தாஸனேயன்றோ அடியேன்? ஹே ரகுநந்தன! ஸ்வாமியே அடியேனிடம் கருணை கூர்ந்து மூத்தோ னிருக்க இளையோன் அரசாளுதலாகிய இந்த அதருமம் அடியேனுக் கில்லா தொழியுமாறு அருள்புரிக' எனவேண்டி விளம்பினர்.

மஹாசூரரான சத்துருக்கனாழ்வான் இவ்வண்ணம் உரைத்தது கேட்டு ஸ்ரீராமபிரான் ஸந்தோஷமடைந்தவராகி, பரதாழ்வானையும் இலக்குமணனை மழைத்து, 'தம்பிகாள்! சத்துருக்கனனது அபிஷேகத்திற்கு வேண்டிய ஸகலமான பொருள்களும் உடனே சித்தஞ்செய்க; இப்பொழுதே இவனுக்கு மகுடாபிஷேகஞ் செய்விப்போம். புரோஹிதர், ரித்துவிக்குக்கள், மந்திரிகள், பிரதானிகள், பட்டணத்திலுள்ள மற்றும் பலபிரபுக்கள் ஆகிய அனைவரையும் உடனே எனது நியமனப்படி இவ்விடம் வரவழைக்க' என ஆஞ்ஞாபித் தருளினர்.

ராஜசாஸனத்தைச் சிரமேற்கொண்டு அவர்கள் அங்ஙனமே செய்தனர்கள். புரோஹிதரை முன்னிட்டு முடிசூட்டுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் யாவும் செய்யப்பட்டன; இராஜாக்கள் அந்தணர்கள் ஆகிய பலரும் இராஜமாளிகைவந்து சேர்ந்தனர்கள். ஸ்ரீராகவனும் அயோத்திமா நகரும் மிக்க மகிழ்ச்சி கொள்ளுமாறு சத்துருக்கனனுக்கு மிகப் பெருமையாகப் பட்டாபிஷேகம் நடந்தேறியது. முன்னம் இந்திரன் முதலிய தேவர்களால் அபிஷேகஞ் செய்யப்பெற்ற சுப்பரமணியக் கடவுளென, வஸிஷ்டர் முதலான முனிவர்களால் மகுடாபிஷேகஞ் செய்யப்பெற்றபோழ்து சத்துருக்கனாழ்வான் சோதிமயமான சூரியனென விளங்கினர். ஸ்ரீராமபிரான் இவ்வாறு சத்துருக் கனனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்த வளவில், பட்டணத்துப் பல்லாயிரம்

ப்ரஜைகளும் பிராம்மணர்களும் மிக்க மகிழ்ச்சி கொள்ளலாயினர். கோஸலையும் சுமித்திரையும் கைகேயியும், அந்தப்புரத்தி லுள்ள மற்றும்பல ராஜஸ்திரீகளும் அவ்விளஞ்சிங்கத்திற்கு மங்கள முண்டாகுமாறு கடவுளைப்போற்றிப் பிரார்த்தித்தனர்கள்; யமுனாதீர வாஸிகளான மஹாநுபாவர்களாகிய முனிவர்களெல்லோரும் சத்துருக்கனன் அபிஷேகம் பெற்ற போழ்தே லவணாசுரன் உயிரிழந்தனனென வெண்ணி அகமகிழ்ந்தார்கள்.

இங்ஙனம் மகுடஞ்சூடிய சுமித்திரையி னிளஞ்சிங்கமான சத்துருக்கனனை ஸ்ரீராமபிரான் அழைத்துத் தம்மடிமீது உட்காருவித்துக்கொண்டு, அவர்க்கு இன்னும் அதிகமான ஆற்றலுண்டாகுமாறு மதுரமாக மொழியலாயினர். 'ஹே சத்துருக்கன! ராகவ சிங்கமே! இந்த அம்பு தெய்வத்தன்மை பொருந்தியது, சத்துருக்களது நகரங்க ளனைத்தையும் வெல்ல வல்லது; இதனால் நீலவணனையெளிதில் அதஞ்செய்யலாகும். இஃது ஒருபொழுதும் வீண்போவதன்று. பேரோதவண்ணன் பிரளயகாலத்துப் பெருங்கடலின் மீது பள்ளிகொண்டிருந்தபோது அந்தப் பரமபுருஷனால் இஃது படைக்கப்பட்டது. இதனாலேயே தாமரையோன் தோல்வியடையாது வெற்றிகொண்டனன். தேவா சுரர்களும் இதனைக் கண்ணெடுத்துப்பார்க்க வல்லவ ரல்லர்; அதனால் இஃது ஒருவர்கண்ணுக்கும் புலப்படாத பெருமையுடையது. உலகங்களைப் படைத்தற்குப் பெரிய விரோதஞ் செய்த துராத்துமாக்களான மதுகைடபர்களிடத்தில் மிகக் கோபங்கொண்டு அவர்களையும் மற்றுமுள்ள பல ராக்ஷஸர்களையும் சங்காரஞ் செய்யுநிமித்தம் இஃது சிருஷ்டிக்கப்பட்டது. அவ்வண்ணமே இந்தச்சரத்தினால் அவ்வசுரர்களை வதைசெய்து அதன்பின்னரே இவ்வுலகம் படைக்கப்பட்டது. இதனைப் பிரயோகித்தால் உலகமெங்கும் உல்லோல கல்லோல மாகுமெனவஞ்சி இராவணயுத்தத்திலேகூட யான் இதனைப் * பிரயோகஞ் செய்யாது காப்பாற்றி வைத்திருந்தேன். இது தவிரவும், இந்த லவணாசுரனது தந்தையான மதுவென்னும் அசுரனுக்குச் சத்துரு விநாசம் செய்வதன் பொருட்டு மஹேசுவரன் அளித்த மஹாத்தான சூலமொன்று இந்த லவணனிட மிருக்கின்றது. அதனையிவன் பூஜித்துத் தனதுகிருகத்திலேயேவைத்து விட்டு நாடோறும் பலதிசைகளிலும் சென்று தனக்கு உணவு தேடுகின்றனன். எவனேனுமொருவன் இவனைப் போர்க்கழைப்பனாயின், அச்சமயத்தில் இவன் அந்தச்சூலத்தைக் கைக்கொண்டு சென்று அதனால் அவனையெரித்து நீறாக்குகின்றனன். புருஷசிங்கமே! அந்தலவணன் கையில்சூலமின்றி வெளியேசென்றிருக்கும் சமயத்தில் நீ ஆயுதமும்கையுமாக அவனது கோட்டைவாயிலிற்போய்நின்று அவனை அரண்மனைக்குள் புகவொட்டாது தடுத்து அவனுடன் போர் தொடுப்பையாகில், நீ அவனைவதைசெய்யத்தடையில்லை. வேறுவிதமாக அவனை வெல்வது அஸாத்தியமான காரியம்; நான் சொன்னவண்ணமே நீ செய்வாயாகில் அவன் விநாசமடைவான். சிவபிரானது சூலத்தை யொழிக்குமுபாயமுனக்குக் கூறி

* ராவணனைப்பார்க்கிலும் லவணாசுரன் மஹாபலிஷ்டனென்பது இதனால் குறிப்பித்ததாயிற்று.

னேன்; பரமசிவனளித்தவரத்தை வேறுவிதமாகவெல்வது * கூடாதகாரியம்' என்றருளிச்செய்தனர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் எழுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தைந்தாவது ஸர்க்கம்.



*சத்துருக்கனன் ஸ்ரீராமனளித்த சேனைமுதலியவற்றை அவரது நியமனப்படி முன்னேபிரயாணப்படுத்தி யனுப்பிப் பிறகு தாம் பிரயாணமானது.*

---

லக்ஷ்மணாநுஜனைநோக்கி ஸ்ரீராமபிரான் இவ்வண்ணம் நியமித்தருளி அவரைப்பலவாறு கொண்டாடி மறுபடியுமொன்று திருவாய்மலர்ந்தருளுகின்றனர். 'குழந்தாய் சத்துருக்ன! இப்பொழுது நீ செல்லுமிடத்து உனக்குப் பிரீதியுள்ளபடையும் பொருளும் பந்துக்களுமொன்றுமில்லையாதலின், நீ யிங்கிருந்து செல்லும்பொழுது நாலாயிரம் குதிரைகளும், இரண்டாயிரம் ரதங்களும், உத்தமமான நூறுகஜங்களும் அடங்கிய திரண்டசேனையைக் கூடவே கூட்டிக்கொண்டு செல்லுக; பற்பல விலைப்பண்டங்களுடனே கடைவீதிகளும், நடர்களும் நர்த்தகர்களும் உன்னுடனேவருவார்கள்; கோடிக்கணக்கான சுவர்ணமும் அளவற்றபசுக்களும் வாஹனங்களும், கொழுத்துக்களித்த போர்வீரர்களும் உனக்கு விசேஷமாகவேண்டுவனவன்றோ? இளஞ்சிங்கமே! நீ உன்னைச்சேர்ந்தவர்க ளனைவரிடத்திலும் அன்புகூர்ந்து இனியமொழி கூறி யாவரையும் அகமகிழச்செய்க. ஆயின், நீ யுத்தத்தில் ஆசைகொண்டு எதிர்த்து வருகின்றனையென்பது லவணாசுரனுக்குத் தெரியாதவண்ணம் இந்தப் பெரும் படையைப் பேருவகைகொண்ட பல்லாயிரம் பிரஜைகளுடனே முன்னதாக அனுப்பிவிட்டு, அதன்பிறகு லவணனுக்குச் சிறிதும் ஸந்தேஹமுண்டாகாதபடி நீ ஒருவனுகவே வில்லுங்கையுமாக மதுவனத்திற்குத்தனித்து விரைந்து செல்லுக. இங்ஙனம் அவ்வவுணனுக்கு முன்னதாகச் செய்திதெரிவிக்காது தீடீரெனச்செல்வதொன்று தவிர அவ்வசுரனை வெல்வதற்கு வேறு உபாயமொன்றுமிலது; அவனறியச்சென்று அக்கொடியவன்கண்ணில் அகப்படு

---

* இங்குப் பரமசிவன் அளித்தவரத்தை வெல்வது கூடாதகாரியமென ஸ்ரீராமபிரானே யருளிச்செய்ததனால், ஸ்ரீமந்நாராயணனிலும் சிவன் சிறந்தவனென விளங்கு கின்றதெனச் சிலர் மயங்குவார்கள்; அது தவறு. இவ்விடத்தில், விஷ்ணுவோ சிவனோ, யார் உயர்ந்தவர் என்கிறகேள்வி வந்ததோ? இல்லையே! பிரம்மாஸ்திர பந்தத்திற்கு யாவருமுட்படவேண்டுமென்றால், பிரம்மா ஸ்ரீமஹாவிஷ்ணுவினும் மேலானவரென்ன லாகுமோ? ஆதலின், சிவபிரானது சூலத்தின்பெருமையைக் கூறவந்த விடமாதலின், இங்ஙனம் கூறநேரிட்டது. தமதுபக்தனது பெருமைவிளங்க இவ்வாறு கூறினரென்றாயினும், அவதாரமரியாதையைக் கணிசித்துக் கூறினரென்றாயினும் கொள்ளினுமமையும்.

கின்றவனெவனும் கொலையுண்பது திண்ணம். ஆதலின் இந்தக்கோடைகழிந்து மாரிகாலம் துவக்கியவுடனே சென்று நீ அந்த லவணாசுரனை வதைசெய்க; அவனை வெல்வதற்கு ஏற்றகாலம் அதுதான். ஏனெனில், மாரிகாலத்தில் மன்னவர்கள் ஒருவரும் படையெடுத்து வாரார்களென்று அவன் விசாரமொழிந்து திரிவான். முன்னதாக உனதுசேனைகள் எல்லாவற்றையும் நீ இந்த மகரிஷிகளுடனே கூட்டியனுப்பிவிடுக; மழைபொழிந்து பாகீரதி பெருக்கெடுக்குமுன்னமே உனது பெரும்படை கங்காநதியைக்கடந்து அக்கரைசேருமாறு இக்கணமே பிராயாணப்படுத்துக. சேனையாவும் கங்கையின் அக்கரைபோய்ச் சேர்ந்தபின்னர் நீ தனியே வில்லுங்கையுமாகச் செல்வது நன்மை விளைவிப்பதாகும்" எனநியமித்தருளினர்.

ஸ்ரீராமபிரானது சாஸனத்தைச் சிரமேற்கொண்டு சத்துருக்கனாழ்வான் ஸேனாவீரர்கள் அனைவரையும் அழைப்பித்து, அவ்விடம் வந்த முனிவர்களுடனே பெரும்படையைக் கூட்டிக்கொண்டு புறப்பட்டுச் செல்லுமாறு கட்டளையிட்டு, அம்முனிவர்கள் எவ்விடத்துப் பாசறையிறங்குமாறு விதிக்கின்றனரோ, அவ்விடத்து ஒருவர்க்கும் ஒருவிதமான இடையூறும் உண்டாகாதவகையா யிறங்கியிருக்கவேண்டுமென விதித்தருளினர்.

இவ்வண்ணம் சேனைகளைச் செல்லுமாறு செலவுகொடுத்து லக்ஷ்மணானுஜன் கோஸலை, சுமித்திரை, கைகேயியாகிய மாதாக்கள் மூவரையும் அடிபணிந்து வணங்கி விடைபெற்றுக்கொண்டனர்; அதன்பிறகு ஸ்ரீராமபிரானைப் பிரதக்ஷிணஞ்செய்து ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அவரிடம் அனுமதிபெற்றனர்; அதன்பின்னர் பரத லக்ஷ்மணர்களையும் புரோஹிதரான வஸிஷ்டபகவானையும்கண்டு கைகூப்பிவணங்கி வலம்வந்து விடைகொண்டு மிகுந்த உற்சாகத்துடனே புறப்பட்டுச் செல்லலாயினர். ரகுகுலசிகாமணியாகிய சத்துருக்கனாழ்வான் ரதகஜ துரகபதாதியென்னும் நால்வகைப்படைகளையும் புறப்பட்டுச்செல்லுமாறு விடைகொடுத் தனுப்பியபின்னர் ஒருமாதகாலம் சக்கரவர்த்தித் திருமகனார் ஸன்னதியிலேயே வஸித்திருந்து, அதன்பின்னரே தாம் பிரயாணமாயினர்.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் எழுபத்தைந்தாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## எழுபத்தாறுவது ஸர்க்கம்.

மதுவனஞ்செல்லப் பிரயாணப்பட்ட சத்துருக்கனன்
நடுவழியே வால்மீகிமுனிவர் ஆச்சிரமத்திலிறங்கி, ஆங்கு அம்முனிவர்கூறிய
கல்மாஷபாதரது கதையைக்கேட்டுக் களிப்புற்றது.

---

இவ்வாறு ஸகலமான சேனைகளையும் அனுப்பியபின்னர் அயோத்தியாபுரியில ஒருமாதகால மிருந்து அநந்தரம் தனியே புறப்பட்ட சத்துருக்கனாழ்வான் விரைந்து சென்றுவழியிலிரண்டு இராத்திரி வஸித்து, மூன்றுநாள் மிகப்

பரிசுத்தமான வால்மீகிமஹாமுனிவரது ஆச்சிரமஞ் சேர்ந்தனர். ஆங்கு மஹாநுபாவரான புற்றிற்பிறந்த பெருமுனிவரைக்கண்டு ஸேவித்து அபிவாதனஞ்செய்து அவரை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு, 'ஸ்வாமி! அடியேன் எம் ஐயனது ஆஜ்ஞையினால் இவ்விடமெய்தினேன்; இன்றிராத்திரி இவ்விடத்துத் தேவரீர்ஸன்னிதானத்தில் வஸித்திருந்து நாளையுதயம், லவணாசுரனிருக்குமிடமாகிய மிகக்கொடியதான மேற்றிசையைநோக்கிச் செல்ல விரும்புகின்றேன்' எனவிண்ணப்பஞ்செய்தனர். சத்துருக்கனாழ்வான் சொன்னவார்த்தையைக் கேட்டருளிய வால்மீகிமஹாமுனிவர் புன்னகைகொண்டு மறுமொழி கூறுகின்றனர். 'சத்துருக்கன! புகழ்பெற்றுவிளங்கும் ராஜசிங்கமே! நீ இவ்வாச்சிரமத்தைத்தேடிவந்தது எனக்கு மிக்கமகிழ்ச்சியைத்தருகின்றது. குழந்தாய்! இஃது ரகுகுலத்தரசர்களுக்கே சொந்தமான ஆச்சிரமமன்றோ? இதோயான் அளிக்கும்இந்த அர்க்கியபாத்தியாதிகளைப் பெற்றுக்கொண்டு நீ இவ்வாஸனத்தில் இனிதுவீற்றிருக்க' எனவிளம்பினர். சத்துருக்கனாழ்வான் அதுகேட்டு அம்முனிவர் அளித்த அர்க்கியபாத்தியம் முதலான பூசைகளைப்பெற்றுக் கனி கிழங்குகளாகிய போசனத்தையும்புசித்துத் திருப்தியடைந்தனர். ராகவசிங்கமாகிய சத்துருக்கனன் இவ்வாறு அமுதுசெய்து இனிதுவீற்றிருக்கையில் வால்மீகிமகரிஷியைநோக்கி, 'ஸ்வாமி! இதோ இவ்வாச்சிரமத்திற்கருகே யாகசாலையொன்று காணப்படுகின்றதே, இஃது எவருடைய யாகசாலையோ' என்வினவ, வால்மீகி விடைகூறலாயினர்.

---

## மித்திரஸஹன் அல்லது கல்மாஷபாதன்கதை.

'கேளுமையா காகுஸ்தசிகாமணி! உங்கள்முன்னோர்களில் சுதாஸரென்னும் சக்கரவர்த்தி யொருவரிருந்தனர். அவருடையபுத்திரர் வீரஸஹர்என்பவர்; அவர் மறத்திலும் அறத்திலு மொப்புற்றவரெனப் பெயர் பெற்றவர். சிறுபிள்ளையாயிருக்கையிலேயே அந்தச் சுதாஸருடையபுத்திரர் வேட்டையாட விருப்புற்று வெளியேசென்று திரியலாயினர். அங்ஙனமவர் வேட்டமாடிவருகையில் ஒருநாள், இரண்டுராக்ஷஸர்கள் வேங்கைவடிவம்பூண்டு அவ்வனமெங்கு மோடியாடி அங்குள்ளவிலங்குகளை யாயிரமாயிரமாய் அடித்துக்கொன்று தின்று அழிக்கக்கண்டனர். அவர்கள் அரணியத்திலுள்ள உயிர்களையெவ்வளவு அருந்தியும் திருப்திகொள்ளாதிருப்பதையும், வனத்தில் விலங்குகள்திரள்திரளாய் ஒழிவதையும் அவ்வேந்தன் கண்ணுற்று மிகக்கோபங்கொண்டவராகி அந்தராக்ஷஸர்களி லொருவனைத் தமது அற்புதமான அம்பினால் அடித்துக்கொன்றனர். அவனையடித்து வீழ்த்தியபின்னர் ஸௌதாஸர் (சுதாஸருடையபுத்திரர்) மனக்கவலையும் கோபமுமொழிந்து, அடியுண்டுவீழ்ந்த அரக்கனை யகமகிழ்ந்து நோக்கினர். அதுகண்டு அவனுடைய துணைவனான மற்றொருராக்ஷஸன் உள்ளங்கொதித்து ஸௌதாஸரைநோக்கி, 'அடே பாபி! ஓர் அபராதமுஞ்செய்யாத எனது நற்றோழனை நீ நிஷ்காரணமாகக்

கொலைபுரிந்தனையாதலின், யான் ஏற்றசமயத்தில் பழிதீர்த்துக்கொள்வேன்' எனப்புகன்று மறைந்துபோயினன்.

இஃது இங்ஙனமாக, நாளளவிலே ஸௌதாஸரான வீரஸஹர் மித்திரஸஹரெனப் பெயர்பூண்டு ராஜ்யபார மேற்றுக்கொண்டனர். அந்தமன்னவரே இவ்வர்ச்சிரமத்தருகில் அச்வமேதயாக மியற்றினர்; வஸிஷ்டமாமுனிவர் அதற்குப் பிரதானகுருவாயிருந்து நடப்பித்தனர். அவ்வேள்வி வெகுசிறப்பாகப் பலவாண்டளவு தேவர்களது யாகமோவெனக் கொண்டாடுமாறு நடந்தேறியது. அவ்வேள்வி முற்றுப்பெற்றவளவில், அந்த அரக்கன் முன்தான் மனத்திற்கொண்டவைரத்தையெண்ணி வஸிஷ்டமுனிவராக வேடம்பூண்டு அரசனருகிற்சென்று, 'வேந்தே! உனது வேள்விமுடிவு பெற்றதன்றோ? இப்பொழுது எனக்கு ஊனுணவில் ஆசையுண்டாயிருக்கின்றமையின், நீ சிறிதும் ஆலோசனைசெய்யாமல் அதிசீக்கிரம் அதனையெனக்கு ஆக்கி அளிக்க' என வேண்டினன். பிராம்மணரூபியான பிசிதாசனன் இவ்வாறு புகன்றதுகேட்டுப் பார்த்திவன், சமையல் வேலையில் மிக்க சமர்த்தனுன பாசகனொருவனை யழைத்து, நமது குருவுக்குத் திருப்தியுண்டாகுமாறு வெகு சீக்கிரத்தில் நீ ஊனுணவு சித்தஞ்செய்கவென ஆஞ்ஞாபித்தனர். அத்தருணத்தில் அவ்வரக்கனே மடையனுகவும் மாறுவேஷம் பூண்டு வந்து அங்ஙனமே செய்வதாக உடன்பட்டு அக்கணமே நரமாமிசஞ் சமைத்து, மாமிசபோஜனம் சித்தமானசெய்தியை யரசனுக்கு அறிவித்தனன். இராக்கதன் கொணர்ந்த நரமாமிச போஜனத்தை அந்தப் பார்த்திவன் தனது பத்தினியான மதயந்தியுடனேகூடிக் குலகுருவான வஸிஷ்டமாமுனிவருக்குப் பரிமாறினன். தமக்கு அரசன் மானிட மாமிசத்தை யுணவாக வளித்தது கண்டு வஸிஷ்டர் மிகச்சினந்து, 'மதிகெட்டமன்னனே! இந்த மனுஷிய மாமிசத்தை யெனக்கு நீ உணவாயளிக்க வெண்ணினமையின், நீ யென்றைக்கும் ஊனுணவையேயுண்ணும் புலையனுகுவை' யெனச் சாபமீந்தனர். அது கேட்ட ஸௌதாஸர் அக்கணமே அதற்குப் பிரதி அம்முனிவரைச் சபிக்குமாறு கையில் தண்ணீரையெடுத்துக்கொள்ள, அதனைக் கண்ணுற்ற அவரது தருமபத்தினியான * மதயந்தி, மன்னனைநோக்கி 'ராஜனே! நமக்குப் பிரபுவாய்த் தேவர்களுக்கொப்பான மகிமைபெற்றிருக்கின்ற புரோஹிதராகிய வஸிஷ்டமாமுனிவர்க்கு நீர் இங்ஙனம் பிரதிசாபமளிக்கத்துணிவது உசிதமானதன்று' என இதமுரைத்து மறுத்தனள். வேந்தர் அதுகேட்டு அதற்கு உடன்பட்டு, ஆசிரியரைச்சபிக்குமாறு கோபத்துடனே கையிலெடுத்த தீக்குணமுடைய தண்ணீரைத் தமது தாளின்மீது பெய்தனர். அதனல் அவ்வேந்தரது பாதம் வெம்பிப்போக, அது முதலாக ஸௌதாஸராஜருக்குக் 'கல்மாஷ பாதர்' எனப் பெயர்பிரசித்தமாகியது.

அதன் பிறகு அம்மன்னவர் தமது பனியாட்டியுடனேகூடி வஸிஷ்டமா முனிவரிடஞ்சென்று அவரைப் பல்தரம் வணங்கி, பிராம்மணவேஷம்

* இந்த மதயந்தியையே சீதாபிராட்டிக்குக் கற்பில் உவமையாகச் சுந்தரகாண்டத்தில் எடுத்துக்கூறியிருக்கின்றனர்.

பெற்றுவந்த பிசிதாசனன் முன்சொன்ன வார்த்தையை அவரிடம் விண்ணப்பஞ்செய்தனர்கள். வேந்தன் விண்ணப்பஞ் செய்ததைச் செவியுற்ற வஸிஷ்ட பகவான், அவை யாவும் இராக்கதன் செய்த சூதெனவுணர்ந்து ராஜனை நோக்கி, 'பார்த்திவ! நீ சொல்வது ஸத்தியமே; ஆயினும் யான் சினந்து சொன்ன வார்த்தை யொருபோதும் வீணாவதின்று. ஆனால் உனக்கு ஒரு வரமளிக்கின்றேன்; அதாவது, பன்னீராண்டு கழிந்தபின்னர் உனக்கு இந்தச் சாபம் நீங்கிவிடும்; அதன் பிறகு முன் நுகர்ந்த துன்பங்கள் அனைத்தையும் நீ மறந்துவிடுவாய்' என அனுக்கிரகித்தருளினர். அவ்வண்ணமே ஸௌதாஸ மகாராஜன் அந்தச் சாபத்தை யனுபவித்துச் சாபந்தீர்ந்து பழையபடி ராஜ்ய பாரம் பெற்றுப் பிரஜைகளைப் பரிபாலிக்கலாயினர். அந்தக் கல்மாஷபாத மஹாராஜன் அச்வமேதஞ் செய்த யாகசாலையப்பா இங்கு ஆச்சிரம ஸமீபத்தில் விளங்குவது' என வெடுத்தோதினர்.

கல்மாஷ்பாதருடைய மிகக் கொடியதாகிய கதையைச் செவியுற்றுச் சத்துருக்கனாழ்வான் வியப்படைந்து வால்மீகிமுனிவரைப்பணிந்து பர்ணசாலையிற் புகுந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபத்தாறுவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## எழுபத்தேழாவது ஸர்க்கம்.

வால்மீகிமுனிவராச்சிரமத்தில் நின்றநா ளிராத்திரி
குசலவர்கள் பிறந்தசெய்திகேட்டுக் களிப்புற்றுப்
பிறகு புறப்பட்டுச் சத்துருக்கனன் மதுவனம்போய்ச் சேர்ந்தது.

---

### குசலவர் ஜநநம்.

சத்துருக்கனாழ்வான் என்றையதினம் இராத்திரி வால்மீகிமுனிவரது ஆச்சிரமத்திலே பர்ணசாலையில் படுத்திருந்தனரோ, அன்றிராத்திரி ஸீதாபிராட்டியார் இரண்டுகுமாரர்களை யீன்றனர். சீதை சுகப்பிரஸவமாய்ப் பிள்ளை பெற்றநற்செய்திகேட்டு அர்த்தராத்திரியில் முனி குமாரர்கள் வால்மீகிமகாமுனிவரிடம் விரைந்து சென்று, 'ஹேபகவன்! ஸ்ரீராமபிரானது தருமபத்தினியான ஸீதாபிராட்டியார் இப்பொழுது இரண்டுபுத்திரர்களைப் பெற்றனர்' எனஸீதாதேவி பிரஸவித்த சுபஸமாசாரத்தையறிவித்து, அக்குழந்தைகளைப் பாலக்கிரஹங்கள் ஒன்று மணுகா வண்ணம் அவர்களுக்குக் காப்பு இடுக என வேண்டி யழைத்தார்கள். சிறுவர்கள் சொன்ன வார்த்தையைச் செவியுற்று மகரிஷி மிக்கமகிழ்ச்சிகொண்டு உடனேயெழுந்து அவ்விடஞ் சென்று, பால சந்திரன் உதயமானது போல மிக்க ஒளிபெற்று விளங்குகின்ற ராஜகுமாரர்களைக்கண்டு களிப்புற்று, துஷ்ட தேவதைகளும் கொடிய ரக்ஷஸுகளும் அக்



குசலவர்கள் ஜனனம்.

குழந்தைகளிடம் அணுகாதவாறு அவர்களுக்கு ரக்ஷைசெய்யலாயினர். எங்ஙனமெனில், குசமென்கிறதருப்பைப்புல் ஒருபிடியெடுத்து அதனை யிரண்டாக இடையேதறித்து, அவையிரண்டிலும் ரக்ஷாமந்திரம்ஜபித்து, அதன் நுனியாகிய குசத்தினால் மூத்தகுமாரனையும், அடியாகிய லவத்தினால் மற்றொரு குமாரனையும் துடைத்துப் புனிதராக்குமாறு, வயதுமுதிர்ந்த தவசிகளிடம் அவற்றைக் கொடுத்தனர். சூதிகாகிருகத்தினுள் முனிவர் அப்பொழுது செல்லலாகாதாதலின், அவர் அதனைக் கிழவிகளிடம் கொடுக்கவேண்டியதாயிற்று. அந்த ஸ்திரீகளும் அவற்றைப் பெற்றுக்கொண்டு சென்று அங்ஙனமே துடைத்துப் பிள்ளைகளுக்கு ரக்ஷைசெய்தனர்கள். இதுவே அக்குமாரர்களுக்கு ஜாதகருமமாகியது. அப்பாலகர்களில் மூத்தவன் குசத்தினால் ரக்ஷை செய்யப்பட்டனனாதலின் அவன் குசனெனவும், இளையவன் லவத்தினால் ரக்ஷைசெய்யப் பட்டமையின் லவனெனவும் நாமதேயம் பெற்றுப் பிரசித்தராக வாழ்வார்களென அம்முனிவர் அப்பொழுதே * தீர்மானஞ்செய்து கொண்டனர்.

சீதையின் மக்களுக்குத் தவசிப்பெண்கள் ரக்ஷைசெய்யுமளவில் அக்குமாரர்களுடைய கோத்திர நாமத்தையும், சக்கரவர்த்தித்திருமகனது திருநாமத்தையும் சொல்லியதையும், ஸீதாபிராட்டி பிள்ளைபெற்றாளென முனிகுமாரர்கள் கூவியதையும் சத்துருக்கனாழ்வான் அர்த்தராத்திரியில்கேள்வியுற்றுக் களிப்பெய்தி, பிராட்டி பிரஸவித்த விடமான பர்ணசாலையிற்சென்று பிராட்டியை நோக்கி, 'தாயே! தெய்வாதீனமாய் இத்தருணத்தில் அடியேன் தேவரீரைச் சேவிக்க நேரிட்டது அடியேனது பாக்கியமே' யென்று சொல்லிச் சந்தோஷப்படுத்தினர். இவ்வாறு அவர் அகமகிழ்ந்திருக்கையில், மாரிகாலத்தைச் சேர்ந்த அந்த ஆவணிமாதத்திரவு இனிதாகக்கழிந்து விடியற்காலமாயிற்று. மஹா சூரரான சத்துருக்கனாழ்வான் அதிகாலையிலெழுந்து காலைக் கடன்கள் அனைத்தையும் செய்து முடித்துக்கொண்டு வால்மீகிமஹாமுனிவரை வணங்கி விடைபெற்று மேற்றிசை நோக்கிப் புறப்பட்டெழுந்தருளி, ஆங்கு கங்கைக்கரையிலே காத்திருந்த பார்க்கவர் முதலான முனிவர்குழாத்துடனே கூடி மதுரமான பலகதைகளைக் கேட்டுக்கொண்டு விநோதமாக வழிநடந்து சென்று ஏழுராத்திரி நடுவழியிலேநின்று, எட்டாநாள் யமுனாதீரம்போய்ச் சேர்ந்தனர். யமுனைக் கரையிலே மஹாபுண்யாத்துமாக்களான முனிவர்களது ஆச்சிரமத்திலேயே யிறங்கி, அம்முனிவர்கள் பற்பல புண்ணிய கதைகளைச் சொல்லக்கேட்டு மகிழ்ந்து அவ்விளவரசர் அன்றிராத்திரியை அவ்விடத்திலினிதாகப் போக்கினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபத்தேழாவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

* ஜாதகருமம் ஒன்றுமாத்திரமே குழந்தை பிறந்ததினத்தில் செய்யத்தகுவது; நாமகரணம் பிறகு செய்யவேண்டிய சடங்காதலின், தீர்மானித்துக்கொண்டனரென்றது.

## எழுபத்தெட்டாவது ஸர்க்கம்.



*சத்துருக்கனன் மதுவனஞ்சேர்ந்தநாளிராத்திரி சியவனமுனிவர், லவணாசுரன் மாந்தாதாவை மடித்த கதை கூறியது.*

---

மதுவனஞ்சேர்ந்ததினம் இராத்திரி இராஜகுமாரர் முனிவர்தலைவரான சியவனரைநோக்கி, 'முனிவர்பெருமானே! இந்தலவணாசுரனது வலி யெத்துணையது? இவனது சூலத்தின் சிறப்பு எத்தன்மையது? இதற்குமுன் இவனால் வதையுண்டவர்யாவர்? மிகச்சிறந்த சூலத்தைக் கைக்கொண்ட இவ்வரக்கனுடன் எதிர்த்துப் போர்புரிய வந்தவர்கள்யாவர்? இவைகளை யடியேனுக்கு விளங்கக் கூறவேண்டுகின்றேன்' என வினவ, சுமித்திரா நந்தனன் சொன்ன வார்த்தையைச் செவியுற்று அம்முனிவர் மொழியலாயினர்.

'லக்ஷ்மணாநுஜரே கேளுமையா லவணாசுரனது பிரபாவத்தை. அவ்வசுரன் செய்தஸாஹஸமான செய்கைகளுக்கு அளவில்லை; அவைகளைஇத்துணையென்று கணக்கிட்டுக்கூற யாம் வல்லோமல்லோம். இக்ஷ்வாகுவமிசத்தில் தோன்றிய ஒரு வேந்தனிடத்திலேயே இவன்தனதுவிறலை வெளியிட்டிருக்கின்றனன்; அதனைக்கூறுகின்றேன் கேளும்: பூர்வம் அயோத்தியாபுரியில் யுவனாச்வனென்னு மொரு ராஜனுக்கு மாந்தாதாஎன்னு மொருமைந்தன் உற்பத்தியாகி, கீர்த்திப்பிரதாபங்களி லிணையற்றவனென மூவுலகத்திலும் புகழ் பெற்று வாழ்ந்தனன். அம்மன்னவன் இம்மண்ணுலகனைத்தையும் தனது அதிகாரத்திற்கு உட்படுத்தி, இங்கிருந்து தெய்வலோகத்தை ஜயங்கொள்ளச் செல்லுமாறு முயற்சிகொண்டனன். தேவலோகத்தை வெற்றிகொள்ள மாந்தாதா முயன்றது கேள்வியுற்றுத் தேவேந்திரனும் மற்றுமுள்ள தேவர்கள் அனைவரும் அஞ்சி நடுங்கினர்கள். மாந்தாதாவோ, யான் தேவலோகத்தை வெற்றிகொண்டு தேவேந்திரனுடன் அர்த்தாஸனத்து வீற்றிருந்து தேவராச்சியத்துப் பாதியின் அரசாட்சியைக் கைக்கொண்டு தேவகணங்களெல்லாமொன்றுகூடிவணங்க, திரிலோகாதிபத்தியஞ்செலுத்துவே னெனப்பிரதிஞ்ஞைசெய்து தேவலோகஞ் சென்றனன். மாந்தாதாவினது கெடுமதியை யறிந்து தேவர்கோன் யுவனாச்வன்மகனை அவனிடஞ்சென்று நல்வார்த்தையாகவே அவனைநோக்கி, 'ராஜாதிராஜனே! பூலோகத்திலேயே உமது ஆட்சி முழுமையும் செல்லாதிருக்க, அதனை வசமாக்கிக்கொள்ளாது, தேவராஜ்யத்தை நீர்கைக்கொள்ளக்கருதுவது நேராகத்தோற்றவில்லையே! ஹேவீர! பூமி முழுமையும் நீர்வசப்படுத்திக்கொள்வீராயின், அதன் பிறகு தேவலோக சாம்பிராஜ்யத்தைக் கைக்கொள்ள நீர் ஆசைகொள்வது அழகாகும்' என உரைத்தனன்.

தேவராஜன் இவ்வண்ணம் உரைசெய்தது கேட்டு மாந்தாதா, 'தேவேந்திரா! இப்பூமியில் எனது ஆணை செல்லாத விடமெங்கு உளது?' என வினவ, விண்ணவர்கோன் விளம்பலாயினன்: 'மதுவனத்தில் மதுவென்பவனது மகனான லவணாசுரனென்பவன் சுதந்தரமாக அரசாட்சி செலுத்துகின்ற

னன்; அவன் உமது கட்டளைக்கு கீழ்ப்படிந்து நடக்கின்றிலனே' யென்று கூறினன். ஸஹஸ்ராக்ஷன் இவ்வாறு சொன்ன தனக்குப்பிரியமல்லாத செய்தியைச்செவியுற்று மாந்தாதா வெட்கித் தலைகுனிந்து யாதொன்றும் இயம்பத்தோற்றாது, அவ்வாயிரங்கண்ணனை வணங்கி விடைபெற்று, மிகுந்தகோபத்துடனே மறுபடி திரும்பிப் பூலோகம்வந்து சேர்ந்தனன். வந்தவுடனே லவணனுடன் போர்புரியுமாறு பெரும்படைகூட்டிக்கொண்டு அவனிருக்குமிடஞ்சென்று, லவணாசுர னிடத்திற்கு ஒரு தூதனையனுப்பினன். அத்தூதன் மதுவின் மைந்தனிடஞ்சென்று அவனை நோக்கிப் பலபொல்லாதபேச்சுக்கள்பேச, அதனைக்கேட்கப்பொறாது அவ்வசுரன் அவனை யங்ஙனமே பிடித்துப் புசித்துவிட்டனன். போனதூதன் நெடுநேரமளவும் திரும்பிவராமை கண்டு அக்குரிசில் கதம்விஞ்சியெதிர்த்து, லவணாசுரனைச்சுற்றி நாற்புறமும் மம்புமாரி பொழியலாயினன். அதுகண்டு அவ்வவுணன் நகைத்துத் தனது சூலத்தைக் கையிலெடுத்து, அந்தப்பார்த்திவனையும் அவனது படைகளனைத்தையுமுடனே யழிக்குமாறு உத்தமமான அவ்வாயுதத்தை விடுக்க, அச்சூலம் சொலித்துக்கொண்டு சென்று ஸகலமான சேனைகளுடனும் மாந்தாதாவை யெரித்து மறுபடி லவணாசுரனது சன்னிதானம் வந்து சேர்ந்தது. இவ்விதமாக மாந்தாதா வென்கிற மகிமைபெற்ற மன்னவன் மடிந்துபோயினன்.

கேட்டீரோ லவணாசுரனது சூலத்தின் பலத்தை. அதன் உக்கிரம் இத்தன்மையதென அளவிடக்கூடாததாம். ஆயினும் அவ்வவுணனை நீர் நாளைக் காலையில் கொலைசெய்வது திண்ணம். அவன் கையிலாயுதமற்றிருப்பனாயின் அழிந்துபடுவான்; நீரும் வெற்றிபெறுவீர். சூல மவன்கையிலிருக்குமாயின் அவனை வதைப்பது அஸாத்தியமானகாரியம்; ஆதலின் அஃதில்லாமலிருக்கையிலேயே அவனை வதைத்தல் வேண்டும். இக்காரியத்தை நீர் செய்துமுடிப்பீராயின், ஸகல லோகங்களுக்கும் நீர் நன்மை விளைவித்ததாகும். ராஜசிகாமணியே! துராத்துமாவான லவணாசுரனது விறலும், அவன் கைக்கொண்ட சூலத்தினது அளவிடுதற்கரிய ஆற்றலும், அதனால் மாந்தாதா மடிந்தவிதமுமாகிய யாவும் யானிப்பொழுது விளங்கக்கூறினேன். ஹே மஹாநுபாவா! நாளைக்காலையில் இந்த லவணன் கையில் சூலமிலனாகவே உணவுக்கு ஊன்தேடிவர வெளிச்செல்வான், அத்தருணத்தில் நீர் அவனை வதைத்து வெற்றிகொள்வீர். இதிலெனக்குச் சிறிதும் சந்தேகமிலது' என முற்றுங் கூறி முடித்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபத்தெட்டாவது ஸர்க்கம்

முற்றிற்று.

## எழுபத்தொன்பதாவது ஸர்க்கம்.

லவணசுரன் வெளிச்சென்றிருக்கும் தருணத்தில் அவனது
கோட்டைவாயிலிலே போய்நின்று, அவன்திரும்பிவருமளவில் சத்துருக்கனன்
நிராயுதபாணியான அவனை யெதிர்த்துப் போருக்கு அழைத்தது.

இவ்வாறு வெற்றியைவேண்டி மதுவனத்துமுனிவர் விசித்திரமான கதைகள் சொல்லிக்கொண்டிருக்கையில், அவ்விரவுகழிந்து கீழ்வானம் வெள்ளென்றாகியது. அன்று அருணோதயவேளையில் லவணாசுரன் தனக்குஉணவுதேட ஆவல்கொண்டவனாகி வெகுதீரத்துடனே புரத்தினின்று வெளிப்பட்டுச்சென்றனன். இஃது இங்ஙனமாக, சத்துருக்கனாழ்வான் மிகுந்தசௌரியங்கொண்டவராகி, அன்று காலையில் யமுனாநதியைக்கடந்து வந்து மதுபுரத்துக்கோட்டைவாயிலில் வில்லும் கையுமாகக் காத்துநின்றனர்.

அன்று நடுப்பகலில் கொடுஞ்செய்கையுடையோனான அவ்விராக்கதன் அநேகமாயிரம் பிராணிகளைப் பெருமூட்டையாகத் தோளிலே சுமந்துகொண்டு திரும்பிவந்தனன். வருகையில் கோட்டைவாயிலேயே சத்துருக்கனாழ்வான் ஆயுதபாணியாக நிற்பதுகண்டு, 'அரே! நீ யார்? இவ்வாயுதத்தினால் நீ யாது செய்யக் கருதுகின்றனை? அரே நராதம! இத்தன்மையரான ஆயுதபாணிகளை யான் ஆக்கிரஹங்கொண்டு ஆயிரமாயிரமாக அருந்தியிருக்கின்றேன். இப்பொழுது ஆஹாரம் எனக்கு ஸம்பூர்ணமாகக் கிடைத்திருக்கின்றது; அரே, புருஷாதம! நீ துர்ப்புத்தியுடையோனாகி வலிய வந்து என் என் வாயில் விழுகின்றனை? 'என்றிவ்வண்ணம் அடிக்கடி நகைத்துப் பிதற்றினான்.

லவணன் இவ்வாறு வாயில் வந்தபடி வதறியது கேட்டு லக்ஷ்மணானுஜர் ரோஷமதிகரித்துக் கோபத்தினால் கண்ணீர் பெருக்கினர். அக்காலையில் அவரது சரீரமெங்கும் அதியுக்கிரமான சோதியொன்று கிளம்பியது. பிறகு சத்துருக்கனாழ்வான் சீற்றங்கொண்டவராகிப் பகைவனான பிசிதாசனனை நோக்கி, அரே, துர்ப்புத்தியுடையதுஷ்டா! யான் உன்னுடன் தொந்தயுத்தம் செய்ய வேண்டி இங்குவந்தனன். யான் தசரதசக்கரவர்த்தியின் புதல்வன், ஸ்ரீராமபிரானது சோதரன், என்றும் சத்துருக்களைக் கொலைசெய்பவனாதலின் சத்துருக்கனெனவேநாமதேயம் பெற்றவன்; இப்பொழுது உன்னைவதைசெய்வதனிமித்தமே இவ்விடத்திற்குவந்தனன்; ஆதலின், அமராட ஆவல்கொண்ட என்னுடன் எதிர்த்து நீ போர்புரியவருக. நீ ஸகல ஜீவன்களுக்கும் கொடிய சத்துருவன்றோ? ஆதலின், என்கண்ணில் அகப்பட்டபின்னர் இனியான் உன்னை உயிரோடு விடேன்' என உக்கிரமாக உரைத்தனர்.

சுமித்திராநந்தனன் இவ்விதமாக வீரியம் பேசியதுகேட்டு அவ்விராக்கதன் அவரை நோக்கி நகைத்து, அரே, மந்தமதியுடைய மானிடனே! இப்பொழுது நீயே தெய்வாதீனமாக என்னிடம் வந்து சிக்கிக்கொண்டனை. அடே, மானிடப்பதரே! ஒரு பெண்நிமித்தமாக உன் அண்ணன் எனது அம்மானை இராவணனை வதைத்தகாலத்தில் மானிடப்பூச்சிகளுடனே நாமெ

No. 20.

உத்தரகாண்டம்.

(லவணாசுரனுக்கும் சத்துருக்கனுக்கும் யுத்தம்.)





தீர்த்து அமராடுவது நமக்குத்தகுதியல்லவென்று அலக்ஷியத்தினால், இராவணனது குலத்தை யவன் நிர்மூலமாக்கியதை இதுவரையில் யான் பொறுத்திருந்தேன். முற்காலத்தவர், இக்காலத்தவர், வருங்காலத்தவராகிய மானிடர்கள் அனைவரும் என் கையில் அடியுண்டிறந்தவர்களேயாம்; பலரைப் புல்லினும் புன்மையானவரெனக்கொண்டு அலக்ஷியமாய் அவமதித்து ஓடிப்போகச்செய்தேன். இப்பொழுது நீ யென்னுடன் வலுவில் எதிர்க்கவந்தவனாயின், உன்னுடன் அமராட இதோ வந்தேன்; சற்றுப்பொறு, கடுகச்சென்று ஆயுதம் கைக்கொண்டு நீ வேண்டியவாறு யுத்தஞ்செய்ய ஆயத்தமாக வருகின்றேன்' என்று கூறினான்.

லவணாசுரன் சொன்னதைச் செவியுற்ற சத்துருக்கனன், ஆயுதமெடுத்துவரக்கருதிய அவ்வசுரனைநோக்கி, 'அரே, ராக்ஷஸ! என்கண்ணில் அகப்பட்டபிறகு இனியான் உன்னை ஒரு நிமிஷமேனும் உயிரோடு புறஞ்செல்ல விடுவேனோ? தற்செயலாக் கையில் அகப்பட்டுக்கொண்டபகைவனைப் புத்திசாலியான எவனும் ஓடிப்போகவிடான்; மதிமயக்கத்தால் அங்ஙன மெதிரிக்கு இடங்கொடுக்கின்றவன் தான்சாக மருந்து கொள்பவனே யாவன். பலவாறு பேசியென்ன? துர்ப்புத்தியுடைய துஷ்டா! இப்பொழுதே போர்தொடு; உடனே யான் உன்னை வதைத்தல்வேண்டும் மூவுலகங்களுக்கும் பகைவனாகி அதனால் ஸ்ரீராமபிரானுக்கும் பொல்லாத பகைவனான பாபியாகிய உன்னைப் பலவகைக் கூரியவாளிகளால் வைவஸ்வதனது வீட்டிற்கு அனுப்பி ஜீவலோகத்திற்கு க்ஷேமமுண்டாக்குகின்றேன்' என உக்கிரமாகப் பேசினார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எழுபத்தொன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## எண்பதாவது ஸர்க்கம்.

தேவாதிகளும் அஞ்சிநடுங்குமாறு லவணாசுரனும்
லக்ஷ்மணானுஜரும் அமர் புரிந்ததும், இறுதியில் சத்துருக்கனன் ஸ்ரீராகவன்அளித்த
அற்புதமான அம்பைவிடுத்து அவ்வரக்கனை உயிர்மாய்த்ததும்.

---

மஹாபராக்கிரமசாலியான சத்துருக்கனன் இவ்வண்ணஞ் சொன்ன சொற்களைச் செவியுற்றவளவிலே அப்பாதகன் கோபம் பொங்கிக் கையொடு கைபுடைத்துப் பற்களைக் கடகடவெனக் கடித்து இதழ்கவ்வி ரகுசார்த்தூலரை நோக்கி, 'யானிதோபோர்க்கு ஆயத்தமாயினேன்; நில், நில், ஓடாதே' என்று கூவி அவரைப்பலதரம் போர்க்கு அழைத்தனன். இங்ஙனம் கூவுகின்ற கோரரூபியான லவணாசுரனை நோக்கித் தேவசத்துருக்களைச் சங்கரிக்கின்ற ஸௌமித்திரியானவர், 'அரே ராக்ஷஸப்பதரே! அடே பாபி! நீ இதுவரையில் மோசஞ்செய்து மாய்த்த மானிடர்களைப்போல இந்தச்சத்துருக்கனனையும் நினையாதே. இப்பொழுதே நீ எனது அம்பினால் அடியுண்டு யம

லோகம் போய்ச்சேர்வாய்; இராவணன் வதையுண்டதைக்கண்ட விண்ணவர் போல், என்னாலிப்பொழுது அமர்க்களத்தில் அடிபட்டுவீழ முன்னே முனிவர்களும் வேதியர்களும் வித்வாம்ஸர்களுங்கண்டு களிப்படையக்கடவர்கள். ஹே நிசாசர! நீ எனது பாணத்தினால் எரிக்கப்பட்டுப் போர்க்களத்தில் வீழ்வது, நாடுகளும் நகரங்களுமாகிய எல்லாவுலகங்களுக்கும் மஹாக்ஷேமமன்றோ? சூரியனிடமுண்டாகிய கிரணம் தாமரைமலரில் புகுமாறு, இப்பொழுது எனது கரத்தினின்று கிளம்புகின்ற வஜ்ராயுதத்திற் கொப்பான கூரியகணையானது உனது வக்ஷஸ்தலத்தில்பாயக் காத்திருக்கின்றது' என அலக்ஷியமாகக் கூறினார்.

சத்துருக்கனன் இவ்வண்ணம் சொன்ன சொற்கள் செவிப்பட்ட வளவிலே லவணாசுரன் சினந்தலைக்கேறி மிகப்பெரிய மரமொன்றைப் பெயர்த்து அவரது மார்பைநோக்கி விடுத்தனன்; அவர் அதனை அதியுக்கிரமான அம்புகளால் பலதுண்டாகத்தறித்துத் தள்ளினார். தான் விடுத்த விருக்ஷம் வீணானது கண்டு இரக்கதவீரன் மறுத்தும் பலபாதபங்களைப்பெயர்த்துச் சத்துருக்கனன்மீது சொரியலாயினான்; ஒன்றின்பின்னொன்றாகப் பலபாதபங்கள் விரைந்து வருவதுகண்டு காகுத்ததிலகர் மூன்று நான்கு பகழிகளைப்பெய்து அவற்றைப் பலவாகச்சேதித்துத்தள்ளி, அதிகமான உக்கிரத்துடன் இராக்கதன்மீது அம்புமாரி பொழியலாயினர். அதனால் அவன் சிறிதும் துன்புறுதவனாகிப் பெருநகை நகைத்து ஒருமஹாத்தான மகீருஹத்தைப்பெயர்த்தெடுத்துச் சத்துருக்கனனது சென்னிமீது புடைக்க, உடனே அவர்சோர்ந்து மூர்ச்சையடைந்தனர். ராகவசிங்கம் சோர்ந்து வீழ்ந்ததுகண்டு ரிஷிகள், தேவர்கள், கந்தருவர், அப்ஸரஸர் ஆகிய பலரும் ஹா! ஹா! வெனக்கூவிக் கதறினார்கள்.

தசரதர் மைந்தர் இவ்வாறு மயங்கித்தரையில் வீழ்ந்து தனக்குஅவகாசங் கிடைத்த வளவிலும் லவணாசுரன் அவரை யலக்ஷியமாகவெண்ணி, வீட்டினுட் புகவாயினும் சூலங்கைக்கொள்ளவாயினும் கருதாது, அவர் இறந்தனரென வெண்ணித் தான் தேடிக்கொணர்ந்த புசிப்புக்களைப் புசிக்கத்தலைப்பட்டனன். இங்ஙனமாக ஒரு முகூர்த்தகாலத்தில் மூர்ச்சைதெளிந்தெழுந்து ராகவசிகாமணி முனிவர்களால் போற்றிப் புகழப்பெற்றவராகிப் படைக்கலம் கைக்கொண்டு கோபுரவாயிலிலெதிர்த்து நின்று தமக்கு அண்ணன் அளித்த அற்புதமான அம்பைக்கையிலெடுத்தனர். அக்காலையில் அப்பகழி பத்துத்திசைகளும் ஜாஜ்வலியமானமாகும்படி பயங்கரமாக ஜொலிக்கத்தலைப்பட்டது; வஜ்ராயுதத்திற்கொப்பான முகமும், வஜ்ராயுதத்திற்கொப்பானவேகமும், மேருமலை மந்தரமலைகளுக்கொப்பான வலியு முடையதும், போர்க்களத்தில் என்றும் பராஜயமடையாத பேராற்றலுடையதும், செங்குருதியாகிய சந்தனம் பூசப்பெற்றதும், அழகியபக்ஷங்கள் கட்டப்பெற்றதும், தானவராஜன் பருவதராஜன் மற்றும்பலவசுரர்கள் ஆகியயாவரையும் பிளக்கவல்லதும், யுகாந்தகாலத்திலெழுகின்ற காலாக்கினியெனக் கொதிக்கின்றதுமாகிய அக்கணையைக்கண்ணுற்று எல்லாவுயிர்களும் அஞ்சிநடுங்கின. அதுகண்டு அமரர்கள் அசுரர்கள் கந்தருவர் முனிவர் அப்ஸரஸர் ஆகிய அனைவரும் அஞ்சி

யார்ப்பரித்து உடனே பிதாமஹரிடஞ்சென்று, 'ஸ்வாமி! இதென்ன, இவ்வாறு பயங்கரமான தோற்றமுண்டாகியதே! இஃதென்ன? உலகமழியுங் காலமோ? யுகப்பிரளயமே நெருங்கியதோ? இத்தனைக்கொடியதோற்றத்தை யிதுகாறும் கண்டதுமில்லை கேட்டதுமில்லையே. உலகத்திற்கு அழிவுவந்ததென அமரர் எல்லோரும்யாதும் தோற்றுது தவிக்கின்றனரே' எனவிண்ணப் பஞ்செய்தனர்கள்.

நான்முகக்கடவுள் அதுகேட்டு அஞ்சன்மினென அவர்களுக்கு அபயமளித்து, அதன்காரணத்தை மதுரவாக்காக மொழியலாயினர். 'தேவர்காள்! சொல்லுகின்றேன் செவிக்கொள்க. இப்பொழுது லவணாசுரனை வதைத்தற் பொருட்டுச் சத்துருக்கனன் ஒர்கணையைக்கையிலெடுத்தனன்; அந்தச் சரத்தினது சோதியினால் சுரர்களனைவரும் இவ்வாறு வருத்தமுறலாயினர். அஃது லோககர்த்தாவான ஆதிபுருஷனது பழமையானபாணம்; அஃது சோதிமயமாகச் சொலிக்குமியல்பினதாதலின், நீவிரனைவோரு மிவ்வண்ணம் அஞ்சவேண்டியதாயிற்று. இஃதுமுன்னம் மிகக்கொடியர்களான மதுகைடபர்களை மாய்ப்பதன்பொருட்டு அந்தமஹானுபாவனால் படைக்கப்பட்டது. ஒளியுருவமான அற்புதமாகிய இந்த அம்பினது மஹிமையை யுணர்ந்தவர் ஸ்ரீமஹாவிஷ்ணு ஒருவரேயாம். ஆதியில் இதுவே திருமாலினது சரீரமாகியது. இதோ இவ்விடத்திற்குவருக; மஹாசூரனும் வீரனுமாகிய ராமாநுஜன் லவணாசுரனை வதைக்கின்ற விநோதத்தைக்காணலாம்' என்றுகூறினர்.

நாமகள்கேள்வன் இவ்வண்ணம் நவின்றதுகேட்டு வானத்தவர்கள் அனைவரும், சத்துருக்கனும் லவணாசுரனும் சமர்புரியுமிடஞ்சென்று, ராகவாநுஜனது கரத்தில்விளங்கும் சூரியனுக்கொப்பான ஸாயகத்தைக்கண்டு வியந்தனர்கள். யுகம் முடியுங்காலம் வந்துவிட்டதோவென எல்லாப்பிராணிகளும் பயங்கொண்டன. அக்காலையில் ரகுநந்தனன், விண்ணிடையெங்குமிடைவெளியின்றித் தேவர்கள்வந்து கூடியிருப்பதைக் கண்ணுற்றுச் சிங்கநாதஞ்செய்து,லவணாசுரனை மறுத்தும் விழித்து நோக்கிப் போர்புரியவருமாறு கூவ, அதுகேட்டு அவ்வரக்கன் மிகவெகுண்டு விரைந்தோடிவர, வில்லாளிகளில் சிறந்தவீரனான ராமாநுஜாநுஜன் தமது கோதண்டத்தைக் காதளவிழுத்து லவணாசுரனது மார்பைநோக்கி வாளியை விடுத்தனர். (அக்கணை கோதண்டத்தை விட்டுக்கிளம்புகையில், பூர்ணாவுதிசெய்யப்பெற்ற ஓமாக்கினியென அதியுக்கிரமாக விளங்கியது. இவ்வாறுவெளிப்பட்ட பகழி பகைவர்களெல்லோரையும் தவிக்கச்செய்துகொண்டு விரைந்துசென்று லவணாசுரனது விசாலமான வக்ஷஸ்தலத்தில் ஊடுருவிப்பாய்ந்தது.) உடனே அஃது அவ்வரக்கனது உடலைப்பிளந்துகொண்டு பூமியிற்புகுந்து, தேவர்கள் அனைவராலும் புகழப்பெற்றதாகி, மறுத்தும் இக்ஷ்வாகுகுலநாதனிடம் வந்துசேர்ந்தது.

சத்துருக்கனுழ்வானது சரத்தினால் பிளக்கப்பட்டவனாகி லவணாசுரன் வஜ்ராயுதத்தினால்அடியுண்ட வரையென வீழ்ந்தவளவிலே, அவனிடமிருந்த மஹாதேவனளித்த மஹத்தான சூலமானது, தேவர்களனைவரும் வியப்புற்று

நோக்கச் சிவபிரானது ஸன்னிதானம் போய்ச்சேர்ந்தது. இவ்வாறு ரகுவீரன் ஓரேபாணத்தைப்பிரயோகித்து மூவுலகங்களுக்குமுண்டாகிய மிகுந்த பயத்தைப்போக்கி, உலகமெங்கும்பரவிய பேரிருளைப்போக்கிய ஸஹஸ்ர கிரணனுனசூரியனென விளங்கினுர். ஸௌமித்திரி இவ்வாறு ஜயம்பெற்றது கண்டு, தேவர்கள் முனிவர்கள் பன்னகர்களாகிய பலரும் மிகக்கொண்டாடி, இவர் இவ்வரக்கனுக்குச்சிறிதுமஞ்சாது கொடிய விடநாகமெனப்பாய்ந்து இவனைவதைத்து வெற்றிகொண்டது நமது பாக்கிய விசேஷமேயென வியந்து போற்றினுர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## எண்பத்தோராவது ஸர்க்கம்.

சத்துருக்கனன் தேவர்களளித்த வரத்தைப் பெற்று
மதுராபுரியைஸ்தாபித்தல்.

லவணுசுரன் இவ்வண்ணம் வதையுண்டபின்னர் இந்திரன் அக்கினிமுதலான தேவர்கள், ஸகலமான சத்துருக்களையும் ஸம்ஹரிப்பவரான சத்துருக்கனுழ்வான் ஸன்னிதிக்குவந்து அவரைநோக்கி மிக்கமகிழ்ச்சிகொண்டு மதுரமான வாக்குடனே, 'ஹேவத்ஸ! நீ தெய்வாதீனமாக வெற்றிபெற்றனை; எமது பாக்கிய விசேஷத்தினுல் லவணுசுரனும் வதையுண்டனன். ஹேமஹாபாஹோ! யாங்கள் அனைவரும் நெடுநாளாக நீ வெற்றி பெறவேண்டுமெனப் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனம்; எமதுபிரார்த்தனை இன்றுதான் ஈடேறியது. யாங்களெல்லோரும் இப்பொழுது உனக்குவரமளிக்கவந்தோம்' எனக்கொண்டாடிக் கூறினுர்கள். அதுகேட்டு மஹாசூரரும் கொண்டமுயற்சியைக் கைவிடாதவீரருமான காகுஸ்தன்கைகூப்பி முடிமீதுவைத்துக்கொண்டு, 'தேவர்காள்! அடியேனுக்கு வரமளிக்குமாறு விருப்பங்கொண்டீர்களாயின், ஒன்று முக்கியமாக வேண்டுகிறேன். தேவதைகளால் முன்பு நிருமிக்கப்பட்டதாய், மதுரையெனப் பெயர்பெற்ற மிகவும் ரமணீயமான இந்த மதுபுரியானது சீக்கிரமே பிரஜைகள் வசித்தற்குரிய பெரிய நகரமாகக்கடவது' என வேண்டினுர். அதுகேட்டுத் தேவர்கள், மஹாசூரர்களான சேனுவீரர்கள் நிறைந்து இஃது உமது மநோரதப்படியே மேன்மைபெற்ற பட்டணமாகும் என மொழிந்து அவரிடம் விடைபெற்று விண்ணுலகஞ்சென்றனர். பூர்வம் மது வென்பவன் வசித்தவிடமாதலாலும், காணுதற்கு மதுரமாயிருந்ததனுலும் அந்நகரத்திற்கு மதுரையெனவே நாமஞ்சூட்டப்பட்டது.

தேவர்கள் சொன்னதுகேட்டுச் சத்துருக்கனன் சந்தோஷித்துத் தமது பெரும்படையைப் பட்டணத்திற்கு வரவழைக்க, அஃது உடனே அங்கு வந்து சேர்ந்தது; சிராவணமாஸத்தில் ஸௌமித்திரி தமதுஸேனை அந்நகரத்தில்

குடிபுகுமாறு செய்தனர். பூர்வம் பன்னிரண்டாண்டுகளுக்குமுன்னர் சிறந்த நகரமாயிருந்த மதுராபுரி மறுபடியிப்பொழுது சூரசேனர்களுக்குச் சிறிதும் பயமில்லாத வாஸஸ்தானமாகியது. அப்பூமியெங்கும் செழித்து விசேஷமான விளைவுள்ளதாயிற்று; விண்ணவர்கோன் காலம் தவறாது மழைபொழியச்செய்தனன்; இராமாநுஜனால் ஆளப்பட்ட அம்மதுராபுரியிலுள்ள பிரஜைகள் அனைவரும் ஆரோகதிடகாத்திரர்களாய் அழகுபெற்று விளங்கினர். யமுனா நதிதீரத்தில் அந்நகரமானது அர்த்தசந்திராகாரமாய் அமைக்கப்பட்டு அற்புதமான மாடமாளிகைகளும் கோபுரமண்டபப் பிராகாரங்களும் கடைவீதிகளும் அமைந்து தத்தம் நிலைதவறாத நால்வகை வருணத்தவரும் நிறைந்து, ஒன்றுலொன்று குறைவின்றி நாநாவிதமான விலைப்பண்டங்களும் பொருந்தியதாயிற்று. முன்னம் லவணாசுரனால் நிருமிக்கப்பட்ட அந்நகரத்தைச் சத்துருக்கனாழ்வான் விசித்திரமான பற்பல மாளிகைகளுடனே மிகப்புதுமையான பட்டணமாக்கினார்: தேவநகரத்திற்கொப்பான அந்நகரத்தில், சாலைகளும் சோலைகளும் உத்தியான வனங்களும் விஹாரஸ்தானங்களும் விசேஷமாய் அமைக்கப்பட்டன; தேவாலயங்களும், நகர சபாமண்டபங்களும், ஸத்திரம் சாவடிமுதலியனவும் அநேகம் நிருமிக்கப்பட்டன; வர்த்தகசாலைகள் அநேகமேற்பட்டன; பிறதேசத்துவாணிபர்கள் அந்நகரம் வந்துசேர்ந்து வர்த்தகத்தை மேன்மேலும் விருத்திசெய்யலாயினர். இவ்வாறு ஸகல ஸம்பத்துக்களும் நிறைந்து செழிப்புற்று விளங்கும் நூதனமான நகரத்தை ஸ்ரீராகவாநுஜன் கண்ணுற்று மிகக்களிகூர்ந்தனர். தேவேந்திரநகரத்திற் கொப்பாகிய மிகவும் அற்புதமான மதுராபுரியை ஸ்தாபித்து ஆங்கு * பன்னிரண்டாண்டு அரசு செலுத்தி வருகையில், சத்துருக்கனாழ்வான் தாசரதியினது திருவடிகளைத் தரிசிக்கப் பேரவாக்கொள்ளலாயினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்தோராவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## எண்பத்திரண்டாவது ஸர்க்கம்.

சத்துருக்கனாழ்வான் மதுராபுரியில் பன்னிரண்டாண்டு அரசுசெலுத்திப்பிறகு
பெருமாளைச் சேவிக்க விரும்பிப்புறப்பட்டுச் செல்லுகையில்,
வழியில் வால்மீகிமுனிவராச்சிரமத்திலே ஓரிராத்திரி யிறங்கி,
ஆங்கு இராமாயணம் பாடக்கேட்டுக்
களிகூர்ந்தது.

---

மதுராபுரியை ஸ்தாபித்த பன்னிரண்டாவது வத்ஸரத்திலே சுமித்திராநந்தனன் ராஜபரிவாரங்கள் அதிகமின்றித் தனியே சென்று ஸ்ரீராகவனைச்

---

* பிராதாக்கள் பன்னிரண்டு வருஷகாலம் ஒருவரையொருவர் பாராது பிரிந்துபோனால், பிறகு பார்க்கலாகாதென்பாரதலால், அந்ததோஷத்திற்கிடமுண்டாகாதபடி பன்னிரண்டாண்டு கழிவதற்கு முன்னமே சத்துருக்கனன் சகோதரர்களைக் காணச்சென்றனரென்க.

சேவிக்கக் காதல்கொண்டவராகி, மந்திரிபிரதானிகளையும் மற்றுமுள்ள சேனுவீரர்களையும் அவ்விடத்திலேயே நிறுத்தித் துரைத்தனத்தை மந்திரிமார்வசமொப்புவித்து முதன்மையான சிலதுரகங்களும் நூறு ரதங்களும் பின்றெடரப்புறப்பட்டு ஏழெட்டுநாள் வழித்தங்கி, வால்மீகிமுனிவராச்சிரமம் சேர்ந்தனர். ஆங்கு அம்முனிவரைச்சேவித்து அவர் அளித்த அர்க்கியபாத்தியாதி அதிதிபூஜைகளைப்பெற்று அன்றிராத்திரி அவ்வாச்சிரமத்திலேயே சயனித்திருக்க, அக்காலையில் அத்தபோதனர் தாசரதிக்குப் பற்பல மதுரமான கதைகளைச்சொல்லி, அதன்பின்னர் அவர் லவணாசுரனைக்கொன்ற விருத்தாந்தத்தையெடுத்துக்கூறி அவரை மேலாகக்கொண்டாடினார்.

எவ்வாறெனில், 'ஹேஸௌம்ய! நீயெவராலும் செய்து முடித்தற்கரிய பெரியகாரியத்தைச் செய்து முடித்தனை. பார்த்திவர்கள் பலர் லவணாசுரனுடனே போர்புரியப் புறப்பட்டுவந்து ஸகலமான ஸேனைகளுடனும் அவனால் வதையுண்டு மடிந்தனர்கள். அத்துணைக் கொடியனும் பாவியுமான லவணனை நீ ஒரு லீலையாகப்புடைத்து இவ்வுலகத்திற்கு உண்டாயிருந்த பெரியபயத்தை உனது பராக்கிரமத்தினால் போக்கடித்தனை. முன்னம் லோககண்டகனான இராவணனைப் பெருமுயற்சிசெய்து மாய்க்கவேண்டியதாயிற்று; நீயோ இந்தப் பெரியகாரியத்தை யலக்ஷியமாகச் செய்து முடித்தனை. லவணாசுரனை இவ்வண்ணம் அதஞ்செய்து நீ ஸகலபூதங்களுக்கும் இப்பூமண்டலத்திற்கும் நன்மைவிளைவித்ததுகண்டு தேவர்கள் அனைவரும் உன்னிடத்தில் அதிகமான உவப்பும் நன்குமதிப்புமுடையவர்களானார்கள். ஹேராகவ! நீ இலவணாசுரனோடு நிகழ்த்திய யுத்தத்தை யான் இந்திரசபையிலிருந்து நோக்கினேன். அதன் அருமையைக்கண்டு எனக்கு உன்னிடத்தில் அளவுகடந்த ஆனந்தமுண்டாகியது. அதற்காக யான் உனக்கு யாது செய்யவல்லேன்? உன்னை உச்சிமோருகின்றேன், சிநேகம் அதிகரித்தவர்கள் செய்யும் காரிய மிதுவேயன்றோ?' என்றுகூறி இராமாநுஜாநுஜனையுச்சிமோந்து, அவருக்கும் அவருடன் வந்த பரிஜனங்களுக்கும் விசேஷமாக விருந்து செய்தருளினார்.

ரகுவீரன் வால்மீகியாச்சிரமத்தில் விநோதமாக விருந்துஅமுதுசெய்தவளவில், ஸமீபத்திலே அதிமதுரமான ஸங்கீதமொன்று கேட்டது. ஸ்ரீராமசரிதமானது ஸம்ஸ்கிருதபாஷையில் இசையொத்ததாளலயைகளுடனே யாழிலிட்டு சுலக்ஷணமாக மறைவிலேபாடப்பட்டது. அதனைச்செவியுற்றவளவில் சத்துருக்கனாழ்வானுக்கு முன்நடந்த ஸ்ரீராமசரித்திரம் முழுமையும் மறுபடி தமதுகண்ணெதிரில் நடப்பதுபோலத்தோற்றியது; அதுகேட்டுப் புருஷசிங்கமான சத்துருக்கனன் மனந்தளர்ந்து கண்ணீர்மல்க ஒரு முகூர்த்தகாலம் யாதொன்றும் தோற்றாது மயங்கிநின்றார். முகூர்த்தகாலஞ் சென்றபின்னர் மயக்கந்தெளிந்து எழுந்து அவர் பலதரம் பெருமூச்செறிந்து முன்நடந்தவையாவும் அப்பொழுதே நடப்பவையென முற்றும் கேட்டருளினார். அந்தமகாராஜனுடனே சென்ற பரிஜனங்கள் அனைவரும் அந்த அற்புதமான ஸங்கீதத்தைச் செவியுற்றுத் தலைகுனிந்து தீனர்களாகி, இதென்ன ஆச்சரியமென்று பரஸ்பரம்பேசி, 'இப்பொழுதுயாமெங்கிருக்கின்றோம்? இதுவுமோர்கனவோ?

முன்யாம்கண்டவையாவும் இப்பொழுது இவ்வாச்சிரமத்தில் கேட்கின்றேமே; கனவில் இவ்விதமான கீதமும் கேட்கலாகுமோ?' எனவியப்புற்றவர்களாகிச் சத்துருக்கனுழ்வானிடஞ்சென்று 'ஸ்வாமி! இஃதென்ன விசித்திரமாயிருக்கின்றதே; இதன்வரலாற்றை யாம் வால்மீகிமுனிவரைக்கேட்டுணரலாகாதோ?' என வினவ, இவ்வாறு குதூஹலத்துடனேகூடி வியப்புற்று நின்ற ஸேனு வீரர்களை நோக்கிச் சத்துருக்கனன், 'ஸைனிகர்காள்! இவ்விடத்தில் அவ்வாறு வினவுதல் எமக்கு ஏற்றதன்று; முனிவராச்சிரமத்தில் அதிசயங்கள் அநேகமுண்டு; அவைகளையாம் கண்டறியலாகுமோ? இவ்விஷயத்தைப்பற்றி நாம் இம்முனிவரைக் கேட்கக்காதல்கொள்வது தகாதகாரியம்' எனப்புகன்று தமது பர்ணசாலைக்குள் புகுந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்துமூன்றுவது ஸர்க்கம்.

சத்துருக்கனன் வால்மீகியினிடம் விடைபெற்றுத் திருவயோத்தி சேர்ந்து ஸ்ரீராமனையும் மற்றவர்களையும் ஸேவித்து, மறுபடி மூத்தவரது நியமனத்தை மறுக்கமுடியாது மதுரைக்குப் புறப்பட்டுச் சென்றது.

---

பர்ணசாலையிற்சென்று சயனித்தவளவிலும் ஸ்ரீராமகதாஸங்கீதத்தைச் செவியுற்றுச் சுமித்திராநந்தனன் அதேசிந்தையாய், இந்திரியங்கள்யாவும் அதிலேயே அழுந்தியவராகி நித்திரைகொள்ளாது கண்விழித்திருந்தனர். தகுந்த தாளலயைகளுடனேகூடிக் கர்ணாமிர்தமாகப் பாடப்பட்ட ஒப்புயர் வில்லாத ராமகீதத்தைத் ததேகத்தியானமாய்ச் சத்துருக்கனுழ்வான் சிந்தித்துக் கொண்டேயிருக்கையில், அவ்விராத்திரி வெகுசீக்கிரமே நீங்கிப்போயிற்று. இராப்பொழுதுசென்று கீழ்வானம் வெள்ளென்றுனவளவில் காகுஸ்தன் எழுந்து பிராதக்காலத்தில் செய்யத்தகுவனவாகிய நித்தியகருமங்களைச்செய்து முடித்து வால்மீகிமுனிவரிடஞ்சென்று வணங்கிக் கைகூப்பிக்கொண்டு 'ஹேபகவன்! அடியேன் ரகுகுலதிலகரான தாசரதியைத் தரிசிக்கச்செல்லுகின்றேனுதலின், விடைதந்தருள வேண்டுகின்றேன்' என வினவ, புற்றிற்பிறந்த பெருமுனிவர் அவ்விராகவனை அணைத்து ஆலிங்கனஞ் செய்துகொண்டு அநுமதி கொடுத்தனர். சத்துருக்கனுழ்வானும் வால்மீகியை வணங்கி விடைபெற்றுச் சோதிமயமாகத் துலங்குகின்ற திருத்தேர்மீதேறி, அஃது முகிலென முழங்கி வாயுவேகமாக விரைந்துசெல்ல, ஸ்ரீராகவனைக் காணக் காதல் கொண்டவராகி அதிசீக்கிரமே அயோத்தியாபுரிசென்று, அற்புதமாய் அலங்கரிக்கப்பெற்ற நகரியுட்புகுந்து மன்னவரது மாளிகைசேர்ந்தனர். தேவதைகளினிடையே வீற்றிருக்கும் தேவேந்திரனென, ஆங்கு மந்திரிமார்களுடைய மத்தியிலே முழுமதிபோன்ற முகமண்டல முடையவராய்ச் சோதிமயமாக விளங்கும் சக்

காவர்த்தித்திருமகனுரைச் சேவித்து அஞ்சலிஹஸ்தராகநின்று, 'மஹாரா ஜனே! தேவரீர் நியமித்தவாறே அடியேன் யாவும்செய்துமுடித்தேன்; பாபிஷ்டனுன லவணாஸுரன் வதையுண்டு மடிந்தனன்; அவனது நகரம் நூதனமாக நிருமிக்கப்பட்டு நன்கு பரிபாலிக்கப்பட்டு வருகின்றது. அன்று தொட்டுத் தேவரீரது திருவடி ஸேவையில்லாமலே பன்னீராண்டுகள் போய்விட்டன. ஹே லோகநாத! தேவரீரை விட்டுப்பிரிந்து நொடிப்பொழுதேனும் தனியே வஸிக்க விரும்புகின்றேனில்லை; அமிதமான ஆற்றலுடையோய்! அடியேனிடத்து அருள்புரிக; தேவரீரை விட்டுப்பிரியுமளவில் அடியேன் தாயைவிட்டுப் பிரிந்த கன்றெனத் தவிப்புறுகின்றேன்' எனப் பலவாறு வேண்டி விண்ணப்பஞ்செய்தனர்.

இவ்வாறு உரைசெய்து அல்லலுறுகின்ற இளையகுமாரனையெடுத்து அணைத்து ஆலிங்கனஞ்செய்துகொண்டு அயோத்திமன்னன் அவரைநோக்கி, குழந்தாய்! மஹாசூரனுன நீ இங்ஙனம் சோகிக்கலாகுமோ! இப்படிப் பிரிவிற்கவைதல் க்ஷத்திரிய தருமமன்றே! ரகுகுலதிலகமே! தம்மவரை விட்டுப்பிரிந்து தனியே வஸித்திருக்க வேந்தர்கள் விசனமுறுவார்களோ? க்ஷத்திரிய தருமத்தை மேற்கொண்டு பிரஜைகளைப் பரிபாலித்தல் நமது கடமையன்றே? நீ அப்போதைக்கப்போது அயோத்தியாபுரிக்கு வந்து என்னைப்பார்த்து விட்டுப்போகலாம். கடைக்குட்டியான உன்னைவிட்டுப் பிரிந்திருக்க எனக்குமாத்திரம் பிரியமோ! நீ எனக்குப் பிராணனிலும் பிரியமானவனன்றோ! யாது செய்வது? அறத்திற்கு யாருமடங்கவேண்டுமன்றோ? இராச்சியபரிபாலனம் அவசியம் செய்துமுடிக்கத்தகுவதான பெரியகாரியம் ஆதலின், வத்ஸ! நீ ஏழுநாள் இங்கே எம்முடன்கூடிக் களிப்புற்றிருந்து, பிறகு மதுராபுரிக்குப் பிரயாணமாகுக' என நியமித்தருளினர்.

ஸ்ரீராமபிரான் இவ்வாறு அறநெறியை யநுஸரித்து அருளிச்செய்த இதவசனத்தைச் செவியுற்று சத்துருக்கனும்வான் தழுதழுத்தகுரலுடனே அங்ஙனமே யாகுகவென் றுடன்பட்டு, அவரது ஆஞ்ஞையின்படியே ஏழுநாள் அயோத்தியில் வஸித்திருந்து பிரயாணஸன்னத்தராகி ஸ்ரீராமபிரானிடம் விடைபெற்று, பரதலக்ஷ்மணர்களிடத்திலும் செலவுபெற்றுக்கொண்டு வாயிலிலே வந்துநின்ற மகத்தான ரதத்தின்மீதேறி, பரதலக்ஷ்மணர்கள் வெகுதூரம் வந்து வாழ்த்தி வழிவிட, மனமகிழ்ந்து மதுராபுரிக்கு எழுந்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்துமூன்றாவது ஸர்க்கம்

முற்றிற்று.

No. 21. வேதியன்மகன் இறந்ததும். அவ்வேதியன் அரண்மனைவாயிலில்வந்துபுலம்பினதும். PAGE. No. 241.



## எண்பத்துநான்காவது ஸர்க்கம்.



வேதியன் மகனொருவன் சிறுபிராயத்தி லிறந்து போனதும்,
பிணமான அம்மகனைத் தந்தை அரண்மனைவாயிலில் கொண்டுபோட்டு,
இஃது அரசனது குற்றமேயென ஸ்ரீராமனைப்பழித்துப் புலம்பியதும்.

---

இவ்வாறு சத்துருக்கனாழ்வானை மதுராபுரிக்குச் செல்லவிடுத்த பின்னர் ஸ்ரீராமபிரான் ஸகோதரர்களுடனே கூடி நீதிமுறைதவறாது இராஜ்யபரிபாலனஞ் செய்துகொண்டு களிப்புற்றிருந்தனர். இங்ஙனமே சிலகாலஞ் சென்றுவருகையில், அக்கோஸநாட்டு விருத்தனான வேதியனொருவன் மரணமடைந்த சிறுமகனொருவனை யெடுத்துக்கொண்டு ராஜமாளிகைவாயிலில்வந்து, அன்பின் மிகுதியாலும் உள்ளடங்காத துக்கத்தினாலும் அடிக்கடி ஐயோ மகனே! மகனே! எனக்கதறி, யான் பூர்வத்தில் என்னபாபம் செய்தேன்? பதினான்குபிராயமும் பூர்த்தியாகாதபாலகனாகிய ஒரேபிள்ளையான உன்னை இங்ஙனம் பிணமாக்கிப் பார்க்கின்ற பெரும்பாவியானேனே! என் அப்பனே, குழந்தாய்! நீ இப்படி வாணாள்குறுகி எனக்கு என்றைக்கும் ஆறாததுக்கத்தை யுண்டாக்கினையே! என்செல்வமே! இந்தப்புத்திர சோகத்தினால் யானும் உன் அன்னையும் அதிசீக்கிரமே உயிரை யிழந்து அழிவோம். ஆலோசிக்குமளவில், இதுவரை யான் பொய்மொழி யொன்றேனும் புகன்றறியேன்; எவ்வுயிரையும் அணுவளவேனும் இம்சித்திலேன்; எவ்வுயிர்க்கும் எவ்விதமான தீங்கு மிழைத்திலேன்; இங்ஙனமாக, இப்பாலகனான என்சிறுவன் பிதுருகாரியங்க ளொன்றும் செய்துமுடிக்காது இளமைப் பருவத்திலேயே யமலோகஞ் செல்லலானது யாருடைய பாவமோ? இப்படிப்பட்ட கோரமான காட்சியை இதுகாறும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லையே! இந்த இராமனது இராஜ்ஜியத்திலேதான் இவ்விதமான அகாலமரண முண்டாகின்றது. மற்ற இராஜ்ஜியங்களில் வஸிக்கின்ற பாலகர்களுக்கு மிருத்தியுபயமில்லாதிருக்கையாலும், இவ்விராஜ்ஜியத்துச் சிறுவர்களுக்கு மிருத்தியுபயமிங்ஙன முண்டாகின்றமையாலும், இத்தேசாதிபதியான இராமனே ஏதோ மகத்தானபாபமொன்று செய்திருத்தல்வேண்டும். ஓ ராஜனே, ராமா! பிராணனை யிழந்திருக்கின்ற என்பாலகனை நீர்பிழைப்பிக்க வேண்டும்; இல்லையாயின் யான் திக்கற்றவனாக என்இல்லறத் துணைவியுடனே இவ்விராஜமாளிகை வாயிலில் உயிரை விடுகின்றேன். ஹே ராம! நீர் இந்த பிரம்மஹத்தி தோஷத்தையு மடைந்து சுகமாக வாழ்ந்திரும். ஓ ராஜனே! நீர் உமது ஸகோதரர்களுடனே கூடிச் சிரஞ்சீவியாகக் களிப்புற்றிரும்' என இவ்வண்ணம் பலவாறு பத்தினியுடனே சோகித்துப்புலம்பி ஸ்ரீராமபிரானது மாளிகை வாயிலே நின்று, அவ்வேந்தனையும், அவரது தம்பிமார்களையும், வஸிஷ்டர் வாமதேவர்முதலான புரோஹிதர்களையும் உரத்துக்கூவிப் பின்னும் சீதாபதியைநோக்கி, 'ஓராகவ! யாங்கள் இவ்விராஜ்ஜியத்தில் இதுகாறும் இனிதாகவே வஸித்துவந்தோம்; இவ்விதமான விபத்து இப்பொழுது ஸம்பவிக்கலாயிற்று. இந்த இராமராஜ்ஜி

யத்தில் எமக்குச்சுகமென்பது சிறிதும் காணப்படவில்லையே. இக்ஷ்வாகு முதலிய மஹாராஜாக்கள் பரிபாலித்துவந்த இந்தப் பெரியராஜ்யம் இன்று நாதனற்றதாகியது; ஸ்ரீராமன் அரசனாக ஏற்பட்டுப் பாலகர்கள் மரிக்கத்தலைப் பட்டனர்கள்.

రాజదోషైర్విపద్యన్తే ప్రజాహ్యవిధిపాలితాః।
అసద్వృత్తేతునృపతౌ వకాలేమ్రియతేజనః॥
యద్వాపురేష్వయుక్తాని జనాజనపదేషుచ।
కుర్వతేనచరక్షాస్తి తదాకాలకృతంభయం॥

ராஜதோஷைர்விபத்யந்தே ப்ரஜாஹ்யவிதிபாலிதா: |
அஸத்வ்ருத்தேதுந்ருபதா வகாலேம்ரியதேஜந: ||
யத்வாபுரேஷ்வயுக்தாநி ஜநாஜநபதேஷுச |
குர்வதேநசரக்ஷாஸ்தி ததாகாலக்ருதம்பயம் ||

பிரஜைகள் நீதிமுறைப்படி நன்கு பரிபாலிக்கப்படாதவர்களாகி ராஜாவினது குற்றங்காரணமாகவே விபத்தை யடைகின்றனர். நரபதி நல்லொழுக்க முடைய னல்லனாயின், ஜனங்கள் அகாலத்தில் மரணமடைகின்றனர். அன்றியும் நகரங்களிலும் நாடுகளிலும் பிரஜைகள் அதருமம் செய்யத்தலைப் பட, அரசன் அதனைத்தடுத்துப் பாதுகாவா தொழிவானாயின், அக்காலையில் மிருத்துபய மதிகமாயுண்டாகத் தலைப்படும். இப்பொழுது இவ்விராஜாவினது அரசாட்சியில் அதருமம் மேலிட்டிருக்கின்றது; ஆனதுபற்றியே இப் பாலகன் இங்ஙனம் இளம்பிராயத்தில் பிராணனையிழந்தனன்' என இவ்வாறு பலவிதமாக அரசனை யிகழ்ந்து மறையோன் மரித்ததன்மகனைநோக்கித் துயரம் தாங்காதவனாகி யழுது புலம்பலாயினன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்துநான்காவது ஸர்க்கம்

முற்றிற்று.

---

## எண்பத்தைந்தாவது ஸர்க்கம்.

அந்தணன் மகன் அகால மரணமடைந்தது யாதுகாரணமென
ஸ்ரீராமபிரான் மந்திரிமுதலியோர்களை வரவழைத்து விசாரிக்க,
நாரதமுனிவர் நான்கு யுகங்களிலும் நான்கு வருணத்தவர்க்குமுள்ள அதிகாரத்தையும்,
இந்தத் திரேதாயுகத்தில் அதிகாரமில்லாத ஒரு சூத்திரன்
தவம்புரிவதே அம்மகனிறந்ததற்கு காரணமென்பதையுங்கூறி,
அவனை வதைசெய்யுமாறு அருளிச்செய்தது.

---

புத்திரனைப் பறிகொடுத்த துயரம் தாங்காது பிராம்மணன் புலம்புவதைக் கேட்டு ரகுகுலசிகாமணி துக்கத்தினால் தவிப்புண்டவராகி, தம் மந்திரிமார்களையும் பிரதானிகளையும், வஸிஷ்டரையும் வாமதேவரையும் தமது ஸகோதரர்களையும் ராஜஸபைக்கு வரவழைத்தனர். வஸிஷ்டபகவானுடனே மார்க்கண்டேயர், மௌத்கலியர், வாமதேவர், காசியபர், காத்தியாயனர், ஜாபாலி,

கௌதமர், நாரதர் ஆகிய எட்டு முனிவர்களும் இராஜஸபா மண்டபத்திற் கெழுந்தருளி, ஆங்கு ராஜசிங்காசனத்து வீற்றிருந்த சக்கரவர்த்தித் திருமகனை ஆசீர்வதித்து வாழ்த்தி அவரால் பூஜிக்கப்பெற்றவர்களாகித் தத்தமக்குரிய ஆஸனங்களில் இனிது வீற்றிருந்தனர்கள். அதன் பின்னர் அயோத்திமன்னன் அவர்களை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு, மரித்தமகனையெடுத்து வந்து வேதியன் வாயிலில்முறைபாடுகின்ற வரலாற்றை அவர்களிடம் விவரமாக விண்ணப்பஞ் செய்தனர்.

ஸ்ரீராமசந்திரன் வியாகுல மடைந்து விளம்பியதுகேட்டு அம்முனிவர்களது மத்தியில் நாரதமுனிவர் மொழியலாயினர். 'ஹேரகுவீர! இச்சிறுவன் வாணாள்குறுகி வதையுண்டதற்குக் காரணம் கூறுகின்றேன்; அதனைச் செவியுற்ற பின்னர் செய்யத் தகுவதை யாராய்ந்துணர்ந்து செய்தருள்க. ஹே ரகுநந்தன! பூர்வம் கிருதயுகத்திலே பிராம்மணர்கள் மாத்திரமே தவம்புரியும் அதிகாரம் பெற்றிருந்தனர், பிராமணரல்லாத மற்றவருணத்தவர் தவம்புரிந்தவர்களல்லர். இங்ஙனம் தருமம் நான்கு பாதங்களுடனும் நன்கு விளங்குவதும் பிராம்மணர்களையே பிரதானமாக வுடையதும், அஞ்ஞானமாகிய இருளால் மூடப்படாததுமான கிருதயுகத்திலே அனைவரும் மரணபயமில்லாதவர்களும் தீர்க்கதரிசிகளுமாயிருந்தனர்கள். அந்தக்கிருதயுகம் முடிந்தவளவில் க்ஷத்திரியர்கள் மிகப் பிரபலராகி அவர்களும் தவமியற்றும் அதிகாரம் பெற்றனர்; அக்காலமே திரேதாயுகமெனப் பெயர்பெற்றது. இவ்வாறு இந்த யுகத்தில் க்ஷத்திரியர்கள் மகிமைபெற்றுத் தவம்புரியத் தொடங்கினர்களாயினும், இவர்களினும் கிருதயுகப் பிராம்மணர்கள் வீரியத்திலும் தவத்திலும் மேன்மைபெற்றவர்களேயாயினர். திரேதாயுகத்திலோ, பிராம்மணர் க்ஷத்திரியர் இருவரும் தவமியற்றுபவர்களாகிச் சமமான மகிமையுடையவர்களாயினர். ஆனதுபற்றி அவ்விருதிறத் தோர்க்கும் * வேற்றுமை காணாதவர்களாகி அக்காலத்துப் பெரியோர் நான்கு வருணத்தவர்களுக்கும் வேதவிதிப்படி ஆசாரபேதத்தை விதித்து அதுகாரணமாக அவர்கட்குள் ஒருவர்க்கொருவர் வேற்றுமை விளங்கச் செய்தனர். யாகம் முதலிய தருமங்கள் தலையெடுத் திருப்பதும் அதருமமாகிய இருள்மூடாததுமான இந்தத்திரேதாயுகத்தில் அதருமமானது தனது ஒரு † பாதத்தைப் பூமியில் நாட்டத்தொடங்கியது; இவ்வாறு அதருமம் அடிவைக்க ஆரம்பித்ததனால், திரேதாயுகத்து மனிதர்களுடைய மகிமை குறையலாயிற்று. அதனால் திரேதா யுகத்தவர்கள் தமது சங்கல்பத்தினாலேயே வேண்டுமுணவைத் தேடிக்கொள்ளத் திறமற்றவர்களாகி, மலத்திற் கொப்பானதெனக் கிருதயுகத்தவர்கள் இகழ்ந்த பயிர்த்

* கிருதயுகத்திலே, தவம் புரிகின்றவர் பிராம்மண ரெனவும், புரியாதவர் க்ஷத்திரிய ரெனவும் வேற்றுமை விளங்கிற்று; திரேதாயுகத்தில் க்ஷத்திரியரும் தவம்புரியத் தொடங்கியதனால் வேறுவிதமாக வேற்றுமை தேடவேண்டிய தாயிற்று.

† பாதமாவது நான்கி லொருபாகம். அதருமம் அடிவைத்ததனால், திரேதாயுக புருஷர்கள் கிருதயுக புருஷர்களைப்போல் நல்லறிவு இல்லாதவர்களாய் பிரம்மஞான அதிகார மற்று, வர்ணாச்சிரம தருமங்களையே அநுஷ்டித்து வரலாயினர் எனவறிக.

தொழிலைத் தமக்கு ஜீவனோபாயமாகக் கைக்கொள்ளலாயினர்; அதுகாரணமாக அவர்கட்கு ஆயுளும் க்ஷயிக்கத் தொடங்கியது. அதருமம் அடியிட்டதுபற்றி இங்ஙனம் ஆயுள் க்ஷயிக்கத் தொடங்கியது கண்டு திரேதாயுகத்தவர்கள் ஸத்தியத்தையும் தருமத்தையும் கைக்கொண்டவர்களாகி நன்மைகளையே நாடினார்கள்: பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் தவம்புரிதலையே தமக்குத்துணையாகக் கொண்டனர்; மற்றவர்கள் மேலோர்க்குப் பணிவிடை செய்தலை மேற்கொண்டனர். வைசிய சூத்திரர்கள் பணிவிடை செய்தலுடன் பயிர்த்தொழிலையும் பிரதானமாகக்கொண்டனர்; வைசியர்கள்பயிர்த்தொழிலை முக்கியமாக் கொள்ள, சூத்திரர்கள் ஸகல வருணத்தவர்களுக்கும் ஊழியஞ் செய்தலையே தமக்கு உத்தமமான தருமமாகக் கொண்டனர்.

இவ்வண்ணமாகத் திரேதாயுகம் கழிகையில், இதன் அவஸானத்திலே அதருமத்தின் காரியமாக மானிடர்களுக்கு ஆயுளும் குறுகிப் பயிர்த்தொழிலும் மிகப்பிரயாஸை யுடையதாகும்; அதுகண்டு அதருமம் தனது இரண்டாவது அடியையும் பூமியில் ஊன்றத் தலைப்படும்; அக்காலமே துவாபரயுகமெனப் பெயர்பெற்றதாகும். அந்தத்துவாபரயுகத்தில் ஆயுள் இன்னும் அதிகமாகக் குறையத்தலைபட்டு ஜீவனோபாயமான பயிர்த்தொழில் பின்னும் அதிகமான கஷ்டத்தைக் கொடுப்பதாகும்; அக்காலத்தில் வைசியர்களும் தவம்புரியும் அதிகாரம் பெற்றவர்களாவார்கள். இங்ஙனம் இம்மூன்று யுகங்களிலும் முறையே மூன்று வருணத்தவருமே தவம்புரியு முரிமைபெற்றிருக்கின்றனராதலின், இவர்கள் அந்தந்த யுகத்தில் தவம்புரிதலே அறமாகும். இந்தயுகங்களிலே சூத்திரனுக்குத் தவமியற்றும் அதிகாரமிலது; சூத்திரனுக்கு தவம்புரியும் அதிகாரம் கலியுகத்தி லுண்டாகும். இப்பொழுது கீழ்க்குலத்தவனான சூத்திரனொருவன் துர்ப்புத்தியுடையனாகி உமது ராஜ்யத்தின் எல்லையில் மிகவும் உக்கிரமான தவமியற்றுகின்றனன். துவாபரயுகத்திலேயே சூத்திரன் தவம்புரிதல் அதருமமாகின்றபொழுது இந்தத்திரேதாயுகத்தில் கேட்கவேண்டுமோ? அக்காரணம்பற்றியே இந்தப்பாலகன் மரிக்கலாயினன். எவனேனுமொருவன் ஒரு ராஜனது நாட்டிலாயினும் நகரத்திலாயினும் செய்யத்தகாத செய்கைகளையேனும் அதருமங்களையேனும் செய்வானாகில், அங்ஙனம் செய்கின்றவன் மாத்திரமேயன்றி அந்நாட்டரசனும் நரகம்புகுவானென்பது நூற்றுணிபு. பிரஜைகளை யறநெறிதவறாது பரிபாலிக்கின்ற பார்த்திவன், அந்தப் பிரஜைகள் செய்யும் வேதாத்தியயனம் தவம் சுகிருதம் ஆகிய பலவற்றிலும் ஆறிலொருபாகம் புண்ணியத்தைப் பெறுகின்றனன்; அங்ஙனமாக, அவர்கள் புரியும் அதருமத்தில் ஆறிலொருபாகம் பாபத்தைமாத்திரம் பெறுதொழிவனோ? ஆதலின் நீர் உடனே முயன்று உமது தேசமெங்கும்தேடி அதருமம் நடக்குமிடங்கண்டு அதைவிலக்கும் வகையை விரைவில் தேடுக. அங்ஙனஞ் செய்வீரேயாகில், அறம்வளரும், மனிதர்கட்கு வயது விருத்தியாகும், இப் பாலகனும் பிழைத்தெழுவான்' எனப்புகன்றனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தாறுவது ஸர்க்கம்.

ஸ்ரீராகவன் புஷ்பகவிமானத்தை வரவழைத்து
அதிலேறிச் சூத்திரனான சம்புகன்
தவம்புரியு மிடந்தேடிச்சென்று அவனை யணுகுதல்.

---

நாரதமுனிவர் இவ்வண்ணம் அமுத மொழுகுமாறு மொழிந்தது கேட்டுக் கௌஸல்யாநந்தனன் அஃது உண்மையேயென உடன்பட்டு மிகக்களி கூர்ந்தவராகி இளையபெருமாளை நோக்கி, 'லக்ஷ்மணா! நீ உடனேபோய் அந்தப் பிராம்மணரை விசனமுறாதிருக்குமாறு தேற்றுக; உயிரிழந்த சிறுவனது சரீரம் சிதைவுற்று அழியாவண்ணம் சுகந்தமிட்டு அதனை எண்ணெய்க்குடத்திலமைத்துப் பாதுகாத்துவருக' என நியமித்தருளி, புஷ்பகவிமானத்தைத் தம்மிடம் வருமாறு திருவுள்ளத்திற் கருதினார். அந்த இங்கிதமுணர்ந்து சுவர்ணமயமான அவ்விமான ராஜன் முன்வாக்களித்தவண்ணமே ஒரு முகூர்த்தகாலத்தில் ஸ்ரீராகவனது ஸன்னிதானம் வந்துசேர்ந்து அவரை நமஸ்கரித்து, 'ஸ்வாமி! தேவரீரது ஏவலாளனான அடியேன் இதோவந்து காத்திருக்கின்றேன்' என விண்ணப்பஞ்செய்தனன். புஷ்பகவிமானம் மொழிந்த மதுரமான வாக்கைச் செவியுற்று ஸ்ரீராமபிரான் சந்தோஷமடைந்து, ராஜ்யகாரியங்களைக் குறைவற நடத்திவருமாறு லக்ஷ்மணன் பரதன் இருவருக்கும் நியமித்தருளி, மகரிஷிகள் அனைவரையும் வணங்கி விடைபெற்று, கத்தியும் கோதண்டமும் அம்பறாத்தூணியும் கைக்கொண்டு புஷ்பகவிமானத்தின் மீது விரைந்தேறி, முன்னம் மேற்றிசையை நோக்கிச்சென்று ஆங்கு எங்கும்தேடி அறிநெறிதவறி நடப்பவனெவனையும் காணாது, இமயமலைத் தொடரினால் சூழப்பட்டதான வடதிசைக்கேகி அவ்விடத்தும் அணுவளவும் அதருமம் நடந்தேறுவது காணாமல், அங்கிருந்து கிழைத்திசைநோக்கிச் செல்ல, அவ்விடத்தும் குற்றமொன்றும் காணாது, எங்கும் நல்லொழுக்கமே தலைகொண்டு கண்ணாடிபோல யாவும்மிகநிர்மலமாக விளங்கப் புஷ்பகத்திலிருந்தவாறே கண்டு களிகூர்ந்தவராகி அவ்விடம் விட்டு நீங்கித் துரிதமாகத்தென்றிசைக்கண் சென்று நாற்புறமும் நோக்குகையில், ஆங்கு விந்தமலைக்குத் தெற்கிலுள்ள சைவலமென்னும் சைலத்தின் உத்தரபாகத்திலே பொலிவுற்று விளங்கும் பொய்கையொன்றைப்பார்த்து அதனருகே யெழுந்தருளினார். அந்தத்தடாகதீரத்தில் ஒருவன் தலை கீழாகத் தொங்கிக்கொண்டு கொடியகோரமான தவமியற்றுவதைக் கண்ணுற்றுக் காகுஸ்தன் ஸந்தேகித்து அவனது சமீபத்திற்சென்று அவனைநோக்கி, 'அருந்தவம் புரிகின்றபெரியோனே! நீ மிக்க மகிமை பெற்றவனாகின்றனை; நீ யெந்தவருணத்தில் பிறந்துவளர்ந்தவன்; உன்னைக்காண்கையில் எனக்கு மிகக்குதூஹல முண்டாகின்றது; யான் தசரதஸக்கரவர்த்தியின் புதல்வனான ராமனென்போன்; நீ யாதுபயன் பெறக்கருதி இங்ஙனம் அரிய பெரியதவம் புரிகின்றனை? சுவர்க்கம் புகவிரும்புகின்றனையா, வேறுவரம் ஏதேனும் வேண்டுகின்றனையா? யாது பயனைக்கருதி இவ்வாறு நீ

செயற்கரியசெயலைச் செய்கின்றனையோ, அதனை யான் அறிய விரும்புகின்றேன். நீ வரம்வேண்டுகின்ற வேதியனுயின், நீ இனிதுவாழ்க; வேதியனல்லையாயின், வெல்வதற்கரியவேந்தனான க்ஷத்திரியகுலத்தானுகின்றனையோ? மூன்ருவது வருணத்தவனான வைசியனே, அல்லது சூத்திரனே? நீ தவத்தை மேற்கொண்டிருக்கின்றனை யாதலின், இத்தருணத்தில் பொய்மொழி புகலாது உள்ளபடி உண்மை பேசுக' என வினவினர். ரகுவீரர் இவ்வாறு வினவியது கேட்டுத் தவம்புரியும் அத்தவசி தலைகீழாகத் தொங்கியவாறே தாசரதியை நோக்கித் தனது ஜாதியையும் தான் தவம்புரிகின்ற காரணத்தையும் கூறலாயினன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்தாருவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## எண்பத்தேழாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் சம்புகனை வதைத்துத் தேவர்களிடம் வரம்பெற்று
வேதியர்மகனைப் பிழைப்பித்துத் தேவதைகளை முன்னிட்டு
அகஸ்திய முனிவராச்சிரமஞ் செல்லுதல்.

---

தலைகீழாகத் தொங்குகின்ற தவசி தசரதன் மைந்தன் மொழிந்தது கேட்டு மறுமொழி கூறத்தொடங்கி, 'ஹேராம! அடியேன் பொய்மொழி புகலேன், உண்மையே உரைக்கின்றேன்; யான் சூத்திரயோனியிற் சனித்தவன், சம்புகனெனப் பெயர் பெற்றவன்; சரீரத்துடனே சுவர்க்கம்புக வெண்ணி இங்ஙனம் அருந்தவ மியற்றுகின்றேன். ஹேகாகுஸ்த! அடியேனைத் தேவலோகம் பெறக்கருதி உக்கிரமானதவம்புரிகின்ற சூத்திரனென வுணர்க' என விண்ணப்பஞ் செய்தனன். அதனைச் செவியுற்ற ஸ்ரீராமபிரான், 'சம்புக! இவ்யுகத்திற் சூத்திரர்கள் தவமியற்று மதிகாரம் பெற்றிலராதலின், நீ இவ்வண்ணம் செய்வது அறத்திற்கு மாறே யாகின்றது. யானே, நாடெங்கும் அறம் திறம்பாது பாதுகாத்தற்கு உரிமை பூண்டிருக்கின்றமையின், இப்பொழுது யான் உன்னை வதைப்பது நீதி முறைப்படி எனது கடமையாகின்றது; இதற்கு நீ யாது கூறுகின்றனை?' எனவினவ, அத்தவசி, தேவரீர் திருக்கரத்தால் கொலையுண்பதும் அடியேனுக்கு ஒரு பெரும்பேறேயாகுமெனப்புகல, அக்கணமே அயோத்திமன்னன் உறையினின்றும் கத்தியை யுருவிக் கையிலெடுத்து வீசிச் சம்புகனது சிரத்தைக் கீழே வீழ்த்தினர்.

சூத்திரனான சம்புகன் வதையுண்டது கண்டு இந்திரன் அக்கினி முதலான தேவர்கள் அனைவர்களும் அகமகிழ்ந்து நன்று நன்றெனக் காகுஸ்தனைப் பலவாறு கொண்டாட, வாயுபகவான் மிக்க மணமுள்ளனவாய மலர்களை மிகுதியும் வாரிக்கொணர்ந்து அப்பார்த்திவன் மீது புதுமையாகப் பூமாரி பொழிந்தனன். ரகுவீரனது விக்கிரமத்தை மிகவும் வியந்து அவரிடத்துப் பிரீதியதிகரித்தவர்களாகி விண்ணவர்கள் அதன் பின்னர் அயோத்தி மன்னனை நோக்கி,

'ஹேராம! சுவர்க்கம் புகுதற்குரிமை யுடையோ னல்லாத, இந்தச் சூத்திரன் கொடிய தவமியற்றுதல் கண்டு யாங்கள் அச்சங்கொண்டிருக்கையில், இவனது தவம் முற்றுப் பெறுதற்கு முன்னரே நீர் இவனை வதைத்தீராதலின், நீர் தேவர்களுக்கு ஆகவேண்டிய பெரிய காரியத்தை இப்பொழுது செய்து முடித்தீராயினீர்; ஆதலின் நீர் யாது வரம் வேண்டினும் அதனை யளிக்க யாம் சித்தமாயிருக்கின்றோம்; திருவுள்ளத்தை வெளியிடுக' எனக் கூறினார்கள். தேவர்கள் இவ்வண்ணம் உரைசெய்ததுகேட்டு ஸ்ரீராமபிரான் ஸஹஸ்ராக்ஷனை நோக்கி அஞ்சலிஹஸ்தராக நின்று, 'தேவர்காள்! தாங்கள் என் விஷயத்தில் பிரஸன்னராகி வேண்டிய வரமளிக்க உடன்பட்டீர்களாயின், இவ்வந்தணனது பெறலரும் புதல்வன் பிழைத்தெழுக; யான் கருதிய இவ் வரத்தை எனக்குத் தந்தருளுக. எனது அபசாரத்தினாலேயே இவ்வந்தணனது ஏக புத்திரனான பாலகன் அகால மரணமடைந்து யமலோகஞ் சென்றனனாதலின் அவ்விளைஞனைப் பிழைப்பூட்டுக; உங்களுக்கு நலமுண்டாகுக. நீவிர் புகன்றவாக்குப் பொய்மொழியாகாதவாறு பாதுகாத்தருள்க. வேதியன் மகனைப் பிழைப்பூட்டுவதாக யான் அவர்க்குமுன்னமே வாக்களித்து வந்திருக்கின்றேன்' என இவ்வண்ணம் அருளிச்செய்தனர்.

ஸ்ரீராமபிரான் இங்ஙனம் உள்ளமுருகி உரைசெய்ததுகேட்டுத் தேவர்கள் அவரிடத்தில் பிரீதி யதிகரித்தவர்களாகி, 'ஹேகாகுஸ்த! நீர் இவ்விசாரத்தை இனிவிட்டொழிக. பிராம்மணரது பாலகன் அப்பொழுதே பிராணனுடன் பிழைத்தெழுந்து தனது பந்துக்களிடம்போய்ச் சேர்ந்தனன்; எந்த முகூர்த்தத்தில் அந்தச் சூத்திரன் சிரமற்று வீழ்ந்தனனோ, அந்த முகூர்த்தமே பார்ப்பனச்சிறுவனுக்குப் பிராணன் வந்துவிட்டது. இனி உமக்கு மங்களமுண்டாகுக. ஹேநரேந்திர! நீர் இப்பொழுது எங்களுடன் வருக. யாமெல்லோரும் அகஸ்தியமுனிவரைத்தரிசிக்க அவரது ஆச்சிரமஞ்செல்லுகின்றோம். அம்முனிவர் பன்னிரண்டு வருஷகாலமாக மிகப்பெரிய தீக்ஷைகொண்டு ஜலத்திலேயே சயனித்து அருந்தவ மியற்றினர்; அவ்விரதம் இப்பொழுது முற்றுப் பெறுகின்றதாதலின் அவரைப் போய்க்கண்டு களித்து வரவேண்டும்; நீரும் அவ்விடத்திற்கு வருக' என்றனர். தாசரதி அவ்வண்ணமே செய்வதாகத் தேவர்களுக்கு உறுதிமொழி கூறி உடனே புஷ்பக விமானத்திலேறினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்தேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## எண்பத்தெட்டாவது ஸர்க்கம்.

தேவதைகள் அகஸ்திய முனிவரைத் தரிசித்துச்சென்ற பிறகு
ஸ்ரீராமபிரான் அவ்விடஞ்சென்று அவரை வணங்கி
அவரளித்ததிவ்யமான ஆபரணத்தைப் பெற்று அதன் வரலாறு வினவியது.

---

அநந்தரம் விண்ணவர்கள் அனைவரும் தத்தம் விமானங்களிலேறிக் குறுமுனிவர்வதியும் தபோவனம் நோக்கிச்செல்ல, தாசரதியும் அவர்களைப் பின்

றெடர்ந்து எழுந்தருளினர். தேவர்கள் எல்லோரும் தமது ஆச்சிரமத்திற்கு வந்ததுகண்டு தபோநிதியான அகஸ்தியமுனிவர் அவர்களனைவரையும் ஒருதன்மையாக விசேஷமாய் உபசரித்துப்பூஜிக்க, அகஸ்தியர் அளித்த அதிதிபூஜையைப் பெற்றுப் பெருமகிழ்ச்சிகொண்டு தேவர்கள் யாவரும் அவருக்குப் பிரதியுபசாரஞ்செய்து விடைபெற்றுத் தேவலோகம் போய்ச்சேரலாயினர்.

## ஸ்ரீராமபிரான் திவ்யாபரணம்பெற்றது.

வானவர்கள் அப்புறமெழுந்து சென்றபின்னர் ஸ்ரீராமபிரான் புஷ்பக விமானத்தினின்று மிறங்கி, தமது மகிமையினல் மிகச்சோதியாக விளங்குகின்ற வேதியர் பெருமானை யடிபணிந்து வணங்கி அவர் அளித்த அற்புதமான அதிதி பூஜையைப் பெற்றுக்கொண்டு அவர் அளித்த ஆஸனத்திலெழுந்தருளி யிருந்தனர். அதன் பின்னர் தபோதனரான கும்பயோனி காகுஸ்தனை நோக்கி, 'ஹேநரேந்திரா! எனது பாக்கியவிசேஷமே நீ இப்பொழுது இங்கெய்தி எனக்குத் தரிசனம் அளித்தனை; உன் வரவு நல்வரவாகுக. ஹேராம! யான் உனது எண்ணிறந்த உத்தம குணங்களையெண்ணி உள்ளமுவந்து உன்னைக் கொண்டாடுகின்றேன். நீ யெனக்கு என்றைக்கும் அதிதியும் பூஜிக்கத்தக்க பெரியோனுமாகி என் உள்ளத்திலேயே குடிகொண்டிருக்கின்றனை. நீ சம்புகனென்னும் சூத்திரனை வதைத்து வைதிகன் மகனைப்பிழைப்பித்துத் தருமத்தைச் சீர்ப்படுத்துவான் இங்கு எழுந்தருளியதை விண்ணவர்கள் விளம்ப, யான் உனது சேவையை யெதிர்பார்த்திருந்தேன். நீ யின்றிராத்திரி என்னருகே வஸித்திருந்து நாளைக்காலையில் புஷ்பக விமானமேறி அயோத்தியாபுரிக் கெழுந்தருளுக. நீ ஸாக்ஷாத் ஸ்ரீயப்பதியான ஸ்ரீமந் நாராயண மூர்த்தியன்றோ? உனது திருமேனியிலேயே யாவுமடங்கியிருக்கின்றன. நீயே ஸகல பூதங்களுக்கும் பிரபுவும் ஆதிபுருஷனுமாகின்றனை' யெனவுரைத்துப் பலவிதமான உபசாரங்களும் செய்து பிறகு, சோதிமயமாக விளங்குகின்ற ஒரு திவ்வியமான ஆபரணத்தைக் கொணர்ந்து, 'ஹேஸௌமிய! ஹேராகவ! விச்வகர்மாவினல் நிருமிக்கப்பட்டதான அற்புதமாகிய இவ்வாபரணத்தை நீ பெற்றுக்கொள்வது எனக்கு மிகவும் பிரியமாகும்.

దత్తస్యచపునర్దానే సుమహత్ఫలముచ్యతే।
భరణేహిభవాఞ్శక్తస్సేన్ద్రాణాం మరుతామపి॥

தத்தஸ்யசபுனர்தானே ஸுமஹத்பலமுச்யதே।
பரணேஹிபவாஞ்சக்தஸ் ஸேந்த்ராணாம் மருதாமபி॥

ஒருவர் நமக்குப் பிரீதியாகக் கொடுத்த உத்தமமான பொருளை நாமனுபவியாமலே பிறர்க்குத் தானஞ்செய்வதினல் மிகப் பெரிய நன்மை விளையுமென ஓதப்படுகின்றது. இந்திராதி தேவர்களை யெல்லாம் நீதாங்குந்திறமையுடையவனுக, இவ்வாபரணத்தைத்தரிப்பது உனக்கு ஒரு பெரிய காரியமோ? ஸகலதேவதைகளோடு தேவேந்திரனையும் காப்பாற்ற வல்லவன் நீ

ஒருவனேயாம். ஆதலின், மிகச் சோதியாய் ஒளிவீசும் விசித்திரமான இந்த திவ்வியாபரணத்தை யான் உனக்கு விதிமுறைப்படி தானஞ்செய்து கொடுக்கிறேன். இதனை நீ பிரதிக்கிரஹஞ் செய்தருள்க' என வேண்டினர்.

அகஸ்திய முனிவர் இவ்வாறு கூறியதுகேட்டு இக்ஷ்வாகு குலத்தில் தோன்றிய மஹாரதரும் மஹாமேதாவியுமான ஸ்ரீராமசந்திரன் க்ஷத்திரிய தருமத்தை மேலாக வெண்ணிக் குடமுனிவரை நோக்கி, 'ஹே பகவன்! தானம் வாங்கும் அதிகாரம் அந்தணர்கட்கே யுரியதன்றோ? க்ஷத்திரியர்கட்கு அவ்வதிகாரமில்லையே; அங்ஙனமாக அடியேன் இதனை யெவ்வாறு வாங்கிக் கொள்வது? மேலும் முக்கியமாகப் பிராம்மணர்தலைவரான தேவரீர் கொடுக்க அடியேன் எங்ஙனம் பெற்றுக்கொள்வேன்? தேவரீரே இதனை அடியேனுக்கு விளங்கத் தெரிவிக்க வேண்டுகிறேன்' எனப் புன்னகைகொண்டு புகல, குடமுனிவர் மறுமொழி கூறுகின்றனர்.

'காகுஸ்தனே கேளும். பூர்வம் பிராம்மணர்கள் பெருமை பெற்று விளங்கிய கிருதயுகத்திலே பார்த்திவனில்லாமல் பிரஜைகள் ஒவ்வொருவரும் தம்மைத்தாமே பாதுகாத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. தேவர்கட்கு மாத்திரமே மஹேந்திரனொருவன் அரசனாயிருந்தனன். அப்பொழுது நரலோகத்தவர்கள் அனைவரும் நான்முகக் கடவுளை நண்ணி, 'ஸ்வாமி, பிதாமகரே! பார்த்திவ னில்லாமல் வஸிப்பது எங்கட்கு வருத்தமான காரியமாயிருத்தலின், தேவர்களுக்கு இந்திரனை அரசனாயளித்தவாறு எங்கட்குமொரு வேந்தனை விதித்தல் வேண்டும்; அவ்வேந்தனுக்கு யாங்கள் ஏற்றபடி பூஜை புரஸ்காரங்கள் செய்துகொண்டு பாபத்தொழி லொழிந்து வாழ்வோம்' என வேண்டி விண்ணப்பஞ் செய்துகொள்ள, தேவர் பெருமானான பிதாமஹர் ஆய்ந்து உணர்ந்து, தேவேந்திரனையும் மற்றுமுள்ள திக்குப்பாலகர்களையும் வரவழைத்து 'தேவர்காள்! இப்பொழுது பூலோகத்தைப் பாதுகாக்க ஒருபார்த்திவனைப் படைத்தல் வேண்டுமாதலின் அதன்பொருட்டு நீவிர் ஒவ்வொருவரும் உங்களது உத்தமமான அமிசங்களில் ஒருபகுதி தருக' எனக்கேட்க, அவர்களும் அங்ஙனமே தந்ததனால், பிரமதேவர் அவைகளைக்கொண்டு க்ஷுபன் எனப்பெயரிட்டு ஒருபுருஷனைப் படைத்து, அவனைப் பூலோகத்தவர்கட்கு அரசனாகத்தந்தனர். அவ்வேந்தன் இந்திரனது கலையினால் இப்பூமியெங்கும் அதிகாரஞ் செலுத்துகின்றனன்; வருணகலையினால் சரீரங்களை வளர்க்கின்றனன்; குபேரகலையினால் தனாதிகாரியாகி ராஜ்யத்துப் பொருளைப் பிரஜைகளுக்கு அளிக்கின்றனன்; யமனதுகலையினால் அறநெறிதவறுது பிரஜைகளைச் சிக்ஷிக்கின்றனன். ஆதலின், ஹே ரகுநந்தன! தேவேந்திரனது அமிசம் உம்மிடத்திலிருக்கின்றமையின் அதனைக்கொண்டு பிரஜைகளைப் பரிபாலிப்பதினிமித்தமும் என்னைக் கடைத்தேறச் செய்வதனிமித்தமும் இதனை நீர்கைக்கொள்ளத்தகும். உமக்கு மங்களமுண்டாகுக' என வுரைத்தருளினர்.

அகஸ்தியமுனிவர் தருமத்திற்கேற்றதாய் இவ்வாறுகூறியது கேட்டுக் காகுஸ்தன், 'அங்ஙனமாகில் தந்தருள்க' வென்று உத்தமமான அவ்வாபரணத்தைப் பெற்றுக்கொண்டு அற்புதமான அவ்வாபரணத்தின் வரலாற்றை வினவ

லாயினர். 'ஓ தபோதனரே! இதன்பெருமையைப் பார்க்க அடியேனுக்குக் குதூஹல முண்டாகின்றது. தேவரீர் பெருமையோ சொல்லத்தரமன்று; தேவரீரிடம் ஆச்சரியங்க ளநேகமிருக்கலாம்; ஆதலின் மஹத்தான இவ்வாபரணம் தேவரீரிடமிருப்பது ஒருவியப்பன்று; ஆயினும், இஃது எவ்விதமாக எவ்விடத்தி லிருந்து யாரால் தேவரீர்க்குக் கிடைத்ததென இதன்வரலாற்றைக் கேட்டறிய விரும்புகின்றேன், அருளிச்செய்ய வேண்டும்' என்ன, அம்முனிக்கரசு மொழிய லுற்றனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

தமக்குத் திவ்யாபரணமளித்த சுவேதராஜன்கதையைக் கூறத்தொடங்கிய அகஸ்தியமுனிவர், ஓர் அரணியத்தில் ஒரு பொய்கைக்கரையில் அவ்வரசன் விண்ணுலகத்தினின்று வந்ததுகண்டு, அவன்செய்த இழிவான செய்கையைப்பார்த்து, அவனை வினவியது கூறியது.

---

### சுவேதராஜன் கதை.

'ஹே ராம! இதன்வரலாற்றை ஆதியோடந்தமாகக் கூறுகின்றேன் கேளும்: இந்தத் திரேதாயுகத்தின் ஆதியிலே சுற்றிலும் நூறுயோஜனைதூரம் பரந்து விலங்குகளும், பறவைகளும்யாதுமின்றி நிர்மானுஷியமான மிகப்பெரிய அரணியமொன் றிருக்கக்கண்டு யான் அதில் தவமியற்றக்கருதி அங்குச்சென்று அதனையுற்று நோக்கினேன்; மிகமதுரமான காய்கனிகள் நிறைந்த நாநாவிதமான விருக்ஷங்கள் அநேகம் அடர்ந்து அவ்வரணியம் அதிரமணீயமாய் இத்தன்மையதென்று அளவிட்டுரைத்தற்கு அஸாத்தியமாயிருந்தது. அவ்வனத்து மத்தியில் ஹம்ஸம் காரண்டவம் சக்கரவாகம் முதலான நீர்ப்பறவைகள் பல விளையாடப்பெற்று, தாமரை நெய்தல் முதலானமலர்கள் அழகாக மலர்ந்து பாசியின்றி நிர்மலமாய் மதுரமானதண்ணீர் நிறைந்து கலக்கவொண்ணாது ஆழ்ந்திருந்தது. அப்பொய்கைக்கரையிலே மிகத்தூயதும் அற்புதமுமான புராதனமாகியமகிமைபெற்ற ஆச்சிரமமொன் றிருக்கக்கண்டேன். அதில் தவசியொருவருமில்லை. ஆங்கு அக்கோடையில் ஒருநாளிராத்திரியான் வதிந்து வைகறைத் துயிலெழுந்து அத்தடாகத்தின்கண் நீராடச்சென்றேன்; அதில் ஒருமனிதப்பிணம் கிஞ்சித்தேனும் கரையாது புஷ்டியுள்ளதாய் மூப்பிலதாய் மிதக்கக்கண்டேன். ஹே மஹாப்பிரபோ! அதனைக்கண்டு, ஈதென்ன? இங்கு இவ்வண்ணம் உருக்குலையாது மிக்க சோபையுடனே விளங்காநின்ற சவமெங்ஙனம் வந்ததெனச் சிந்தித்தவாறு ஒருமுகூர்த்தம் அவ்விடத்திலேயே நின்றேன். நிற்கையில் அன்னப்பறவைகள் வகிக்க வாயுவேகம் மனோவேக

மாய் வருகின்ற திவ்விய விமான மொன்று கண்ணிற் புலப்பட்டது. ஹே ரகு நந்தன! அவ்விமானத்தில் திவ்வியமான பூமாலைகளும் திவ்வியமான பூஷணங் களு மணிந்து காந்தியுமழகுமமைந்த திவ்விய புருஷனொருவன் தோன்றி னன். அவனைச் சுற்றிலும் அரம்பையர்கள் சிலர் மதுரமான கீதங்கள் பாடி னர்; சிலர் மங்களவாத்தியம் முழங்கினர்; சிலர் போற்றிப் புகழ்ந்தனர்கள்; சிலர் நர்த்தன மாடினர்கள்; வேறுசிலர் செந்தாமரை மலர்போன்ற நேத்திரங் களுள்ளதான அவனது முகமண்டலத்தில், சுவர்ணதண்டத்துடனே கூடிய சந்திரகிரணம் போன்றசோபையுள்ள சாமரங்களையிரட்டினர்கள். ஹே ராம! ஹே ரகுநந்தன! யான் பார்த்துக்கொண்டே நிற்கையில் அந்தப்புருஷன், மேரு சிகரத்தினின்றும் சூரிய னிறங்கி வருமாறு அவ்விமானத்தினின்று மிறங்கி வந்து அந்தச்சவத்தினதுகொழுப்பு மிகுந்துள்ளனவான தசைகளைவயி ருரவுண்டு அக்குளத்தில் கைகழுவி ஆசமனஞ் செய்தற்கிறங்கி மறுபடியும் தனது விமானத்திலேற வெழுந்தனன். விமானமேற நின்ற தேவனுக்கொப் பான மஹா புருஷனை யான் நோக்கி, 'ஐயா! நீர் யார்? நீரோ தேவத்தன் மையுடையீராக விளங்குகின்றீர்; உமது உணவோ மிகவும் இகழத்தக்கதா யிருக்கின்றது; இழிவான இவ்வுணவை நீர் இங்ஙனம் அருந்தக்காரணம் யாது? இத்தன்மையதான உணவில் ஆசையும் கருத்தும் உம்மைப்போன்ற பெருமையுடையோருக்கு உண்டாகுமோ? இஃது ஏதோ ஒருகாரணம்பற்றி வந்ததேயன்றி உமக்கு இந்தச் சவபக்ஷணம் இயற்கை யல்லவெனக் கருது கின்றேன்; இஃது எனக்கு மிகவும் ஆச்சரியமா யிருக்கின்றதாதலின் இவ் விஷயத்தைத் தெளியச்சாற்றுக' என வினவ, அத்தேவன் மிகக் குதூகல மடைந்தவனுகி இனிய மொழியாக யாவும் என்னிடம் அறிவிக்கலுற்றனன்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் எண்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூருவது ஸர்க்கம்.

சுவேதன்சொன்ன கதையையும், அவன் தமக்கு அவ்வாபரண மளித்ததையும் அகஸ்தியர் ஸ்ரீராமனுக்கு அருளிச்செய்தது.

---

'ஹேராம, ரகுநந்தன! யான்வேண்டிவினவியதுகேட்டு அவ்விண்ணுலகத் தவன் வணங்கிக் கைகூப்பிக்கொண்டே எனக்கு விடைகூறலுற்றனன்: ஹே பிரம்மன், முனிவர்பெருமானே! எனது சுகதுக்கங்களைப்பற்றிய பூர்வகதை கூறுகின்றேன் கேளும். பூர்வம் விதர்ப்பதேசத்திலே சுதேவனென்னும் புகழ் பெற்றபார்த்திவரொருவ ரிருந்தனர். அவர் எனது தந்தை, மஹா வீரியவந்த ரென மூவுலகங்களிலும் மிகப்பிரசித்திபெற்றவர். அவர்க்குஇரண்டுமனைவியர் கள்; அவ்விருவருக்கும் சுவேதனென்கிறயானும் சுரதனென்கிறஎன் தம்பியுமாக இரண்டு மக்கள்பிறந்தோம். தந்தை சுவர்க்க மடைந்தபின்னர் பட்டணத்துப் பிரஜைகள் எனக்குப்பட்டஞ்சூட்டினர்கள்; யானும் அவ்வரசாட்சியை ஏற்றுக்

கொண்டு நீதிமுறை தவருது பலவாண்டளவு பிரஜா பரிபாலனஞ் செய்துவந்தேன். வேதியர்பெருமானே! இவ்வண்ணம் தருமமாக ராஜ்ய ஸம்ரக்ஷணஞ் செய்துவருகையில் ஒருநிமித்தத்தால்யான்எனதுவாணுள் இவ்வளவென்பதையுணர்ந்து நற்கதி பெறக்கருதி ராஜ்யத்தைத் துறந்து தம்பியான சுரதனுக்கு முடிசூட்டி யான் தவம்புரியுமாறு மிருக பக்ஷிகளில்லாத மகிமைபெற்ற மஹா துர்க்கமான இவ்வனத்துட் புகுந்து இந்தத் தடாக தீரத்தையடைந்து இங்கு மூவாயிரமாண்டளவு செயற்கரியதான சிறந்ததவமியற்றிப்பின்னர் பிரமலோகமடைந்தேன். பசிதாகம்முதலானதுன்பங்கள் யாதுமிலதான உத்தமலோகம் புகுந்தவளவிலும்,பிராமணசிகாமணியே! அடியேனைப்பசியும்தாகமும் மிகவருத்தலாயின. அதுகண்டுயான்மிகச் சிந்தைகலங்கியவனுகித்திரிபுவனங்களுக்கும் தலைவரான பிதாமஹரிடஞ்சென்று, 'ஸ்வாமி! இந்தப்பிரம்மலோகம் பசிதாகம் முதலான துன்பங்களுண்டாகாத மேலானஉலகமன்றோ? இப்பொழுது அடியேனைமீண்டும் அத்துன்பங்கள் வருத்துகின்றனவே; இஃது எந்தப்பாபகர்மத்தின்பயனே? இன்றுயான் எதனை எனக்கு உணவாக்கொள்வேன், அதனை அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டுகின்றேன்' என விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டநான்முகக்கடவுள்என்னைநோக்கி,'சுவேதன்மைந்தனே; நீ உத்தமமான தவம்புரியுமளவிலும் உனது உடலின்மீது ஆசையொழியாதவனுகி அதனை அதியாதரத்துடனே போஷித்துவந்தனை; அங்ஙனம் போஷித்துவருகையிலும் திருப்தி யென்பது உனக்குச் சிறிதளவேனும் அதனல் உண்டாகவில்லை; அதனுல், அந்தப் பசி தாகங்கள், தவத்தின் பெருமையால் நீ இப்பதி புகுந்தவளவிலும், உன்னை விட்டுநீங்கினவல்ல. அன்றியும்,

అనుప్తం రోహతే శ్వేత నకదాచిన్మహీపతే।

அநுப்தம்ரோஹதேச்வேத நகதாசிந்மஹீபதே!

மஹா மேதாவியான சுவேதமஹாராஜனே! நாம் விதை விதைக்காமல் செடி முளைக்காதன்றோ? பூர்வம் ஒருஸந்ந்யாஸி உன்னிடம் பிக்ஷையை வேண்டிவர, அந்த அதிதிக்கு நீ அன்னமிடாமற்போயினை; அதனல் முன்னம் நீ கொடுத்துவைத்தது ஒன்றுமிலதாதலின், உனக்குவேறுஆகாரமெதுவும் கிடைப்பதரிது. நீ செய்த தவத்துடனே நல்லுணவளித்து அருமையாய் ஆதரித்த உனது உடலொன்று மாத்திரமே மிகுந்துள்ளது. தவத்தின் பெருமையால் பிரம்மலோகம் புகுந்தனையாயினும், நீ உதரபோஷணத்தில் வைத்திருந்த அதிகமான ஆசையினுல் நீர்வேட்கையும் நல்லுணவிலாசையும் உன்னையிங்கும் துன்புறுத்துகின்றமையின், நீ போஷித்துவைத்த உனது சரீரத்தின் மிக மதுரமான மாமிசங்களையே நீ நாடோறும் அருந்தி அவ்வாஞ்சதணிக. ஹே சுவேத! நீ தவம்புரிந்த வனத்திற்கு எப்பொழுது மஹாத்துமாவான அகஸ்தியமாமுனிவர் எழுந்தருளுகின்றனரோ, அப்பொழுது உனக்கு இத்துயரம் விமோசனமாகும். அத்தபோதனர் தேவர் குழாத்தையும் பாதுகாக்கும்பெருமையுடையவர்; அங்ஙனமாகப்போஜனத்திலும்பானத்திலும் பேராசைகொண்ட உன்னைக்கடைத்தேற்றுதற்குக் கேட்கவேண்டுமோ' என வருளிச்செய்தனர்.

ஹே த்விஜோத்தம! தேவர்களனைவர்க்கும் தேவனான பிரமதேவன் இங்ஙனம் புகன்றதுகேட்டு அன்றுதொட்டு அடியேன் அநேகமாண்டளவாக மிகவும் இகழத்தக்கதான எனது உடலையே உணவாயருந்தி நாள்கழிக்கின்றேன்; எத்தனை காலம் புஜித்தும் இவ்வுடலினுான் சிறிதளவேனும் குறைவுபடவில்லை, எனக்கும் பசி தணிந்து திருப்தி யுண்டாகவில்லை. இன்றுதான் அடியேனது துர்த்தசை நிவர்த்தியாகவேண்டும்; தேவரீரை யன்றி அடியேனுக்கு வேறுகதி யின்று. ஹே ஸௌமிய! தேவரீர் அடியேனை யிவ்வாறு கடைத்தேற்றுவதற்குப் பிரதியாக திவ்வியமான இவ்வாபரணத்தைப் பிரதிக்கிரகித்து அடியேனிடம் அருள்புரிக. இஃது பொன், பொருள், பட்டாடை, பூணாரம், பக்ஷியம், போஜனமாகிய வேண்டுவன யாவற்றையும் ஸகலமான போகங்களையும் அளிக்கும். இதனைத் திருவுள்ளம் பற்றி அடியேனை யிப்பாதகத்தினின்றும் கடைத்தேறுமாறு கடாக்ஷித்தருள்க' என வேண்டினன்.

இவ்வாறு சுவேதராஜன் மிகத்துயரமடைந்து கூறியதுகேட்டு அவ்வாபத்தினின்று மவனை விடுவிக்குமாறு உத்தமமான அவ்வாபரணத்தை யான் பெற்றுக்கொண்டேன். அதனை யான் கைக்கொண்டவளவிலே, அந்த ராஜரிஷியினது பழமையான மானிடதேகம் அழிந்துபோயிற்று. உடல் அழிந்தவுடனே அம்மகாபுருஷன் மிகுந்த ஸந்தோஷமும் திருப்தியுமடைந்தவனாகிச் சுகமாகச் சுவர்க்கலோகஞ் சென்றனன். மஹேந்திரனுக் கொப்பான மகிமை வாய்ந்த ராஜரிஷி அத்தருணத்தி லளித்த தப்பா அற்புதமான இவ்வாபரணம்' என முற்றும் மொழிந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூறுவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## தொண்ணூற்றோராவது ஸர்க்கம்.

சுவேதராஜன் தவம்புரிந்த கானகம் ஜீவராசிகளின்றிச்
சூனியமானது யாது காரணமென்று ஸ்ரீராமன் கேட்க, அகஸ்தியர்
அதன் வரலாறு கூறத்தொடங்கி,
தண்டகன் பிறந்து
அரசனான செய்தியுரைத்தது.

---

அகஸ்தியமாமுனிவர் மொழிந்த அற்புதமான கதையைச் செவியுற்று ஸ்ரீராமபிரான் மிக்க நன்கு மதிப்பும் வியப்புங் கொண்டவராகி மீண்டும் அம்முனிவரை வினவலாயினர். 'ஸ்வாமி, முனிபுங்கவரே! விதர்ப்பதேசாதிபதியான சுவேதராஜன் கொடிய தவம்புரிந்த கானகம் மிருகபக்ஷிகள் எதுமில்லாது சூனியமானது யாது காரணம்? மிருகஸஞ்சாரமும் மனுஷியஸஞ்சாரமுமில்லாத அவ்வனத்தில் அவ்வேந்தன் தவம்புரியுமாறு புகுந்த காரணம் யாது? இதனுண்மையை அறிய ஆவல் கொள்ளுகின்றேன்' எனக் காகுஸ்தன் மிகுந்த குதூஹலத்துடனே கேட்க, கும்பயோனி கூறத்தொடங்கினர்.

## தண்டகன் கதை.

'ஹே ராம! பூர்வம் கிருதயுகத்திலே மனுவானவர் வர்ணாச்சிரம தருமங்களை ஸ்தாபித்து ராஜநீதிகளையு மேற்படுத்திய பின்னர் தமது குலவிளக்கான தம் குமாரராகிய இக்ஷ்வாகுவைத் தமது ராஜ்யத்திற்கு ராஜனாக நியமித்து அவரை நோக்கி, 'அப்பா! நீ இப்புவியில் க்ஷத்திரிய குலங்களைப் பரவச்செய்தல் வேண்டும்' என்ன, புத்திரன் அங்ஙனமே யாகுக வென்று அங்கீகரித்த வளவில், பிதா பரமஸந்துஷ்டராகி, மீண்டும் மகனை நோக்கி, 'வத்ஸ! நீ இங்ஙனம் உதாரபுத்தியுடையோனாகி அங்கீகரித்தற்கு நான் மிகப் பிரீதனாயினேன். நீ அவ்வண்ணமே ராஜவமிசங்களைப் பரவச்செய்வாயென்பதற்குச் சந்தேகமிலது. ஆயின், நீதி தவறாது செங்கோல் செலுத்திப் பிரஜைகளைப் பரிபாலித்தல்வேண்டும்; நிஷ்காரணமா யெவரையும் தண்டித்தலாகாது. அரசன் அபராதிகளைக்கண்டறிந்து அவர்களை விதிமுறைப்படி தண்டிப்பனாயின், அஃது அவ்வேந்தனை விண்ணுலகத்துய்த்துவிடும்; நிரபராதிகளைத் தண்டித்தால் தீரா நரகம் ஸம்பவிக்கும். ஆதலின், வத்ஸ! பிரஜைகளைத் தண்டிக்கும் விஷயத்தில் மிகவும் அவதானமுடையனா யிருத்தல்வேண்டும். இங்ஙனம் நீ ஒழுகுவையாயின் உனக்கு மேன்மேலும் அறம்வளரும்' என இவ்வண்ணம் பலவாகத் தம் புத்திரனுக்குப் புத்தி போதித்து மனுவானவர் தாம் நிஷ்டையிலிருந்து வீடு பெற்றனர்.

இவ்வாறு மனுவானவர் மோக்ஷ மடைந்தபின்னர் இக்ஷ்வாகு மஹாராஜன் தாமெங்ஙனம் புதல்வரைப் பெறுவதெனச் சிந்தித்துப் பிறகு மஹா தருமிஷ்டராய்ப் பல சற்கருமங்களைச் செய்து அவற்றின்பயனாகத் தேவகுமாரர்களுக்கொப்பான நூறு குமாரர்களைப் பெற்றனர். ஹே ரகுநந்தன! அவர்கள் அனைவரினும் கடைசியிற் பிறந்த புத்திரன் மூடனும் கல்விப்பயிற்சியில்லாத கொடியனுமாகித் தமையன்மார்களுக்கு வந்தனை வழிபாடு செய்யாத துஷ்டனாயினன். அதுகண்டு தந்தை அற்பபுத்தி யுடையனான இவன் அவசியம் தண்டனை யுறுவானெனக் கருதி அவனுக்குத் தண்டன் அல்லது தண்டகன் எனவே பெயரிட்டு, பிறகு அக்கொடியனுக்கேற்ற கோரமான விடமொன்று காண்கிலனாகி யிறுதியில், விந்தமலைக்கும் சைவலமலைக்கு மிடையிலுள்ள நிலத்தை அவனுக் களித்தனன். அப்பால் அந்தத் தண்டகன் அவ்விடத்திற்கு அரசனாகி அழகான அம்மலைச் சாரலிலே இணையில்லாத அற்புதமான நகரமொன்று நிர்மாணஞ்செய்து அதற்கு மதுமந்தமென நாமஞ்சூட்டி அதிற் குடிபுகுந்து சுக்கிராசாரியாரைத் தனக்குப் புரோகிதராக வரித்துக்கொண்டு அவருடனே கூடி, தேவலோகத்தில் தேவேந்திரன் ஆட்சி செலுத்துமாறு, பிரஜைகளெல்லாம் மிகக் களிகூர்ந்து இன்புற்று வாழும்படி மன்பதைகளை யோம்பிவந்தனன்' என்று கூறினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றோராவது ஸர்க்கம் முற்றிற்று.

# தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம்.

தண்டகன் குரு புத்திரியைக்கண்டு காமுற்றுக்
கைபிடித் திழுத்தது.

இவ்வாறு அருளிச்செய்த அகஸ்தியமாமுனிவர் மேலும் அக்கதையைக் கூறுகின்றனர். 'ஹே ராம! தண்டகனென்னும் அவ்வரசன் இவ்விதமாய் அநேகவருஷகாலம் எதிரி யெவனுமில்லாது அடக்கமுடையனாய் ஆட்சி செலுத்திவருகையில், ஒருகால் சுக்கிராசாரியரது அதிரமணீயமான ஆச்சிரமத்திற்குச் சென்றனன். அஃது இளவேனிலான சித்திரைமாதமாதலின் எவர்க்கும் இன்பம் தருவதாயிற்று. வேந்தன் சென்றவளவில் அவ்வனத்திலே நேரில்லாத வனப்புவாய்ந்த கன்னிகையான பார்க்கவருடையபுத்திரியுலாவக் கண்ணுற்றனன். அவ்வணங்கைக் கண்டவளவிலே அரசன் அறிவிழந்து அனங்கசரபீடிதனாகி, அடங்கி யொடுங்கி நின்ற அக்குமாரியினிடஞ் சென்று, 'அழகிற்சிறந்த பவழக்கொடியே! நீயார்? எங்கிருந்து வருகின்றனை? நீ யாருடையபுதல்வி? உனது மதிமுகத்தைக் கண்டவளவிலே எனது மனம் மன்மதன் வசமாகியது; இதோ யான் உன்னுடன் புணருகின்றேன்' எனப் பிதற்றினன். காமவெறி தலைக்கேறி மதிமயங்கி இவ்வாறு தாறுமாறுகக் குளறிய தண்டகனைநோக்கிப் பார்க்கவ புத்திரியானவள் நல்ல வார்த்தையாகவே, 'வேந்தனே! யான் வேதியர்பெருமானான பார்க்கவருடைய புதல்வியெனவறிக; யான் அரஜையெனப் பெயர்பூண்டவள். அம்முனிவரது மூத்த மகளான யான் இவ்வாச்சிரமத்தில் வதிகின்றேன். நீரென்னை வலியவந்து தீண்டேல்; யான் தந்தையின் அதீனத்திலிருக்கின்ற கன்னிகையாம். ஹே ராஜேந்திரா! எனது பிதா உமக்குக் குரு; அம் மஹானுபாவருக்கு நீர் சீஷனாகின்றீர். தபோதனரான எனது தந்தை சீற்றங்கொள்வா ராயின், பெருந்துன்பம் விளைவிப்பர். என்னிடத்து உமக்கு ஏதேனும் காதலுளதாயின், ஹே ராஜசிரேஷ்டரே! தருமமாக நேர்வழியிலே மஹாநுபாவரான எனது தந்தையினிடஞ் சென்று வரித்துவேண்டுக. அங்ஙனமின்றி யதிக்கிரமஞ் செய்யின், உமக்கு மிகக்கொடியதான பயனே வந்துவிளையும். தவப்பெருமை பெற்ற மஹாநுபாவரான எனது தந்தை முனிந்தனராயின் மூவுலகங்களையுமெரித்துவிடுவார்; அருத்திபுரியின் ஒருகால் ஈந்தாலு மீவர்' என வணக்கமா யுரைத்தனள்.

அரஜை யிவ்வாறு நயமாக நவின்றவளவிலும் தண்டகன் அதனைச் செவிக்கொள்ளாது காமாதுரனாகி முடிமீது அஞ்சலிவைத்து, 'பெண்மணி! என்மீது அருள்புரிக; காலதாமதஞ் செய்யற்க. முகச்சோதி மிகுந்த மாதே! உன் பொருட்டாகவே எனது பிராணன்கள் பிளந்துபோகின்றன. என் கண்மணி! உன்னைப் புணர்ந்தபின்னர் எனக்கு வதம்வந்தாலும் வருக, அதினும் கொடியதாகிய சாபம்வந்தாலும் வருக. அஞ்சிநடுங்குமாரணங்கே! அதிகமாக வருந்தித் தவிக்கின்ற உனது பக்தனான என்னைக் கட்டியணைக' என்றிவ்வாறு கூறி

மஹாபலிஷ்டனான பார்த்திவன் நடுங்கிக்கொண்டு நின்ற அக்கன்னியைத் தன துபுஜங்களால் பிடித்திழுத்து அவளுடனே வேண்டியவாறு வலியப் புணரலாயினன். மிகக் கொடியதும் கோரமுமான இச்செய்கை செய்தபின்னர் தண்டகன் தனது மதுமந்தநகரம் போய்ச்சேர்ந்தனன்; அரஜையோ, ஆச்சிரமத்தருகே அழுதவண்ணம் தந்தையின் வரவை யெதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தனள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றுமூன்றுவது ஸர்க்கம்.

தன் பெண்ணைப் பிடித்துப் பலவந்தப் படுத்திய காரணம்பற்றி பார்க்கவர் முனிந்து தண்டகனைச் சபித்ததனால் அவ்வரணியம் அங்ஙனமாயிற்றென அகஸ்தியர் உரைத்தது.

---

இஃது இங்ஙனமாக, மஹாப்பிரபாவசாலியான பார்க்கவமுனிவர் ஒரு முகூர்த்தகாலத்தில் இந்தத் துராகிருதமான செய்தியைச் செவியுற்றுத் தக்ஷணமே சிஷ்ர்கள் புடைசூழ மிகுந்தபசியுடனேதமதாச்சிரமத்திற்குத் திரும்பி வரலாயினர். வந்தவளவில் அரஜை உடம்பெங்கும் புழுதிபடிந்தவளாகி அருணோதயகாலத்தில் அருக்கனது ஒளியினால் மறைக்கப்பட்ட நிலவொளியென வடிவழகுகுன்றி தீனையாகநின்றதைக் காண, அவர்க்கு அதிகமான சீற்றமுண்டாகியது. பசியொருபுறம் வருத்தவே பின்னும் பதின்மடங்காகக் கோபமதிகரித்தது. அக்காலத்தில் அவர் திரிலோகங்களையும் தஹிப்பவர்போலாகிச் சிஷ்ர்களைநோக்கி, 'பார்த்தீர்களா தண்டன் இந்திரியநிக்கிரகமிலனாகிச் செய்த விபரீதத்தை! சீற்றமதிகரித்த என்னால்அவனுக்குஅக்கினிச்சுவாலைபோலவிளையப்போகிற விநாசத்தை இதோ பாருங்கள். துர்ப்புத்தியுடைய துராத்துமாவான தண்டனுக்குக் குடும்பத்துடனேகேடுகாலங்கிட்டியது. எரிகின்ற அக்கினிச்சுவாலையை அவன் கையினால் பற்றக்கருதினனன்றோ? துஷ்டனான தண்டன் மதிகெட்டுமஹத்தான இவ்வகைப்பாபஞ் செய்தனனாதலின், அதன்பயன் அவனுக்கு இப்பொழுதே விளையும். துஷ்டபுத்தியும் பாவச்செயலுமுடையனான இவ்வரசன் ஏழுதினங்களில் தனது சேனை முதலிய பரிவாரங்களுடனும் வாஹனங்களுடனும் வதையுறுவான்; மதிகேடனான இம்மன்னனது ராஜ்யத்தில் மகேந்திரன் மிகக்கொடியதான மண்மாரி பொழிவித்துச் சுற்றிலும் நூறு யோஜனை தூரம் இதனை யழித்துவிடுவான்; அம்மண்மாரியினால் இவ்விராச்சியத்திலுள்ள சராசரங்களான ஜீவன்கள்யாவும்நாசமுறலாகும்; இத்தண்டகனது தேசம் எவ்வளவுதூரம் பரந்துளதோ, அவ்வளவுதூரமும் யாதும் கண்ணுக்குப்புலப்படாது பிரளயகாலமென ஏழுநாள் மண்மழைபொழியும்' என இவ்வாறு வெகுண்டு கண்கள்சிவந்து கொதித்துக் கூறினர்.

பிறகு அவ்வாச்சிரமத்திலுள்ளோர் அனைவரையும் நோக்கி, 'நீவிர் இத் தேசத்தின் எல்லைக்குஅப்பால் எழுந்துசெல்லுக' என்று பார்க்கவமுனிவர் கட்டளையிட, அவர்கள் அங்ஙனமே சென்றவளவில், அவ்விடத்து அவர்களுக்கு ஒரு இருப்பிட மேற்படுத்தி அதன்பின்னர் அரஜையைநோக்கி, 'மதிகெட்ட மகளே! துர்மார்க்கமான பாவச்செயலுக்கு நீ யுடன்பட்டனை யாதலின், அப்பாபத்தை யொழிக்குமாறு நீ இவ்வாச்சிரமத்திலேயே யிருந்து தவம் புரிக. இவ்வாச்சிரமமு மிங்கிருக்கு மித்தடாகமும் இங்ஙனமே யென்றைக்கு மழியாதிருக்கக் கடவன. நீயிவ்வனத்திலேயே மனக்கவலை யொழிந்து உனது நற்காலத்தின் வரவை யெதிர்பார்த்து இனிதுவாழ்க. மண்மாரி பொழியு மிரவில் உன்னருகில் எந்தெந்த ஜீவன்க ளிருக்கின்றனவோ, அவற்றிற்கும் அதனல் அழிவு நேரிடாது' என்றுகூற, அரஜை விசனமதிகரித்தவளாகி அங்ஙனமே பிரம்மரிஷியான பார்க்கவரது நியமனத்தை யேற்றுக் கொண்டனள். பிறகு அம்முனிவர் தமக்கு வேறிடத்தில் வாஸஸ்தான மேற்படுத்திக் கொண்டனர். அப்பால் ஏழுநாளைக்குள் தண்டகனது ராச்சியமானது பரிஜனங்கள் படைகள் வாஹனங்களாகியஸகலமான ஜீவராசிகளுடனே மஹாப் பிரம்மவித்தான பார்க்கவர் புகன்றவாறு பஸ்ம மாகியது.

விந்தசைவலமலைகளுக்கு மத்தியிலுள்ள இவ்விடம் அந்தத்தண்டகனது தேசமய்யா; தருமங்களும் சௌக்கியங்களும் சரியாக நடந்தேறுகின்ற கிருத யுகத்திலே தருமம் மாறுபட்டதுபற்றி அசுரகுருவினல் இவ்வாறு சபிக்கப் பட்ட விடமிது. ஹே காகுஸ்த! அன்றுதொட்டு இதற்குத் தண்டகாரணிய மெனவே பெயர் பிரசித்தமாகியது. பின்னர் இதில் தவசிகள் பலர்வந்து சேர, இஃது ஜனஸ்தான மாகியது. கேட்டீரோ ராஜசிகாமணியே! இவ் விடத்து வரலாறு முற்றும் மொழிந்தேன். ஸந்தியாகாலமாகியது; அதோ பாரும், முனிவர்கள் பலரும் ஸ்நாநம் முதலான அனுஷ்டானங்கள்செய்து கையில் பூர்ணகும்பங்களுடனே வந்து ஆதித்தனை உபாஸிக்கின்றனர்கள்; தீர்த்த சமீபத்திலே சேர்ந்திருக்கின்ற பிரம்ம வித்துக்கள் செய்யும் மந்திர தந்திர யோகாப்பியாஸ ரூபமான பூஜையைப்பெற்று அருக்கனும் அஸ்தமய மாகின்றனன். ஆதலின் ஹே ராம! நீருமெழுந்து சென்று அனுஷ்டானஞ் செய்க' என அருளிச்செய்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றுமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றுநான்காவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் அகஸ்தியரிடம் அனுமதிபெற்று அயோத்தியாபுரி போய்ச்சேர்ந்தது.

---

குடமுனிவர் இவ்வாறு கூறியதுகேட்டு ஸ்ரீராமபிரான் உடனே எழுந்து, அப்ஸரஸ்திரீகள்வந்து விளையாடப்பெற்ற மிகப் பரிசுத்தமான அப்

பொய்கையினிடஞ் சென்று ஸந்தியாவந்தனஞ் செய்து மாலைக்கடனை முடித்து அகஸ்தியரது ஆச்சிரமஞ் சென்று, ஆங்கு அம்முனிவர் அளித்த காய்கனி கிழங்குகளையும் ஓஷதிகளையும் மிகச் சிறந்த சாலியன்னத்தையும் பெற்று அமுதத்திற் கொப்பான அவைகளை அதியாதரத்துடனே அமுதுசெய்து திருப்தியடைந்து அகங்களித்து அவ்விராத்திரி அவ்விடத்திலேயே சயனித்துக் கொண்டிருந்தனர். விடிந்தவுட னெழுந்திருந்து ஆன்னிகம் முடித்துக் கொண்டு தம் நகருக் கெழுந்தருளத் திருவுள்ளமாய்க் கும்பஸம்பவரிடஞ் சென்று அவரைவணங்கி அபிவாதனஞ்செய்து, 'ஸ்வாமி! அடியேன் ஸாகேத நகரஞ்செல்ல விடை கொள்ளுகிறேன், நியமித்தருள வேண்டும்; மஹாத்துமாவான தேவரீரைத் தரிசித்ததனால் அடியேன் தன்னியனாய் அனுக்கிரகிக்கப் பட்டுக் கிருதார்த்த னாயினேன். அடியேன் புனிதனாகுமாறு இங்ஙனமே அடிக்கடி ஸந்நிதானத்திற்குவந்து தேவரீரை ஸேவித்துப்போக நியமித்தருளவேண்டுகின்றேன்' என மொழிந்தனர்.

அயோத்தியாதிபதி இவ்வண்ணம் அற்புதமா யுரைசெய்தது கேட்டு, தருமமே நேத்திரமாகவும் தவமே தனமாகவுங் கொண்ட கும்பயோனி அத்தியந்தம் பிரீதராகித் தாசரதியை நோக்கி 'ராகவசிங்கமே! தேவரீர் திருப்பவளவாய் திறந்து உரைப்பது வெகு விசித்திரமா யிருக்கின்றது. ஹே ரகு நந்தன! எவ்வுலகத்து முள்ள யாவரும் தேவரீராலே யன்றோ பாவனராவது; கணப்பொழு தாகிலும் தேவரீரைத் தரிசிக்கும் புண்ணியவான்கள் மிகப் பரிசுத்தராய் மேலான பதவி பெறுதற்கு உரியராகி, ஸகல தேவர்களாலும் பூஜிக்கத்தக்கவ ராகிறார்கள். அங்ஙனமின்றி அன்பற்ற கொடுங்கண்ணால் உம்மைக்காண்கின்ற பிராணிகள் யமதண்டனைக்கு ஆளாகி நரகம் புகுகின்றனர். ஹே ரகு சிரேஷ்ட! ஸகல சராசரங்களையும் பாவனமாக்கத்தக்க மஹிமை வாய்ந்தவர் தேவரீர்; இப்புவியில் உமது கதைகளைக் கீர்த்தனம் பண்ணுகின்றவர்களும் பெரும்பேறு பெறுவார்கள். நல்லது, அங்ஙனமே யாகுக; நீர் இப்பொழுதே புறப்பட்டுச் சுகமாச்சென்று அயோத்தியாபுரி சேர்ந்து தருமமே துணையாக்கொண்டு ராஜ்யத்தைப் பரிபாலித்துவருக; இவ்வுலகங்களனைத்திற்கும் நீரொருவரே முக்கியமானகதியாம்' எனக் குடமுனிவர் கூறினர்.

அகஸ்தியமுனிவர் இவ்வண்ணம் உரைசெய்தது கேட்டுக் காகுஸ்தன் அஞ்ஜலிஹஸ்தராய் மஹா புண்ணியாத்துமாவான அத்தபோதனரையும் அங்குள்ள மற்றும் பல தவசிகளையும் தண்டனிட்டு அபிவாதனஞ் செய்து விடை பெற்றுப் புஷ்பகவிமானத்தி லேறினர். ஸ்ரீராமபிரான் அனுமதி பெற்று எழுந்தருளுகையில் அங்குள்ள முனிவர்கள் பலரும், ஸஹஸ்ராக்ஷனைத் தேவர்கள் பூஜிக்குமாறு, நாற்புறமுநின்று ஆசிகூறி அவரை ஏற்றமாகக்கொண்டாடினர்கள். ஸீதாபதி சுவர்ணமயமான புஷ்பக விமானத்திலேறி யாகாய மார்க்கமாகச் செல்லு மளவில், வருஷாகாலத்திலே மேகமண்டலத்தி னருகே செல்லும் முழுமதியென விளங்கினர். அவ்வாறுசென்ற சக்கரவர்த்தித் திருமகன் அன்று நடுப்பகலில் திருவயோத்தி யடைந்து, அங்கங்கே பலரும்

போற்றிப் புகழத் தமது திருமாளிகை சேர்ந்து அதன் மத்தியிலுள்ள ஸபா மண்டபத்தில் கீழேயிறங்கினர். இறங்கிய பிறகு புஷ்பக விமானத்தை வாழ்த்தி விடைகொடுத் தனுப்பிவிட்டு, உள்ளே யெழுந்தருளி வாயிலோனை விளித்து, பரத லக்ஷ்மணர்களை அழைத்து வருமாறு ஆஞ்ஞாபித்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றுநாலாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றுஐந்தாவது ஸர்க்கம்.

### அசுவமேதஞ்செய்தல்.

ஸ்ரீராமபிரான் ராஜசூயயாகம் செய்யத் திருவுள்ளமாய்
அதனைத் தம்பிமாரிட முரைக்க,
அஃதுநாம் செய்யத்தகுவதன்றெனப்
பரதாழ்வான் விண்ணப்பஞ் செய்தது.

---

ஸ்ரீராமபிரானது சாஸனத்தைச் சிரமேற்கொண்டு வாயில்காப்போன் விரைந்துசென்று இளவரசர்களை யழைத்து வந்து பெருமாள் ஸன்னிதியில் விண்ணப்பஞ் செய்ய, தமக்கு மிகவும் பிரியதமர்களான தம்பிமார்களிருவரும் தம்மிடம் வந்ததுகண்டு ரகுவீரன் அவர்களிருவரையும் அன்புடனே ஆலிங்கனஞ் செய்துகொண்டு அவர்களை நோக்கி யருளிச்செய்கின்றனர். 'ஸோதரர்காள்! நான் பிரதிஞ்ஞை செய்த வண்ணமே சென்று காரியம் முடித்துப் பார்ப்பனச் சிறுவனைப் பிழைப் பூட்டிப்பண்ணின பிரதிஞ்ஞையை நிறைவேற்றினேன். இனி ராஜதருமம் மேன்மேலும் வளருவதற் கேதுவான ராஜசூயயாகஞ் செய்யக் கருதுகின்றேன். மேன்மேலும் ராஜதருமத்தை விருத்தியடையச் செய்வதற்கு அக்ஷயமான ஸாதனம் ராஜசூயயாகமேயென்பது எனது துணிபு. ராஜசூயயாகஞ் செய்வதனால் ஸகலமான பாபங்களும் நாசமுறுமாதலின், என்னுயிர்க் கொப்பானவர்களான உங்களிருவருடனும் கூடி அவ்வேள்விபுரியவிரும்புகின்றேன். அரசர்கட்கு அஸாதாரணமான அழியாப்புகழுண்டாவதற்கும் இந்தராஜசூயமே காரணமாகும். மித்திரனென்பவன் சத்துருக்களை ஜயித்து ராஜசூயயாகஞ்செய்து வருணபதம் பெற்றனன்; ஸோமன் தருமந்தவறாது ராஜசூயஞ்செய்து ஸகல லோகத்தவரும் பார்த்துப் புகழுமிடமான என்றுமழியாத பதம் பெற்றனன். ஆதலின் இப்பொழுது நாம்நாடத்தக்க நன்மையாதோ, அதனை நீவிர் என்னுடனேகூடி யாலோசித்து உசிதமானதை உரைசெய்தல் வேண்டும்' என்றனர்.

ஸாராஸார முணர்ந்த புத்திசாலியான பரதாழ்வான் சீதாபதி சொன்னதைச் செவியுற்றுக் கைகூப்பிக்கொண்டுக் காகுஸ்தனை நோக்கி, 'ஸ்வாமி! ஸகலதருமமும் தேவரீரிடமே குடிகொண்டிருக்கின்றன; இத்தரணி முழுமையும் தேவரீரது ஆஞ்ஞா சக்கரமே நடக்கின்றது; உமது மகத்தானகீர்த்தியுலக

மெங்கும்பரந்துளது; பிரமனைத் தேவர்கள் பாவித்திருக்குமாறு ஸகலமகிபால ரும்தேவரீரையே லோகநாதனாக நினைத்திருக்கின்றனர்; அன்றியும், அடியோங் களையொப்பத் திருவடி வாரத்தையொற்றி யாராதிக்கின்றனர்; பிரஜைகளனை வரும் தேவரீரைப் பிதாவெனவே யெண்ணி யொழுகுகின்றனர். ஆதலின் இப்பூமண்டலத்திற்கும் இதிலுள்ள எல்லாப் பிராணிகளுக்கும் கதி தேவரீரை யன்றி வேறில்லை. இத்தன்மையரான தேவரீர் இவ்வேள்வி யியற்றக் கருது வது யாது காரணமோ? இதனைத் தேவரீர் செய்வது தான் தகுதியாகுமோ? ஏனெனில், இதனிமித்தம் இப்புவியில்பலராஜவமிசங்கள் மாளவேண்டிவருமே. (ஹேமநுஜேச்வர! ஸோமன் ராஜசூயஞ் செய்தவேள்வில், வானத்திலுள்ள நக்ஷத் திரங்கள் கோரமான யுத்தம் செய்யலாயின; அரிச்சந்திரன் ராஜசூயம்செய்த காலத்தில் க்ஷத்திரியர்களனைவரும் நாசமுறலாயினர்; வருணனது ராஜசூயத் தில் மச்சங்களும் முதலைகளும் போர்புரியத்தொடங்கி, முடிவில் நீர்வாழ்வன பலவும் நாசமடைந்தன; தேவேந்திரனது ராஜசூயயாகத்தில் மிகக் கொடிய தேவாசுரயுத்தம் உண்டாகியது. இங்ஙனம் ராஜசூயஞ் செய்யத் தொடங்கிய தனால், நீர்வாழ்வன முதலான அற்பப்பிராணிகளுக்கும் பார்த்திவர்கட்குங் கூட நாசமுண்டாகியதன்றோ? புருஷசிங்கமான தேவரீர் ஸகல சராசரங் களுக்கும் முக்கியமான கதியாதலின், இதனை நன்கு ஆய்ந்துஉணர்க.) எவர்க் கும் சமயத்தில் பவுருஷத்தைக்காவாது கைவிட மனமியையாதாதலின், அவ் வாறு பௌருஷங்கொண்டவர்கள் பலருக்கும்பெரும்பாலும் இதனால் நாசமே ஸம்பவிக்கும். புருஷசிங்கமே! உமக்குக் கைவசமாய் அனுவர்த்தித்திருக்கு மிவ்வுலகத்தை யழிக்கமுயல்வது தேவரீரது திருக்கலியாண குணத்திற் கேற்றதன்றென அடியேனுக்குத் தோற்றுகின்றது' என விண்ணப்பஞ் செய் தனர்.

அமுதமொழுகுமாறு பரதாழ்வான் புகன்றதுகேட்டு ஸத்திய பராக்கிரம ரான ஸ்ரீராமபிரான் மிகக் களிகூர்ந்தவராகிக் கைகேயி குமாரனை நோக்கி, பரத! நீ புகன்றது கேட்டு நான் மிக்க மகிழ்ச்சிகொண்டவனாயினேன்; அற நெறியை யனுஸரித்து நீ யுரைத்த வார்த்தை முற்றுமுண்மையே. இஃது யாவருக்கும் பிரீதியும் பேரானந்தமும் விளைவிப்பதன்றி நன்மை பயக்குவது மாகின்றது. ராஜ்ய பரிபாலன விஷயத்தில் நீ யுரைத்த இதவசனத்தைச் செவியுற்று யான் ராஜசூயயாகஞ் செய்யவேண்டுமென்னும் எனது மனோ ரதத்தை மாற்றி விடுகின்றேன். நீ கூறியவாறு உலகத்திற்கு உபத்திரவ மான காரியம் உத்தமர்கள் ஒருபொழுதும் செய்யத்தகுவதன்று, இலக்ஷ்மண னுக்கு மூத்தவனான மன்னனே! இளையோனுரையாயினும் உசிதமான வார் த்தை ஏற்றுக்கொள்ளத்தக்கதேயாதலின், நியாயமுந்தருமமுந் தவறாத உனது மேலான மொழியை யான் அங்ஙனமே யேற்றுக்கொள்ளுகின்றேன்' எனத் திருவுள்ளம்பற்றினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

# தொண்ணூற்றாறுவது வர்க்கம்.

## விருத்திராசுரன் வதை.

விருத்திராசுரன் விசேஷமாக விருத்தியடைவது கண்டு விண்ணவர்கள் வெருவி ஸ்ரீவைகுண்டநாதனை அடைக்கலம் புகுந்தது.

மஹாநுபாவர்களான ஸ்ரீராமபிரானும் பரதாழ்வானும் இங்ஙனம் அருளிச் செய்ததுகேட்டு இளையபெருமாள் தமையனாரை நோக்கி, 'ஹேரகுநந்தன! ஏதேனு மோருத்தமமான வேள்வி யியற்றவேண்டுமெனத் திருவுள்ளமாயின், அச்வமேதயாக மிருக்கின்றதே, அஃது சுபம் பாவனமாய்ச் சகல பாதகங்களையும் நிவர்த்திசெய்ய வல்லதன்றோ? அதனைத் திருவுள்ளம் பற்றலாமே! முன்னம் விண்ணவர்கோன் விருத்திராசுரனை வதஞ்செய்ததனால் வந்த பிரம்மஹத்தியை யொழிக்குமாறு அச்வமேதஞ்செய்து புனிதனாயினானென ஆரணமறைகின்றதே. திருவுள்ளமாயின் அவ்வரலாற்றை யடியேன் விண்ணப்பம் செய்கிறேன், திருச்செவி சார்த்துக.

பூர்வம் நூறுயோஜனை விஸ்தீரணமும் அதனினும் மும்மடங்கு உயரமுமுடையனாய் மிகப்பெரியனான விருத்திரனென்னும் அசுரனொருவனிருந்தான். அவன் அறநெறிபிறழாதவன்; நன்றிமறவாத நல்லோன்; மேதையிற்சிறந்தவனாகி அவ்வசுரராஜன் மனுநீதிமுறைப்படியே மூவுலகங்களையும் அன்போடு பரிபாலித்துவந்தனன். அவனது அரசாட்சியில் இப்பூமியிலே வேண்டிய பலன்கள் பலவும் பலிக்கலாயின: மலர்களும் கிழங்குகளும் கனிகளும் மிக்க மணமும் சுவையுமுள்ளனவாயின; உழவுமுதலான பயிர்த்தொழில்முயற்சி யின்றியே பூமி விசேஷமாகச் செழித்துச் சிறப்புற்றோங்கியது. இராஜ்யமெங்கும் அற்புதமாகவிளங்க விருத்திராசுரன் இவ்வாறு அரசாட்சி செய்துவரு நாளில், மேலானதவம் புரியவேண்டுமென அவனுக்கு விருப்பமுண்டாகியது. அந்தமில் பேரின்பம்பெறுதற்குத் தவமே மேலானதுணை; வீணான மதிமயக்கத்தைத் தருவதாகிய சிற்றின்பத்தினாலாவதொன்றுமிலது எனவுணர்ந்து அவன் தனது மதுராபுரியில் தன்மூத்தகுமாரனை மன்னவனாக நியமித்து, விண்ணவர்கள் வெதும்பித்தவிக்க, உக்கிரமான தவம்புரியலாயினான்.

விருத்திராசுரன் இவ்வண்ணம் தவமியற்றுமளவில் தேவராஜன் மிக வெருவினனாய்த் திருமாலினது ஸன்னிதானஞ்சென்று அவரை நோக்கி, 'ஸ்வாமி! விருத்திராசுரன் அருந்தவமியற்றப்புகுந்து இப்புவனங்களனைத்தையும் கைக்கொள்ளும் ஆற்றலுடையனாகின்றான்; அவன் மஹாபலிஷ்டனும் தருமிஷ்டனுமாதலின் அவனைவெல்லயான்வல்லேனல்லேன். அவ்வசுரராஜன் இன்னும் இங்ஙனமே விடாது தவம்புரிவானாயின், எல்லா வுலகங்களு மவனுக்கே யதீனமாகிவிடுமே! அவ்வாறாகத் தேவரீர் அவனை யிவ்வண்ணம்

உபேக்ஷைசெய்திருப்பது யாதுகாரணம்? தேவரீரது உதாரகுண மிப்பொழுது எங்கேயொளித்தது? எல்லாத் தேவர்களுக்கும் அதிபதியான தேவரீர் வெகுண்டால், இவ்வசுரன் அப்பொழுதே அழிந்துபடுவானன்றோ? இவன் எப்பொழுது தேவரீரது அன்புக்கு இடமாயினனோ, அன்று தொடங்கியே எல்லாவுலகங்கட்கும் நாயகனாகி யாட்சிசெலுத்தி வருகின்றனன். இப்பொழுது தேவரீர் தேவதைகளைக் கடாக்ஷித்தருள்க. உலகத்திற்கு உண்டாகும் உபத்திரவங்களொழிவது உமது கடாக்ஷத்தினாலேயன்றோ? ஹே அநாத ரக்ஷகா! இதோ இந்தத் தேவதைகள் அனைவரும் தேவரீரதுகடாக்ஷத்தையே யெதிர்பார்த்திருக்கின்றனர்கள்; விருத்திராசுரனை வதைத்து இவர்களைப் பரிபாலித்தருள்க. ஆதிதொடங்கி ஆபத்து நேருமளவில் அமரர்களுக்கு ஆதரவாகநின்றவர்தேவரீரேயன்றோ? தேவரீர் எமக்கு உதவிபுரிதல் அசுரர்களுக்கு ஆபத்துக்கிடமேயாயினும், கதியற்றவர்களான அடியேங்களுக்குக் கதியானவர் தேவரீரே யாதலின் கிருபைசெய்தருள்க எனப்பிரார்த்தித்தனன்' என விண்ணப்பஞ்செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றேழாவது ஸர்க்கம்.

ஸ்ரீமந் நாராயணனது நியமனப்படி வாஸவன் விருத்திரனை வதைத்ததும், அதனால் பிரம்மஹத்திசூழ, மறுத்தும் விண்ணவர்களது வேண்டுகோளால் ஸ்ரீமஹாவிஷ்ணு பிரம்மஹத்திகழியு முபாய மருளிச்செய்ததும்.

---

இளையபெருமாள் இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்தது கேட்டு ரகுநந்தனன் விருத்திரவதத்தைப்பற்றின விருத்தாந்தத்தை விவரமாக விளம்புவாயெனச் சுமித்திராநந்தனனுக்கு நியமித்தருள, அந்ததிவ்வியமானகதையை இலக்குமணன் மறுபடி சொல்லத்தொடங்கினர். 'ஸ்வாமி! ஸஹஸ்ராக்ஷன்முதலான ஸகலதேவர்களும் இவ்விதமாக வேண்டிக்கொண்டது கேட்டு ஸ்ரீமஹாவிஷ்ணு அவ்விண்ணவர்களை நோக்கி, 'தேவர்காள்! யான்முன்னமே மஹாநுபாவனான விருத்திராசுரனது விசுவாஸத்திற்குக் கட்டுண்டவனாயினேனாதலின், இப்பொழுது உங்களுக்குப் பிரீதிசெய்வதன் பொருட்டாக யான் அவ்வசுரனை வதைக்கத்துணியேன். யான் உங்களுக்கும்துன்பத்தைப்போக்கி இன்பம்விளைவிக்கக் கடமைபூண்டிருக்கின்றேன்; ஆதலின் விருத்திரனை நீங்களேவெல்லுமாறு ஒரு உபாயமுரைக்கின்றேன், அங்ஙனஞ்செய்தால் விருத்திராசுரன் மரணமடைவான். தேவர்காள்! என்னை யான்மூன்றுபாகமாகப்பிரித்து, அவற்றுள் ஒரு அமிசத்தினால் இந்திரனிடம் அனுப்பிரவேசிக்கின்றேன்; ஒன்றினால் அவனது வஜ்ராயுதத்தினுள் புகுகின்றேன்; விருத்திராசுரனது சரீரத்தைத்தாங்குமாறு மூன்றாவது பாகத்தினால் பூமியில்பிரவேசிக்கின்றேன். இவ்வண்ணம்

செய்தால் வாஸவன் விருத்திரனையெளிதில் வெல்லவல்லவனாகுவான்' என அருளிச்செய்தனன்.

தேவதேவனான பரமபுருஷன் இவ்விதமாகத் திருவாய்மலர்ந்தருளியது கேட்டு விண்ணவர்கள் அனைவரும் அவ்வுத்தமனை நோக்கி, 'ஹேமாதவ! தேவரீர் திருவுள்ளத்திற் கருதினகாரியம் அங்ஙனமே முடிவுபெறுமாதலின், இனி அதுவிஷயத்தில் சிறிதும்சந்தேகமில்லை; அங்ஙனமே யாகுக, தேவரீருக்கு மங்களமுண்டாகுக; யாங்கள் விருத்திரவதத்தையே வேண்டினவர்களாகி விடைகொள்ளுகின்றோம். தேவரீர் திருவாய் மலர்ந்தருளியவாறே தேவரீரது திவ்விய சக்தியுடனே ஸஹஸ்ராக்ஷனிடம் அநுப்பிரவேசித்தருள்க' என இவ் விதமாக உரைத்து ஸ்ரீமஹா விஷ்ணுவினிடம் நியமனம் பெற்றுக்கொண்டு, வாஸவன் முதலான விண்ணுலகத்தவர் அனைவரும் விருத்திராசுரன் தவமியற்றும் அரணியம் போய்ச் சேர்ந்தனர்கள்.

அவ்வனத்திலே விருத்திராசுரன் மூவுலகங்களையும் அருந்துகின்றவனெனவும், ஆகாயத்தை யெரிப்பவனெனவும் அருந்தவம் புரிந்து சோதியுருவமாகத் தோற்றுவது கண்டு அமரர்களனைவரும் அஞ்சினவர்களாகி, இவனை யாம் வதைப்பதெங்ஙனம்? நமக்கு அபஜயமுண்டாகாதவழி யாது? எனச் சிந்தைகொண்டு சிந்தைகலங்கலாயினர். அத்தருணத்தில் அமரர்தலைவன் வஜ்ராயுதத்தைக் கையிலெடுத்து அதனை விருத்திராசுரனது முடிமீது விடுக்க, அவ்வசுரனது சிரசு காலாக்கினியென மஹாகோரமாகச் சொலித்துக்கொண்டு கீழேவீழ்ந்தது. விருத்திராசுரனது முடி அறுபட்டு மஹாபயங்கரமாக வீழ்ந்தது கண்டு உலகமெல்லாம் அஞ்சிநடுங்கின. தேவராஜனோ, நிரபராதியாய்த் தவம்புரிந்து கொண்டிருந்த தானவேந்திரனைத் தான் வதைத்தது அநுசிதமென வெண்ணிச் சிந்தைகலங்கி பிரம்மஹத்தி சூழுமென வஞ்சினவனாகி இவ்வுலகங்கள் அனைத்தையும் கடந்து அதற்கப்பால் பேரிருள் சூழ்ந்த ஓரிடத்தில் ஓடியொளித்தனன். பிரம்மஹத்தியோ, அவனைவிடாது அவன்ஓடவோடப் பின்றொடர்ந்தோடி விரைவில் அவனைப் பற்றிக்கொள்ள, புரந்தரன் பெருந்துயரத்தில் ஆழ்ந்தனன். சத்துரு ஸம்ஹாரத்தைக் கண்டு களிப்புற்ற அக்கினிமுதலானதேவர்கள் பிறகு தேவேந்திரனைக்காணாது கலங்கியவராகி, திரிலோகாதிபதியான ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் பின்னும்பலவாறாகப் பூஜிக்கத்தொடங்கி, ஹே புருஷோத்தம! யாவருக்கும் கதி தேவரீரேயன்றோ? நீர் யாவருக்கும் முற்பட்டவர்; அநாதியாயிருப்பவர்; ஸகல ஜகத்துக்கும் பிதா தேவரீர்; ஸகல பூதங்களையும் ரக்ஷிப்பதற்காகவே தேவரீர் ஸ்ரீமஹா விஷ்ணுவா யவதரித்திருக்கின்றீர். தேவரீரது மகிமையால் விருத்திராசுரன் வதையுண்டனனாயினும், பாகசாஸனனைப் பிரம்மஹத்தி பற்றிக்கொண்டு பீடிக்கின்றதே; அதற்கு விமோசனமுண்டாகும் உபாயம் அருளிச்செய்ய வேண்டுகின்றோம்' எனப் பிரார்த்தித்தார்கள்.

தேவதைகள் இவ்வாறுவேண்டி விண்ணப்பஞ்செய்ததுகேட்டு வைகுண்டநாதன் அவர்களை நோக்கி, 'தேவர்காள்! அஞ்சன்மின்; இந்திரன் என்னைக் குறித்தே யாகஞ்செய்வானாயின், யான் அவனைப்புனிதனாக்குகிறேன்; மிகவும்

புனிதமான அச்வமேத யாகத்தினால் என்னை ஆராதித்து மறுத்தும் அவன் நிர்ப்பயனாகத் தேவேந்திரபதம் பெறுவான்' என அருளிச்செய்து அவர் களுக்கு அபயமளித்து, அத்தேவர்களால் துதிக்கப் பட்டவராகித் தம்மூல கஞ் சென்றனர்' என விண்ணப்பஞ் செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம்.

தேவேந்திரன் அரசிழந்தமைபற்றி உலகமனைத்தும் க்ஷீணதசை
யடைந்ததும், பிறகு அச்வமேதத்தின் மகிமையால்
இந்திரன் பிரம்மஹத்தியொழிந்து ஆட்சிபெற,
உடனே எல்லா வுலகங்களும் செழித்தோங்கியதும் கூறியது.

---

இளையபெருமாள் இவ்வாறு விருத்திராசுர வதத்தினது விருத்தாந்தத் தைச் சொல்லிமுடித்து அநந்தரம் மற்றக்கதையும் கூறத்தொடங்கினர். 'ஹே தேவ! தேவர்களுக்கெல்லாம் பயங்கரனாய் மஹாவீரியவந்தனாயிருந்த விருத் திராசுரன் வதையுண்ட வளவிலே, அவனை வதைத்த வாஸவன் பிரம்மஹத்தி யால் சூழப்பட்டவனாகித் தேசிழந்து அறிவுகெட்டு இவ்வுலகத்தின்கோடி யிற்சென்று ஆங்கு சிலகாலம் பெரும்பாம்பு போலப் புரண்டு வாதைபட்டுக் கொண்டிருந்தனன். இந்திரன் ஒழிந்தவளவில் உலகமனைத்தும் செழியாது மழுங்கியது; பூமியெங்கும் வற்ண்டு அழிந்ததுபோலாகியது, அரணியங்கள் யாவும் உலர்ந்துபோயின; ஆறுகளும் ஏரிகளும் மடுக்களும் நீர் வற்றிப் பாழாயின. இவ்வாறு மழை பொழியாது ஒழியவே, ஸகல சராசரங்களும் அல்லலுற்றுத் தவித்தன. உலகமிங்ஙனம் க்ஷீணதசையை யடைந்தது கண்டு அமரர்கள் அனைவரும் அப்பொழுதே அதிகமாக முயன்று ஸ்ரீமஹா விஷ்ணு மொழிந்தவாறே அயமேதமாவேள்வி யியற்ற ஆரம்பஞ்செய்து அத ற்கு வேண்டிய உபாத்தியாயர்களையும் மகரிஷிகளையும் அழைத்துக்கொண்டு இந்திரன் அஞ்சி யொளித்திருக்குமிடஞ் சென்று, பிரம்மஹத்தி சூழ்ந்து ஸஹஸ்ராக்ஷன் ஸங்கடப்படுவது கண்டு, அவனை முன்னிட்டு ஆங்கு அசுவ மேத யாகஞ்செய்யத் தொடங்கினர். தேவேந்திரனைப்பிடித்த பிரம்மஹத்தி யொழிந்து அவன் புனிதனாகும் பொருட்டு மிக மேன்மையாக அவ்வேள்வி யியற்றப்பட்டது. அந்த மஹாயாகம் முடிவுபெற்ற வளவிலே பிரம்மஹத்தி யானது தேவேந்திரனைவிட்டு நீங்கித் தேவர்களெதிரேவந்து நின்று, 'விண்ண வர்காள்! நீவிர் இப்பொழுது எனக்கு எவ்விடத்து வாஸஸ்தானம் விதிக்கின் றீர்கள்?' என வேண்டிக்கேட்டது. அதனைச் செவியுற்றுச் சுவர்க்கலோகத் தவர்கள் மிக்கமகிழ்ச்சி கொண்டவர்களாகி அந்தப் பிரம்மஹத்தியை நோக்கி அதிகமான அன்புடனே, 'நீ உன்னை நான்கு பகுதிகளாகப் பகுத்து நான்கு ஸ்தானங்களில் வஸித்துவருக' என உரைக்க, பிரம்மஹத்தி அதுகேட்டு

அங்ஙனமே தன்னை நான்கு பகுதிகளாகப் பகுத்து, 'யானெனது பாகங்களி லொன்றினால், * வருஷாகாலத்தில் முதல்முதல் பெருக்கெடுத்து வருகின்ற ஆற்று வெள்ளங்களில் † நான்குமாதம் வஸிப்பேன்; மற்றொரு பகுதியி னால் இப்பூமியி லோரிடத்தில் எந்நாளும் விடாது வாஸஞ்செய்வேன், இது ஸத்தியம்; மூன்றாவது பாகத்தினால் பருவம்வந்து பூப்படைந்த பெண்களிடத் தில் மாதம் மூன்றுநாள் வஸிப்பேன்; மற்றொன்றான நான்காவது பகுதியினால், பிராம்மணர்களை வதைக்கும் கொடும்பாதகர்களைப் பற்றிவஸிப்பேன்' என்று மறுமொழி கூறிற்று. பிரம்மஹத்தி புகன்றதுகேட்டுத் தேவர்கள் அங்ங னமே வஸிக்குமாறு அதற்கு அநுமதியளித்து, மிகவும் ஸந்தோஷமடைந்த வர்களாகி ஸஹஸ்ராக்ஷனை வணங்கி நின்றார்கள். வாஸவனும் பிரம்மஹத்தி விமோசனமாய்ப் பரிசுத்தனாகிக்கலக்கமொழிந்து களிப்படைந்தனன். மஹே ந்திரன் மறுத்தும் பிரதிஷ்டிதனான பிறகு ஸகலலோகங்களும் செழிப்படைந் தன. அற்புதமான அச்வமேதயாகத்தின்மகிமையைக் கண்டு மஹேந்திரன் அதனை மிகவும் போற்றிப்பூஜித்தனன். ஹேரகுநந்தன! அச்வமேதயாகத்தின் பிரபாவமித்தன்மையதன்றோ ஸ்வாமி! ஆதலின் ராஜாதிராஜனே! திருவுள்ளமா யின், இவ்விதமான அசுவமேதயாகஞ்செய்தருள்க' என்றிவ்வண்ணம் இளைய பெருமாள் விண்ணப்பஞ்செய்தனர். அத்தியந்தம் மனோகரமான ஸௌமித் திரியினது வார்த்தையைத் திருச்செவிசார்த்திய சக்கரவர்த்தித் திருமகன் மிக்க மகிழ்ச்சிகொண்டவராகித் தம்பியை மிகவும் கொண்டாடினார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றொன்பதாவது ஸர்க்கம்.

### இளோபாக்கியானம்.

ஸ்ரீராமபிரான் இளோபாக்கியானமுரைக்கத் தொடங்கி இளனென்பவன் சிவபிரானது திருவுள்ளப்படி பெண்ணாக மாறினதும், பிறகு உமாதேவியின் கிருபையினால் ஒருமாதம் பெண்ணும் ஒருமாதமாணுமாயிருக்க வரம்பெற்றது முரைத்தல்.

---

விருத்திராசுரன் வதையுண்ட வரலாற்றையும் அசுவமேதயாகத்தின் மகிமையையும் செவியுற்ற ஸ்ரீராகவன் ‡ புன்னகைசெய்துகொண்டு ஸௌமித்

* பெருக்கெடுத்து வரும் ஆற்று வெள்ளத்தில் முதலிலே ஸ்நாநஞ்செய்யலாகாதென்றும், சவட்டு நிலத்தைத் தொடக்கூடாதென்றும், மாதம் மூன்றுநாள் பருவப்பெண்கள் விலகியிருக்க வேண்டுமென்றும், பிராம்மணரை வதைத்தவர்கள் மஹாபாபிகளாவரென்றும் சாஸ்திரங்கள் சொல்வதற்குக் காரண மிதுதான்.

† ஒருபக்ஷத்தை ஒருமாதமாக் கொள்ளலாமென்று சாஸ்திர மிருப்பதால், வருஷாகாலமான நான்குபக்ஷத்தை இங்கு நான்குமாத மென்றது.

‡ அச்வமேதத்தின் மகிமை தமக்கும் தெரிந்ததேயெனப் புன்னகை செய்தது.

திரிடைநோக்கி உத்தரமருளிச்செய்கின்றனர். 'தம்பி லக்ஷ்மணா! நீ சொன்னவையாவும் உண்மையே; அசுவமேதயாகத்தின் பிரபாவம் அத்தன்மையதேயாம். இதைப்பற்றிய மற்றொரு கதையுமுண்டு, சொல்லுகிறேன்கேள்: கர்த்தமப்பிரஜாபதியினது புத்திரன் இளனென்போன் மிகப்பிரக்யாதி பெற்று விளங்கினான். அவன் பாஹ்லிகதேசத்தரசனாகி இப்பூமிமுழுவதையும் ஸ்வாதீனஞ் செய்துகொண்டு மஹா தருமிஷ்டனாய்ப் புத்திரனைப் பரிபாலிப்பதுபோல எல்லாவுலகங்களையும் இரக்ஷித்து வந்தனன். ஹேரகுநந்தன! உதாரகுணமுள்ளவர்களான தேவர்களும், மிக்கதனவந்தர்களான தைத்தியர்களும், மஹாநுபாவர்களான நாகர் ராக்ஷஸர் கந்தர்வர் யக்ஷர்களுமாகிய பலரும் அவனுக்கு அஞ்சினவர்களாகி என்றும் அவனைப் பூஜித்து வந்தனர்கள். பகைவரிடத்தில் கடுஞ்சினங்கொண்டவனான அவனிடத்தில் மூவுலகங்களும் அஞ்சி நடுங்கின. அத்தன்மையனான அவ்வேந்தன் மஹா வீரியவந்தனாகிப் புத்தியின்மையில்லாதவனாய் அறநெறிதவறாது அரசுபுரிந்து பெரும்புகழ்பெற்று வாழ்ந்தனன்.

அவனொருகால் வேட்டையாட விருப்புற்றவனாகி வஸந்தகாலம் வந்தவளவில் மிகவும் மநோஹரமான சித்திரைமாதத்திலே தனது சேனை பரிவாரங்களுடனேகூடி அரணியத்திற்குச் சென்று மிருகங்களை அநேகமாய் அதஞ் செய்யலாயினான். அளவற்ற மிருகங்களை மாய்த்துத்தள்ளியும் அவன் மனம் திருப்தியடையாதவனாகி, மேலுமேலும் விலங்குகளைத் தொடர்ந்து வேட்டையாடிய வண்ணமே சுப்பிரமணியர் உற்பவித்தவிடமான அரணியம்போய்ச் சேர்ந்தனன். அவ்விடத்திலே பரமேசுவரர் தமது பரிஜனங்கள் பலவும் புடைசூழப் பார்வதிதேவியுடனே கூடிவந்து, உமாதேவிக்கு ஆநந்தம் விளைவிக்குமாறு தாமும் ஸ்திரீரூபந் தரித்து அம்மலைச்சாரலிலே ரமித்துக்கொண்டிருந்தனர். அது காரணமாக அக்கானகத்திலுள்ள ஆணினமான பசுபக்ஷி மிருகாதிகளும், ஆணினமான விருக்ஷாதிகளுமாகிய எல்லாம் பெண்ணுருவமாக மாற்றப்பட்டன; அங்குள்ள ஸகல சராசரங்களும் ஸ்திரீரூபமாகவே புலப்பட்டன. இஃது இங்ஙனம் நிகழுமளவில், கர்த்தமரது குமாரனான இளமகாராஜன் அநேகமாயிரம் விலங்குகளை வதைத்துக்கொண்டு அந்தப்பிரதேசத்திற் சென்று அங்குள்ள பக்ஷிமிருகாதிகள் பலவும் பெண்ணுருவமாக முன்னமே மாறியிருப்பதைக்கண்ணுற்றனன். அவ்விடம்சேர்ந்தகாலத்தில் தானும்தனது பரிஜனங்களும் பெண்களாக்கப்பட்டமைகண்டு மன்னன் மஹத்தான துக்கத்தையடைந்து, இஃது மலைமகள் கேள்வனது மாயச்செய்கையென்று உணர்ந்து அச்சங்கொண்டவனாகி, தனது ஸகல பரிவாரங்களோடும் பரமேசுவரனைச் சரணமடைந்தனன். வேண்டினோர்க்கு விரும்பின வரங் கொடுக்கும் சங்கரமூர்த்தி உமாதேவியுடனே கூடி அவனை நோக்கி நகைத்து அவனிடமருள்புரிந்து, 'ஹே ராஜரிஷே, கர்த்தமப் பிரஜாபதியினது புதல்வனே! அஞ்சாது எழுந்திரு; யான் உனக்கு வேண்டிய வரம் அளிக்கின்றேன்; ஆயின், இனி நீ புருஷனாக மாறுவதை வேண்டற்க; அஃதொன்றொழிய வேறு யாது வரம் வேண்டினும்வேண்டுக' என அருளிச்செய்தனர்.

தனக்கு வேண்டிய வரமளிக்க மகேச்வரர் உடன்படாது மறுத்தது கண்டு அம்மன்னவன் மிகவும் துக்காக்கிராந்தனுகி, புருஷரூபத்தை யிழந்து பெண்ணுருவமடைந்த தான் வேண்டத்தக்க வரம் யாதொன்றுமில்லையென வுணர்ந்து சிவபெருமானிடம் ஒருவரமும் வேண்டாது சோகக்கடலி லாழ்ந்த வனுகி அருகில் நின்ற உமாதேவியை மிகுந்த பக்தியுடனே முடிதாழ்த்தி வணங்கி, ஹே தேவி, 'ஹே வரதே, ஹே சுபதர்சனே! நீ ஸகலலோகங்களுக்கும் நாயகியன்றோ? கதியற்றவனுன அடியேனிடம் அருள்புரிந்து கடாக்ஷித் தருள்க' எனப் பிரார்த்தித்தான்.

இளமகாராஜன் மனத்தில் கொண்ட கருத்து இன்னதென்பதை உமாதேவி யறிந்துகொண்டு சிவபெருமானது ஸன்னிதானத்தில் அவனை நோக்கி, 'அன்பனே! நீ வேண்டிய வரத்தில் பாதியளிக்கப் பரமேசுவரர் உரிமைபூண்டவர், மற்றொரு பாதியளிக்க யான் உரியளாயிருக்கின்றேன்; ஆதலின் அந்தப் பாதிக்கு ஸ்திரீபுருஷரூபங்களில் நீஎவ்வளவுகாலம் எதனைவேண்டினும் வேண்டுக' என இனியமொழியாக மொழிந்தனள். உமாதேவி வரமளிக்க உடன்பட்டுரைத்த அற்புதமான அவ்வார்த்தையைச் செவியுற்று அரசன் அகமகிழ்ந்தவனுகி, மஹேச்வரியைநோக்கி, 'தாயே! வேண்டியவரமளிக்க அடியேனிடம் அருள்புரிந் தீராயின், திருவுள்ள முவந்தவாறே ஒரு மாதகாலம் பெண்ணுருவாயும் மற்றொருமாதம்ஆணுருவாயுமிருந்து வாழவாயினும் அருள்புரிக' என வேண்டினன். இளனது அபிப்பிராயத்தையறிந்து உமாதேவி அன்புகூர்ந்து 'அங்ஙனமேயாகுக; ஆயின், ஹேராஜனே! நீ புருஷனுக மாறியவளவில், முன்பு நீ பெண்ணுயிருந்த காலத்து நடந்தவை யொன்றும் உனக்குத் தோன்றுது; அங்ஙனமே பெண்ணுகமாறிய மற்றொருமாத காலத்தில் முன்னம் புருஷனுயிருந்தது உனக்கு ஞாபகம் வராது' என இனிமையாக அருளிச்செய்தனள். பிறகு கர்த்தமப்பிரஜாபதியினது புத்திரன் பார்வதிதேவிவரங்கொடுத்த விதமாகவே ஒருமாதகாலம் புருஷனுகவும், மற்றொரு மாதம் திரிலோக சுந்தரியான இளையென்னும் அழகிய வனிதையாகவு முருவம்பெற்று வாழ்ந்து வந்தனன்.' என வருளிச்செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் தொண்ணூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூறுவது ஸர்க்கம்.

*பெண்களாக மாறிய தன் பரிவாரங்களுடனே இளை புதன் தவம்புரிந்துகொண்டிருந்த பொய்கையினிடஞ் செல்ல, புதன் அவர்களைக் கண்டு வியந்து இளையினது வரலாற்றைத் தனது தவப்பெருமையால் தெரிந்துகொண்டு, அவளது பரிஜனங்களையெல்லாம் கிம்புருஷ ஸ்திரீகளாக்கி அப்பாலனுப்பிவிட்டது.*

---

ஸ்ரீராமபிரான் அருளிச்செய்த இளோபாக்கியானத்தைக் கேட்டு இளைய பெருமாளும் பரதாழ்வானும் மிகவும் வியப்புற்றவர்களாகிக் கைகூப்பிக்

கொண்டு தமையனாரை நோக்கி, 'ஸ்வாமி! அந்த ராஜசிகாமணி ஸ்திரீரூபமாகிய துர்த்தசையைப் பெற்று எவ்வாறு வாழ்ந்தனன்? புருஷரூபம் பெற்ற காலத்தில் யாது புரிந்து எவ்வண்ணமொழுகினன்? இவ்விஷயங்களை விஸ்தாரமாக அருளிச்செய்ய வேண்டுகின்றோம்' எனக் குதூஹலத்துடனே விண்ணப்பஞ்செய்ய, இளமகாராஜனது மற்ற விருத்தாந்தத்தையும் தாசரதி திருவாய் மலர்ந்தருளுகின்றனர்.

'தம்பிகாள்! அந்த முதல்மாஸம் இளன் ஸகலலோக சுந்தரியான ஒரு பெண்மணியாகிப் பெண்ணுருவாக மாறின ஸகல பரிஜனங்களுடனும் நானாவிதமான விருக்ஷங்களடர்ந்த அவ்வனத்திலேயே விநோதமாக விஹரித்துக்கொண்டிருந்தனன். தாமரை யிதழ்போன்ற கண்களையுடைய அந்தக் கட்டழகி வாஹனங்கள் அனைத்தையு மொழித்துக் கால்களாலேயே நடந்து இமயமலைச்சாரலெங்கும் விஹரித்துக்கொண்டு செல்லுகையில், அம்மலைக்கு அருகே பலவிதமான பக்ஷிகள்கூடி விளையாடப்பெற்ற விசித்திரமான பொய்கை யொன்றைக் கண்ணுற்றனள். அப்பொய்கையினிடத்திலே பூர்ணசந்திரன் போன்ற சோதியுடையனாய்க் காமவேட்கையை விருத்திசெய்கின்ற வடிவழகு வாய்ந்த யுவாவான ஒருவன் நடுத்தண்ணீரிலே நின்று கொடிய தவம் புரிந்துகொண்டிருந்தனன்; அவன் சந்திரனது புத்திரனான புதனாம். அது கண்டு வியப்புற்று இளையும் தனது பரிஜனங்களுடனே அத்தடாகத்திலிறங்கி நீர் விளையாடலாயினாள். சகோதரர்காள்! அக்காலையில் புதன் அவளைக்கண்டு காமபாணங்களுக்கு வசப்பட்டவனாகித் தன்னை மறந்து தண்ணீருக்குள்ளேயே துடித்து, இணையில்லாத அழகியான இளையை நன்றாய் உற்று நோக்கிச் சிந்தைகலங்கி, 'தேவதைகளினும் மேம்பட்ட வடிவழகுவாய்ந்த இவ்வனிதை யாவள்? தேவர்களிலாயினும், நாகர்களிலாயினும், அசுரர்களிலாயினும், அப்ஸரசுக்களில்லாயினும் இத்துணை ரூபவதியான சுந்தரியை இதுவரையி லொருநாளும் கண்டதில்லையே! இவள் மற்றெவராலும் பரிசிக்கப்படாத பாவையாயின், எனக்கு அநுரூபமான இல்லாளாகுவாள்' என இவ்வாறு மனத்தில் உத்தேசித்துத் தண்ணீரினின்றுங் கரையேறித் தனது ஆச்சிரமம் போய்ச் சேர்ந்து, அவ்விடத்தினின்று இளையுடனே கூடி விளையாடும் தோழிமார்களுக்குக் குறிகாட்டிக் கூவியழைத்தனன். அது கேட்டு அப்பணிப்பெண்கள் அவனிடஞ் சென்று அவனை வணங்கிநிற்க, அறநெறிதவறாத உத்தமனான புதன் அவர்களைநோக்கி, 'உங்களுடனே வந்து விளையாடும் இந்தச்சுந்தரி யாருடையமகள்? இங்குற்றகாரணம் யாது? யாவும் எனக்கு விரைவில் விளங்கக்கூறுக' என வேண்டினான். மங்களமாயும் மதுரமாயுமுரைத்த அம்மொழியைச் செவியுற்ற மங்கையர்கள் மகிழ்ச்சிகொண்டு, 'ஸ்வாமி! இவ்வுத்தமி எங்களுக்குப் பிரபுவாயிருக்கின்றனள்! இவளுக்குப் புருஷனொருவரு மில்லை; இக்கானகத்தில் இவள் எங்களுடனே கூடி விளையாடிக் கொண்டிருக்கின்றனள்' என விளம்ப, அப்பெண்கள் புகன்றது நன்கு விளங்காமைகண்டு தனது யோகமகிமையால் ஆவர்த்தினி யென்கிற வித்தையைக்கொண்டு உற்று நோக்கினான். நோக்குகையில் இளமகாராஜனது வி

லாறுகள் யாவும் அவனுக்கு உள்ளவாறு நன்குவிளங்கின. அஃதுணர்ந்து புதன் அப்பாவையர் பலரையும்நோக்கி, நீங்கள் இப்பருவதப்பிராந்தத்திலேயே கிம்புருஷர் என்னும் தேவஜாதிப் பெண்களாகி வாழ்ந்திருப்பீர்; விரைவில் உங்களுக்கு ஏற்ற இருப்பிடங்கள் அமைத்துக்கொள்க; இங்குள்ள காய்கனி கிழங்குகளும் தளிர்களும் உங்களுக்கு உணவாகும்; இங்கு உங்களுக்கு அநுரூபமாய்க் கிம்புருஷரெனப் பெயர்பூண்ட பர்த்தாக்களைப்பெற்றுப் பெருமகிழ்ச்சிகொண்டு வாழ்வீர்' என மொழிந்தனன். சந்திரனதுபுத்திரன் சொன்னவாறே அக்கோதையர்கள் அக்கணமே கிம்புருஷஸ்திரீகளாகி அவ்வெற்பினிடமே சென்று விநோதமாகவஸித்து வாழ்ந்திருந்தனர்' என வருளிச்செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூருவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நூற்றோராவது ஸர்க்கம்.

புதன் இளையை மணம்புரிந்து பெண்ணாகியபோது அவளுடன் கூடிக்களித்தும், புருஷனாக மாறியகாலத்துப் பலகதைகள் சொல்லித்தேற்றியும் ஒன்பதுமாதம் கழிக்க, கடைசியில் அவளிடம் புரூரவனென்கிற புத்திரன் பிறந்தது.

---

இளமகாராஜனது பரிஜனங்கள் பலரும் கிம்புருஷப் பெண்களாக மாறின வரலாற்றை இவ்வாறு ரகுநந்தனன் இயம்பக்கேட்டு லக்ஷ்மணபரதர்கள், இந்த விருத்தாந்தம் மிக வியக்கத்தக்கதாயிருக்கின்றதெனக் களிகூர்ந்து நிற்க, கர்த்தமப்பிரஜாபதியின் புத்திரனது மற்றக்கதையையும் மன்னவர் மொழியலாயினர். 'ஸோதரர்காள்! அந்தப்பெண்களனைவரும் இங்ஙனம் கிந்நரிகளாகி அப்புறஞ் சென்றமைகண்டு ஸோமபுத்திரன் அங்குத் தனியே நின்ற அழகியைக் கண்ணுற்றுக் காமவெறியினால் குறுநகைகொண்டு, 'மதிமுகமுள்ளமாதே! ஒப்புயர்வில்லாத உத்தமியே! நான் சந்திரனது மகன்; நீ என்னிடம் அன்புகூர்ந்து ஆசையுடனென்னை விழித்துநோக்குக' என்றான். யாருமில்லாத தனியிடத்தில் தோழிமார்களையும் விட்டுப்பிரிந்து தனியே நிற்கின்ற தன்னை நோக்கிப் புதன் அவ்வாறு புகன்றதுகேட்டு இளையானவள் நவக்கிரகங்களி லொன்றின் அதிபதியான அவ்வேந்தனை நோக்கி, 'ஹே ஸௌமிய! யான் விநோதமாக இவ்வனத்திற்கு விளையாடவந்து இங்கு உம்மிடம் அகப்பட்டுக்கொண்டேன், இனிஎனக்குப் போக்கெங்கே? உமது கருத்திற்கியைந்தவாறுசெய்து அடியாளைக் காத்தருள்க' என்றனள்.

அமுதமொழுகுமாறு இளை இங்ஙனம் இயம்பியது கேட்டு ஆநந்தபரவசனாகிப் புதன் இளையை அப்பொழுதே பாணிக்கிரஹணஞ்செய்து அவளுடனே விஹரிக்கலாயினன். இளையோடுகூடிக் களித்திருக்கையில் ஸௌமியனுக்கு அந்தவஸந்தகாலமாகிய ஒருமாதம் ஒருநொடிப்பொழுதாகக்கழிந்துபோயிற்று. ஒரு மாதம் பூர்ணமாயின பின்னர் இளை காலையிலே கண்விழித்தெழுந்திருக்

கையில் கர்த்தமப் பிரஜாபதியினது புதல்வனாகவெழுந்து, அங்கு அருகிலிருந்த மடுவிலே நின்று புதன் தவம் புரிந்துகொண்டிருக்கக்கண்டனன். இரண்டு கைகளையுமுயரவெடுத்துக்கொண்டு நிராதாரமாகநின்று தவம்புரியும் அத்தேவனை நோக்கி இளமகாராஜன், 'ஸ்வாமி! அடியேன் எனதுபரிவாரங்களுடனே மஹாதுர்க்கமான இப்பருவதப் பிராந்தத்தில் வேட்டையாடப் புகுந்தேன்; எனதுசேனை யெவ்விடம் சென்றதோ; இங்கு எவரையும் காணேன், ஒருவரும் எனக்குக் கட்புலனாகவில்லையே' எனவருந்தி வேண்டிக்கேட்டனன்.

இளமகாராஜன் முன்னடந்த வரலாற்றின் நினைப்பிழந்தவனாகி வினவியது கேட்டுச் சந்திரனது குமாரன் சுபமானவார்த்தைகளால் அவனைச்சமாதானப் படுத்திக் கூறுகின்றனர். 'ஹேராஜசிகாமணி! நடந்தவையாவும் உள்ளவாறு உரைக்கின்றேன்கேள், வீணாகவிசனமுறாதே. மிகக்கொடியகல்மாரிபொழிந்து உனது பிருத்தியர்கள் பலரும் புடையுண்டு மாண்டனர். நீயோ, அப்பெருங் காற்றுமழைக்குப்பயந்து இவ்வாச்சிரமத்தினுள்ளே படுத்து நித்திரைகொண்டதனால் பிராணனைப் பறிகொடாது பிழைத்தனை; * இனி அச்சமும் மனவிசாரமுமொழிந்து மனந்தேறுக; உனக்கு மங்களமுண்டாகும். ஹே வீர! நீ கனி கிழங்குகளையேயினிய உணவாகக்கொண்டு இவ்வரணியத்திலே இனிது வாழ்க' என விடைபகர்ந்தனன்.

மஹா மேதாவியான அம்மன்னவன் புதன் மொழிந்த இனிய மொழியினால் ஒருவாறு உள்ளந்தேறினனாயினும், பரிஜனங்களையெல்லாம் பறிகொடுத்த பெரியதுக்கத்தினால் மனந்தாளாதவனாகி அம்முனிவனை நோக்கி, 'ஐயா! முனிவர் பெருமானே! எனது பரிவாரங்கள் அனைத்தையு மிழந்தபின்னர் நொடிப்பொழுதேனும் யான் இங்குவஸித்திருக்க விரும்புகின்றேனில்லை; இராச்சியத்தையும் யானினித் துறந்துவிடுவேன், சசபிந்து எனப் பெயர் பெற்றஎனது மூத்தகுமாரனிருக்கின்றனன்; அவன் மஹாதருமிஷ்டனாதலின், இராச்சியத்தை அவன் நன்றாகப் பரிபாலித்துவருவான். ஆயினும், இதுகாறும் மேலான சுகத்துடனே வாழ்ந்த எனது பரிஜனங்களுடைய பெண்சாதிகளைப் பாராதிருக்க எனக்கு மனந்தாளாமையால், இவ்விடத்திலேயே வஸிக்குமாறு அடியேனுக்கு நியமிக்கலாகாது; நகரஞ்செல்ல உடனே எனக்கு அநுமதிகொடுக்க வேண்டுகின்றேன்' என்றிவ்வாறு விசனத்துடனே வருந்திப் பிரார்த்தித்தனன்.

இளமஹாராஜன் மனந்தவித்துச் சொன்ன மொழிகளைச் செவியுற்றுப் புதன் சற்று நிதானித்துப் பின்னும் நல்வார்த்தையாகவே அவ்வேந்தனை நோக்கி, 'ஹே ராஜேந்திர! வீணாக வருத்தமுறாதே; மஹாபலிஷ்டனான நீ மனத்தில் கிலேசப்படலாகாது, இவ்விடத்தே சுகமாகவாழ்க; ஓராண்டளவு இங்கு நீ வாழ்ந்திருப்பையாயின் யான் உனக்கு வேண்டிய நன்மை விளைவிக்கின்றேன்' என உரைத்தனன்.

---

* இவ்வண்ணம் புதன் உண்மையை யொளித்துவேறு விதமாகக்கூறியது சிவபெருமானது சாபத்தை வெளியிடலாகா தென்பதற்காக வென்றறிக.

சொன்னது சொன்னவண்ணமேநிகழும் தவப்பெருமை பெற்றவனை புதன் இவ்வாறு கூறியதுகேட்டு அங்ஙனமே இளன் உடன்பட்டு அவ்விடத்தி லேயே வஸித்திருக்கக் கருத்துக்கொண்டனன். அக்காலையில் அவன் ஒரு மாதம்பெண்ணுருவாக மாறி எப்பொழுதும் புதனுடனே கூடி இன்புற்று வாழ் வான், மற்றொரு மாதம் புருஷனாகமாறித் தருமாநுஷ்டானம் செய்து வரு வான். இவ்வண்ணமே ஒன்பது மாதங்கள் செல்ல, ஒன்பதாவது மாதத் தினிறுதியில் இளையானவள் புரூரவனென்னும் ஒரு புதல்வனைப்பெற்றாள். பிறந்த மாத்திரத்திலே அப்புத்திரன்*பிதாவுக்குச்சமமான வடிவமும் வண்ண முமுடையவனானது கண்டு அப்புதல்வனுக்கு உபநயனாதிகள் செய்விக்குமாறு அவனை அவள் பிதாவினது கையில்கொடுக்க, புதனே அம்மகனை வளர்த்து வந்தனன். அம்மகனும் தந்தைக்கொப்பான ஆற்றலுமொளியு முடையவனாகி நன்கு விருத்தியடைந்து வந்தனன். அதற்குப்பின்னர் புருஷனாக மாறின இளையைப் புதன் தருமமான பல கதைகளைச் சொல்லிக் களிப்புறச்செய்து வந்தனன்' என வருளிச்செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிரண்டாவது ஸர்க்கம்.

புதன்பல முனிவர்களை வரவழைத்து அச்வமேதயாகஞ்செய்வித்துச் சிவனது சாபத்தைப்போக்கி முன்போல் இளனை ராஜாவாக்கியது.

---

புதனுக்குப் புத்திரன் உற்பவித்த அற்புதமான வரலாற்றை ஸ்ரீராம பிரான் இவ்வண்ணம் திருவாய் மலர்ந்தருளியது கேட்டு இளையபெருமாளும் பரதாழ்வானும் வியப்புற்றவர்களாகி, 'ஸ்வாமி! ஸோமபுத்திரனிடம் இங்ங னம் ஒரு ஸம்வத்ஸரகாலம் வஸித்திருந்த இளையானவன் அதன் பிறகு † யாது செய்தனன்? அதனுண்மையைக் கேட்கக் காதலுள்ளவர்களா யிருக் கின்றோம்' என வேண்டிவினவ, ஸ்ரீராகவன் மறுபடியும் மொழிகின்றனர். 'தம்பிகாள்! இளன் மறுத்தும் ஆணுருக்கொண்ட வளவில் மஹாமே தாவியான புதன் ஸம்வர்த்தர், சியவனர், பார்க்கவர், அரிஷ்டநேமி, பிரமோ தனர், தூர்வாஸர் முதலான தத்துவமுணர்ந்தவர்களும் சுகிர்த்துக்களுமாகிய பல மகரிஷிகளை வரவழைத்து அவர்களை நோக்கி, 'முனிவர்காள்! இவ்வேந் தன் மகா விக்கிரமசாலி; இவனது விருத்தாந்தமனைத்தும் தேவரீர்களுக்குந்

---

* யோஜன கந்தியினிடம் வியாஸபகவான் அவதரித்ததுபோல் இந்தப் புரூரவ னும் நிஷேகமானவுடனே பிதாவுக்குச் சமவயதான புத்திரனாகப் பிறந்தானென வறிக.

† முன்னமே இளனது இராச்சியத்திற்கு உரியனாய்ச் சசபிந்துவென்னும் புத் திரன் இருப்பதனால், இப்பொழுது இளனும் அவனது புத்திரனான புரூரவனும் யாது செய்தனர்களென்று கேட்டபடி.

தெரிந்ததேயன்றோ? இனியிவனுக்கு நன்மை விளைவிக்கவேண்டுகின்றேன்' எனப் பிரார்த்தித்தனன். இவர்கள் இவ்விதமாக ஸம்பாஷணை செய்து கொண்டிருக்கையில், மஹாநுபாவர்களான பல பிராம்மணர்களுடனே கர்த்தமப் பிரஜாபதி அவ்விடம் வந்து சேர்ந்தனர். மஹா மஹிமைபெற்றவர்களான புலஸ்தியர், கிரது, வஷட்காரம், ஓங்காரமாகிய இவர்களும் அந்த ஆச்சிரமத்திற்கு எழுந்தருளினர்கள். இவர்களெல்லோரும் ஒரேயிடத்தில் ஸந்தித்ததனால் யாவரும் ஒருவரையொருவர்கண்டு ஸந்தோஷித்து பாஹ்லி தேசாதிபதிக்கு இதத்தைக் கோரியவர்களாகித் தனித்தனித்தங்கள் அபிப்பிராயத்தை அறிவிக்கலாயினர். அவர்களினிடையே கர்த்தமப்பிரஜாபதியெழுந்து தமது புத்திரனுக்கு மேலான நன்மை விளைவிக்கவெண்ணி அவ்வந்தணர்களை நோக்கி, 'வேதியர்காள்! யான் சொல்வதைச் சற்றுச் செவிக்கொள்க: இவ்வேந்தனுக்கு இப்பொழுது இதமானது யாதென ஆராயுமிடத்து, முன்னம் இவனைச் சபித்த சிவபெருமானை வேண்டுவதைவிட வேறு மருந்து என் புத்திக்குத் தோற்றிலது. யாம் மஹத்தான ஒரு யாகமியற்றி அந்த * மஹேசுவரனை மனமகிழச் செய்வோம். அசுவமேதயாகத்தினும் மேலான யாகம் மற்றென்றிலது; இவ்யாகமே அம்மஹாநுபாவனுக்கும் பிரியமாகிறது. ஆதலின் இப்பொழுது யாவரும் ஒன்று கூடி இவ்வேந்தன் பொருட்டு அவ்வேள்வி யியற்றுவோம்' என்றுகூறினர். கர்த்தமப் பிரஜாபதி சொன்னவார்த்தையைக்கேட்டு ஸகலமான பிராம்மணர்களும் அசுவமேதயாகம் செய்து சிவபிரானை ஆராதிப்பதே உசிதமென்று ஒப்புக்கொண்டார்கள்.

உடனே ஸம்வர்த்தரென்னும் இராஜரிஷியின் சிஷ்யரான மருத்தரென்பவர் அந்தயாகத்திற்கு வேண்டிய ஸகல ஸாமக்கிரிகளையும் சேகரஞ்செய்தனர். புதனுடைய ஆச்சிரமத்திற்கு அருகில் அசுவமேதயாகம் அற்புதமாக நடத்தப்பட்டது. அதனால் பரமேசுவரன் பரம ஸந்தோஷ மடைந்தவனாகி

* இங்கே ஸ்ரீராமபிரான் அசுவமேதயாகம் சிவபெருமானுக்குப் பிரியமானதென்று கூறி அதைத் தாம் அநுஷ்டிக்க வெண்ணினதால், ஸ்ரீராமன் சிவபக்தரெனவும், இதனால் முன்னமிவர் சேதுபந்தனகாலத்தில் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்தனரென்று சொன்னதும் ஸத்தியமே யாகுமெனவும் சிலர் ஸாதிக்கத் துணிகின்றனர். அப்படிச் சொல்வதுநியாயத்திற்குச் சிறிதும் பொருந்தாது. அசுவமேதயாகம் விஷ்ணுவின் ஆராதனமேயாகி விருத்திராசுர வதத்தினாலுண்டானபிரம்மஹத்தியைப் போக்கியதனால் அதையே அநுஷ்டிக்க வேண்டுமென முதலில் இளையபெருமாள் கூறியதை ஸ்ரீராமசந்திரன் அங்கீகரித்து, அதற்கு அர்த்தவாதமாகவன்றோ இந்த இளன் கதையை அருளிச் செய்யத்தொடங்கியது. ஆதலின் சிவபெருமானுக்கும் பூஜ்யரான ஸ்ரீமஹாவிஷ்ணுவை அசுவமேதத்தினால் ஆராதித்தால், பரமசிவனுக்கும் அதனால் பெருமகிழ்ச்சி யுண்டாகுமெனக் கர்த்தமப்பிரஜாபதி புகன்றதாக அருளிச் செய்ததேயன்றிவேறன்றென வறிக. இஃது ஒன்றையே ஆதாரமாகக்கொண்டு ஸ்ரீராமன் சிவபக்தரென்றும், சிவனே பரதேவதையென்றும் தீர்மானிக்கத் துணிந்தால், ஸ்ரீராமன் விஷ்ணுபக்தரென்றும் ஸ்ரீமந்நாராயணனே பரதேவதையென்றும் உறுதியாகச் சொல்லுகிற பல பிரமாணவசனங்களுக்கு அவர்கள் என்ன ஸமாதானம் சொல்வார்களோயாமறியோம்.

No. 23. ஸ்ரீராமபிரான் அஸ்வமேதயாகம் செய்தருளியது. PAGE. No. 273.



శ్రీరాములు అశ్వమేధయాగంచేయుట.

அவ்வேள்வி முற்றுப் பெற்றவளவிலே இளமஹாராஜனெதிரிலே பிராம்மண கள் அனைவரையு நோக்கி, 'வேதியர்காள்! நீங்கள்செய்த அசுவமேதயாகத்தி னுலும் உங்களுடைய பத்தியாலும்யான் அத்தியந்தம் பிரீதனுயினேன்; இந்த பாஹ்லிதேசாதிபதிக்கு இப்பொழுது யான் செய்யவேண்டியநன்மை யாது?' என அருளிச்செய்ய, ஸமஸ்தமான பிராம்மணர்களும் ஒன்றுகூடி, இளன் என்றைக்கும் புருஷனுகவே யிருக்க அருள்புரிய வேண்டுமெனப் பிரார்த் தித்தார்கள். பரமசிவன் அங்ஙனமே யருள்புரிந்து இளன் ஸ்திரீரூபம்மாறி என்றைக்கும் புருஷனுகவே விளங்குமாறுவரமளித்து அந்தர்த்தானமாயினர்.

அசுவமேதயாகம் முடிந்து சிவபெருமானும் அப்புறமெழுந்தருளியபின் னர் முக்காலமுமுணர்ந்த முனிவர்கள் அனைவரும் விடைபெற்றுத் தத்தமிருப் பிடம் போய்ச்சேர்ந்தனர்கள். இளமகாராஜனே, பாஹ்லிதேசத்தைவிட்டு மத் தியதேசத்திலே பிரதிஷ்டானமென்கிற மிகப்பிரசித்தமான பட்டணமொன்று நிருமித்துக்கொண்டனன். சசபிந்து பாஹ்லிபட்டணத்திலும், பிரம்மபுத்திர னை இளன் பிரதிஷ்டானபட்டணத்திலுமிருந்து ராஜ்யபரிபாலனஞ்செய்துவந் தனர்கள். இளமகாராஜன் தனது ஆயுள்முடிவில் பிரம்மலோகஞ் சென்றவள விலே அவனதுபுத்திரனை புரூரவன் பிரதிஷ்டானநகரத்தில் பட்டாபிஷேகம் செய்யப்பெற்றனன். மஹாசூரர்களான ஸகோதரர்காள்! இத்தன்மையதன் ரோ அசுவமேதயாகத்தின் பிரபாவம்! ஸ்திரீரூபமாகமாறின மன்னவன் மறு படியும் இந்த யாகத்தின் பெருமையால் தனது ஆண்மையையும், கிடைத்தற் கரிய மற்றும் பலபெருமைகளையும் பெற்றுப் பிரஜைகளைப் பரிபாலிக்கலாயி னனன்றோ" என வருளிச்செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இளோபாக்கியானம் முற்றிற்று.

## நூற்றுமூன்றுவது ஸர்க்கம்.

### அசுவமேதயாகம்.

அயோத்திமன்னன் அசுவமேதஞ்செய்யத் தீர்மானித்து,
வாநரர் ராக்ஷஸர் முதலாய யாவரையும் அவ்வேள்விக்கு வரவழைக்கவும்,
கோமதிநதி தீரத்தில் யாகசாலை நிருமித்து,
வருகிறவர்களுக்கு விடுதிகளுமமைத்து ஸகல பதார்த்தங்களும்
அங்கே ஸித்தப்படுத்தவும் தம்பிமார்களுக்கு நியமித்தருளியது.

---

இவ்விதமாய் அற்புதமான இளன்கதையைக்கூறி முடித்தபின்னர் தாச ரதிஸௌமித்திரியை நோக்கி, 'தம்பி, லக்ஷ்மண! நீங்கள் உரைத்தவண்ணமே யான் அசுவமேதமே புரிய அபிப்பிராயப் பட்டிருக்கின்றேனுதலின், அதன் பிரயோகங்களை நன்குணர்ந்தவர்களான வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி காசி

யபர்முதலானபிராம்மணசிரேஷ்டர்களைவரவழைக்க; அவர்களுடன் ஆராய்ந்து உணர்ந்து யாகஞ்செய்யத் தொடங்கி உத்தமமான லக்ஷணங்களுடனே கூடிய அச்வத்தை விடுவேன்' என வருளிச்செய்ய, இளையபெருமாள் அதிசீக்கிரமே அவ்வேதியர்கள்அனைவரையும் வரவழைத்து ஸ்ரீராகவன் ஸன்னிதானத்திற் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்தனர். அந்தணர்களைக் கண்டவளவில் அனைவர்க்கும் அபிவாதனஞ்செய்து தேவராஜனென விளங்கும் தாசரதியை நோக்கி அம்முனிவர்கள் ஆசிர்வாதஞ்செய்து பிரதிவந்தனம் பண்ணிநிற்க, ஸ்ரீராகவன் அஞ்சலிஹஸ்தராய் அவ்வேதியர்களைப் பார்த்து, தாம் தரும விருத்தியின்பொருட்டு அசுவமேதயாகமியற்றத் திருவுள்ளம்பற்றியதை அறி வித்தனர். அதுகேட்டு அம்முனிவர்கள் சிவபெருமானை நமஸ்காரஞ்செய்து, தாசரதே! தேவரீர் ஸ்ரீமஹா விஷ்ணுவின் ஆராதணமான அசுவமேதஞ்செய்ய அபிப்பிராயங்கொண்டது ஸர்வோத்தம மெனக் கொண்டாடினார்கள். அசுவ மேதமே மிகச்சிறந்தயாகமென முனிவர்களும் மேன்மையாகக் கூறியதுகேட் டுக் காகுஸ்தன் களிகூர்ந்தவராகி, 'யாமியற்றும் அற்புதமான வேள்வியைக் கண்டு மகிழுமாறு ஸகலவாநரர்களுடனுமிங்கு அதிசீக்கிரத்தில் வந்து சேரச் சுக்கிரீவ மஹாராஜாவினிடந் தூதனுப்புக. (அங்கதன், அநுமான், நளன், நீலன், பாடலன், கஜன், கவாக்ஷன், பனஸன், சதவலி, மைந்தன், துவிதன், கந்தமாதனன், வீரபாகு, குமுதன், வாநரசேனாபதி சுஷேணன், ரிஷபன், விநதன் ஆகிய பல வாநர வீரர்களையும் அவரவர் சேனைகளோடு விரைவாக வரவழைத்தல்வேண்டும்; இவர்களன்றியும் நமது காரியத்தின் பொருட்டு மிகப்பாடுபட்டுப்பிராணனைத்திரணமாகநினைத்துப் போர்க்களத்தில்பிராணனை யிழந்த வானரர்கள் இப்பூமியி லெங்கிருப்பினும் அவர்க ளெல்லோரையும் அதிசீக்கிரமேவரவழைப்பாயாக; அதேவிதமாகவேசுநாபன், தூமிரன், ஜாம்ப வான், கவயன், தரீமுகன், சரபன் ஆகியபலரையும் அவரவர் சேனைகளுடனே வந்துசேருமாறு செய்தியனுப்புக. நாம் இயற்றும் அயமேதமாவேள்விக்கு விபீஷணாழ்வானும் பலராக்ஷஸ வீரர்களுடனே வந்து நடப்பித்தல்வேண்டும். நமது நன்மையை நாடுகின்றவர்களாய் இப்பூமண்டலத்திலுள்ள பார்த்திவர்கள் பலரும் தங்கள்தங்கள் பரிவாரங்களுடனே நாம்செய்யப்போகிற ஸர்வோத்தம மான வேள்வியைக்கண்டு வியக்குமாறு விரைந்துவந்துசேருக. தேசாந்தரங்க ளிலுள்ள வேதியர்களையும் முனிவர்களையும் தவசிகளையும் ஸகுடும்பமாக நம து அசுவமேதயாகத்திற்கு வரவழைத்தல் வேண்டும்; கீதவாத்தியங்களில் வல் லவர்களையும் நடநர்த்தர்களையும் விசேஷமாக வரவழைத்தல் வேண்டும். யாம் வேள்விபுரிதற்குக் கோமதிதீரத்தில் நைமிசாரணியத்திலே மிகப்பெரியதான யாகசாலை நிருமிக்குமாறு ஆஞ்ஞாபித்தல்வேண்டும்; அவ்விடமே யாகஞ்செய் தற்கு மிகவும் ஏற்றதான உத்தமமாகிய பரிசுத்தஸ்தலம். அந்த நைமிசார ணியத்திலேயே தருமஞர்களான முனிவர்கள் பலர் பற்பலயாகங்கள் அநுஷ் டித்துக் கிருதார்த்தரானார்கள்; ஆதலின் அவ்விடத்திலேயே நாமும் அசுவ மேதஞ்செய்வோமாகில் அதைக் காணவருகின்ற ஸகலமான ஜனங்களும் நம்மால் விதிமுறைப்படி உபசரித்து ஸம்மானிக்கப்பட்டவர்களாகித் துஷ்டி

யும்புஷ்டியுமடைந்து மகிழ்ச்சிகொள்வார்கள். இப்பொழுதே அதற்குவேண்டிய சாந்திகருமங்கள் செய்யுமாறு கட்டளையிடுக. லக்ஷக்கணக்கான சகடங்களில் சிறந்த தண்டுலங்களும், எள்ளு பயறு கடலை கொள்ளு உளுந்து முதலான தானியவர்க்கங்களும், உப்பும், இவைகளுக்கேற்றபடி நெய் எண்ணெய் பால் தயிர் முதலியவைகளும், பலவகை வாஸனைத்திரவியங்களும் சந்தனக் கட்டைகளும், கோடிக்கணக்கான பொன் நாணயமும், பலகோடிக்கணக்கான வெள்ளி நாணயமுமாகிய பலவற்றையும் வெகு ஸாவதானமாகச் சேகரித்துக் கொண்டு பரதன் முன்னேசெல்லுக. வழிமுழுவதும் அங்கங்கே விசேஷமாகக் கடைவீதிகள் ஏற்படவேண்டும்; அநேகமான நடநர்த்தர்களும், பாசகர்களும், பருவமுள்ளவர்களான பணிப்பெண்களும் பரதனோடுகூடவே புறப்பட்டுச்செல்லுக; அநேகம் சேனைகளும், வேதமோதியுணர்ந்த விருத்தர்களான வேதியர்களும் வெகுசாக்கிரதையுடன் முன்னமேயெழுந்து செல்லுக; அநேகம் கிங்கரர்களையும் பரிசாரகர்களையும் தனசாலைத்தலைவர்களையும் மந்திரி பிரதானிகளையும் நமது மாதாக்களையும் பரதன் முதலியோருடைய அந்தப்புர ஸ்திரீகளையும் ஸீதைக்குப் பிரதியாக நிருமித்து வைத்திருக்கின்ற சுவர்ண ஸீதையையும் யாகஞ்செய்யும் முறைகளை நன்குணர்ந்த பல பிராம்மணர்களையும் முன்னிட்டுக்கொண்டு பரதன் முன்னெழுந்து செல்லுக. தங்கள் தங்கள் பரிவாரங்களுடனே கூடிவரும் வேந்தர்கள் பலருக்கும் ஆங்கு உத்தமமான விடுதிகள் அநேகம் அமைத்து வைக்கவேண்டும்' என இவ்வாறு நியமித்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுமூன்றுவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நூற்றுநான்காவதுஸர்க்கம்.

வேதியர் வேந்தர் முதலாயபலரும் வந்துசேர்ந்து
அசுவமேதயாகம் மிகச்சிறப்பாக நடத்தியது.

---

அங்ஙனமே அசுவமேதயாகத்திற்கு வேண்டிய ஸகலகாரியங்களும் கிரமப்படி மிகவும் அற்புதமாக நடந்துவருகையில், ஸ்ரீராமபிரான் ரித்துவிக்குக்களைக்கொண்டு விதிமுறைப்படி சிறந்த லக்ஷணமுள்ள ஒரு கறுப்புக்குதிரையை இளையபெருமாளது காவலில் வைத்துவிடுத்து, ஸகலசேனைகளும் புடைசூழப் புறப்பட்டு நைமிசாரணியம் போய்ச்சேர்ந்து ஆங்கு மிகவும் அற்புதமாக நிருமிக்கப்பட்டிருந்த யாகசாலையைக்கண்ணுற்றுமிகக்களிகூர்ந்தனர். இதற்குள் அவ்விடத்தே பார்த்திவர்கள் பலரும்வந்துகூடிப் பற்பல உபஹாரங்களுடனே அயோத்திமன்னனைவந்துகாண, அவ்வரசர்பெருமான் அவைகள் அனைத்தையும்பெற்று மகிழ்ந்து அவர்களை மிகவும் கொண்டாடி, தத்தம் பரிஜனங்களுடனே அவரவர்க்கு ஏற்படுத்திய விடங்களிலே போய் இறங்குமாறு நியமித்தருளினர். அவ்வேந்தர்களுக்கு வேண்டிய அன்னபானங்கள் ஆடை

யாபரணங்கள் ஆகிய பலவற்றையும் பரதாழ்வான் சத்துருக்கினனோடுகூடி உடனுக்குடனே யளித்து ஒன்றுலொன்று குறையின்றி வேண்டியவாறு உப சரித்தனர்; சுக்கிரீவமஹாராஜனும் மற்றுமுள்ள வாநரர்களும் அங்குள்ள வேதியர்கட்கு மிக்கவணக்கமுடையவர்களாகி அடிசில் முதலியன பரிமாறி யுபசரித்துவந்தனர்; விபீஷணாழ்வான் தந்துணைவரான பிசிதாசனர்களுடனே கூடிக் கொடுந்தவம்புரியும் மஹாநுபாவர்களான முனிவர்கட்குச் செய்யவேண்டிய பூஜைகளைச் சரியாகச் செய்துவரலாயினர். இங்ஙனம் ஒவ்வொருவர் ஒவ்வொரு காரியத்தை மேற்கொண்டு அதிக ஆதரத்துடனே நடத்துகையில் அசுவமேதயாகம் அனைவரும் கொண்டாடும்படி அற்புதமாக நடந்துவந்தது. இலக்ஷ்மணனால் பாதுகாக்கப்பட்ட மிகப்பெரிய பாய்மாவினது செய்கையும் முறைப்படி அநுஷ்டிக்கப்பட்டுவந்தது. ராஜசிங்கமான ராமசந்திரனது அய மேதயாகத்தில் 'இடுக, இடுக' என்னுமரவமன்றி மற்றொருசத்தமு முண்டாக வில்லை; இந்த யாகத்திலே யாசகர்களுக்குத் திருப்தியுண்டாகுமளவும் சகலமான பொருள்களும் அவர்களுக்கு அளிக்கப்பட்டன. வேதியர்களும் முனிவர்களும் தமக்கு இன்னதுவேண்டுமென வாய்திறக்குமுன்னமே அதனை அவர்க்கு வாநரர்களும் இராக்கதர்களும் யதேஷ்டமாக அளித்துத் திருப்திசெய்விக்கலாயினர். ஆண்டுச்சென்றவர்களி லொருவராயினும் தமக்கு இன்னது குறையென்றுகூற விடமின்றி வேண்டியவைக ளெல்லாவற்றையும் பெற்று யாவரும் பெருமகிழ்ச்சிகொண்டு ஆநந்தித்தனர். அங்கெழுந்தருளியிருந்த நெடுங்காலங்கண்ட நன்முனிவர் பலரும் இத்துணைச்சிறந்த யாகமெந்நாளும் நடக்க நாங்கள் கண்டிலேம்; இத்தன்மையது எந்நாளும் நடந்திலது' என வியந்து புகழ்ந்து கொண்டாடினர்கள். ஆங்கு பொன் வேண்டினோன் பொன்னைப் பெற்றனன்; பொருள் வேண்டினோன் பொருளைப்பெற்றனன்; ரத்தினம் வேண்டினோன் ரத்தினங்களைப் பெற்றனன்; சுவர்ணமோ, ரஜதமோ, ரத்தினமோ, வஸ்திரமோ, கைகொண்டவளவெடுத்து வாரிவாரிக்கொடுக்கையிலும், மறுபடி மேலமேலாகவந்து குவிந்துகொண்டேயிருந்தன. இந்திரன், குபேரன், யமன், வருணன் ஆகிய லோகபாலர்கள் செய்த யாகங்களும் இங்ஙனம் சிறக்கக் கண்டதில்லையெனத் தபோதனர்கள் போற்றிப்புகழ்ந்தார்கள். எங்கே பார்த்தாலும் வானரர்கள் வரிசைவரிசையாக நின்றனர்கள்; எங்கே பார்த்தாலு மிராக்கதர்கள் அணியணியாநின்றனர்; அவர்கள் யதேஷ்டமான வஸ்திரங்களும் தனங்களும் தின்பண்டங்களும் கைகளிலேயே வைத்துக்கொண்டு அவற்றை வேண்டிவரும் யாசகர்களுக்கு அளவில்லாது அளித்தவண்ணமாயிருந்தனர்கள். ராஜசிங்கமான ராமபிரான் இயற்றிய அசுவமேதயாகம் இவ்வண்ணமாக யாவும் குறைவற நிறைந்து ஓராண்டளவேயன்றி அதற்கு மேலும் ஒயாது நடந்து கொண்டிருந்தது.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுநான்காவது ஸர்க்கம்
முற்றிற்று.

## நூற்றைந்தாவது ஸர்க்கம்.

ஸ்ரீராமனது அசுவமேதத்திற்கு வால்மீகி யெழுந்தருளி,
அங்குள்ள வீதிகள்தோறும் ஸ்ரீமத் ராமாயணத்தைப் பாடிக்கொண்டு
செல்லுமாறு குசலவர்களுக்குக் கட்டளையிடுதல்.

---

இவ்வாறு மஹாவிபவத்துடனே நடக்கும் அற்புதமான அயமேதமா வேள்விக்கு வால்மீகி முனிவரும் தமது சீஷர்களுடனே யெழுந்தருளி, மிகச் சிறப்புற்று விளங்கும் வேள்வியினது விபவத்தைக்கண்டு வியந்து முனிவர்களின் பர்ணசாலைகளுக்கு அருகில் தமக்குமொரு பர்ணசாலை நியமித்துக் கொண்டு அதிலிறங்கினர். அவர் எழுந்தருளியது கண்டு அவரது விடுதியின் வாயிலிலே வண்டிவண்டியாகவேண்டிய கனிகிழங்கு முதலியன கொண்டு சேர்க்கப்பட்டன; மஹாராஜாவும் மற்றுமுள்ள முனிவர்களும் அவரை நல்வரவு கொண்டாடி விசாரித்து அவர்க்குச் செய்யவேண்டிய உபசாரங்கள் பலவும் செய்தனர்கள். அங்குள்ளவர் அனைவராலும் அநேகவிதமாய் ஆதரிக்கப்பெற்று அகமகிழ்ந்திருக்கையில் அம்முனிவர் தமது சீஷர்களான செல்வச்சிறுவர்களை விளித்து 'என்கண்மணிகாள்! நீங்கள் இருவருங்கூடி வெகுஜாக்கிரதையுடனே புறப்பட்டு யாம் கற்பித்த இராமாயணத்தைப் பெருமகிழ்ச்சியுடனே பாடிக்கொண்டு, மிகப் பரிசுத்தமான முனிவர்களின் வாஸஸ்தானங்களிலும், பிராம்மணர்களிறங்கியிருக்குமிடங்களிலும், பெருவீதிகளிலும், ராஜமார்க்கங்களிலும், தனித்தனி யொவ்வொருவேந்தனது வீட்டுவாயில்களிலும் விநோதமாகச் செல்லுக; அசுவமேதயாகம் நடக்குமிடமான ஸ்ரீராமபிரானது ஸந்நிதியிலும், ரித்துவிக்குக்களினெதிரிலும் மிதனைவிசேஷமாகப்பாடுக. பருவதப் பிராந்தங்களில் உற்பத்தியான அதிமதுரமாகிய கனிகிழங்குகள் இங்கு யதேஷ்டமாயிருக்கின்றன; உங்களுக்கு உடம்பில் சற்றேனும் இளைப்புத் தோற்றுதவாறு அப்போதப்போது இவற்றையருந்திக்களைதீர்த்துக்கொண்டு இனிப்பாய்ப்பாடுக. இப்பழங்களையும் கிழங்குகளையும் புசிப்பீர்களாயின் உங்களுக்குச் சிறிதும் இளைப்புத்தோற்றாது. முனிவர்களுடைய மத்தியில் ஸ்ரீராகவன் உங்களது பாட்டைக் கேட்கச் சமீபத்தில் வரவழைப்பாராயின், அவ்விடத்தும் சென்று நீங்கள் கானஞ்செய்யலாம். யான் உங்களுக்கு முன்னம் போதித்தவாறே சுலக்ஷணமாக மிகவும் மதுரமாய்க் கேட்போர்க்குக் கர்ணாமிருதமாயிருக்கும்படிப் பிரதிதினம் இருபதுஸர்க்கம் வீதமாக கானஞ்செய்து வருக. யாவரேனும் உங்களுக்குப் பொருள் கொடுப்பதாகக் கூவியழைத்தால் பணத்திலாசைகொண்டு நீங்கள் அவ்விடம்செல்லற்க; ஆச்சிரமங்களிலிருந்து கனிகிழங்குகளையே உணவாக்கொண்டிருக்கும் முனிவர்கட்குப் பணத்தினாலாவதென்னை? நீங்கள் யாருடைய குமாரர்களென்று காகுஸ்தன் உங்களைக் கேட்பாராயின், நாங்கள் வால்மீகிமுனிவரது சீஷரென்று அவர்க்குவிடை கூறுக. இந்த இராமாயணத்தை யாழின் தந்திஸ்வரத்துடனே மிளிதாகும்படி அதிமதுரமாகச் செவிக்கு இன்பமாய் ஆதிதொடங்கியே வெகுதீரமாப்பாடுந்

கள். மஹாராஜாவை யொருபொழுதும் அவஞ்ஞை செய்யவேண்டாம்! பார்த்திவன் ஸகலபூதங்களுக்கும் பிதாவன்றோ? நாளைக்காலைதொடங்கி நீங்கள் நான் சொன்னவண்ணமே சரியாகவீணைமீட்டிக்கொண்டு ராமாயணத்தைச் செவிக்கு இன்பமாகப் பாடிவருக' என நியமித்தருளினர். வால்மீகிமுனிவரது கட்டளைக்குகீழ்ப்படிந்து மைதிலியின்மைந்தர்கள் இருவரும் அங்ஙனமே செய்வோமெனச்சம்மதித்து அம்முனிவர் மொழிந்ததை மனத்திற் கொண்டவண்ணமே அன்றிரவைச் சுகமே போக்கினர்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றாறுவது ஸர்க்கம்.

ஸ்ரீராமசந்திரன் பற்பல பண்டிதர்களையும் பிரபுக்களையும் ஸபைசேர்த்து வால்மீகி ராமாயணத்தைக் குசலவர்கள் பாடக்கேட்டுக் களிகூர்ந்தது.

அநந்தரம் இராத்திரிநீங்கிப் பொழுதுபுலர்ந்ததும் அவ்விரட்டையர் காலையிலெழுந்து நீராடிச் சந்தியாவந்தனமும் ஸமிதாதானமுஞ்செய்து முடித்துக்கொண்டு வால்மீகிமுனிவர் முன்னம் மொழிந்தவண்ணமே இராமாயணத்தைக் கானஞ்செய்துகொண்டு சென்றனர்கள். இரண்டுபாலகர்கள் வீணையிஞ்டிகளைமாட்டகம் பற்றியிறுக்கி மீட்டிக்கொண்டு ஒத்தகுரலினராய் சுலக்ஷணமாகத் தம்மாசிரியர் கற்பித்த ராமாயணத்தை இன்பமாய்ப்பாடிக்கொண்டு வருவதை ஸ்ரீராகவன் திருச்செவிசார்த்தி, இஃது அபூர்வமாயும் அற்புதமாயுமிருக்கின்றதே யெனவியந்து களிப்படைந்தனர். அநந்தரம் தாம்தமது வைதிக்காரியங்களைச்செய்து முடித்துக்கொண்டு மகரிஷிகளையும், மன்னவர்களையும், பண்டிதர்களையும், பட்டணத்துப்பிரதானிகளையும், புராணங்களில் தேர்ந்தபுலவர்களையும், சப்தசாஸ்திரவித்வான்களையும்,விருத்தர்களானவேதியர்களையும், ஸங்கீதலக்ஷணமறிந்தவர்களையும், இராமாயணம் கேட்கக்காதல்கொண்டபெரியோர்களையும்,காந்தர்வசாஸ்திரம்கற்றுணர்ந்தகல்விமான்களையும்,பாதம், அக்ஷரம், ஸமாஸம் இவற்றின் இலக்கணமுணர்ந்தவர்களையும், வேதமோதிய வைதிகர்களையும், கலைமாத்திரை இவற்றின் வேற்றுமையுணர்ந்தவர்களையும், சோதிடசாஸ்திர பாரங்கதர்களையும், கிரியைகளின் பிரயோகங்களைப்பிரதிபாதிக்கின்றகல்பசூத்திரங்கற்றபண்டிதர்களையும், காவியலக்ஷண லக்ஷியங்களைநன்குணர்ந்தநாவலர்களையும், பதினெட்டுப் பாஷைகளையுமுணர்ந்தபுலவர்களையும், அபிப்பிராயமுணரும் திறமுள்ளவர்களையும், பெரியவர்த்தகர்களையும், யுக்திசெல்வதில் வல்லவர்களையும், வியவஹாரத்தில் ஸாமர்த்தியமுள்ளவர்களையும், தர்க்கசாஸ்திரபண்டிதர்களையும், விருத்தசாஸ்திரங் கற்றுணர்ந்தவர்களையும், புராணபண்டிதர்களையும், வைதிகர்களான வேதியர்களையும், சக்கரபந்தம் முதலானசப்தசித்திரலக்ஷண மறிந்தவர்களையும், விருத்த சூத்திரமறிந்தவர்களையும், ஸங்கீதத்திலும் நிருத்தத்திலும் ஸமர்த்தர்களையும், வியாகரணம்முத

லான மற்றும்பல சாஸ்திரங்களில் பாண்டித்திய முடையோரையும், நீதிசாஸ் திரநிபுணர்களையும், வேதாந்தார்த்தத்தைப்போதிக்கும் திறமுடையோர்களை யும், இவர்களைப்போன்ற மற்றும்பலரையும் வரவழைத்துச் சபைகூட்டி அந் தச்சபைநடுவே இந்தச் சிறிய பாடகர்களை வந்துஉட்காரும்படி நியமித்தனர்.

அந்தஸபையிலே வந்துகூடிய மஹாத்துமாக்களான முனிவர்களும் மன் னவர்களும், காகுஸ்தனையும் காயகர்களையும் தமது கண்களால் பானம்பண் ணுகின்றவரெனச் சிறிதுநேரம் இமைகொட்டாதுநோக்கி, 'ஆ! இக்குமாரர்கள் இருவரும் ரூபஸௌந்திரியங்களில் ஸ்ரீராமசந்திரனுக்கு முற்றும் ஸமானமா யிருக்கின்றனர்; ஒருபிம்பத்தினது பிரதி பிம்பமெனவே தோற்றுகின்றனர். இச்சிறுவர்கட்குச் சடைமுடியும் மரவுரியுமாத்திர மில்லாதிருக்குமாயின், இப் பாடும் பிள்ளைகளுக்கும் நம்பார்த்திவனுக்கும் பேதமேதோற்றாது' என ஆங் காங்குதனித்தனி அனைவரும் பேசிக்கொள்ளலாயினர். அவர்கள் இங்ஙனம் ஸம்பாஷித்து வியந்து கொண்டிருக்கையில், கேட்போர்கட்கு ஆநந்தம்மேன் மேலும் அதிகரிக்குமாறு அம்முனிமக்கள் மதுரமாகப் பாடத்தொடங்கினர் கள். அதுவரையில் மனுஷ்யலோகத்தவர்களால் எந்நாளும் பாடப்படாத திவ்வியமான அவர்களது கானவிசேஷத்தைக் கேட்டவர்கள் அனைவரும் கேட்கக்கேட்க ஆநந்த மதிகரித்தவர்களாகிச் சிறிதும் திருப்தியடையாதவர் களாயினர்; முதலில் நாரதமுனிவர் உபதேசித்த ஆதிஸர்க்கந் தொடங்கி இரு பதுஸர்க்கம்வீதமாக ஸ்ரீமத்ராமாயணம் அச்சிறுவர்களால் பாடப்பட்டது. அப்பிள்ளைகள்பாடிய இருபதுஸர்க்கங்களைத் திருச்செவிசார்த்திய சக்கரவர்த் தித்திருமகன் அன்றையதினம் மத்தியான்னத்திற்குமேல் தமது ஸகோதரரை யழைத்து, பாடுகின்ற இப்பாலகர்களுக்குத்தனித்தனி பதினெண்ணாயிரம் பொன்னும் பின்னும் இவர்கள் யாது வேண்டினும் அவைகளும் பரிசளிக்க வெனநியமித்தருள, அந்தநியமனப்படியே அதிசீக்கிரத்தில் அவர்கள் அளவற்ற பொருள்களைக் கொண்டுவந்து அக்குமாரர்களுக்கு வேறுவேறாகக் கொடுக்க லாயினர். அப்பாடகர்கள் அந்தப்பொருளைப்பெற்றுக்கொள்ளாமலே அதைக் கண்டு ஆச்சரியமடைந்தவர்களாகி, 'காட்டிலுள்ள கனிகிழங்குகளையே ஆகார மாகக்கொண்டு வனத்தில் வஸிக்கும் யாங்கள் இதனைப் பெற்றுயாதுசெய் வோம்; எமக்குப் பொன்னும் பொருளுமேதுக்கு?' எனச்சிறிதும்பொருளா சையில்லாதவர்களாய்ப் பணிக்க, அதுகேட்டு அச்சபையிலுள்ளோரும் ஸ்ரீராமபிரானும் மிக்க வியப்புற்றவர்களாகி அம்முனிவர் மக்களை மேலாகக் கொண்டாடினார்கள்.

அநந்தரம் அயோத்திமன்னன் அந்தக்காவியத்தின் வரலாற்றைக்கேட்க அபேக்ஷைகொண்டவராகி ரிஷிகுமாரர்களைநோக்கி, 'சிறுவர்காள்! நீங்கள் பாடும்இக்காவியம் எவ்வளவுபெரியது? எதுவரையில் இயற்றப்பட்டுள்ளது? இம்மஹாகாவியத்தைச் செய்தவர்யாவர்? அம்மகாரிஷி இப்பொழுது எங்கெ ழுந்தருளியிருக்கின்றனர்?' எனவினவ, அக்குமாரர்கள்பிரதியுத்தரஞ் சொல் லத்தொடங்கி, 'மஹாப்பிரபோ! இப்பொழுது தேவரீர் திருச்செவிசார்த்திய இந்தக்காவியஞ் செய்தருளியவர் வால்மீகிபகவான்; அம்முனிவர் இந்த யா

கத்திற்கு இவ்விடமெழுந்தருளி யிருக்கின்றனர். இப்பிரபந்தம் இருபத்தினு லாயிரம் சுலோகங்களும் * நூறு உபாக்கியானங்களு மடங்கியது. இதனை ஆதிமுதல் ஐந்நூறு ஸர்க்கங்களாகவும் ஆறுகாண்டங்களாகவும் வகுத்து, அவற்றுடனே உத்தரகாண்டமும் சேர்த்துச் செய்தருளியிருக்கின்றனர். இந் தக் கதாநாயகர் இவ்வுலகினில் ஜீவித்திருக்குமளவும்நடக்கும் அவரது சரித்தி ரம்யாவத்தும் இதில்கூறப்பட்டுள்ளது. ஹேமஹாப்பிரபோ! இதனைத் திருச் செவிசார்த்தத் திருவுள்ளமாயின், வைதிக காரியங்களொழிந்து ஸாவகாசமா யிருக்கையில் ஸகோதரர்களுடனே கேட்டருளலாம்' என விண்ணப்பஞ்செய் தனர்கள். அப்படியே செய்கவென ஸ்ரீராமபிரான் அனுமதிகொடுக்க, அந்தக் குமாரர்கள் அவரிடம் நியமனம் பெற்றுக்கொண்டு பெருமகிழ்ச்சி கொண்ட வர்களாய், வால்மீகிமுனிவ ரிருக்குமிடம் போய்ச்சேர்ந்தனர். சக்கரவர்த்தித் திருமகனும் முனிகுமாரர்களான காயகர்கள் தாளலயைகளுக் கிசைய வீணை மீட்டி இனிய குரலுடன் ஸர்க்கம் ஸர்க்கமாகப்பாடிய கானத்தின் மாதுரி யத்தை முனிவர்களுடனும் மன்னவர்களுடனும் கேட்டருளிக் களிகூர்ந்தவ ராகி யாகசாலைக் கெழுந்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றாறுவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நூற்றேழாவது ஸர்க்கம்.

இராமாயணம் பாடும் பாலகர்கள் தமது புதல்வர்களே யெனத்துணிந்து
ஸ்ரீராமபத்திரன் அச்சபைநடுவே சீதையை யழைத்துவந்து
சபதஞ்செய்விக்குமாறு வால்மீகிக்குச் சொல்லியனுப்ப,
அவர் அதற்கு உடன்பட்டது.

---

அன்றுதொட்டு ரகுகுலசிகாமணி நாள்தோறும் பலமுனிவர்களும் மகீ பதிகளும் வாநரர்களும் புடைசூழச் சபையினடுவே முனிகுமாரர்களை வர வழைத்து மிகச்சிறந்ததும் சுபமுமான அவர்களது ஸங்கீதத்தைச்செவிசார் த்திக் களிகூர்ந்தனர். இவ்வண்ணம் பலநாள்நடந்துவருகையில், அந்தக்கான த்தினாலேயே அக்குசீலவர்கள் ஜாநகியினிடம் பிறந்த தம் புத்திரர்களென வறிந்து அகமகிழ்ந்து அயோத்திமன்னன் ஒருநாள்சபைநடுவே சிறந்த தூதர் களை விளித்து, நீங்கள் உடனே வால்மீகிபகவானது ஸன்னிதிக்குச் சென்று, 'ஸீதைகுற்றமில்லாத நல்லொழுக்கமுள்ளவளாயின், அம்முனிவரது அநுமதி பெற்று இந்த மஹாஸ்பையிலனைவருக்கும் நம்பிக்கையுண்டாகும்படி அவள் தான் மிகப்பரிசுத்தமானவளெனப் பிரமாணஞ் செய்யக்கடவள்' என யான் சொன்னதாய் அவரிடமறிவித்து இதுவிஷயத்தில் அம்மகரிஷியின் கருத்தும் ஸீதையினது கருத்தும் இத்தன்மையனவெனத் தெரிந்துகொண்டு தீவிரமாக

---

* நூறு உபாக்கியானங்களென்றது இளேரபாக்கியானம்வரையில்; ஐந்நூறு ஸர்க்கங்கள் யுத்தகாண்டம்வரையும்.

வருக; இஃது அவர்கட்கு உடன்பாடாயின் ஜானகி நாளைக்காலையிலேயே இந்தச்சபையிலே பிரமாணஞ்செய்து தனது மாசிலாமனத்தூய்மை யாவருக்கும் நன்கு விளங்கச்செய்யலாகும்' என நியமித்தருளினார்.

இந்த அற்புதமானவார்த்தை தாசரதியினது திருவாக்கினின்று வெளிவந்தவுடனே தூதர்கள் விரைந்து வால்மீகிமுனிவர் இறங்கியிருக்குமிடத்திற்குச் சென்று, ஆங்கு அக்கினிபோல ஒளிவீசிச் சொலித்துக் கொண்டிருக்கும் அம்முனிவரை யடிபணிந்து வணங்கி, ஸ்ரீராமபிரான் அருளிச்செய்த மதுரமான வார்த்தைகளை மெதுவாக விண்ணப்பஞ்செய்தனர்கள். தூதர்களது வாய்மொழியைக் கேட்டு வால்மீகிமுனிவர் மன்னவனது மனோபாவத்தைத் தெரிந்துக்கொண்டு 'உங்களுக்குமங்களமுண்டாகுக, சக்கரவர்த்தித்திருமகன் சொன்னவண்ணமே யாகுக; ஸீதாதேவி அப்படியே பிரமாணஞ்செய்வாள்; குலமகட்குத் தெய்வங்கொழுநனேயன்றோ' எனத்தூதர்களிடமருளிச்செய்ய, அதனை அங்ஙனமே அவர்கள் ராஜஸந்நிதானத்திற்சென்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

மகரிஷியினது மொழியை மஹாராஜன் கேட்டு மகிழ்ச்சிகொண்டவராகி ஆங்குவந்து கூடியரிஷிகளையும் ராஜாக்களையும் நோக்கி, 'ஸபிகர்களே! நாளையதினம் ஸீதைதனது நல்லொழுக்கத்திற்கு நிதர்சனமாகப் பிரமாணஞ் செய்யப்போகிறாள்; சிஷ்யர்களுடனே ஸகலமானமுனிவர்களும், பரிஜனங்களுடன்கூடின பார்த்திவர்களும் அதனை நேரில்வந்து பார்க்கலாம்; இன்னும் *எவனேனும் காணக்கருத்துடையனாயின், அவனும் அதனை வந்து காணலாம்' என யாவருமறிய எடுத்துரைத்தனர். மன்னவனது மொழியைச் செவியுற்ற மகரிஷிகளனைவரும் நன்றுநன்றெனப் புகழ்ந்து கொண்டாடினார்கள்; இங்ஙனமுரைப்பது இப்புவியில் தேவரீர் ஒருவர்க்கேதகும், மற்றெவர்க்கும் தகாதெனப் பார்த்திவர்களனைவரும் போற்றிப்புகழ்ந்தார்கள். ராஜசிங்கமான ராகவசிங்கம் மறுநாள் காலையில் ஸீதை சபதஞ்செய்யப் போகிறாளென யாவருக்கு மிங்ஙனம் அறிவித்து வேந்தர்களையும் வேதியர்களையும் விடைகொடுத்தனுப்பினார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நூற்றெட்டாவது ஸர்க்கம்.

வால்மீகிமுனிவர் ஸீதாதேவியைச் சபைநடுவே யழைத்துவந்து,
அவள் பதிவிரதாசிரோமணியெனத் தாம் முதலில் பிரமாணஞ்செய்து,
பின்னர் அவள் சபதஞ்செய்ய அநுமதிவேண்டினது.

---

அன்று இராப்பொழுது கழிந்து பொழுதுவிடிந்து மற்றுநாள் மன்னவன் யாகசாலையைச் சேர்ந்தபிறகு ஸகலமான முனிவர்களையும் ராஜஸபைக்கு வரவழைத்தனர். வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காசியபர், விடாதுதவம்

---

* எவனேனுமென்றது, பிராட்டியின்மேல் பழிகூறிய பாவியைக் குறிக்கும்.

புரிந்த விசுவாமித்திரர், தவப்பெருமைபெற்ற தூர்வாஸர், புலஸ்தியர், சக்தி, பார்க்கவர், வாமனர், சிரஞ்சீவியான மார்க்கண்டேயர், பெரும்புகழ் படைத்த மௌத்கலியர், கர்க்கியர், சியவனர், தருமவித்தான சதாநந்தர், மஹாதேஜஸ்வியான பரத்துவாஜர், அக்கினி புத்திரர், நாரதர், பர்வதர், மிகப்பிரசித்தரான கௌதமர், காத்தியாயனர், சுயஞ்ஞர், அருந்தவ மியற்றுகின்ற அகஸ்தியர் ஆகிய இவர்களும், இன்னுமிவர்போன்ற பெருமை பெற்றவர்களான பல மகரிஷிகளும் அதிகமான குதூஹல முடையவர்களாகி அவ்விடம்வந்து சேர்ந்தனர்கள். மஹாபராக்கிரம சாலிகளான ராக்ஷஸர்களும், மஹாபலிஷ்டர்களான வானரர்களும் பிராட்டியைக்காணப் பேராவல்கொண்டவர்களாகி அங்குவந்து நிறைந்தனர்கள்; இவ்விதமாகவே நாநாதேசங்களி லிருந்துவந்த க்ஷத்திரியர்களும், வைசியர்களும், சூத்திரர்களும், ஆயிரமாயிரமாக வந்து கூடினார்கள். ஞானநிஷ்டர்களும், கருமநிஷ்டர்களும், யோகநிஷ்டர்களுமாகிய பிராம்மணர்களும் சீதையினது சபதத்தை காணுமாறு திரள்திரளாக வந்து கூடினார்கள். இவர்கள் இவ்வாறு மலைமலையாகத்திரண்டுவந்து கூடியவளவில், வால்மீகிமுனிவர் ஸ்ரீராமபிரானது நியமனத்தைச்சிரமேற்கொண்டு சீதாதேவியுடனே வெகு சீக்கிரமாக ராஜசபைக்கு எழுந்தருளினார். அவரது பின்புறத்தில் பிராட்டியார் ஸ்ரீராமபிரானையே தம்மனத்தில் தியானித்தவண்ணமாகக் குனிந்த சென்னியும் குவித்தகையுமாய்க் கண்களில் நீர்ததும்ப அவரைத் தொடர்ந்து சென்றனர். சதுர்முகனைத்தொடர்ந்து செல்லும் சுருதியென வால்மீகி முனிவருடனே வைதேஹி செல்வதை நோக்கியவளவில் அனைவரும் நன்றுநன்றென வியந்தார்கள். மைதிலியினது மஹத்தான துயரத்தைக் கண்டு சபையிலுள்ளவர் பலரும் ஒருவர்க்கொருவர் கலகலவெனப் பலவாறு பேசிக் கொள்ளலாயினர். ஸ்ரீராமபிரான் இங்ஙனம் செய்யத்தகுமோவெனச் சிலர் சொல்லிச் சோகமுற்றனர்கள்; பிராட்டியாருடைய பொறுமையை யாமென்னென்று சொல்வதெனப் பலர் புகழ்ந்தனர்கள்; இங்ஙனமொழுகுதல் இவர்களிருவருக்குமே தகுமென வேறு சிலர் வியந்தனர்கள்.

இவ்வண்ணமாகவிளங்கும் ராஜஸபையின் மத்தியில் மைதிலியாருடனே வால்மீகிமுனிவர் எழுந்தருளிச் சக்கரவர்த்தித்திருமகனாரை நோக்கி, 'ஹேதாசரதே! இதோநிற்கின்ற ஸீதாதேவி மஹாபதிவிரதை; எந்நாளும் மேலானதருமங்களையேமுக்கியமாய் அநுஷ்டித்துவருபவள். லோகாபவாதத்தினால் இவள் எனது ஆச்சிரமத்தினருகே தனியா விடப்பட்டனளன்றோ? அவ்வண்ணம் உலகநிந்தனைக்கு அஞ்சிய உமக்கு நம்பிக்கையுண்டாகுமாறு தனதுகற்புநிலை நன்குவிளங்க இன்று இச்சபைநடுவே சபதம் செய்யவந்திருக்கின்றனளாதலின், அதற்கு அனுமதிகொடுத்தருள்க. பாடுகின்ற இப்பாலகர்கள் இருவரும் உம்முடைய புத்திரர்களேயென நான்பிரமாணமாச் சொல்லுகிறேன். ஹேரகுநந்தன! யான்வருணபகவானுடைய பத்தாவதுபுதல்வன்; யான்பொய்மொழிதலென்பதை என்றைக்கும் உள்ளத்துமெண்ணியவ னல்லன். இந்தக் கண்மணிகள் உமதுகுமாரர்களே. யான்பல்லாயிரமாண்டு பெருந்தவம் புரிந்திருக்கின்றேன்; இம்மைதிலி குற்றமுள்ளவளாயின், அநேகமாயிரமாண்டு

№ 24. சீதாபிராட்டியார் பூப்பிரவேசம் செய்தருளியது. 



సీతాదేవి భూప్రవేశంచేయుట.

களாக யானியற்றியதவங்களின் பயனை யிழக்கக்கடவேன். மனோவாக்குக் காய மென்னும் முக்கரணங்களினாலும் ஒருபாபமும் செய்யாத தூய்மையுடைய வன்யான்; இவ்வுத்தமி ஒருபாபமுமறியாத பரிசுத்தையல்லளாயின், யான் அத் தூயதன்மையின்பயனையும் அனுபவியாது இழந்துபோகின்றேன். யானெனது பஞ்சேந்திரிய ஸாக்ஷியாயும் மனஸ்ஸாக்ஷியாயும் மிகப்பரிசுத்தையென ஆய்ந் துணர்ந்தே வனத்தில் தனியே நின்றுபுலம்பிய இப்பதிவிரதையை யழைத்து ஆதரித்துவந்தேன். லோகாபவாதத்திற்குப் பயந்திருக்கின்ற உமக்கு இப் பொழுது இவள் தான்சிறிதுமிழுக்கில்லாத ஒழுக்கமுடையவளெனவும், ஒரு பாவமு மறியாத பதிவிரதையெனவும், கொழுநனேதெய்வ மெனக்கொண்ட குலமகளெனவும் அறிவிப்பதற்குச் சபதம் செய்யவந்திருக்கின்றனள். இவளை நீர் வனத்தில் விடுத்தகாலத்திலேயே யான், இவளைச்சிறிதும் களங்கமற்ற குண பூஷணியெனவும், இவளது தூய்மை உமது திருவுள்ளத்திற்கே தெரிந்திருக்கை யிலும் லோகாபவாதத்தைக்கேட்டு மனங்கலங்கியே நீர் இவளை அங்ஙனம் துறந்தீரெனவும் யோகதிருஷ்டியால் அறிந்துகொண்டேன்' என யாவருக் கும் நன்கு விளங்கக் கூறினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றொன்பதாவது ஸர்க்கம்.

*ஸ்ரீராமபிரான் ஸீதாபிராட்டியைச் சபைநடுவே பிரமாணஞ் செய்யும்படி கூறியதும், அதனைக்கேட்கப்பொழுது பிராட்டி தாம் கற்புநிலை தவறாதவரென யாவருக்கும் நன்கு விளங்க மூன்றுதரம் சபதஞ்செய்து தன்னை யழைத்துக்கொள்ளுமாறு பூமாதேவியை வேண்டிப் பூமிக்குள் புகுந்ததும், அதுகண்டு விண்ணவரும் மண்ணவரும் வியப்புற்றதும்.*

---

வால்மீகிமுனிவர் இவ்வாறு மொழிந்தது கேட்டுக் காகுஸ்தன் அந்த மஹா ஸபையின் மத்தியிலே அஞ்சலிஹஸ்தராக நின்று மைதிலியையும் குளிர க்கடாக்ஷித்து உத்தரமருளிச்செய்கின்றனர். 'ஹேமஹாபாக! எல்லாத்கருமமு முணர்ந்த தேவரீரது திருவுள்ளப்படியே இவள் இங்குச் சபதம்பண்ணலாம். தேவரீர் உறுதியாகச் சொன்ன ஸத்தியவாக்கினாலேயே அடியேனுக்கு நம்பிக் கையுண்டாகிவிட்டது; அன்றியும்* முன்னம் தேவதைகளுடைய ஸன்னிதானத் தில்நடந்த காரியத்தினாலேயே இவளிடத்தில் அடியேனுக்குச் ஸந்தேஹம் நீங்கியது. ஆங்கு அப்பொழுதுசெய்த சபதத்தினால் அடியேன் விசுவாஸ முடையோனாகியே நமதுகிரஹத்திற்கு இவளையழைத்து வரலாயிற்று. லோ காபவாதம் மிகக்கொடியதன்றோ? இவள்சிறிதும் குற்றமில்லாதவளெனயான்

---

* ராவணஸம்ஹாரமானபின் பிராட்டி அக்கினிப்பிரவேசஞ் செய்தகாலத்தில் இந்திராதி ஸகல தேவதைகளும் பிரத்தியக்ஷமாகிப் பதிவிரதா சிரோமணியான பிராட்டியைப் பரிக்கிரகிக்குமாறு வேண்டினது.

நன்குணர்ந்தவனுயினும் உலகநிந்தைக் கஞ்சியே இவளைக் கைவிடவேண்டியதாயிற்று. பிரம்மநிதியானதேவரீர் அப்பிழையைப் பொறுத்தருளவேண்டுகின்றேன். இரட்டையராக ஜனித்த இந்தச்சிறுபாடகர்கள் அடியேனுடைய புதல்வர்களேயென்பது மறிந்துகொண்டேன். இவள் இப்பொழுது மறுபடி இம் மஹாஸபையிலேதான் மிகப் பரிசுத்தமானவளென்பதை வெளியிட்டு எனக்குத் தன்னிடம் விசுவாஸமுண்டாகுமாறு செய்துகொள்ளக் கடவள்' என வருளிச்செய்தனர்.

தாசரதியினது திருவுள்ளமின்னதெனத் தெரிந்துகொண்டு ஸீதாபிராட்டியார் சபதஞ்செய்வதைக் காணும்பொருட்டு இந்திராதி ஸகல தேவர்களும் பிதாமஹரை முன்னிட்டு ஆங்கு வந்துசேர்ந்தனர்கள். பன்னிரண்டு ஆதித்தியர்கள், எட்டு வசுக்கள், பதினொரு ருத்திரர்கள், அசுவினீ தேவர்கள், மருத்துக்கள், கந்தர்வர்கள், அப்ஸரசுக்கள், ஸாத்தியதேவர்கள், விச்வேதேவர்கள், தேவரிஷிகள் ஆகிய அனைவரும் வந்துகூடினர்; நாகர், சுபர்ணர், ஸித்தர் முதலியோர்களும் ஸீதாபிராட்டியார் சபதம் செய்கின்றாரென்பதைக் கேட்டு நடுங்கியவர்களாகி விரைந்து ஓடிவந்தனர்கள்.

தேவர்களும் முனிவர்களுமாகிய பலரும் இங்ஙனம் வந்துகூடியதுகண்டு காகுஸ்தன் பின்னுமொருதரம் அவர்களைநோக்கி, 'வானத்தவர்களே! வால்மீகிமகாரிஷியினது நிஷ்கல்மஷமான வார்த்தைகளால் வைதேஹி மகாபரிசுத்தையென்பது முன்னமே வெளிப்பட்டதாயினும், இன்னுமொருதரம் இவள் இம்மஹாஸபையில் சபதஞ்செய்து எனக்குத் தன்னிடம் பிரீதியுண்டாகுமாறு செய்துகொள்ளக் கடவள்' என மொழிந்தனர். அப்பொழுது வாயுதேவன் திவ்வியமான பரிமளத்துடனே மநோஹரமாயும் மங்களமாயும் வீசிச் சபையோர்அனைவரும் ஆநந்திக்குமாறு செய்தனன். திடீரென வாயு அவ்வண்ணம் வீசிய அற்புதத்தைக் கண்ணுற்றுப் பற்பலதேசங்களினின்றும் ஆங்குவந்து குழுமிய மானிடர்களனைவரும், இஃதென்ன? கிருதயுகமோ! வெனவியப்புற்று நின்றனர்கள்.

இப்படி ஸகலமானவர்களும்வந்துநெருங்கிய மஹாஸபையின்மத்தியிலே அரையில் காஷாயவஸ்திரம் தரித்த வைதேஹி அச்சபையோர் அனைவரையும் நோக்கிக் கைகூப்பிக்கொண்டு தலைகுனிந்து தரையைநோக்கிய வண்ணமாய்

యథాహంరాఘవాదన్యం మనసాపినచిన్తయే।
తథామేమాధవీదేవీ వివరందాతుమర్హతి॥
మనసాకర్మణావాచా యథారామంసమర్చయే।
తథామేమాధవీదేవీ వివరన్దాతుమర్హతి॥
యథైతత్సత్యముక్తంమే వేద్మిరామాత్పరంనచ।
తథామేమాధవీదేవీ వివరన్దాతుమర్హతి॥

யதாஹம்ராகவாதன்யம் மநஸாபிநசிந்தயே।
ததாமேமாதவீதேவீ விவரந்தாதுமர்ஹதி॥

மநஸாகர்மணாவாசா யதாராமம்ஸமர்ச்சயே |
ததாமேமாதவீதேவீ விவரந்தாதுமர்ஹதி ||
யதைதத்ஸத்யமுக்தம்மே வேத்மிராமாத்பரம்நச |
ததாமேமாதவீதேவீ விவரந்தாதுமர்ஹதி ||

'அடியேன் சக்கரவர்த்தித் திருமகனாரையன்றி மற்றெவரையும் மனத்தினாலுஞ் சிந்தியாதவளாயின், இப்பூமாதேவி எனக்கு இடங்கொடுக்கக் கடவள்; அடியேன் எனது மனமொழி மெய்களால் என்றும் இராமனையே பூஜித்திருப்பவளாயின், இப்பூமாதேவி எனக்கு இடங்கொடுக்கக் கடவள்; யான் உரைத்தவை யாவும் உண்மையேயாயின், இராமனையன்றி மற்றெவரையும் யானறியாதவளாயின், என்னைப்பெற்ற பூமாதேவி எனக்குத்தன்னுள் இடங்கொடுக்கக்கடவள்' என இவ்வாறு சபதஞ்செய்து நின்றனள். ஸீதாபிராட்டியார் இவ்வண்ணம் மூன்றுதரம் சபதஞ்செய்யுமளவில், பூமியினின்றும் ஒப்புவமையில்லாத திவ்வியமான சிங்காதனமொன்று, திவ்வியமான சரீரம்பெற்று அமிதமான ஆற்றலுள்ளனவாகிய திவ்விய சரீரமுள்ள நாகங்களால் திவ்விய ரத்தினங்களணிந்த முடிகளில் தாங்கப்பெற்று வெளித்தோற்றியது. உடனே பூமிதேவிவந்துதோன்றிச் சீதாபிராட்டியைநல்வரவுகொண்டாடி அன்புடன்போற்றிப் புகழ்ந்து தனது இரண்டு திருக்கரங்களாலு மணைத்தெடுத்து அச்சிங்காஸனத்தின்மீது வைத்துக்கொண்டனள். அவ்வாஸனத்தில் வீற்றிருந்தவாறே பிராட்டி * பூதலத்தினுள் பிரவேசிக்க, அதுகண்டு விண்ணவர்கள்

* திவ்யசிம்மாஸனத்தில் பிராட்டி வீற்றிருந்த வளவில், ஆங்கு பெரிய திருவடி வந்து தோன்ற, பிராட்டியார் அவர்மீது ஏறி யருளித் தமது திவ்விய தாஸீகணங்கள் உபசரிக்க, அர்ச்சிராதி மார்க்கமாகப் பரமபதத்திற் கெழுந்தருளினர் - எனப் பாத்மபுராணம் சொல்லுகிறதே; இவ்விரண்டு மொன்றுக்கொன்று பொருந்துவ தெப்படியெனின், முதலில் பூமியில் புகுந்து பிறகு பெரிய திருவடியின்மேல் பரமபத மெழுந்தருளினரென்பது இதன்கருத்தாதலின், பொருந்துமென்பர்.

ஸ்ரீ வைகுண்டநாதனை நாராயணன் சிருஷ்டிஸ்திதி முதலான லீலைகளில் ஆசைகொண்டதுபோலவே ஒருகால் யுத்தஞ்செய்யவும் அதிகமான ஆசைகொண்டு, தம்முடன் எதிர்த்து யுத்தஞ்செய்யு மாற்றலுள்ளவரை யிவ்வுலகினி லெவரையுங் காணாது, தமது பார்ஷதரான ஜயவிஜயர்களே தமக்கு நிகரானவரென்று தெரிந்து, பிராட்டியின் மூலமாயும் ஸநகாதிமஹரிஷிகள் மூலமாயும் அவர்களுக்குச் சாபமுண்டாகும்படி செய்து, அவர்களை முதலில் ஹிரணியகசிபு ஹிரணியாக்ஷனாகவும், பிறகு இராவணகும்பகர்ணர்களாகவும், சிசுபாலதந்தவக்கிரர்களாகவும் மூன்றுஜன்மம் பூமியில் பிறக்குமாறு நியமித்தருளி, ஒவ்வொருதடவையும் தாம் பிராட்டியுடனே பூமியில் திருவவதரித்து யுத்தஞ்செய்து அவர்களை ஸம்ஹரித்தருளினர்.

இராவணவதார்த்தமான இந்த ஸ்ரீராமாவதாரத்தில் பிராட்டி இராவணனிடத்தில் அதிகமான அருளுக்குடையளாய் அவனைக் கடாக்ஷிக்கத் திருவுள்ளம்பற்றி, ஸ்ரீ மஹாவிஷ்ணுவே தனக்கு மருமகனாகக் கிடைக்கவேண்டுமெனக் கடுந்தவம்புரிந்த குசத்துவஜருக்குத் திருமகளாய் அவரது வேதவாக்கினின்று வேதவதியெனப்பெயர் பூண்டு அவதரித்து இராவணனுக்கு அந்த இராக்ஷஜன்மம் அதிசீக்கிரமே யொழியுமாறு குளிரக் கடாக்ஷித்து (உத்தர+ணம் ருO-ம் பக்கம், கஎ-ம் ஸர்க்கம் பார்க்க), பிறகு இலங்காபுரியிலேயே அயோனிஜையாய் ஒரு தாமரைமலரில் தோன்றி இராவ

பிராட்டியின்மீது ஓயாது பூமாரிபொழிந்து நன்றுநன்றெனப் புகழ்ந்து கொண்டாடினார்கள். சீதாபிராட்டி பூதலத்தினுள் புகுந்தபுதுமைப் பார்க்க வந்த விண்ணவர்கள் வானத்தினின்று வியப்புற்றவர்களாகி 'ஆ! ஆ! இச் சீதையினது சீலமல்லவோ சீலம்! இஃது இப்பிராட்டிக்கே ஏற்கும்' எனப் பலவாறுபுகழ்ந்து போற்றினர். யாகசாலையில் வந்துகூடிய முனிவர்களும் மன்னவர்களும் மற்றுமுள்ள பலரும் அவ்வதிசயத்தைக் கண்டு வெகுநேர மளவும் யாதுந்தோற்றாது ஆநந்தித்துக்கொண்டேயிருந்தனர்கள். மண்ணிலும் விண்ணிலுமுள்ள சராசரங்கள் அனைத்தும், ஆகாயத்தில்நின்ற அசுரர்களும், பாதாளத்திலிருந்த பன்னகர்களுமாகிய யாவரும், சிலர் பிராட்டிக்குண்டான அபவாதமொழிந்ததென்று அகமகிழ்ந்து ஆநந்தக் கூச்சலிட்டனர்; சிலர் ஒன் றுந் தோன்றாது அங்ஙனமே தியானித்துக்கொண்டு நின்றனர்கள்; சிலர் கண் கொட்டாது காகுஸ்தனையே விழித்து நோக்கினர்கள்; சிலர் பிரஞ்ஞையற்ற வர்களாய்ப் பிராட்டியையே தியானித்துக்கொண்டு நின்றார்கள். மைதிலி மஹீ தலத்தில் புகுந்தது கண்டவளவிலே இங்ஙன மனைவரும் அதிகமான ஆச்சரிய மடைந்தவர்களாக, ஒருமுகூர்த்தகாலம் இவ்வுலகம் முழுமையுமே மோஹத் தில் முழுகியதுபோலாகிவிட்டது.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றொன்பதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நூற்றுப்பத்தாவது ஸர்க்கம்.

வைதேஹியினது வியோகத்தைத் தாங்கமுடியாமல்
தாசரதி துன்புற்றது கண்டு பிரும்மாதிதேவர்கள் அங்குவந்து
பூர்வவிருத்தாந்தத்தை நினைப்பூட்டி அவரது துயரத்தைத் தணித்தது.

---

வைதேஹி வசுதாதலத்தில் புகுந்தபொழுது வானரர்களெல்லோரும் ஆ! ஆ! எனக் கூச்சலிட்டனர்கள்; முனிவர்களெல்லோரும் ஸ்ரீராமபிரானது

ணன் தம்மை ஸேவிக்குமாறு திருவருள்புரிந்து (உத்தர + ணம் ௫௧ - ம் பக்கம் பார்க்க.), கடைசியில் ஜநகமகாராஜனது யாகபூமியில் சீதையாகத்தோன்றி, பகவ தவதார மான ஸ்ரீராமபிரானைப் பாணிக்கிரஹணஞ்செய்துகொண்டு, குசத்துவஜரது மனோ ரதத்தையும் நிறைவேற்றி, அப்பால் இராவணனது இலங்காபுரிக்கே யெழுந்தருளி, அந்த பக்தனது பிசிதாசனஜன்ம மொழிந்தாலன்றித் திரும்புவதில்லையென்று ஒரே மூர்க்கமாக அவ்விடத்தி லெழுந்தருளியிருந்தனர். இராவணனும் தன்னுடைய சாபம் சீக்கிரம் விமோசனமாகித் தான் பரமபதம்போய்ச் சேரவேண்டுமென்ற பேராசையி னாலேயே அடிக்கடி பிராட்டியைப் புருஷாகாரமாகப் பற்றப் பிரயத்தனப்பட்டான் (உத்தர + ணம் ௬௫ - ம் ஸர்க்கம், ௧௪௮ - ம் பக்கம் பார்க்க.) இராவண ஸம்ஹார மானபின்பு பிராட்டி திருவயோத்திக் கெழுந்தருளி, தாம் இப்பூமியில் திருவவதரித்த காரியம் நிறைவேறியதாதலின், இனி இங்கிருக்கத் திருவுள்ளமின்றித் தன்னடிச் சோதிக் கெழுந்தருளினாரென வறிக. இங்ஙனம் ஸ்ரீராமபிரானை விட்டுப் பிராட்டி பிரிந்தது பிருகுமுனிவரது சாபத்தைப் பரிபாலிப்பதற்காகவுமாம். (உத்தர + ணம் ௫௯ - ம்ஸர்க்கம் ௧௮௫ - ம் பக்கம் பார்க்க.)

ஸன்னிதானஞ்சேர்ந்து, இதென்ன ஆச்சரியமெனப் பிரமித்துநின்றார்கள். தாசரதியோ, ஒரு தண்டத்தை யூன்றித் தலைகுனிந்து கண்ணீர்மல்கி மனஞ் சோரநின்று அழுதரற்றிக் கோபமும் சோகமும்விஞ்சப் பூமிதேவியை நோக்கி, 'ஹே வசுந்தரே! ஸ்ரீதேவியெனச் சிறந்தரூபவதியாக விளங்கும் வைதேஹி என் கண்ணெதிரிலேயே காணாமற் போனதனால், ஒருநாளும் உண்டாகாத விசன மிப்பொழுது உண்டாகி என்மனத்தை மிக வருத்து கின்றது. முன்னம் நெடுங்கடலுக்கப்பால் இலங்காபுரியிற் சென்றிருந்த சீதையைச் சிறைநீக்கிக் கொணர்ந்த எனக்கு இப்பொழுது இப்பூமியினின் று மவளை யெடுத்துக்கொள்வது ஒரு பெரியகாரியமோ? அன்று; ஆத லின், நிலமகளே! நீயே என்னிடம் மைதிலியை அழைத்துக்கொணர்ந்து விடு வது நலம். அங்ஙனஞ் செய்கின்றனையா, எனதுகோபத்தை யுன்மேல் யான் செலுத்தவா? வேண்டாம், நீ எனக்கு மாமியாகின்றனை; ஜனகமஹாராஜன் கலப்பை கைக்கொண்டு உழுதபோழ்து உன்னிடத்தினின்று மல்லவோ சீதையைப் பெற்றனர். ஆதலின் நீயே உன்மகளை யென்னிடம் அழைத்து வருக; இல்லையாயின், அவளுக்குப்போல் எனக்கும் உள்ளேபுக இடங்கொடு. பாதாளத்திலோ, நாகலோகத்திலோ, வைதேஹியுடன்கூடி யானும் வஸிக்கின் றேன்; வேண்டாம், ஸீதையை நீயே இவ்விடம் அழைத்துவா; அவள் பொருட்டு யான் அதிகமான மோஹங்கொண்டிருக்கின்றேன். ஸீதையை உள்ளபடி நீ யென்னிடங்கொண்டு சேர்க்கத் தவறுவையாயின், நீ நிலைகுலையு மாறு கிரிகளுங்கானகங்களு முள்ளிட்ட இந்நானிலமுழுமையும் நாசமாக்கி விடுகின்றேன்; யாவுமழிந்துபடுக' என இவ்வண்ணம் சினமும் சோகமும் மேலிட்டுக் காகுஸ்தன் கதறுமளவில், ஸகல தேவதைகளுடன் சதுர்முகன் அவ்விடத்திற்கு வந்து ரகுவீரனை நோக்கி, 'ஹே ராம! ஹே ரகுநாதா! மேற் கொண்ட விரதத்தை விடாது நிறைவேற்றும் உத்தமனே! தேவரீர் இங்ங னம் வருந்தலாகுமோ? விரோதிகளை வெல்லுகின்ற வீரனே! தேவரீரது பூர்வ சொரூபமாகிய விஷ்ணுபாவத்தையும், தேவரீர் தேவதைகளுடனேகூடி முன்னம் நிர்ணயித்த காரியத்தையும் நினைத்துக்கொள்க; அடியேன் இதனை இங்ஙனம் நினைப்பூட்டவும் வேண்டுமோ? இத்தருணத்தில் தேவரீரது நிகரற்ற நாராயண ரூபத்தை நினைந்து சோகந்தணிக. அணுவளவுமிழுக்கில்லாத உத் தமியான ஸீதாபிராட்டி தேவரீரது திருவடிகளைப் பற்றியிருந்த பாக்கியவசத் தினால் தேவரீரது ஆதியுருவத்தையடைய ஆவல்கொண்டவளாகி இப்பொழுது ஸ்ரீவைகுண்டத்திலினிது வீற்றிருக்கின்றனள். தேவரீர் பரமபதத்தில் அப்பிரா ட்டியுடனே சேரலாகும்; இதிற்சந்தேகமின்று. இப்பொழுது அடியேன் இச் சபைநடுவே விண்ணப்பஞ் செய்யவேண்டுவதொன்று உளது; அதனைத் திருச் செவி சார்த்துக: ஹேராம! காவியங்கள் பலவற்றினும் உத்தமமான காவிய மாகிய தேவரீரது சரித்திரமான இந்த மஹா காவியமே முழுமையும் கேட் கப்படுமாயின், எல்லாவற்றையும் தேவரீருக்கு விளங்க நினைப்பூட்டு மென்ப தற்குச் சந்தேகமிலது. ஹே வீர! தேவரீரது திருவவதாரம் முதற்கொண்டு சுகதுக்க ரூபமாக நடந்த தேவரீரது சரிதமும், இனி நடக்கப்போகிற உத்தர

சரிதமுமாகிய யாவும் வால்மீகிமுனிவன் எனது அனுக்கிரஹத்தினல் அற்புதமாகச் செய்திருக்கின்றனன். இதுவே ஆதிகாவிய மென்னப்படும்; உமது சரிதரூபமான இதில் யாவும் அமைந்திருக்கின்றன. ரகுகுலதிலகரான தேவரீரொருவர் தவிர மற்றெவரும் காவியத்திற்குக் கதாநாயகனுகின்ற பெருமை வாய்ந்தவனல்லன். மிகவும் அற்புதமாயிருக்கின்ற ஸத்தியமாகிய தேவரீரது இந்த திவ்விய சரிதத்தை யான் முன்னமே ஸகல தேவர்களுடனும் ஸந்தேஹமறக் கேட்டுக் களித்திருக்கின்றேன்; ஆதலின், ஹே ராகவ! தேவரீரும் மிகுந்துள்ள கதையை விளக்கும் உத்தர ராமாயணத்தையும் முனிவர்களுடனே கூடிக் கேட்டருள்க. ஹே காகுஸ்த! உத்தம காவியமான இது பரமரிஷியான தேவரீரொருவரே திருச்செவி சார்த்தத் தகுவதேயன்றி மற்றொருவர் கேட்கத் தகுவதன்று.' என இவ்வாறு கூறி ஸ்ரீராமபிரானைச் சமாதானப்படுத்திப் பிரமதேவன் எல்லாத் தேவர்களுடனும் கூடி விடைபெற்று விண்ணுலகஞ் சென்றனன். பிரம்மலோகத்தவர்களான மகரிஷிகளோ, இனி நடக்கப்போகின்ற ஸ்ரீராகவனது சரிதமாகிய உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தைக் கேட்கக் காதல் கொண்டவர்களாகி அம்புயத்தோனிடமனுமதி பெற்று அவ்விடம் திரும்பிவந்தனர்கள்.

(அத்தருணத்தில் அவனியினின்றும் அசரீரிவாக்கொன்று உண்டாகியது: ஹே ராம! வீணன வருத்தத்தை மேற்கொள்ளாது மனமகிழ்க; அன்றுவிதித்த விதியின் வண்ணமேயன்றோ யாவும் நடந்தேறுகின்றன. ஆதலின் தேவரீர் வைதேஹியைக் காணக் காதல் கொள்வது வீண். அத்தேவி பரமபதம் சென்று சேர்ந்தனளாதலின் இனியவளைக் காண்பதரிது. இம் மண்ணுலகத்து மானிடரனைவரும் அனுபவிக்கும் எல்லாச்செல்வமும் அந்தலக்ஷ்மீகடாக்ஷமேயன்றோ? பிதிருதேவர்களுக்கு ஸ்வதையாகவும், அமுதமருந்திய அமரர்கட்குத் திருப்தியாகவுமிருக்கின்ற இம்மஹாலக்ஷ்மி ஸ்ரீமஹாவிஷ்ணுரூபியான தேவரீரது வக்ஷஸ்தலத்தில் என்றும் விட்டு நீங்காது வஸிக்கின்றனள்; பரமபதத்தில் வஸிக்கும் ஸித்தர்களுக்கு சிரோபூஷணமாகவும் அவள் வீற்றிருக்கின்றனள். ஆதலின் மைதிலியினிடமிருந்து தேவரீரது மனத்தைத்திருப்புக. வைதேஹியைக்காண விருப்பமாயின், அவளது குமாரர்களான இக்குசீலவர்களைக்கண்டு களிப்படைக; ஸ்ரீவால்மீகிமுனிவர் செய்தருளிய ஸத்தியவாக்கான மஹாமங்களமாகிய ஸ்ரீமத் ராமாயணத்தையும், இனி நடக்கும் சரிதமாகிய உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தையும் செவிக்கொண்டு மனமகிழ்கவெனப் பங்கயாஸனன் பகர்ந்தனனன்றோ?" என்று கூறியது.) அந்த அசரீரிவாக்கையும் அம்புயத்தோன் உணர்த்தியதையும் செவிக்கொண்டு சக்கரவர்த்தித் திருமகனர் வால்மீகி முனிவரை நோக்கி, 'முனிவர் பெருமானே! எனது உத்தரசரிதத்தைச் செவிக்கொள்ளுமாறு பிரமலோகத்து முனிவர்களும் வந்து காத்திருக்கின்றனர்; நாளைய தினம் அதனை நடத்தல்வேண்டும்' என மொழிந்து அங்குள்ள யாவருக்கும் விடைகொடுத்துக் குமாரர்களைக் கையில் பிடித்துக்கொண்டு பர்ணசாலைச்

கெழுந்தருளினர். அன்று இராத்திரி முழுமையும் மைதிலியைப்பற்றிய மன விசாரமே மேலிட்டவராகித் திருக்கண்வளர்ந்திருந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப்பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதினேராவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபத்திரர் மற்றுமுள்ள இராமாயணகதையைக்
குசலவர்கள்பாடத் திருச்செவி சார்த்தியதும்,
பிறகு தம்மாயுளளவும் பொற்சீதையையே பத்தினியாக்கொண்டு
பற்பல யாகங்கள் செய்தருளியதும்,
கௌஸலியை முதலியமாதாக்கள் மூவரும் தேகவியோகமாக
அவர்களுக்குச் செய்யவேண்டிய சரமக்கிரியைகளைச் செய்துமுடித்ததும்.

---

இராப்பொழுது கழிந்து மறுநாள் உதயமான வளவில் அயோத்திமன்னன் முனிவர்களெல்லோரையும் அழைப்பித்து, அவர்களனைவரும் தத்தமக்குரிய ஆஸனங்களில் எழுந்தருளியிருந்தபின்னர் மற்றக்காவியத்தையும் கானம் பண்ணுமாறு குசீலவரான குமாரர்கட்குக் கட்டளையிட, அவர்கள் உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தை முறையே பாடத்தொடங்கினர்கள். ஸத்தியத்தினது மகிமையால் மைதிலி மஹீதலத்தினுள் புகுந்த பின்னர் ஸ்ரீராமபிரான் பிராட்டியினது பிரிவுக்கு ஆற்றாது மனந்தளர்ந்தவராயினர். வைதேஹியைக் காணாத காகுஸ்தனுக்கு இவ்வுலகம் முழுவதுமே சூனியமாகத்தோற்றியது. அதனால் அவர் அச்சோகம் தணியாதவராகவே அவ்யாகத்தை விதிமுறைப்படி நிறைவேற்றி அவரவர்க்குச் செய்யவேண்டிய ஸம்மானங்களைச் செய்து ஸகலமான ராஜாக்களையும் வாநர ராக்ஷஸர்களையும் மற்றுமுள்ளபலரையும் விடைகொடுத்தனுப்பிவிட்டு மைதிலியின்மோகமே மனத்திற்குடிகொண்டவராகி அயோத்தியாபுரிக்கு எழுந்தருளினர். அதன்பின்னர் அயோத்திமன்னர் தமது குமாரர்களிருவருடனும்கூடிக் களித்து அநேகம்யாகங்களியற்றி அறம்வளரச் செய்துவந்தனரேயல்லது, மைதிலியையன்றி மற்றொருத்தியை மனையாட்டியாக மணம்புரிய மனமிசைந்திலர். அவரியற்றிய ஒவ்வொருயாகத்திற்கும் பொற்சீதையே பத்தினியாகநின்றனள். பொற்சீதையையே கொண்டு பதினாயிரம் ஆண்டளவு அயோத்தியாதிபதி அசுவமேதயாகங்கள் அநேகம் செய்தருளினர். அவையன்றியும் அவற்றினும் பதின்மடங்காய் வேண்டிய பொருள் செலவுசெய்து வாஜபேயம், அக்னிஷ்டோமம், அதிராத்ரம், கோஸவம் முதலான இன்னுமநேகம் யாகயக்ஞியங்களுமியற்றி விசேஷமான தக்ஷிணைகள் கொடுத்து அறநெறிதவறாது மன்பதைகளைப் பாதுகாத்துவந்தனர்.

ஸ்ரீராமபிரான் தருமமே தழைத்தோங்க ராஜ்யபரிபாலனஞ் செய்துவருகையில் இவ்வாறே வெகுகாலஞ்சென்றது; அக்காலத்தில், கோஸலதேசாதிபதியானகாகுஸ்தனை வாநரர்களும்இராக்கதர்களும் பிரதிதினம்வந்துஸேவித்து

அவரை யகமகிழச்செய்து அவரது ஆணைக்கு உட்பட்டு நடந்துவந்தனர்கள். ராமராச்சியத்தில் காலந்தவறாது மாதம் மும்மாரிபொழிய, ராஜ்யமெங்கும் சுபிக்ஷமாகியது; திசைகளெல்லாம் நிர்மலமாயின; நாட்டிலும் நகரத்திலு முள்ள நாநாவிதமான ஜனங்களும் புஷ்டியும் துஷ்டியுமடைந்தனர்கள்; அந்நாளில் எவர்க்கேனும் அகாலமரணமென்பதே ஸம்பவித்ததில்லை; ஒருவர்க்கும் எவ்விதமானவியாதியு முண்டானதில்லை; ஸ்ரீராமபிரான் அரசுபுரிகையில் ஒருவிதமான அநர்த்தமும் நேரிட்டதில்லை.

இவ்விதமாகவே பலவாண்டுகள் கழிகையில், ஸ்ரீராமபத்திரனைப் பெற்ற பாக்கியவதியான கௌஸல்யாதேவி புத்திரர்களும் பௌத்திரர்களும் புடைசூழ்ந்திருக்கச் சுவர்க்கலோகமடைந்தனள்; அதன்பிறகு சீக்கிரத்திலேயே சுமித்திராதேவியும், * பெரும்புகழ்படைத்த புண்ணியவதியான கைகேயியும் பற்பலதருமங்களைச்செய்து சுவர்க்கம்புகுந்து ஆங்குதங்கணவனை தசரதசக்கரவர்த்தியுடனேகூடி எல்லாநன்மைகளையும்பெற்றுக்களிப்புற்றிருந்தனர்கள். ஸ்ரீராமசந்திரரும் அவர்கட்குச் செய்யவேண்டிய சரமக்கிரியை முதலான எல்லாவற்றையும் யாவர்க்கும் வேற்றுமையின்றி ஒரேசீராகநடத்தி அந்தந்தக் காலத்தில் புரியத்தகுவனவாய தான தருமங்கள்பலவும் குறைவற அந்தணர்கட்கும் அருந்தவமுனிவர்கட்கும் செய்தருளி, பிதிருதேவர்கட்குப் பிரீதியை விருத்திசெய்பவையான பிண்டபிதிருயஞ்ஞம் முதலியவற்றையும்செய்து ஸந்தோஷிப்பித்தனர். இவ்விதமாகவே ஸ்ரீராமசந்திரன் பலவிதமான யாகங்கள் செய்தருளித் தருமத்தைவிருத்திசெய்து வருகையில் அநேகமாயிரம்வருஷங்கள் கழிந்தன.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப்பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பன்னிரண்டாவது ஸர்க்கம்.

### கந்தர்வவிஜயம்.

கேகயதேயத்திற்குச் சமீபத்திலுள்ள கந்தருவதேசத்துக் கந்தருவர்கள் அதிகமான உபத்திரவஞ்செய்வதாக யுதாஜித்து ஸ்ரீராமனுக்குத் தெரிவித்ததும், அக்கந்தர்வர்களை வெல்லும்பொருட்டுக் காகுஸ்தன் பரதனது புத்திரர்களைப் பரதனுடனே கேகயதேசமனுப்பியதும்.

---

இவ்வண்ணமே சிலகாலஞ்செல்லுகையில் ஒருகால் கேகயதேசாதிபதியான யுதாஜித்து மகாராஜா ஸ்ரீராமனுக்குப்பரிசாகப் பலவாயிரம் நற்பரிகளும் கம்பளங்களும் உத்தமமான ரத்தினங்களும் விசித்திரமான வஸ்திரங்களும் அற்புதமான ஆபரணங்களும் கொடுத்துத் தமது புரோஹிதராகிய அங்கிரஸ

* இராவணாதி ராக்ஷஸர்களுடைய ஸம்ஹாரத்திற்கு இவளே முதற்காரணமாகநின்றதனால், இவளைப் புகழ்படைத்த புண்ணியவதியென்றார்.

முனிவரின்புத்திரரான கார்க்கிய முனிவரைச் சக்கரவர்த்தித் திருமகன்ஸன்னிதானத்திற்கு அனுப்பினர். தம்முடைய நல்லம்மான் அசுவபதியனுப்பிய மஹத்தான தனத்துடனே பிரம்மரிஷியான கார்க்கிய ரெழுந்தருளுவது கேட்டு அயோத்தியாதிபதி அநுஜர்களுடனே ஒருநாழிகைவழிதூரமெதிர்கொண்டுசென்று,தேவேந்திரன்தேவகுருவைப்பூஜிக்குமாறு அவர்க்குவந்தனை வழிபாடுகள்செய்து அவரைத்தமது அரண்மனைக்கு அழைத்துவந்துதம்மாதுலர் கொடுத்தனுப்பிய மேலானபொருள்களைப் பிரீதியுடனேபெற்றுக்கொண்டு அம்முனிவரையோர் ஆஸனத்திலெழுந்தருளப்பண்ணியொவ்வொருவர்யோக க்ஷேமமும் வினவியபின்னர் அவரைநோக்கி, ‘ஹேபகவன்! நமது நல்லம்மான் நமக்கு யாது நியமித்தருளினர்? ஸாக்ஷாத் பிருஹஸ்பதிபோன்றதேவரீர் இவ்வளவுதூரமெழுந்தருளிய விசேஷம்யாது?’ எனவினவ, அம்முனிவர் அற்புதமாக மறுமொழிகூறலாயினர். ‘ஹே மஹாபாஹோ, ரகுகுலதிலகமே! யுதாஜித்து உமக்கு அன்புடனே சொல்லியனுப்பிய விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன், செவிக்கொள்க. நமது நாட்டிற்கு அருகில் விசேஷமான விளைபொருள்களுடனே கூடிய மிகவும் செழிப்புற்றதான கந்தர்வதேசம் சிந்துநதியின் இருகரையும் பரவியிருக்கின்றதல்லவா? அந்நாட்டைச் சைலூஷனது மக்களும் மஹா பலிஷ்டர்களும் போர்த்தொழிலில் கைதேர்ந்தவர்களாய்ப் படைக்கலங்களைக் கைக்கொண்டவர்களுமான கந்தர்வர் அனேகமாயிரத்தவர் கைப்பற்றிக்கொண்டு பார்த்திவர்கள் பலரைப் பாதித்துவருகின்றனர்கள். ஆதலின் ஹே காகுஸ்த! நீர் உடனே அந்தக்கொடிய கந்தர்வர்களைவென்று அவர்களது நகரத்தை நமது ராஜ்யத்துடனே சேர்த்துக்கொள்ளவேண்டும். இக்காரியம் உம்மாலன்றி மற்றெவராலும் முடியத்தகுவதன்று. அந்நாடு மிகச் செழிப்புடையதாதலின், ஹே மஹாபாஹோ! தேவரீர் இக்காரியத்திற்கு உடன்படுதல்வேண்டும்; யான் உமக்கு எப்பொழுதும் அஹிதமுரைப்பவனல்லேன்—என உமது நல்லம்மான் சொல்லியனுப்பினர்’ என மொழிந்தனர்.

மாதுலர் சொல்லியனுப்பிய விருத்தாந்தத்தை மகரிஷியின் மூலமாகக் கேட்டருளிய காகுஸ்தன் களிகூர்ந்தவராகிப் பரதனை விழித்து நோக்கிப் பிறகு அம்முனிவர்பெருமானைப்பார்த்துக் கைகுவித்து, ‘ஸ்வாமி! அங்ஙனமேயாகுக. நம் பரதனது மக்களான மஹாவீரர்களாகிய தக்ஷனும் புஷ்கலனும் அத்தேசத்திற்கு வருகின்றனர். இவர்கள் வேண்டிய படைகள் புடைசூழப் பரதனை முன்னிட்டுப் புறப்பட்டு அங்குச்சென்று நம்மாதுலரால் பாதுகாக்கப்பட்டவர்களாகி அந்தக் கந்தர்வர்களை வெற்றிகொள்வார்கள். பிறகு அவ்விராச்சியத்தை இரண்டுபாகமாகப் பங்கிட்டு அவ்விரண்டிலும் இவ்விரண்டுபுத்திரர்களுக்கும் பட்டாபிஷேகம் செய்வித்துப் பரிபாலித்துவருமாறு ஸ்தாபித்துப் பரதன் திரும்பி நம்மிடம் வந்து சேர்வான்’ என்று கூறி, சீக்கிரமே ஸேனைகளுடன் புறப்பட்டுச் செல்லுமாறு பரதனுக்கு நியமித்தருளி, அக்குமாரர்களுக்கு அவ்விடத்தில் அப்பொழுதே அபிஷேகஞ் செய்வித்தருளினர்.

பிறகு பரதாழ்வான் கார்க்கியமுனிவரை முன்னிட்டுச் சேனைகளைக் கூட்டிக்கொண்டு தங் குமாரர்களுடனே ஸௌமியமான நக்ஷத்திரத்திலே புறப்பட்டுச்சென்றனர். தேவர்களாலும் வெல்வதற்கரியதான தாசரதியினது சேனை பரதாழ்வானைப் பின்றொடர்ந்து செல்லுமளவில், தேவேந்திரனுடனே செல்லும் தேவஸேனையென விளங்கியது. பரதாழ்வான் படையெடுத்துச் செல்லுமளவில் அதனைப் பின்றொடர்ந்து, மாமிசமே உணவாக்கொண்ட பல * பிராணிகளும் பெரிய ரக்ஷசுகளும் தமக்குப் பருக வேண்டுமளவுஉதிரங் கிடைக்குமெனக் களிகூர்ந்தனவாகிச் சென்றன; மாமிச பக்ஷிணிகளான பயங்கரமாகிய பின்னும் பல பெரும்பூதங்களும், சிங்கம், புலி, பன்றி முதலான பல விலங்குகளும் வானத்திற் செல்லும் பல பக்ஷிகளும் கந்தர்வபுத்திரர்களுடைய மாமிசங்களைப் புசிக்கலாமென்னும் பேராசையால் ஆயிரக்கணக்காகப் பரதாழ்வானது சேனைகளுக்கு முன்னே மகிழ்ச்சிகொண்டு சென்றன. இவ்வாறு புறப்பட்ட பரதாழ்வானது பெரும்படை பதினைந்து நாள் வழிநடந்து புஷ்டியும் துஷ்டியுமடைந்ததாகிச் சுகமாகவே கேகய தேயம்போய்ச் சேர்ந்தது.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப் பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதின்மூன்றுவது ஸர்க்கம்.

பரதாழ்வான் கேகய தேசாதிபதியுடனே கந்தர்வதேசஞ் சென்று
அங்குள்ள கந்தர்வர்களை வதைத்து அந்நாட்டைச் சுவாதீனஞ் செய்துகொண்டு
அங்கே நூதனமா யிரண்டுநகரங்களேற்படுத்தி
ஆங்கிருந்து அரசுபுரிந்துவருமாறு தக்ஷபுஷ்கலர்களை ஸ்தாபித்துத்
தாம் திருவயோத்திக்குத் திரும்பித் தமையனாரிடம் வந்துசேர்ந்தது.

---

சதுரங்கசேனையுடனே புறப்பட்டுப் பரதன் கார்க்கிய முனிஸஹிதராக வந்து சேர்ந்ததுகண்டு கேகயராஜனான யுதாஜித்து மிகவும் ஸந்தோஷமடைந்தவராகித் தாமும் மிகவிரைந்து பரதனுடனேகூடிப் போதுமான படைகளைக்கூட்டிக்கொண்டு புறப்பட்டுக் கந்தர்வநகரம் போய்ச்சேர்ந்தனர். பரதனும் யுதாஜித்தும் படையெடுத்து யுத்தத்திற்கு வந்திருப்பதுகண்டு கந்தர்வர்களனைவரு மொன்றுகூடி வந்து எதிர்த்து ஆர்ப்பித்தனர்கள். உடனே கைகலந்து அவர்களிருதிறத்தாருக்கும் மிகப்பயங்கரமான போர் ஆரம்பமாகி வெற்றிதோல்வி தெரியாமல் ஏழுநாள் யுத்தம் நடந்தேறியது. கட்கம் சக்தி கோதண்டம் முதலாய படைக்கலங்களே முதலைகளாகவும், மனிதர் சிரங்களே மஹாவிருக்ஷங்களாகவும் மிதக்க, உதிரவெள்ளம் எப்புறமும் பெருக்கெடுத்தோடியது. அக்காலையில் ஸ்ரீ பரதாழ்வான் மிக்க சினங்கொண்டவராகி,

---

* போர்க்குச் செல்லும் படைகளைத் தொடர்ந்து இப்பூசங்கள் செல்வது நல்ல சகுனமெனச் சகுனசாஸ்திரஞ் சொல்லும்.

மஹா பயங்கரமான ஸம்வர்த்தமென்கிற காலமூர்த்தியினது மஹத்தான அஸ்திரத்தை யெடுத்துக் கந்தர்வர்களின்மீது பிரயோகித்தனர். இராமாநுஜன் ஸம்வர்த்தாஸ்திரத்தைப் பிரயோகித்தவளவிலே, மஹா பராக்கிரமசாலிகளான மூன்றுகோடி கந்தர்வர்களும் காலபாசத்தினல் கட்டுண்டவராகி க்ஷணப்பொழுதில் மடிந்து மாண்டனர். இணையில்லாத ஆற்றலுடையவர்களான கந்தர்வர்கள் இவ்வாறு நொடிப்பொழுதில் நாசமுறுவார்களென விண்ணவர்களும் ஒருபொழுதும் நினைத்தவர்களல்லர்.

இவ்விதமாகக் கந்தர்வர்களனைவரும் கொலையுண்டபின்னர் பரதாழ்வான் மிகவும் செழிப்புள்ளவைகளான கந்தர்வதேசத்திலும், காந்தாரதேசத்திலும், ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்ச்சியின்றிச் சகலஸம்பத்துக்களும் நிறைந்த தக்ஷசிலையென்றும் புஷ்கலாவதமென்றும் பெயர்பெற்ற இரண்டு அற்புதமான நகரங்களை நிருமித்து, அவற்றுள் தக்ஷசிலையில் தக்ஷனும், புஷ்கலாவதத்தில் புஷ்கலனுமிருந்து அரசுபுரிந்துவரும்படி ஸ்தாபித்தனர். தேவ மாளிகைகள் போல் மிகவும் அற்புதமாய் ஏழெட்டடுக்குள்ள மாளிகைகள்நிறைந்த மஹா வீதிகளும், எல்லாப்பண்டங்களும் குறைவறநிறைந்த கடைவீதிகளும், தாலம் தமாலம் திலகம் வகுளம் முதலான விதம்விதமாகிய விருக்ஷங்களடர்ந்த உத்தியானவனங்களுமமைந்து அந்நகரங்கள் எவரும் வியக்கத்தக்கவையாக விளங்கின. ஆங்கு எல்லா வியவஹாரங்களும் நீதிமுறைப்படி நன்கு நிறைவேறி வருமாறு தங்குமாரர்கள் அரசுபுரியும் அதிசயத்தைக்கண்டு களிப்புற்றுக் கைகேயிமைந்தர் ஐயாண்டளவு அவ்விடத்துவசித்திருந்து பிறகு திருவயோத்திக்கெழுந்தருளி, அங்கு ஸாக்ஷாத் தருமதேவதை யென விளங்குகின்ற மஹாநுபாவரான தமையனரை, வாஸவன் விதாதாவை வணங்குமாறு, வணங்கித் திருவடிதொழுது, கந்தர்வர்களை வதைத்து அத்தேசங்களில் தமது ஆட்சியை ஸ்தாபித்தவரலாற்றை விவரமாக விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீராகவன் அதனைத் திருச்செவிசார்த்தித் திருவுள்ள முவந்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப்பதின்மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதினன்காவது ஸர்க்கம்.

இளையபெருமாளுடைய குமாரர்களான அங்கதன் சந்திரகேது என்னுமிருவருக்கும் அரசாட்சி யளிக்கவேண்டுமெனத் தாசரதி திருவுள்ளம்பற்றிக் காருபதமென்கிற தேசத்தில் இரண்டு நகரங்கள் நிருமித்து அவற்றில் அந்தக்குமாரர்களுக்கு அபிஷேகஞ் செய்விக்குமாறு இலக்குமணருக்கு நியமிக்க, அவர் அங்ஙனமே சென்று செய்து அயோத்தி வந்துசேர்ந்தது.

---

தமது தம்பிமார்களுடனே கூடிக் களிகூர்ந்திருக்கும் ஸ்ரீராமசந்திரன் அநந்தரம் ஸௌமித்திரியைநோக்கி, 'லக்ஷ்மண! உனது குமாரர்களான அங்கதன் சந்திரகேது என்னுமிருவரும் ஸகலதருமங்களுமுணர்ந்தவர்களாகி மஹா பராக்கிரமசாலிகளாய் இராச்சியபரிபாலனஞ் செய்யும் திறமையுடையவர்க

ளாக விளங்குகின்றனர். ஆதலின் இவர்களையும் ஓரிடத்தில் அரசர்களாக நியமித்தல்வேண்டும்; அதற்குத் தகுந்ததான தேசமொன்று தெரிந்துகூறுக; அவ்விடம் அத்தியந்தம் ரமணீயமாயும், எவர்க்கும் எவ்விதமான தீங்குக்கு மிடமில்லாததாயு மிருத்தல்வேண்டும்; அங்கு இவர்கள் அரசுபுரிதல் மற்ற ராஜாக்களுக்கு விரோதமின்றியும், முனிவராச்சிரமங்களுக்கு உபரோதமின்றியும், மற்றெந்தப் பிராணிக்கு மெவ்விதமான உபத்திரவமில்லாமலும், அனைவர்க்கும் அனுகூலமாயிருத்தல் வேண்டும்; அத்தன்மையதான விடமொன்று தெரிந்து கூறுக' என நியமித்தருள, அதுகேட்டுப் பரதாழ்வான், 'ஸ்வாமி! மேற்கே காருபதமென்கிற மிகவும் அழகான தேசமொன்று உளதன்றோ? அஃது அரசாளுதற்கு ஏற்றஸ்தானமாகையால் ஆங்கு அங்கதனுக்கும் சந்திரகேதுவுக்கும் அற்புதமான நகரங்கள் நிருமிக்கலாம்' என விண்ணப்பஞ் செய்ய, ரகுநந்தனன் அஃது உசிதமேயெனத் திருவுள்ளம் பற்றி, அத்தேசத்தில் அங்கதீயை என்கிற அழகான பட்டணம் பிரதிஷ்டைபண்ணி அதில் அங்கதனை யரசுசெலுத்தி வருமாறு நியமித்து, பிறகு வடக்கே மல்லபூமியென்னுமிடத்தில் தேவநகரமெனச் சிறந்த சந்திரகாந்தை யென்னும் திவ்வியமான நகரமொன்று நிருமித்து அங்கிருந்து அரசுபுரியுமாறு சந்திரகேதுவுக்கு அபிஷேகம் செய்வித்து, அதிகமான ஸந்தோஷமடைந்தவராகி அங்கதனை மேற்கு தேசத்திற்கும், சந்திரகேதுவை உத்தரதேசத்திற்கும் வேண்டிய சேனைகளுடனே பிரயாணப்படுத்தி யனுப்பினர். அப்பொழுது அங்கதனுக்குப் பக்கபலமாக இளையபெருமாளும், சந்திரகேதுவுக்கு ஸ்ரீபரதாழ்வானும் கூடவே சென்று அக்குமாரர்களை அந்தந்த நகரங்களில் ஸ்தாபித்து அவர்களுடைய அரசாட்சித் திறத்தைக்கண்டு வியந்தனர்கள். புத்திரன் இவ்வண்ணம் பெருமையாகப் பிரஜைகளைப் பரிபாலித்து வருகையிலும் பெருமாளைப் பிரிந்திருக்கப் பிரியமில்லாமல் இளையபெருமாள் ஒருவருஷமானவுடனே திரும்பித்திருவயோத்தி வந்து சேர்ந்தனர். ஸ்ரீபரதாழ்வானோ, ஒரு வருஷத்திற்கு மேலும் சிலநாள் சந்திரகேதுவினிடமிருந்து அப்பால் அயோத்தியாபுரிவந்து சேர்ந்து பெருமாளது பாதாரவிந்தங்களிற் பணிந்து பெருமகிழ்ச்சி கொண்டனர். ஸ்ரீராமபிரானது திருவடித் தாமரைகளை யெப்பொழுதும் பணிந்து ஸர்வவித கைங்கரியமும் செய்துகொண்டு பிரஜைகளுடைய நன்மையையே கருதி ராஜ்யத்தையும் நன்கு பரிபாலித்து வருகின்ற மஹாதருமிஷ்டர்களான ஸ்ரீபரத லக்ஷ்மணர்களுக்கு இவ்வண்ணமே காலஞ்செல்வது தெரியாமலே பதினாயிரம் ஆண்டுகள் கழிந்துபோயின. சக்கரவர்த்தியினது மக்களான இவர்கள் மூவரும் ஸகலமான போகபாக்கியங்களும் பெற்றுத் தருமத்தையே கடைப்பிடித்து பிரஜைகளைப் பரிபாலித்துவரு மக்காலத்தில், மிகப் பெரியதொரு யாகத்திலே விசேஷமான ஆஹுதிகள் செய்து மேலோங்கிச் சொலிக்கின்ற மூன்று அக்கினிகளென மேன்மை பெற்று விளங்கினார்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப்பதினாலாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

உத்தரகாண்டம்.

காலருத்திரமூர்த்தி ஸ்ரீராமனிடம் வந்தது.



కాలరుద్రమూర్తి శ్రీరాములవద్దకువచ్చుట.

## நூற்றுப்பதினைந்தாவது ஸர்க்கம்.

### தாசரதி தம்மவர்க்கு நற்கதியளித்துத் தன்னடிச்சோதிக் கெழுந்தருளியது.

*காலருத்திரமூர்த்தி தாபஸவேஷந் தரித்துத் தாசரதியினிடம் வந்து பரமபதத்திற் கெழுந்தருளுமாறு பிரம்மதேவன் சொல்லியனுப்பிய சங்கேதத்தை விண்ணப்பஞ் செய்தது.*

ஸ்ரீராமபிரான் இவ்வண்ணமே தருமந்தழைத்தோங்க ராஜ்யபரிபாலனஞ்செய்து வருகையில், சில காலத்திற்குப் பிறகு ஒரு பகல் காலருத்திரமூர்த்தி தவசிவேஷந் தரித்துத் தாசரதியினது அரண்மனை வாயிலில் வந்து அங்கே வெகுதீரமாக நின்ற ஸௌமித்திரியை நோக்கி, 'யானொரு பெரிய காரியத்தின் பொருட்டு வந்திருப்பதாக நீர் வேந்தனிடம் விரைவில் அறிவித்தல்வேண்டும். யான் மஹா பிரபாவசாலியான அதிபலமஹாமுனிவரது தூதன்; ஸ்ரீராமபிரானைக் காண வந்திருக்கின்றேன்' என்றுகூற, அம்மொழி செவிப்பட்ட வளவிலே ஸௌமித்திரி அதிசீக்கிரமே ஸ்ரீராமசந்திரன் ஸன்னிதானஞ் சென்று அவரைத் தண்டன் ஸமர்ப்பித்து 'ஜயவிஜயீபவ' என வாழ்த்தி, தாபஸரது தூதரொருவர் வாயிலில் வந்து காணக் காத்திருக்கின்றனரென விண்ணப்பஞ்செய்ய, அவரை யுடனே அழைத்துவருமாறு தாசரதி நியமித்தது கேட்டு, இளையபெருமாள் அப்பொழுதே அவரை உள்ளேவரும்படி வேண்டினர். அத்தவசி அவ்வாறே, யாவரினும் அற்புதமானதோர் ஒளி திகழ, ராஜஸபையிற்சென்று ஸ்ரீராகவனை மிகவும் 'மேலாகவாழ்க' என மதுரமான மொழிகளால் மங்களமாய் வாழ்த்திநிற்க, சக்கரவர்த்தித் திருமகனர் அவர்க்கு முறைப்படி அர்க்கியபாத்தியம் முதலான பூஜைகளைச்செய்து, அவர் சுவர்ணமயமானதொரு சித்திராசனத்தி லெழுந்தருளியபின் அவரைக் குசலம்வினவத் தொடங்கி, 'தபோதனரே! தேவரீரது வரவு நல்வரவாகுக; தேவரீர் யாருடைய தூதராக எழுந்தருளியதோ, அவரது பணிப்பை யருளிச் செய்யலாம்' என வேண்டினர்.

அதுகேட்டு அம்முனிவர், 'ஹேரகுகுலோத்தம! என்னைத் தூதனுப்பிய தபோதனர் மொழிந்த இதவசனத்தைச் செவிக்கொள்ளத் திருவுள்ளமாயின், நாமிருவரு மாத்திரமே தனியேயிருக்கையில் அதனைப் பிரஸ்தாபித்தல் வேண்டும்; அப்படி நாம் ஸம்பாஷிக்குமளவில் யாவரேனும் அதனைக் கேட்டாலும், அத்தருணத்தில் யாவரேனும் இங்கு வந்து பார்த்தாலும், அவர் உடனே வதைக்கு ஆளாவரென உக்கிரமாகக் கட்டளையிடவேண்டும்' என்று கூற, ஸ்ரீராமபிரான் அங்ஙனமே யாகுகவென்று வாக்குஅளித்து இளையபெருமாளை நோக்கி, 'லக்ஷ்மணா! நீ வாயிலோனை அப்புறம் போகவிடுத்து நீயே வாயிலில் காவல்காத்திருத்தல் வேண்டும்; ஹே ஸௌமித்ரே! யானும் இம்முனிவரும் ஏகாந்தமாக ஸம்பாஷணை செய்கையில் எவரேனும் இங்குவந்து பார்த்தாலும் இதனைக் கேட்டாலும் அவர் கொலைத்தண்டனைக்கு ஆளாகுவர்' என்று நியமித்து, லக்ஷ்மணரை அரண்மனைவாயிலில் காவல்காத்திருக்

கும்படி, செய்து இருவருமே தனியே நின்றபோது மன்னவன் மகரிஷியை நோக்கி, 'ஸ்வாமி! இங்கொருவருமில்லை; இனி விசாரமின்றித் திருவுள்ளத்திலிருப்பதைத் தெரிவிக்கலாம்; அஃது அடியேனுடைய*இருதயத்திலு மிருக்கின்றது' என அத்தபோதனருக்கு அனுமதிகொடுத்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப் பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதினாறுவது ஸர்க்கம்.

முன்செய்த ஸங்கேதப்படி தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுமாறு பிரமதேவன் சொல்லியனுப்பிய வரலாற்றைக் காலருத்திரமூர்த்தி காகுஸ்தனிடம்வந்து விண்ணப்பஞ்செய்தல்.

---

அநந்தரம் ஸ்ரீராமசந்திரனது திருவுள்ள முணர்ந்து அம்முனிவர் மொழிகின்றனர். 'ஹேராஜன்! அடியேன்வந்ததாரியத்தை விண்ணப்பஞ்செய்கிறேன், திருச்செவிசார்த்துக. ஹேஸத்தியபராக்கிரம! அடியேன் பிரம்மதேவனால் இவ்விடம் அனுப்பப்பட்டவன். சத்துரு ஸம்ஹாரஞ்செய்தருளிய சூரனே! அடியேன் பூர்வத்தில் தேவரீரிடம் புத்திரனாகப்பிறந்தவன்; ஹே வீர! உலகங்களை ஸம்ஹாரஞ்செய்யும் நிமித்தமாகத் தேவரீர் அடியேனைத் தேவரீரது திவ்வியசத்தியினால் உண்டாக்கியது. அடியேன் திரிபுரஸம்ஹாரஞ்செய்த காலருத்திரமூர்த்தியேயாம். ஸகலலோக சிருஷ்டிகர்த்தாவான சதுர்முகபகவான் தேவரீர் ஸன்னிதானத்தில் விண்ணப்பஞ் செய்யச்சொல்லியதாவது: ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்னும் முத்தொழிலிக்கு முரியரானதேவரீர் ஸகலலோகங்களையும் ரக்ஷிப்பதே பெரியவிரதமாகக் கொண்டவரன்றோ? ஆதலின் அதன் பொருட்டுத் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளவேண்டிய ஸமயம்வந்துவிட்டது. பூர்வம் தேவரீர் திவ்விய சத்தியினால் எல்லாவுலகங்களையும் திருவுதரத்திலடக்கிப் பெரும்புறக்கடலில்பள்ளிக்கொண்டு முதலில் அடியேனைப்பிறப்பித்து, அநந்தரம் தேவரீருக்குத் திருப்பள்ளியாகத் திருவனந்தாழ்வானையும் தோற்றுவித்தீர். அப்பால் மஹாபலிஷ்டர்களான மதுகைடபர்களென்னும் இரண்டு அசுரர்களைப்படைத்தீர். அவர்களுள் கைடபனென்போன் முதலை முத்துச்சிப்பிமுதலியபோல் உடம்பில் எலும்புகளே மேலிட்டவனானதுபற்றி அவனுடம்பினெலும்புகள் இப்பூமியெங்கும்பரவி மலைகளும் மேடுகளுமாயின; மற்றவனான மதுவினுடலம்மீன்முதலியவற்றினுடலெனநிணமே மேலிட்டிருந்தமையின் அஃது படிந்து பூமியெங்கும் புல்பூண்டு முதலானவை முளைக்கும்படியான செழிப்புடையதாகி மேதினியெனவும் பெயர் பெற்றதாயிற்று. தேவரீரது திருவுந்தியிற்பூத்த திவ்வியமான தாமரைமலரிலே தோன்றிய அடியேனிடத்திலேயே தேவரீர் ஸகலமான பிராஜாபத்தியமும்வகிக்குமாறு பெரிய

---

* இதனை யானும் மறிவேனென்று குறிப்பித்தபடி.

பாரத்தையேற்றினீர். அடியேன் எல்லாவற்றையும் தேவரீரது திவ்யசத்தியினாலேயே நடத்துகின்றவனாயினும், அவ்வளவு பெரியபாரத்தைத் தாங்க முடியாது, லோகரக்ஷணவியாபாரத்தைத் தேவரீரே திருவுளம்பற்ற வேண்டுமென ஜகத்பதியான தேவரீரிடமே பரஸமர்ப்பணம்பண்ணிப் பிரார்த்திக்க, தேவரீர் அவ்வண்ணமே திருவுள்ளமிரங்கி, படைக்கப்பட்ட வுலகங்களைப் பாதுகாப்பதனிமித்தம் மனோவாக்குக்களுக்கும் எட்டாதபரவாசுதேவனென்கிற ஆதிமூர்த்தியினின்றும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவாக வந்து தோன்றினீர். அநந்தரம் அதிதியினிடத்தில் உபேந்திரனாகத் திருவவதரித்துப் பிராதாக்களான இந்திராதிகளுக்கு வீரியம்விசேஷமாக விருத்தியடையச் செய்பவராகி, விபத்துக்கள் நேர்ந்தபோதெல்லாம் அவர்களுக்கு வேண்டியஸஹாயஞ்செய்தருளினீர்.

இஃது இங்ஙனமாக, ஸகலமான பிரஜைகளும் இராவணனிடம் அஞ்சி நடுங்கி அல்லலுறுவது கண்டு தேவரீர் தசகந்தரனைமாய்க்க மனத்திலெண்ணி மனுஷியாவதாரஞ் செய்தருளத் திருவுள்ளம்பொருந்தி, பதினோராயிரமாண்டு இப்பூலோகத்தில் வஸிப்பதென அப்பொழுதே தேவரீர் ஸங்கேதஞ்செய்துகொண்டு தசரதசக்கரவர்த்திக்கு மானஸபுத்திரராய் இவ்வவதாரஞ்செய்தருளியது; ஆதியில் செய்தஸங்கேதப்படி தேவரீர் பூலோகத்தில் வஸிக்கவேண்டிய ஆயுளளவு பூர்ணமாகி நித்தியவிபூதிக்கு எழுந்தருளவேண்டிய காலம்நெருங்கிவிட்டது. மறுபடி இன்னும்சிலகால மிங்ஙனம் பூலோகத்திலேயே யெழுந்தருளியிருந்து பிரஜைகளைப் பரிபாலித்து வரவேண்டுமெனத் திருவுள்ளமாயின், அப்படியு மெழுந்தருளியிருக்கலாம், தேவரீருக்குப் பல்லாண்டு பல்லாண்டு தேவலோகத்திற்கெழுந்தருளத் திருவுள்ளமாயின், ஸகலமான தேவர்களும் தேவரீரதுவரவை யெதிர்பார்த்திருக்கின்றனர்கள்; அங்கெழுந்தருளி அவர்கட்கு ஸேவைஸாதித்து அவர்களுடைய ஆவலைத் தணித்தருள்க—என விண்ணப்பஞ்செய்யுமாறு இங்கு அனுப்பினர்' என்றார்.

சதுர்முகபகவான் சொல்லியனுப்பியதாக ஸம்ஹாரத்தொழிற்குரிய காலருத்திரமூர்த்தி கூறியதுகேட்டுப் பெருமாள் * புன்னகைசெய்தருளி, ஹேதேவ! இப்பொழுது யான் உன்னைக்கண்டதனாலும், பிதாமஹன் சொல்லியனுப்பிய பிரியமான வார்த்தையைக் கேட்டதனாலும், எனக்குமிகுந்த ஸந்தோஷமுண்டாகியது. மூன்றுலோகத்தவர்களுக்கு மாகவேண்டியகாரியத்தை முடித்தற்பொருட்டே நானிங்குவந்து அவதரித்தது. நல்லது, உனக்கு நன்மையுண்டாகுக. இனிநான் வந்தவிடம் போய்ச்சேருகிறேன்; யான் மனத்திலெண்ணியிருந்ததையே நான்முகன் சொல்லியனுப்பினானாதலின், அது விஷயத்திலெனக்கு விசாரமொன்று மில்லை. எனதுபக்தர்களான தேவதைகளுக்கு நான் வசப்பட்டவனாதலின், அத்தேவர்களில் முதல்வனான பிதா

* தாமே தன்னடிச்சோதிக் கெழுந்தருளவேண்டுமெனத் திருவுள்ளத்திற்கொண்டிருக்க, அது தெரியாது சதுர்முகன் சொல்லியனுப்பினானென நகைத்தபடி.

மஹன் * சொல்லுகின்றவாறே நான் நடக்கக்கடவைபூண்டவன்' என அருளிச்செய்தார்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப்பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பதினேழாவது ஸர்க்கம்.

காலருத்திரமூர்த்தியும் காகுஸ்தனும் ஸம்பாஷணை செய்துகொண்டிருக்கையில் துர்வாஸமுனிவர் ஸ்ரீராகவனைத்தரிசிக்கவந்து லக்ஷ்மணர்மூலமாகத் தமதுவரவை தாசரதிக்குத் தெரிவித்து அவரைக்கண்டு தமக்கு வேண்டியதைப் பெற்றுக்கொண்டு சென்றது.

---

காலனும்காகுஸ்தனும் இங்கு இவ்வண்ணம் ஸம்பாஷணைசெய்துகொண்டிருக்கையில் துர்வாஸமுனிவர் ஸ்ரீராமபிரானைத் தரிசிக்கவேண்டி ராஜத்துவாரத்தண்டையிலெழுந்தருளி அங்குநின்ற இளையபெருமாளைநோக்கி,காலந்தவறுதற்குமுன்னமே துரிதமாக என்னை ஸ்ரீராமசந்திரனிட மழைத்துக்கொண்டு போகவேண்டும் என்றார். அதுகேட்டு இலக்குமணர் அவரைவணங்கிக் கைகூப்பிக்கொண்டு 'ஸ்வாமி! தேவரீருக்கு ஆகவேண்டிய காரியம்யாதோ அதனை அருளிச்செய்க; தேவரீருக்கு அடியேன் செய்யத்தகுவது யாதேனுமுளதோ? முடிக்கலாகுமோ? ஹேபிரம்மன்! மன்னவர் மற்றொரு அவசியமான காரியத்தை மேற்கொண்டிருப்பதால், அவரைக்காண ஒருமுகூர்த்தகாலம்பொறுத்தருள வேண்டுகின்றேன்' என்ன, துர்வாஸமுனிவர் கோபத்தினால் கண்கள்சிவந்துகண்களால்கொளுத்துகின்றவரெனவிழித்து நோக்கி, 'ஸௌமித்ரே! யான் வந்திருப்பதை நீ யிந்த நிமிஷமே இராமனிடம் அறிவித்தல்வேண்டும்; இப்பொழுதே நீ சென்று தெரிவிக்கத் தவறுவையாகில், உன்னையும் இந்நாட்டையும் நகரத்தையும் நான் சபித்துவிடுவேன்; உன் அண்ணன் இராகவனையும் பரதனையும் உங்கள் ஸந்ததிகளையும் சபித்துவிடுவேன். மேலெழுந்த கோபத்தை யான் மறுத்தும் உள்ளடக்க வல்லேனல்லேன்' என இங்ஙனம் மிகவும் உக்கிரமாக மொழிந்தனர்.

சொன்னவண்ணஞ் செய்யும் தவப்பெருமைபெற்ற மஹாநுபாவரான துர்வாஸமுனிவர் கூறிய கோரமான வார்த்தையைக்கேட்டு இளையபெருமாள், இப்பொழுது நாம்செய்யவேண்டுவ தென்னவெனத் தம்மனத்தில் சற்றுநேர மாலோசித்து இறுதியில், என்னொருவனுக்கு மரணம் நேர்ந்தாலும் நேரிடுக, இம்முனிவரதுகோபத்திற் கிலக்காகி யாவும் அழியாதிருந்தாற்போதுமெனத் திருவுள்ளத்தி லுறுதிகொண்டு, உள்ளேசென்று முனிவர்வந்திருக்கின்ற செய்தியை மன்னவனிடம் விண்ணப்பஞ்செய்தனர். கோபமுனிவர் வந்திருப்பது

---

* பூர்வம் தேவதைகளது வேண்டுகோளினாலேயே தாம் தாசரதியாகத் திருவவதரித்ததாதலின், இப்பொழுதும் அவர்கள் சொற்படியே இவ்விடம் விட்டு வரத் தடையில்லை யென்றபடி.

கேட்டுக் காகுஸ்தன் காலமூர்த்திக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு உடனே யெழுந்து அத்திரிபுத்திரரை யெதிர்கொண்டு சென்று அக்கினி யெனச் சொலித்துக் கொண்டிருக்கும் அவ்வுத்தமரைவணங்கி யபிவாதனம்பண்ணி ஏற்றபடியுபசரித்துப் பிறகு கைகூப்பிக்கொண்டு, 'அடியேனுக்கு இப்பொழுது என்னகாரியம் நியமிக்கின்றது' என்றுகேட்க, துர்வாஸமுனிவர் தாசரதியைநோக்கி, 'தருமமே துணையாகக்கொண்டகாகுஸ்த! யான் ஆயிரம் வருஷங்களாக எவ்விதமான ஆகாரமுமின்றி அருமையான தவம்புரிந்தேன், இப்பொழுது அதுபூர்ணமாகியது; இனியெனக்குப் பசியதிகமாயிருக்கின்றதாதலின் விதிமுறைப்படி எனக்குப் போதுமான போஜனமளிக்க வேண்டுகின்றேன்' என்றார். அதனைச் செவியுற்று ஸ்ரீராமசந்திரன் இம் முனிவர் முனியாது இவ்வாறு சாந்தமாக மொழிந்தனரேயென மகிழ்ச்சிகொண்டு அவர்க்குமுறைப்படி மேலான போஜனம் அளிக்க, அமுதமென அத்தியந்தம் மதுரமான அவ்வுணவை அருந்தவமுனிவர் அருந்தி அகமகிழ்ந்தவராகி அரசனை ஆசீர்வதித்து அனுமதிபெற்றுத் தமதுஆச்சிரமத்திற் கெழுந்தருளினர்.

துர்வாஸமுனி இவ்வாறு விடைபெற்று ஆச்சிரமத்திற்குச்சென்ற பின்னர் ஸ்ரீராமபிரான் காலருத்திரமூர்த்திகூறிய கோரமான வார்த்தையை நினைத்துத் துயரத்தினால் தவிப்புண்டவராகி மிகவும் தீனராய்த் தலைகுனிந்து ஒன்றும் சொல்லவாயெழாமல் நின்று, பிறகு காலனது வாக்கியத்தை நன்கு ஆய்ந்து உணர்ந்து, 'நமக்குப்பிராதாவேது, பிருத்தியனேது, ஒருவருமில்லையே' என நிச்சயித்து மௌனமடைந்திருந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப்பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதினெட்டாவதுஸர்க்கம்.

காலமூர்த்தியுடனே ஸம்பாஷித்திருக்குமளவில் ஸௌமித்திரி தம்மிடம்வந்ததனால் அவரைத் துறக்கவேண்டுமேயென வருத்தமுற்றிருந்த பெருமாளுக்கு வஸிஷ்டர் அவ்வண்ணமே செய்யவேண்டுமென விதித்ததும், அப்படியே ஸ்ரீராமபிரான் இளையபெருமாளைத்துறக்க, அவர் திருநாட்டுக் கெழுந்தருளியதும்.

இவ்வண்ணம் விஷண்ணராகி வாய்திறவாது தலைகுனிந்துகொண்டுராகுக்கிரஸ்தனான சந்திரனென விளங்கும் ஸ்ரீராமசந்திரனைக்கண்டு ஸௌமித்திரி * சந்தோஷ மடைந்தவராகி மதுரமான மொழிகளால் அவர்க்கு மறுமொழிகூறுகின்றனர்: 'ஹே மஹாபாஹோ! அடியேனுக்காகத் தேவரீர் இவ்

* இப்படித்தாம் தமையனாைவிட்டுப் பிரியவேண்டிய விதி யிருக்கின்றதென முன்னமே சுமந்திரரிடம் சௌமித்திரி கேள்வியுற்றிருக்கின்றன ராதலின், விதியை மதியால் வெல்லலாகாதென அவர் மகிழ்ச்சிகொண்டிருந்தாரெனவறிக. (உத்தர ஸ்ரீமத்ராமாயணம் ருஉ - ம் ஸர்க்கம் கஅரு - ம் பக்கம் பார்க்க.

வண்ணம் வருத்தமுறுதல் உசிதமன்று; அன்று விதித்தவாறேயன்றோ யாவும் நடந்தேறும்? காலகதி யிப்படிப்பட்டதுதான்; ஸம்யோகங்களுக்கெல்லாம் எப்போதும் வியோக மென்பதொன்று உண்டாகுமன்றோ? ஆதலின் தேவரீர் அடியேனைத்துறந்து பண்ணின பிரஞ்ஞையை நிறைவேற்றியருள்க. ககுஸ்த குல திலகமே! பண்ணின பிரதிஞ்ஞையைப் பரிபாலியாது தவறினவர்கள் நரகமே புகுவார்களன்றோ? தேவரீருக்கு அடியேனிடம் அன்பும் அனுக்கிரஹமும் முள்ளனவாயின், திருவுள்ளத்திற் சிறிதும்கலக்கமுறாது அடியேனைத் துறந்து அறத்தை வளரச்செய்க' என விண்ணப்பஞ்செய்தார்.

இளையபெருமாள் இவ்வண்ணம் உரைத்தது கேட்டுச் சக்கரவர்த்தித் திருமகன்சற்றுச் சோகந்தணிந்தவராகி மந்திரிமார்களையும் புரோஹிதரையும், உடனே வரவழைத்து, துர்வாஸமுனிவ ரெழுந்தருளியதையும், அவர்க்கு முன்வந்த தாபஸரிடம் தாம்செய்த பிரதிஞ்ஞையையும் அதன்மேல் நடந்த விருத்தாந்தத்தையும் அவர்களிடமருளிச்செய்ய, அதுகேட்டு அவர்கள் ஒன்றும் சொல்லத்தோன்றாது மௌனமாயிருந்தனர்கள். அப்பொழுது வஸிஷ்டபகவான் பெருமாளை நோக்கி, ஹே ரகுவீர! உமக்கு இப்படிப்பட்ட ஸங்கடங்களும், இளையவனோடு வியோகமும் உண்டாகுமென முன்னமே தெரிந்த விஷயமே; அதைப்பற்றி இன்று விசனமுறுவதில் பயனின்று. விதியேவலியுள்ள தாதலின் இவ்விளையோனைத் தியஜித்துவிடுக; பண்ணின பிரதிஞ்ஞையை வீணுக்கலாகாது. பிரதிஞ்ஞை வீணுகுமாயின், தருமமழியும்; ஸகல சராசரங்களும் தேவகணங்களும் தேவரிஷிகளு முள்ளிட்ட மூவுலகங்களும் அழியும், ஸந்தேஹமில்லை. ஆதலின் ஹே புருஷசார்துல! இம்மூவுலகங்களுக்கும் பரிபாலகரா யிருக்கின்ற தேவரீர் இவ்விலக்குமணனொருவனைத் துறந்து திரிலோகங்களையும் காத்தருள்க. (ஹேமஹாபாஹோ! ஸகோதரப் பிரீதி தேவரீரிடம் மிகவும் அதிகமென யாமறிவோம்; இப்பொழுது உண்டான தேவவாக்கியத்தின் மகிமையையும் யாமறிவோம். ஆனதுபற்றியே உம்மை இவ்வண்ணம் தீவிரப்படுத்துகின்றோம். நீர் செய்தபிரதிஞ்ஞையைப் பரிபாலிக்காது ஒழிந்தால், நீர் செய்யும் இராஜ்ய பரிபாலனம் வீணுகுமே. உமது தந்தை சொன்னவாக்கைத்தவறாது நிறைவேற்றியதை நீரேகண்ணாரக் கண்டிருக்கின்றீர்; ஸத்தியந்தவறுதற்குப் பயந்தே தசரதசக்கரவர்த்தி அருமைப் புதல்வரான உம்மைத்துறந்து, அதே புத்திரசோகத்தினால் சுவர்க்கம் புகுந்தது யாவர்க்கும் பிரத்தியக்ஷமானவிஷயம். ஹேராம! நீரும் அதேவிதமாக பிரதிஞ்ஞையைப் பரிபாலனம்பண்ணி அறத்தை யோங்கிவளரச்செய்தல் வேண்டும். ஹேபுருஷசார்த்தூல! மேருமலையும் மந்தரமலையு மென எதற்குஞ் சலியாத தேவரீர் இளையபெருமாளை யொழிப்பதற்குச் சலிக்கலாமோ? எல்லாவுலகங்களுக்கு மிதத்தை மேலாகவெண்ணி இலக்குமணனொருவனில்லாமலே உலகங்களைப் பரிபாலித்தருள்க' என்று உரைத்தருளினர்.

மந்திரிமார்கள் பலரும் கூடிய பெரிய ஸபையிலே வஸிஷ்டபகவான் தருமார்த்தஸஹிதமாக இவ்வாறுவிளம்பியதுகேட்டுப் பெருமாள் இளையபெருமாளைநோக்கி, 'லக்ஷ்மண! தருமநிலை குலையாமைக்காக யான் உன்னை இன்

NO. 26. உத்தரகாண்டம். PAGE. № 301.

குசலவர் பட்டாபிஷேகம்.



(కుశలవులు పట్టాభిషేకం.)

ரோடு இழந்து விடுகின்றேன்; ஸாதுக்களுக்குத் தியாகமும் வதமுமாகிய இரண்டும் ஸமமெனவே விதிக்கப்பட்டிருக்கின்றனவன்றோ?' என அருளிச் செய்தனர். தமையனார் இங்ஙனம் திருவாய்மலர்ந்தருளியது காதிற் கேட்டவுடனே ஸௌமித்திரி கண்களில் தண்ணீர்ததும்ப ஐம்பொறிகளும் உள்ளமும் கலங்கியவராகித் தமது திருமாளிகைக்கு மெழுந்தருளாமல் அங்கிருந்து நேராகவே விரைந்து சென்று ஸரயூநதி போய்ச்சேர்ந்து நீராடிக் கைகூப்பி நமஸ்கரித்துப் பிராணாயாமஞ்செய்து சுவாஸபந்தம் பண்ணிப் பரவாசுதேவனென்கிற பரப்பிரம்மத்தினது என்று மழிவில்லாத திருவடித்தாமரைகளையே திருவுள்ளத்தில் சிந்தித்துச் சரணமடைந்தனர். இராமாநுஜன் இவ்வாறு சுவாஸத்தையடைக்கி யோகநிஷ்டையில் நிற்பதுகண்டு இந்திராதி ஸகலதேவதைகளும் தேவரிஷிகளும் அவர்மீது பூமாரிபொழிந்தனர்கள். பிறகு அவ் விளையபெருமாளை மானிடரொருவருடைய கண்ணுக்கும் புலப்படாமலே மஹேந்திரன் அதேதிருமேனியுடனே தேவலோகத்திற்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போயினன். ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாவிஷ்ணுவினது அமிசத்தில் நாலிலொருபாகமாய் ஆதிசேஷாவதாரமான அம்மஹாநுபாவரெழுந்தருளியது கண்டு ஸகலமான தேவர்களும் தேவரிஷிகளும் மிக்கமகிழ்ச்சி கொண்டவர்களாகி அவரை யாராதித்தார்கள்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப் பதினெட்டாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நூற்றுப்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

ஸௌமித்திரியைப் பிரிந்த சக்கரவர்த்தித் திருமகன் சோகமதிகரித்துத்
தம்பிபோனவழியே தாமும் போய்விடுவதாகப் புலம்பியதும்,
அதுதெரிந்துயாவரும் பின்றொடர்ந்து வருவதாகப் பலவாறுவேண்டிப் பிரார்த்திக்க,
பெருமாள் யாவரையும் தம்முடனே தன்னடிச்சோதிக்கு
அழைத்துக்கொண்டுபோகத் திருவுள்ளம்பற்றித்
தம் மக்களுக்கு முடிசூட்டியதும், சத்துருக்கனனுக்குத் தூதனுப்பியதும்.

---

இங்ஙனம் இளையபெருமாளைத் துறந்து தாசரதி துக்கமும் சோகமும் மேலிட்டவராகிப்புரோஹிதரையும்பிரதானிகளையும் அமைச்சர்களையுநோக்கி, 'யான் இப்பொழுது மஹா சூரனும் தருமிஷ்டனுமான பரதனை அயோத்தியாதிபதியாக அபிஷேகஞ்செய்து ஸ்தாபித்துவிட்டு யான்மஹாப்ரஸ்தானமாய் அரணியம் செல்லுகின்றேன்; காலதாமஸமின்றி யுடனே அதற்குவேண்டிய ஸகலமான பொருள்களையும் சேகரித்துத் தக்கஏற்பாடுகள் செய்க. இலக்குமணன்சென்றவழி யான் இப்பொழுதே செல்லுகின்றேன்' என்றுகூறினார். ஸ்ரீராகவன் இவ்வாறு சொன்னதுகேட்டு சுமந்திரர்முதலான பிரகிருதிக ளனைவரும் ஆறுத்துயர மடைந்தவர்களாகி அவ்வண்ணமே அவரது திருவடிகளில்வீழ்ந்து உயிரிழந்தவர்கள்போலக்கிடந்தனர். ஸ்ரீராமனதுசொல்

செவியிற்பட்ட மாத்திரத்திலே ஸ்ரீபரதாழ்வானும் சோகமதிகரித்தவராகி அரசாட்சியை யிகழ்ந்து இராமசந்திரனை நோக்கி, ‘மஹா ராஜனே! அடியேன் ஸத்தியமாக ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்; தேவரீரைவிட்டுப் பிரிந்து அடியேனுக்குச் சுவர்க்கலோகம் கிடைப்பதாயினும் அதனையும் அடியேன் வேண்டுகின்றேனில்லை; அங்ஙனமே தேவரீரின்றித்தனியே இவ்வரசாட்சியையும் விரும்புகின்றிலேன். தேவரீருக்குத் திருவுள்ளமாயின், குசலவர்களுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தருள்க: இந்த தக்ஷிண கோஸலநாட்டில் குசனுக்கும் உத்தரகோஸலத்தில் லவனுக்கும் முடிசூட்டலாம். நாம் மஹாப்பிரஸ்தானம் புறப்படுகின்ற விருத்தாந்தத்தைச் சீக்கிரமே சத்துருக்கனனுக்கு அறிவிக்கமஹாஸமர்த்தர்களான தூதர்களை உடனேயனுப்புக’ என வேண்டி விண்ணப்பஞ் செய்தனர்.

ஸ்ரீபரதாழ்வான் இவ்வாறு சொன்னதையும் கேட்டு, பட்டணத்துப் பிரஜைகளனைவரும் துயரத்தினால் தவிப்புண்டவராகித் தலைசாய்த்துத் தரையில் வீழ்ந்து கிடைப்பதையும் கண்டு வஸிஷ்டபகவான் ஸ்ரீராமபிரானை நோக்கி, ‘வத்ஸ, ராம! இதோ தவிப்புண்டு தரணியில் வீழ்ந்து கிடக்கின்ற இந்தப் பிரஜைகளைப் பார்; நீ இவர்களது மனோரதத்தை யுணர்ந்து அதனைப்பூர்த்தி செய்யவேண்டும்; இவர்கள் மனமுறியச் செய்யலகாது’ என்று சொல்லி வேண்ட, வஸிஷ்டரது வாக்கியத்தை விசேஷமாக மேற்கொண்டு சக்கரவர்த்தித் திருமகன் திருவுள்ளமிரங்கி ஸகலமான பிரஜைகளையுமெழுப்பி யவரவர்களை நோக்கி, இப்பொழுது யான் உங்களுக்குச் செய்யவேண்டுவது யாதென வினவினார். ஸ்ரீராமபிரானது சொல் செவிப்பட்ட மாத்திரத்திலே ஸகலமான பிரஜைகளும் ஸந்தோஷமடைந்தவர்களாகி, ‘ஆண்டவனே, ராமா! தேவரீர் எவ்விடத்திற்கு எழுந்தருளுகின்றதோ, அவ்விடத்திற்கு யாங்களும் தேவரீரைவிடாது பின்றொடர்ந்து வருகின்றோம். இப்பட்டணத்துப் பிரஜைகளிடத்தில் தேவரீருக்குப் பிரீதியும் அதிகமான அநுக்கிரகமுமுள்ளது உண்மையாயின், ஹேமகாகுஸ்த! தேவரீர் செல்லுகின்ற நல்வழிக்கு நாங்கள் அனைவரும் புத்திரமித்திர களத்திராதிகளுடனே கூடப் புறப்பட்டு வருமாறு கடாக்ஷித்தருள்க; அடியோங்கள் கைவிடத்தக்கவர்களல்லாராயின், தபோவனமோ, துர்க்கமானகானகமோ, கடலோ, நதியோ, தேவரீர் எவ்விடத்திற் கேகினும் அவ்விடத்திற்கு அடியோங்களனைவரையும் அழைத்துக்கொண்டு செல்லுக. இதுவே எங்கள் மனோரதம், இதுவே எங்கள்பிரார்த்தனை; மஹாப்பிரபோ, தேவரீரெங்கெழுந்தருளினு மவ்விடத்திற்குப் பின்றொடர்ந்துசெல்ல யாங்கள் அனைவரும் சித்தமாயிருக்கின்றோம்’ எனப்பிரார்த்தித்தனர்கள்.

பட்டணத்துப் பிரஜைகளுடைய திடமானபக்தியைப் பெருமாள் நன்கு உணர்ந்து அவ்வண்ணமேசெய்வதாக அவர்களுக்கு வாக்களித்துத்தாம் செய்ய வேண்டிய காரியத்தையும் நன்றாக ஆலோசித்து, அன்றையதினமே தமது புத்திரர்களுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தருளினார். தக்ஷிணகோஸல நாட்டிற்கு நல்லரசனாகக் குசனையும், உத்தரகோஸலத்திற்குலவனையும் அரசர்களாக நியமித்து, இங்ஙனம்முடிசூட்டப்பெற்ற தம்மக்களை யழைத்து மடிமீதூட்

காரவைத்துக் கொண்டு அவர்களையாலிங்கனஞ்செய்து பலதரம் உச்சிமோந்து போதிக்கவேண்டுவனபோதித்து, பிறகு அவர்களிருவருக்கும் ஆயிரக்கணக்கான ரதங்களும் அயுதக்கணக்கான யானைகளும், கோடிக்கணக்கான குதிரைகளும், அளவற்ற ஐசுவரியங்களுமளித்து, துஷ்டியும்புஷ்டியுமடைந்த பிரஜைகளுடனே கூட அவ்விருவரையும் அவரவருடைய பட்டணத்திற்கு அனுப்பியருளினர். புத்திரர்களுக்குஇவ்வாறு பட்டாபிஷேகஞ் செய்துஅவரவர் பட்டணத்திற் கனுப்பியபின்னர் ஸ்ரீராமபிரான் சத்துருக்கனாழ்வானிடம் சீக்கிரமே சென்று செய்திசொல்லிவருமாறு தூதர்களையனுப்பினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றுப் பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபதாவதுஸர்க்கம்.

தாசரதி திருநாட்டுக்கெழுந்தருளுகிற விருத்தாந்தத்தைக்கேட்டுச் சத்துருக்கனாழ்வான் அப்பொழுதே தம்புத்திரர்களுக்குப் பட்டங்கட்டிவிட்டுப் பெருமாள்ஸன்னிதிக்கு உடனேவந்து தம்மையும் தன்னடிச்சோதிக்கு அழைத்துக்கொண்டுபோகும்படி வேண்ட, அவர் அதனை அப்படியே திருவுள்ளம்பற்றியதும், அவ்விதமாகவே வந்துவணங்கி வேண்டிய வாநரராக்ஷஸர்களுக்கு, அவரவர்க்கு ஏற்றவாறு உத்தரமருளிச்செய்ததும்.

---

ஸ்ரீராமபிரான் இங்ஙனம் நியமித்தவளவிலே அவரது சாஸனத்தைச் சிரமேற்கொண்டு மஹாஸமர்த்தர்களான தூதர்கள் அப்பொழுதேபுறப்பட்டு நடுவழியில் எங்கும் நிற்காமலே வெகுசீக்கிரமாச்சென்று மூன்றுதினத்தில் மதுராபுரிபோய்ச் சேர்ந்து சத்துருக்கனாழ்வானைக்கண்டு ஸகலமான ஸங்கதிகளையும் உள்ளபடியறிவித்தனர்கள். பெருமாள் இளையபெருமாளைப் பரித்தியாகஞ்செய்ததும், பிரம்மலோகஞ்செல்வதாகக் காலபுருஷனுக்கு வாக்களித்ததும், மக்களுக்கு முடி சூட்டியதும்,—அதாவது, குசனுக்கு விந்தியமலைக் கருகில் குசாவதியென்னும் ஒரு நகரமும் லவனுக்கு சிராவஸ்தியென்னும் சிறந்தபட்டணமும்நிருமித்து, அப்புரிகளிலிருந்து அரசுபுரிந்துவருமாறு அவர்களுக்கு நியமித்து அயோத்தியாபுரியி லெவருமில்லாதபடி யதனைச் சூனியமாக்கிவிட்டு ஸ்ரீராமபிரானும் பரதாழ்வானும் சுவர்க்கலோகஞ்செல்லச் சித்தமாயிருப்பதும்,—தம்மைப் பின்றொடர்ந்து பட்டணத்துப் பிரஜைகளனைவரும் வருமாறு பெருமாள் அனுமதி யளித்திருப்பதுமாகிய எல்லாவற்றையும் தூதர்கள் விவரமாயெடுத்துரைத்துக் காலதாமதஞ்செய்யாது துரிதப்படவேண்டுமென விண்ணப்பஞ்செய்ய, மஹாகோரமான அவ்வசனத்தைச்செவியுற்றுத் தங்குலத்திற்கு க்ஷயகாலம்வந்ததெனவறிந்து சத்துருக்கனன் மந்திரிகள் முதலான பிரகிருதிகளையும் புரோஹிதரான காஞ்சனமுனிவரையும் வரவழைத்து, நடந்தவரலாறுகளனைத்தையு மவர்களிடமுள்ளபடியறிவித்து, தாமும் தமதுபிராதாக்களுடனே பரமபதஞ்செல்லச் சித்தமாயிருப்பதைத்

தெரிவித்து. அப்பொழுதே தமதுதனயர்களானசுபாகு, சத்ருகாதியென்னு மிருவருக்கும் மகுடாபிஷேகஞ்செய்து, தமது சேனைகளையுஞ்செல்வர்களையும் அவர்களிருவருக்கும் சாஸ்திரவிதிப்படி ஸமமாகவே விபாகித்துக்கொடுத்து, சுபாகு மதுராபுரியிலும், சத்ருகாதி வைதிசபட்டணத்திலுமிருந்து ராஜ்ய பரிபாலனஞ்செய்துவருமாறு நியமித்து, பிறகு தாம்மாத்திரம் ஒற்றைத்தேரோடு புறப்பட்டுத் திருவயோத்தி போய்ச்சேர்ந்து, ஆங்கு அருந்தவமுனிவர்கள் புடைசூழ மெல்லியபட்டாடை பணிந்து அக்கினிதேவனென ஒளிபெற்று விளங்கும் அயோத்திமன்னவனையணுகி அடிபணிந்து அபிவாதனஞ்செய்து, இந்திரியங்களை யடக்கி அஞ்சலி ஹஸ்தராகி அறமொன்றினையே உள்ளத்தி லெண்ணி, மஹாதருமிஷ்டரான தாசரதியைநோக்கி, 'எங்களாண்டவனே, ஸ்வாமி! அடியேன் தந்திருவர்க ளிருவருக்குமே இராச்சிய பரிபாலனஞ் செய்து வருமாறு விதிப்படி முடிசூட்டி, தேவரீர் திருவடிநிழலையொற்றிவாசஞ் சித்தமாகிவிப்பொழுது இங்கு விடைகொண்டனன்; யாதொன்றும் மறுத் துரையாது அடியேனது விண்ணப்பத்தைத் திருவுள்ளம்பற்ற வேண்டுகின் றேன்; அடியேனைப்போன்ற அடியவர்களைப் பின்னும் விசேஷமாய் அனுக் கிரஹித்தருளவேண்டுமன்றோ?' என விண்ணப்பஞ் செய்தனர். சத்ருக்க னுழ்வானது சலியாத அத்தியவஸாயத்தை யறிந்து, 'அப்பனே! அப்படியே யாகுக' என்று சக்கரவர்த்தித்திருமகன் அருள்புரிந்தனர்.

இவர்கள் இவ்வாறு ஸம்பாஷணை செய்து முடிக்குமளவில், ஸகல மான வானவர்களும் இராக்ஷஸர்களும் இச்செய்தி கேள்வியுற்று ஸ்ரீராகவ னது ஸந்நிதானத்திற்குத் திரண்டு வந்து சேர்ந்தனர்கள். தேவதைக ளுடைய புத்திரரும் முனிவர்மக்களும் கந்தர்வ குமாரர்களுமான காமரூபிகளா கிய கவிவீரர்களனைவரும் ஸ்ரீராமபிரான் ஸுவர்க்கஞ் செல்லச் சித்தமாயிருக் கின்றனரெனக் கேள்வியுற்று ஸுக்கிரீவ மஹாராஜாவை முன்னிட்டுக்கொண்டு அதிசீக்கிரமே அயோத்தியாபுரிக்கு வந்தனர்கள். வந்தவிடத்தில் அவர்கள் யாவரும் ஸ்ரீராமசந்திரன் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளுவது தெரிந்து அவரது திருவடிகளில் விழுந்துவணங்கி, 'ஸ்வாமி! தேவரீரைப் பின்றொடர் ந்து வர ஆயத்தமாகி நாங்களெல்லோரும் வந்து சேர்ந்தோம்; ஹே புரு ஷோத்தம! எங்களையிங்குத் தனியே விட்டுத் தேவரீர்மாத்திரமே யெழுந்தரு ளுவதாயின், எங்களை யமதண்டத்திற்குக் காட்டிக்கொடுத்ததாகி விடும்' என முறையிட்டுக் கொண்டனர். இவற்றையெல்லாம் திருச்செவிசார்த்திய தாச ரதி மலர்ந்த திருமுகமண்டல முடையவராகி, 'உங்களிஷ்டப்படியே யாகட்டு' மென்று கையமர்த்தியருளினார்.

அப்பொழுது ஸுக்கிரீவமஹாராஜா ரகுவீரனைத் தனியே முறைப்படி யடி பணிந்து, 'ஹே நரேச்வர! ஹே வீர! அடியேன் எனதுராஜ்யத்தை யாண்டுவரு மாறு அங்கதனுக்கு அபிஷேகஞ்செய்துவிட்டுத் தேவரீரது திருவடிவாரத்தை விடாதுபற்றித் தொடர்ந்துவர நிச்சயித்து இவ்விடம்வந்தனன்' என்றார். மஹா ராஜா மொழிந்த வசனத்தைச் செவியுற்று ஸ்ரீராமபிரான் தமக்கு அவர் பரம மித்திரரா யிருப்பதை மேலாகமதித்து அவரைநோக்கி, 'ஸகே, ஸுக்கிரீவ! நான்

சொல்வதைக்கேள்; தேவலோகத்திற்காயினும் ஸாக்ஷாத் பரமபதத்திற்கே யாயினும், யான் உன்னைவிட்டுப்பிரிந்து போகின்றேனில்லை' என உறுதி மொழி கூறினர்.

பிறகு ராக்ஷஸராஜாவான விபீஷணுழ்வானை நோக்கி, 'விபீஷண, ஹே ராக்ஷஸேந்திர, ஹே மஹாவீரிய! எவ்வளவுகாலம் இப்பூமியில் பிரஜைகள் வாழ்கின்றனரோ, அவ்வளவு காலம் நீயும் இலங்காபுரியில் உயர்வுபெற்று வாழ்வாய்; சந்திரசூரியர்கள் எவ்வளவுகாலம் பிரகாசிக்கின்றனரோ, இப்பூமியெவ்வளவுகால மழியா திருக்கின்றதோ, என்னுடைய கதையிப்பூமியில் எவ்வளவு காலம் மேன்மை பெற்று விளங்குகின்றதோ, அவ்வளவு காலம் நீ அழியாது அரசுசெலுத்தி வருக; நீ யெனக்கு நண்பனுதலின், இவ்வாறு உறுதி கூறுகின்றேன்; எனது சாஸநத்தைத் தள்ளாது நீ ஏற்றுக்கொள்ள வேண்டும்; பிரஜைகளை நீ நீதிமுறைப்படி பரிபாலித்து வருக; இதற்கு மாறுத்தரமொன்றும் மொழியாதொழிக. அன்றியும், ராக்ஷஸராஜனே, புத்தியிற் சிறந்த பெரியோய்! யான் உனக்கு இன்னுமொன்று சொல்லுகின்றேன்:

ఆరాధయజగన్నాథ మిక్ష్వాకుకులదైవతం।
ఆరాధనీయమనిశం సర్వైర్దేవైస్సవాసవైః॥

ஆராதயஜகந்நாத மிக்ஷ்வாகுகுலதைவதம்।
ஆராதநீயமநிசம் ஸர்வைர்தேவைஸ்ஸவாஸவைঃ॥

இந்திராதி ஸகல தேவதைகளாலும் அநவரதம் ஆராதிக்கப்படுகின்றவராகிய இக்ஷ்வாகுகுல தேவதையான ஸ்ரீ ஜகந்நாதனை நீ யென்று மாராதித்து வரவேண்டும்' என ஆஞ்ஞாபிக்க, ராக்ஷஸராஜாவான விபீஷணுழ்வான் ஸ்ரீராகவனது * நியமனத்தை நினைத்துக்கொண்டு, திருவுள்ளப்படி நடக்கக் காத்திருக்கின்றேன் - என அங்கீகரித்தனர்.

விபீஷணுழ்வானுக்கு இவ்வாறு நியமித்தருளிய பின்னர் பெருமாள் பவனகுமாரனைநோக்கி, 'வாயுநந்தன! நீ சிரஞ்சீவியாயிருக்க ஆசைகொண்டவன்; ஆதலின் முன்செய்த பிரதிஞ்ஞையை வீணுக்காது நீ பரிபாலித்தல்வேண்டும். வாநரவீரனே! இவ்வுலகத்தில் எனது கதை எவ்வளவுகாலம் வழங்குகின்றதோ, அவ்வளவு காலம் நீ யெனது ஆஞ்ஞையைப் பரிபாலனஞ் செய்துகொண்டு இப்பூமியில் பெருமையாக வாழ்க' என அருளிச்செய்ய, அதுகேட்டு ஆஞ்ஜநேயன், அதிகமான அகமகிழ்ச்சிகொண்டு, 'ஸ்வாமி! தேவரீரது மிகப் பாவனமான சரிதம் இப்பூமியில் எதுவரையில் வழங்குகின்

---

* நியமனத்தை நினைத்தென்றதனுல், பட்டாபிஷேக காலத்தில் ஸ்ரீரங்கநாதனை யளித்தபோது, எங்கள் குலதெய்வமான இப்பெருமாளை நீர் என்றைக்கு மாராதித்துவரவேண்டுமென்று சக்கரவர்த்தித் திருமகன் நியமித்தருளினுரென நன்குவிளங்குகின்றது. இதனுல், ஸ்ரீராகவன் ஸ்ரீரங்கநாதனை விபீஷணுழ்வானிடமெழுந்தருளப்பண்ணிக்கொடுத்தது, அவதார ஸமாப்திகாலமாகிய இத்தருணத்திலேதானெனச் சிலர் நினைப்பது முற்றும் பிசகெனத் தெளிவாகின்றது. (யுத்தகாண்டம் பட்டாபிஷேக ஸர்க்கம் ௬௨௪-ம் பக்கம் குறிப்பில் பார்க்க.)

றதோ, அதுவரையுமே அடியேன் இவ்வவனியில் தேவரீரது சாஸநத்தைப் பரிபாலித்துக்கொண்டு வாழ்ந்திருப்பேன்' என விண்ணப்பஞ்செய்தனர். பிறகு பிரம்மகுமாரரும் காலங்கண்ட கிழவருமான * ஜாம்பவானையும், † மைந்தத்விவிதர்களையும் நோக்கி அங்ஙனமே அருளிச்செய்தனர். விபீஷணர் முதலான சிரஞ்ஜீவிகளாகிய இவ்வைவவரையும் பார்த்துக் கலிவருமளவும் தமது புத்திர பௌத்திராதிகளைப் பாதுகாத்துக்கொண்டு இப்பூமியிலே வஸித்திருக்குமாறு இங்ஙனம் ஆஞ்ஞாபித்து, மற்றவர்களனைவரையும் தம்முடனே கூடப்புறப்பட்டு வருமாறு அங்கீகரித்தருளினர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றிருபதாவது ஸர்க்கம்
முற்றிற்று.

---

## நூற்றிருபத்தோராவது ஸர்க்கம்.

ஸ்ரீராமபிரான் மஹாப்பிரஸ்தானமாய்ப் பட்டணத்தினின்று புறப்பட்டு ஸரயூநதியைநோக்கி யெழுந்தருள, ஸகலமான சராசரங்களும் அவரைப் பின்றொடர்ந்து சென்றது.

---

மறுநாள் விடிந்தவளவிலே, மிகப் பரந்தகன்ற மார்பும் கஞ்சமொத்த திருக்கண்களுமுடையரும் மிகப் புகழ்பெற்றோங்கிய பரமபுருஷருமான ரகுராமன் தமது புரோஹிதரான வஸிஷ்டரைநோக்கி, 'ஸ்வாமி! வாஜபேயத்தைப் பற்றிய வெண்கொற்றக்குடை யாம் செல்லும் ராஜமார்க்கத்திலேநிழற்ற, அந்தணர்களுடனே அக்கினிஹோத்திரம் ஜொலித்துக்கொண்டு முன்னே செல்லுக' என நியமித்தருளினர். அதுகேட்டு வஸிஷ்டமாமுனிவர் மஹாப்பிரஸ்தானத்திற்குச் செய்யவேண்டிய சடங்குகள் யாவும் செய்துமுடிக்க, அதன்பிறகு ஸ்ரீராமபிரான் மெல்லிய பீதகவாடை சாத்திக்கொண்டு விரல்களில் தருப்பைப் பவித்திரங்கள்விளங்க, பிரமமந்திரத்தைத் தாமே ஆவ்ருத்திசெய்துகொண்டு, எங்கும் யாரோடும் யாதும் பேசாது இந்திரியங்களனைத்தையும் அவ்வவற்றின் விஷயங்களிற்செல்லவொட்டாது தடுத்துத்திருவடிகளில்பாதுகைகளின்றியே, உதயகிரியின்றுமெழுகின்ற சூரியனெனச் சொலித்துக்கொண்டு, திருமாளிகையினின்று புறப்பட்டெழுந்தருளினர். ஸ்ரீராமபிரான் பட்டணத்தைவிட்டெழுந்தருளுகையில், அவரது வலதுபாரிசத்திலே பதுமமலர் கைக்கொண்ட மலர்மகளும், இடதுபக்கத்து நிலமகளுமாகிய இருவருமடுத்துச்சென்றனர்கள். அன்றியும், ஸங்கற்பம், பராக்கிரமம், நாநாவிதமான கணைகள், கார்முகம், ஸகலமான படைக்கலங்கள் ஆகிய பலவும் புருஷரூபங்கொண்டு கூடவேசென்றன; வேதங்கள் நான்கும் வேதியர்வடிவமெடுத்துப்போயின; ஸகலஸம்ரக்ஷக

---

* ஜாம்பவான் பிரம்ம புத்திரராதலின் பிரமதேவனிடம் சிரஞ்சீவியாயிருக்க வரம் பெற்றவர்.

† மைந்தத்விவிதர்கள், அச்விநீ தேவர்களின் மக்களாய் அவர்களது அநுக்கிரஹம் பெற்று அமுதபானம் பண்ணினவர்கள்.

№ 27.) மஹாப்ரஸ்தானமாச்சென்ற ஸ்ரீராமபிரானை ஸகலசராசரங்களும் பின்றொடர்ந்து, சென்றது. PAGE. NO. 306.



మహాప్రస్థానముగా బయలుదేరిన శ్రీరాములవారితో సకలచరాచరములు వెనుక బయలుదేరుట.)

மான காயத்திரிமந்திரமும், ஓங்காரம் வஷட்காரம் முதலான வேறுபல மகா மந்திரங்களும் ஸ்ரீராமபிரானைப் பின்றொடர்ந்தன; மஹாநுபாவர்களான மகரிஷிகளும் பிராம்மணர்களும் பரமபதவாயில் யாவருக்கும் திறக்கப்பட்டிருக்கின்றதெனத் தெரிந்து ஸந்தோஷமாய் ஸ்ரீராமசந்திரனுடனே புறப்பட்டுப் போயினர்; அந்தப்புரத்திலுள்ள பாலர்களும் விருத்தர்களும் தாஸிகளும் கிங்கரர்களுமான ஸகலஸ்திரீகளும் பேடிகளும் ஸ்ரீராமபிரானோடு கூடவே புறப்பட்டனர்கள்; பரதசத்துருக்கனர்களும் ஸ்ரீராமனையே தமக்குக் கதியாகப்பற்றித் தம் அக்கினிஹோத்திரங்களை முன்னிட்டுத் தமது அந்தப்புரத்துடனே யெழுந்து சென்றார்கள்; வேதவித்துக்களான வேதியர்களனைவரும் புத்திரகளத்திராதிகள் பின்றொடர, தம் அக்கினிஹோத்திரங்களைக் கையிலெடுத்துக்கொண்டு காகுஸ்தனோடுகூடவே போயினார்கள்; அமாத்தியர்களும் பிருத்தியவர்க்கங்களும் தாசரதியினது தேகாவஸானத்தைக் கூடவிருந்து காணப்பெற்றோமெனத் தங்கள் புத்திரபசு பந்துக்களுடனே கூடிக் களிப்படைந்தவர்களாகிப் பெருமானைப் பின்றொடர்ந்தார்கள்; பட்டணத்துப் பிரகிருதிகள் பலரும் துஷ்டியும்புஷ்டியு மடைந்தவர்களாகி ஸ்ரீராகவனதுதிருவடிநிழலைப்பற்றி நடந்தார்கள்; இவ்வண்ணமே ஸ்ரீராமபிரானது ஸம்பந்தம்பெற்ற ஸகலமானஸ்திரீபூமான்களும் பக்ஷிபசுவாஹனம்முதலிய ஸகலசராசரங்களுடனே ஸகலபாபங்களும் நீங்கினவராகி மிக்க மகிழ்ச்சிகொண்டு ஸ்ரீராகவனுடனே போனார்கள். ஸகலமான வானரவர்க்கங்களும் மங்கள ஸ்நாநஞ்செய்து மகிழ்ச்சிகொண்டனவாகி ஆனந்தத்தால் உடம்புபூரித்துக் கீச்சுகீச்செனப் பெருங்கூச்சலிட்டுக்கொண்டு பெருமானைப் பின்றொடர்ந்துபோயின. அத்தருணத்தில் அந்நாட்டிலே விசனமுற்றவனுமில்லை, வருத்தமுற்றவனுமில்லை, வெட்க மடைந்தவனுமில்லை; ஸகலமானபேர்களும் பேராநந்தக்கடலில் மூழ்கியிருந்தனர்; இவை யாவு மோர் அற்புதமாயிருந்தன. ஸ்ரீராமபிரான் பட்டணத்தைவிட்டு எழுந்தருளுவதைப் பார்க்க வந்தவரெவரோ, அவர்களும் காகுஸ்தனைக் கண்டவளவிலே களிப்படைந்தவராகிப் பரமபதம்போகப் பின்றொடரலாயினர். இவ்விதமாகவே ஸகலமான கவிக்குலங்களும் அரக்கர்கூட்டமும் பட்டணத்துப் பிரஜைகளும் பெருமாளிடத்திலே பக்திமேலிட்டவர்களாகி அவரைவிட்டுப் பிரியப் பிரியமில்லாதவர்களாய் அதிகமான ஆஸக்தியுடனே அவரையே பின்பற்றிக் கலியாணநடையா நடந்தார்கள். ஸ்ரீராமபிரான் பரமபதத்திற்கெழுந்தருளப் புறப்படுகையில், அயோத்தியாபுரியில் ஒருவர் கண்ணிலும் புலப்படாமல் மூலைமுடக்குக்களில் மறைந்திருந்த பூதங்களும் அவருடனே யெழுந்து சென்றன; காகுஸ்தனைக் கண்ணால் கண்ட ஜங்கமஸ்தாவரங்களான ஸகல ஜீவன்களும் பெருமாள் புறப்பட்டபோது கூடவே புறப்பட்டுப் போயின; அக்காலத்தில் அயோத்தியாபுரியில் உயிருள்ள பொருள் ஒன்றேனும் ஸ்ரீராமபத்திரனைப் பின்றொடராது நின்றிலது; திர்யக்குக்களான ஜந்துக்கள்கூட யாவும் அவனோடுகூடவே யெழுந்துபோயின.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றிருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபத்திரண்டாவது ஸர்க்கம்.

ஸரயூநதிபோய்ச் சேர்ந்தபிறகு, ஸகலதேவதைகளும் வானத்தில்வந்துநிறைந்துநிற்க
பிரம்மதேவனால் பிரார்த்திக்கப்பட்டு, ஸ்ரீராமபிரான்
தம்முடன் வந்தவர் அனைவருக்கும் நற்கதியளித்து,
தன்னடிச்சோதிக் கெழுந்தருளியது.

---

இவ்விதமாய் அயோத்தியாபுரியினின்றும் ஸகல சராசரங்களுடனே, புறப்பட்டசக்கரவர்த்தித்திருமகன்மேற்குமுகமாய்அரையோஜனைதூரமெழுந்தருளி, ஆழ்ந்து சுழித்துக்கொண்டு ஸம்பூர்ணமாகப் பிரவஹிக்கின்ற புண்ணியநதியான ஸரயூநதிதீரம்போய்ச் சேர்ந்தனர். ஸ்ரீராமபிரான் சுவர்க்கம் புகவெழுந்த அத்தருணத்தில் ஸகலலோக சிருஷ்டிகர்த்தாவான பிரமதேவன் ஸகலமான தேவதைகளும் தேவரிஷிகளும் கோடிக்கணக்கான தேவவிமானங்களும் புடைசூழ அங்குவந்து வானத்தில் நின்றனன். அப்பொழுது தாம் செய்த புண்ணியகருமங்களின் மகிமையால் மிகச் சோதிபெற்று விளங்கிய விண்ணுலகத்தவரது காந்தியும் விமானங்களின் ஒளியும் விரவி வானமெங்கும் திவ்யமான சோதிமயமாய் அற்புதமாகத் தோற்றியது; யாவரும் அகங்களிக்க மிகப்பரிமளகந்தத்துடனே மந்தமாருதம் மங்களமாக வீசியது; பூமியெங்கும்பரவப் பெருமையாகத் தேவர்கள் பூமாரிபொழிந்தனர்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸ்திரீகளும் தூரியவாத்தியம் முழக்கினர்கள். இப்படி மகோத்ஸவமாயிருக்கும் ஸமயத்தில் தாசரதி தமது திருவடிகளால் ஸரயூநதியைப் பசிக்கலாயினர்.

அப்பொழுது பிதாமஹன் ஆகாயத்தினின்று மிறங்கிவந்து அயோத்தி மன்னனை நோக்கி, 'ரகுகுலசிகாமணியே! உமக்குப் பல்லாண்டு பல்லாண்டு; ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரமான தேவரீர் இனி இவ்விண்ணுலகத்திற்கு எழுந்தருள்க; எங்களுடைய பாக்கிய விசேஷமே யிப்படியாகியது; இனித் தம்பிமார்களுடனே கூடித் தத்தமக்குரிய * சுயமான திருமேனியில் பிரவேசித்தருள்க; வைஷ்ணவமான திருமேனியில் பிரவேசிக்கத் திருவுள்ளமாயின், அங்ஙனமே பிரவேசித்தருளலாம்; அல்லது, நலமந்தமில்லதோர் நாட்டிற்கு நேராயெழுந்தருளத் திருவுள்ளமாயின், அப்படியும் செய்தருளலாம். ஸகலலோகங்களுக்கும் பிராப்யமும் பிராபகமும் தேவரீரேயன்றோ? தேவரீரை எந்நாளும் விட்டுப்பிரியா துறைகின்ற நித்தியாநபாயினியான பெரியபிராட்டியா ரொருவர்தவிர, தேவரீரைக் கண்டறிந்தவர் மற்றெவருமில்லை. மனோவாக்குக்களுக்கு மெட்டாதவரும், ஆதியந்தமில்லாதவரும், ஸகலமான ஜந்துக்களையும் அருள்புரிந்து ஆதரிப்பவரும், எங்கும் நிறைந்திருப்பவருமான பரமபுருஷன் தேவரீரேயாதலின், எந்தத் திருமேனியில்

---

* தேவரீர் மஹாவிஷ்ணுவினது திருமேனியிலும், இளையபெருமாள் திருவனந்தாழ்வான் திருமேனியிலும், பரதாழ்வான் பெரியதிருவடி திருமேனியிலும், சத்துருக்கனாழ்வான் சேனை முதலியார் திருமேனியிலும் பிரவேசித்தருள்கவென்றபடி.

பிரவேசிக்கத் திருவுள்ளமோ, அதில் பிரவேசித்தருளலாம்' என விண்ணப்பஞ் செய்தனர்.

பிதாமஹன் இவ்வாறு புகன்றதைத் திருச்செவிசார்த்திய சக்கரவர்த்தித்திருமகன், திருவுள்ளத்தில் சற்று நன்கு ஆய்ந்துணர்ந்து தம்பியார்களுடன் கூடத் தமது திருமேனியுடனே வைஷ்ணவமாகிய தமது சோதியிற் கலந்தருளினர். ஸ்ரீ மகாவிஷ்ணுவினது மூர்த்தியில் ஸ்ரீராமபிரான் சேர்த்தியாயினது கண்டு ஸகலமான தேவதைகளும் அக்கினி இந்திரன் முதலானவர்களை முன்னிட்டு அத் தேவநாதனை நமஸ்கரித்து விசேஷமாகப் பூஜித்தார்கள். ஸாத்தியதேவர்கள், மருத்துக்கள், கந்தர்வர்கள், அப்ஸரசுக்கள், சுபர்ணர், நாகர், யக்ஷர், தைத்தியர், தானவர், ராக்ஷஸர், தேவரிஷிகளாகிய யாவரும் தமது மனோரதம் நிறைவேறப் பெற்றவர்களாகி, மிகப் பெருமையும் பேரானந்தமுங் கொண்டு நன்று நன்றெனக் கொண்டாடினார்கள். ஸ்ரீராமபிரானெழுந்தருளிய வளவிலே தேவலோகம் ஸகலபாபங்களும் ஒழிந்து நிர்மலமாகியது.

ஸ்ரீ மகாவிஷ்ணுவினது திருமேனியில் பிரவேசித்தருளிய ஸ்ரீராமபிரான் அநந்தரம் பிரமதேவனைப் பார்த்து, 'என்னிடத்து என்றுமிடையறாத அன்புள்ளவர்களாய் என்னைப் பின்பற்றிவந்திருக்கின்ற இந்த ஸகலமான பிரஜைகளுக்கும் புகுதற்கு மேலான உலகந் * தருக; இவர்கள் என்னிடம் மஹா விச்வாஸமுடையவர்களாய் பர ஸமர்ப்பணம் பண்ணியிருப்பவர்களாதலின், இவர்களை நாம் ஒருபோதுங் கைவிடலாகாது' என்று அருளிச்செய்ய, பத்மயோனி பகவானது திருவுள்ளத்தை யுணர்ந்து 'ஸ்வாமி! இவர்கள் ஸாந்தானிகமென்கிற சிறந்த உலகம்புகுந்து அங்கிருந்து தேவரீரது நலமந்தமில்லதோர் நாட்டிற்போலவே பேரின்பமனுபவிப்பார்கள்; இவர்கள் மாத்திரமே யன்றி இனிமேலும் சக்கரவர்த்தித் திருமகனான தேவரீரது திவ்விய சரித்திரங்களைச் சிந்திக்கின்றவைகளும், தேவரீரிடம் பக்திபண்ணுகின்றவைகளுமாகிய பசு பக்ஷி முதலான திர்யக்குக்களும் சரீராவஸான காலத்தில், பிரம்மலோகத்திற்கு மேற்பட்டதும், மறுபடி திரும்பி வருதலில்லாமை முதலிய பரமபதத்தின் பெருமைகள்பலவு மமைந்ததுமான இவ்வுலகமே சேர்ந்து பேரின்பம் பெறலாகும்; வானரவீரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோரதிகார தேவதையின் அம்சமேயாதலின், எவரெவர் எந்தெந்தத்தேவதையின் அம்சமாய் அவதரித்தனரோ, அவரவர் அந்தந்தத் தேவசரீரத்தில் பிரவேசிக்கலாகும்' என விண்ணப்பஞ் செய்தார்.

பிதாமஹன் இவ்வாறு புகன்றவளவில், அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே சுக்கிரீவ மகாராஜா சூரியமண்டலத்தில் சேர்ந்துபோயினர். பிறகு அங்குள்ள ஸகலமான ஜீவராசிகளும் ஆனந்தக்கண்ணீர் பெருக்கி, ஸரயூநதியிலே கோப்பிரதாரமெனுந் துறையிலிறங்கி மிக்க மகிழ்ச்சிகொண்டு மூழ்கின. மூழ்கின மானிடர்கள் மானிடசரீரமொழிந்து தேவவிமானத்திலேறினர்கள்; பசு பக்ஷி முதலான மற்றப்பிராணிகளும் ஸரயூநதியில் நீராடி.

* அயனும் ஆதிவாஹிக கணத்திற் சேர்ந்தவனாதலின், உலகமளிக்க அதிகார முடையவனாம்.

மிகப்பிரகாசமான திவ்வியதேகம்பெற்றுத் தேவலோகத்தை யடைந்து தேவதைகளாயின; அக்காலையில் ஸரயூநதி தீர்த்தத்தின் ஸம்பந்தம்பெற்ற சராசரங்கள் ஸகலமும் திவ்விய சரீரம்பெற்றுத் தேவலோகம் புகுந்தன; ஸகலமான வாநரராக்ஷஸர்களும் ஸரயூநதியில்ஸ்நாநம்பண்ணித் தம் தேகத்தை யவ்விடத்தே யொழித்துச் சுவர்க்கம் புகுந்து தத்தம் பிதாவான தேவதைகளின் சரீரத்தில் சேர்ந்துபோயினர். இங்ஙனம் தம்முடன் வந்தவர்களான அன்பர்களனைவரும் உத்தமபத மடையுமாறு அனுக்கிரஹித்தருளி, ஸ்வாமி ஆநந்தபூரிதர்களான நித்திய சூரிகளுடனே கூடிக் களிகூர்ந்து ஸ்ரீவைகுண்டத்திற் கெழுந்தருளினர். அம்புயத்தோன் அமரர்கள் அனைவருடனும் கூடி, ஆநந்தக் கண்ணீரரும்ப அயோத்திமன்னனை யடிபணிந்து போற்றியவண்ணமே தம் முகைஞ்சேர்ந்தனர்.

உத்தர ஸ்ரீமத் ராமாயணத்தில் நூற்றிருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபத்துமூன்றுவது ஸர்க்கம்.

ஸ்ரீமத் ராமாயணத்தின் மஹிமையும்,
அதனைப்படிப்பதனாலும் கேட்பதனாலுமுண்டாகும் நன்மைகளும்.

---

ஸ்ரீமந்நாராயணமூர்த்தி லோகானுக்கிரஹ நிமித்தமாக ஸ்ரீராமாவதாரஞ் செய்தருளி நடத்திய திருவிளையாட்டுக்களை யமைத்து வால்மீகிமுனிவர், பிரம்மாவினாலும் பூஜிக்கப்பட்டதாய் ஆக்கியானங்களனைத்தினும் மேன்மைபெற்றதாகிய ராமாயணமென்கிற மஹா காவியத்தை உத்தர ஸ்ரீமத் ராமாயணமுஞ் சேர்த்து இவ்வளவே அளவுள்ளதாகச் செய்தருளினர். ஸகல சராசரங்களுமுள்ளிட்ட இந்த ஜகத்தைத் தமக்குத் திருமேனியாகவுடைய ஸ்ரீ மகாவிஷ்ணு இங்ஙனம் தம்மவருக்குத் திருநாடளித்துத் தாம் பூமியில் திருவவதரித்த காரியம் பரிபூர்ணமான பின்பு பழையபடியே பரமபதம்போய்ச் சேர்ந்தனர். மஹாமகிமையுடையதான இந்த ஸ்ரீமத் ராமாயணத்தை இப்பூலோகத்தவர்கள்மாத்திரமே யன்று; தேவலோகத்திலும், ஸகலமான தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் தேவரிஷிகளும் அதிகமான ஆதரத்துடனே அநுதினமும் கேட்டுக் களிப்படைகின்றனர். ஸ்ரீமத் ராமாயணமென்கிற இந்த ஆக்கியானமானது படிப்போர் கேட்போர் ஆதிரிப்போர் ஆகிய பலருக்கும் ஸகல பாபங்களையும் போக்கி ஆயுளும் ஐசுவரிய மளிக்கவல்லது; வேதத்திற்குச் சமமான சிறப்புடையதாகிய ஸ்ரீமத் ராமாயணத்தை சிராத்தகாலங்களில் அக்ஷய்ய பிதிரு திருப்தியின்பொருட்டுப் பிதிருதேவர்கள் கேட்குமாறு படிக்கக்கடவர்கள். இந்த ஸ்ரீமத்ராமாயணத்தில் ஒருபாதம் படித்தாலும், புத்திரனை வேண்டுவோன் புத்திரனைப் பெறுவான், பொருளை வேண்டுவோன் பொருள் பெறுவான்; அவன் செய்த பாபமனைத்து மொழிந்துபோம். பிரதிதினம் விடாது பாபம் செய்கின்ற புருஷனும் தக்க நியமத்துடனே இதில் ஒருசுலோகத்தைப் படித்தாலும் அப்பாபத்தினின்று விடுபட்டவனாகி

ளுன். ஸ்ரீமத் ராமாயணத்தைப் படிப்பவருக்கு விசேஷமாக வஸ்திரமும் பசுவும் பொன்னும் அளித்தல்வேண்டும்; ஸ்ரீமத்ராமாயணத்தைப் படிப்பவர் திருப்தியடைவாராயின், ஸகல தேவதைகளும் திருப்தி யடைந்தவர்களாவார்கள். ஸகல ஸம்பத்தையும் கொடுப்பதான ஸ்ரீமத் ராமாயணத்தைக் கிரமமாகப் பாராயணஞ்செய்கின்ற புருஷன் இவ்வுலகத்தில் புத்திரபௌத்திராதிகளுடனேகூடிப்பெருமைபெற்றுவாழ்வதுமன்றி மறுமையிலும் வீடுபெறுவான். தாசரதி திருநாட்டுக்கெழுந்தருளியபின்னர் அயோத்தியாபுரி பலவருஷகாலம் பாழாயிருந்து பிறகு ரிஷபனென்போன் ராஜாவாக வருங்காலத்துச் சிறப்பும் செல்வமும் பெற்றுச் செழிப்புடைய நகரமுமாகும்-என்று இவ்விதமாக ஆயுஷியமான இந்த ஸ்ரீமத்ராமாயணத்தை*உத்தரகதையும் பவிஷியகதையும்சேர்த்துப்பிரசேதஸரது புத்திரரான வால்மீகிமுனிபுங்கவர் செய்தருளினர். இதனைப் பிரம்மதேவரும் மிகக் கொண்டாடிப் பிரதிதினம் படித்துவருகின்றனர்.

இந்த ஸ்ரீமத் ராமாயணத்தில் ஒருஸர்க்கமேனும் படிக்கக் கேட்பவன், கேட்டமாத்திரத்திலே ஆயிரம் அசுவமேதமும் அயுதம் வாஜபேயமும் செய்த பலனைப்பெறுகிறான்; ஸ்ரீமத் ராமாயணத்தைப் படிக்கக்கேட்டவன், பிரயாகம் முதலான புண்ணிய தீர்த்தங்களிலும், பாகீரதி முதலிய புண்ணியநதிகளிலும் நீராடினவனாகிறான்; நைமிசாரணியம் குருக்ஷேத்திரம் முதலான புண்ணிய ஸ்தலங்களில் யாத்திரைசெய்தவனாகிறான்; சூரியக்கிரஹண காலத்தில் குருக்ஷேத்திரத்திலே துலாபாரம் தானஞ்செய்பவனும், ஸ்ரீமத் ராமாயண பாராயணஞ்செய்யக் கேட்பவனும் ஒருவர்க்கொருவர் ஒப்பானவர்களாம். அத்தியந்தம் சிரத்தையோடுகூடினவனாகி இந்தஸ்ரீராகவனது கதையைக் கேட்பவன் ஸகல பாபங்களினின்றும் விடுபட்டு விஷ்ணுலோகத்தை யடைகின்றனன். பூர்வம்வால்மீகிமுனிவர் செய்தருளிய ஆர்ஷமான இந்தஆதிகாவியத்தை எப்பொழுதும் அதிகமானபக்தியுடனே கேட்பவன் ஆமுஷ்மிகத்தில் விஷ்ணுலோகத்தையடைவது மாத்திரமேயன்றி, ஐஹிகத்திலும் ஸம்பத்தும் ஸந்தானமும்பெற்றுப் புத்திரகளத்திராதிகளுடனேகூடிப் பெருமையாகவாழ்வானென்னும் உண்மையையறிந்து யாவரும் நியமத்துடனே பிரதிதினம் ஸ்ரீமத் ராமாயணபாராயணஞ் செய்வதை சிரவணம் பண்ணக்கடவர்கள். எல்லாவற்றினும் சிறப்புப் பெற்றதான இந்த ஸ்ரீமத் ராமாயணம் ஸாக்ஷாத் காயத்திரி ஸ்வரூபமேயாம். இதில் ஒருபதமேனும் படிப்பானாகில், ஸந்தானமில்லாதவனுக்கு ஸந்தானமுண்டாகும், ஸம்பத்தில்லாதவனுக்கு ஸம்பத்துமுண்டாகும்; அவனுக்குள்ள ஸகலபாபங்களும் கழிந்துபோம். அதிகமான விசுவாஸத்துடனே பிரதிதினம் ஸ்ரீராகவனது சரித்திரத்தைப் படிப்பவரும் கேட்பவரும் பாபங்கள் பலவும் ஒழியப்பெற்று நீடுவாழ்வார். தமக்கு நன்மையை நாடுகின்றவர் எப்பொழுதும் ஸ்ரீராகவனையே சிந்திக்கக்கடவர்; பிராம்மணர் மூலமாகப் பிரதிதினம் இந்த ஆக்கியானத்தை யாவரும் கேட்குமாறு செய்துவரக்

---

* உத்தரமென்றது, பட்டாபிஷேகத்திற்குப் பின் பிராட்டி பூமியிற் புகுமளவும் நடந்த கதையை; பவிஷியமென்றது, பிராட்டி பூமியிற் புகுந்ததற்குப் பிற்பட்ட கதையை.

கடவர். ஸ்ரீ ரகுநாதனது இந்தச் சரிதத்தை யாவனொருவன் ஸம்பூர்ணமாகப் பாராயணஞ்செய்கின்றனனோ, அவன் சரீராவஸானகாலத்தில் விஷ்ணுலோகம் சேருகிறானென்பது ஸத்தியம்; அவனது பிதாவும் பிதாமஹரும் பிரபிதாமஹரும் பிரபிதாமஹராதுபிதாவும் அவருடைய பிதாவுமாகிய யாவரும் விஷ்ணுலோகத்தை யடைகிறார்கள்; இதில் ஸந்தேஹமில்லை. இந்த ஸ்ரீரகுநந்தனனது சரித்திரமானது எப்பொழுதும் தருமார்த்த காமமோக்ஷமென்னும் சதுர்வித புருஷார்த்தங்களையும் பயக்கவல்லது; ஆதலின், தம்மாலானவளவும் பாடுபட்டு யாவரும் ஸர்வோத்தமமான இந்தச் சரிதத்தைப் பிரதிதினம் எப்பொழுதும் சிரவணம்பண்ண முயலவேண்டும். பக்திபுடனேகூடி இந்த ஸ்ரீமத்ராமாயணத்தில் ஒருபாதமாயினும் ஒருபதமேயாயினும் படிக்கக் கேட்கின்றவன் பரப்பிரம்மத்தினது பேரின்பவீடு புக்கு, அந்தப் பிரம்மத்தினாலும் ஸதா பூஜிக்கப்படுகின்றவனாகிறான்.

பூர்வம் நடந்த சரித்திரமாகிய இந்த ஆக்கியானம் இவ்விதமாய் இவ்வளவாக விளங்குகின்றது; இதனைப் பூரணமான பக்தி விசுவாசங்களுடனே பாடிப் பாராயணஞ்செய்க; அங்ஙனம் பாராயணஞ் செய்புமுங்களுக்குப் பல்லாண்டு பல்லாண்டு; ஸ்ரீ மஹாவிஷ்ணுனது பலம் மென்மேலும் உயர்ந்தோங்குக.

உத்தர ஸ்ரீமத்ராமாயணத்தில் நூற்றிருபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

வால்மீகி மஹாமுனிவர் செய்தருளிய ஆதிகாவியமான ஸ்ரீமத் ராமாயணத்தில்
உத்தர ஸ்ரீமத் ராமாயணவசனம் ஸம்பூர்ணம்.

---

அநந்தகோடி மஹாஜனங்கள் நிறைந்த அசுவமேத மஹாமண்டபத்திலே
சுவர்ண ஸீதா ஸமேதரான சக்கரவர்த்தித் திருமகன் ஸன்னிதானத்தில்
குசலவர்கள் கானம்பண்ணினபடி
இருபத்தினாலாயிரம் கிரந்தங்களடங்கிய ஆதிகாவியமான
ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் தமிழ்வசனம்
ஸம்பூர்ணம்.

---

ஸ்ரீஸீதாலக்ஷ்மணபரத சத்துருக்னஸமேத
ஸ்ரீ ரகுநந்தன பரப்ரம்மணே நம:
ஸர்வம் ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து.

---

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

---

శ్రీకృష్ణతాతగురువర్యకటాక్షభూమ్నా వల్మీకజన్మమునిభాషితమాదికావ్యం।
వాధూలవంశనరసింహగురోస్తనూజః శ్రీవాసరాఘవసుధీర్ద్రవిడీచకార॥



பரமபதநாதன். பரமபதவைபவம்.

LITHO. MEENAKSHIAMMIAH PRESS MYLAPORE 1904.

# ஸ்ரீராம பத்திர மங்களம்.

**ஸ்ரீமத் ராமாயண பாராயணஞ்செய்து முடிக்கையில் அநுஸந்திக்கும் சுலோகங்கள்.**

1. ఏవమేతత్పురావృత్త మాఖ్యానంభద్రమస్తువః।
ప్రవ్యాహరతవిస్రబ్ధం బలంవిష్ణోఃప్రవర్ధతాం॥
ஏவமேதத்புராவ்ருத்த மாக்யாநம்பத்ரமஸ்துவः |
ப்ரவ்யாஹரதவிஸ்ரப்தம் பலம்விஷ்ணோःப்ரவர்த்ததாம் ||

2. లాభస్తేషాంజయస్తేషాం కుతస్తేషాంపరాభవః।
యేషామిన్దీవరశ్యామో హృదయేసుప్రతిష్ఠితః॥
லாபஸ்தேஷாம்ஜயஸ்தேஷாம் குதஸ்தேஷாம்பராபவः |
யேஷாமிந்தீவரச்யாமோ ஹ்ருதயேஸுப்ரதிஷ்டிதः ||

3. కాలేవర్షతుపర్జన్యః పృథివీసస్యశాలినీ।
దేశోయంక్షోభరహితో బ్రాహ్మణాస్సన్తునిర్భయాః॥
காலேவர்ஷதுபர்ஜந்யः ப்ருதிவீஸஸ்யசாலிநீ |
தேசோயம்க்ஷோபரஹிதோ ப்ராஹ்மணாஸ்ஸந்துநிர்ப்பயாः ||

4. కావేరీవర్ధతాంకాలే కాలేవర్షతువాసవః।
శ్రీరఙ్గనాథోజయతు శ్రీరఙ్గశ్రీశ్చవర్ధతాం॥
காவேரீவர்த்ததாங்காலே காலேவர்ஷதுவாஸவः |
ஸ்ரீரங்கநாதோஜயது ஸ்ரீரங்கஸ்ரீச்சவர்த்ததாம் ||

5. స్వస్తిప్రజాభ్యఃపరిపాలయన్తాం న్యాయ్యేనమార్గేణమహీంమహీశాః।
గోబ్రాహ్మణేభ్యశ్శుభమస్తునిత్యం లోకాస్సమస్తాస్సుఖినోభవన్తు॥
ஸ்வஸ்திப்ரஜாப்யःபரிபாலயந்தாம் ந்யாய்யேநமார்க்கேணமஹீம்மஹீசாः|
கோப்ராஹ்மணேப்யச்சுபமஸ்துநித்யம் லோகாஸ்ஸமஸ்தாஸ்ஸுகிநோபவந்து ||

---

1. మఙ్గళంకోసలేన్ద్రాయ మహనీయగుణాబ్ధయే।
చక్రవర్తితనూజాయ సార్వభౌమాయమఙ్గళం॥
மங்களம்கோஸலேந்த்ராய மஹநீயகுணாப்தயே |
சக்ரவர்த்திதநூஜாய ஸார்வபௌமாயமங்களம் ||

2. వేదవేదాన్తవేద్యాయ మేఘశ్యామళమూర్తయే।
పుంసాంమోహనరూపాయ పుణ్యశ్లోకాయమఙ్గళం॥
வேதவேதாந்தவேத்யாய மேகச்யாமளமூர்த்தயே |
பும்ஸாம்மோஹநரூபாய புண்யச்லோகாயமங்களம் ||

3. విశ్వామిత్రాన్తరఙ్గాయ మిథిలానగరీపతేః।
భాగ్యానాంపరిపాకాయ భవ్యరూపాయమఙ్గళం॥
விச்வாமித்ராந்தரங்காய மிதிலாநகரீபதேः |
பாக்யாநாம்பரிபாகாய பவ்யரூபாயமங்களம் ||

4. పితృభక్తాయసతతం భ్రాతృభిస్సహసీతయా।
నన్దితాఖిలలోకాయ రామభద్రాయమఙ్గళం॥
பித்ருபக்தாயஸததம் ப்ராத்ருபிஸ்ஸஹஸீதயா |
நந்திதாகிலலோகாய ராமபத்ராயமங்களம் ||

5. త్యక్తసాకేతవాసాయ చిత్రకూటవిహారిణే।
సేవ్యాయసర్వయమినాం ధీరోదారాయమఙ్గళం॥
த்யக்தஸாகேதவாஸாய சித்ரகூடவிஹாரிணே |
ஸேவ்யாயஸர்வயமிநாம் தீரோதாராயமங்களம் ||

6. సౌమిత్రిణా చ జానక్యా చాపబాణాసిధారిణే।
సంసేవ్యాయ సదా భక్త్యా స్వామినే మమ మఙ్గళమ్॥
ஸௌமித்ரிணாசஜாநக்யா சாபபாணாஸிதாரிணே ।
ஸம்ஸேவ்யாயஸதாபக்த்யா ஸ்வாமிநேமமமங்களம் ॥

7. దణ్డకారణ్యవాసాయ ఖణ్డితామరశత్రవే।
గృధ్రరాజాయ భక్తాయ ముక్తిదాయాస్తు మఙ్గళమ్॥
தண்டகாரண்யவாஸாய கண்டிதாமரசத்ரவே ।
க்ருத்ரராஜாயபக்தாய முக்திதாயாஸ்துமங்களம் ॥

8. సాదరం శబరీదత్త ఫలమూలాభిలాషిణే।
సౌలభ్యపరిపూర్ణాయ సత్త్వోద్రిక్తాయ మఙ్గళమ్॥
ஸாதரம்சபரீதத்த பலமூலாபிலாஷிணே ।
ஸௌலப்யபரிபூர்ணாய ஸத்வோத்ரிக்தாயமங்களம் ॥

9. హనుమత్సమవేతాయ హరీశాభీష్టదాయినే।
వాలిప్రమథనాయాస్తు మహాధీరాయ మఙ్గళమ్॥
ஹநுமத்ஸமவேதாய ஹரீசாபீஷ்டதாயிநே ।
வாலிப்ரமதநாயாஸ்து மஹாதீராயமங்களம் ॥

10. శ్రీమతే రఘువీరాయ సేతూల్లఙ్ఘితసిన్ధవే।
జితరాక్షసరాజాయ రణధీరాయ మఙ్గళమ్॥
ஸ்ரீமதேரகுவீராய ஸேதுல்லங்கிதஸிந்தவே ।
ஜிதராக்ஷஸராஜாய ரணதீராயமங்களம் ॥

11. ఆసాద్య నగరీం దివ్యా మభిషిక్తాయ సీతయా।
రాజాధిరాజరాజాయ రామభద్రాయ మఙ్గళమ్॥
ஆஸாத்யநகரீந்திவ்யா மபிஷிக்தாயஸீதயா ।
ராஜாதிராஜராஜாய ராமபத்ராயமங்களம் ॥

12. మఙ్గళాశాసనపరై ర్మదాచార్యపురోగమైః।
సర్వైశ్చ పూర్వైరాచార్యైః సత్కృతాయాస్తు మఙ్గళమ్॥
மங்களாசாஸநபரைர் மதாசார்யபுரோகமை: ।
ஸர்வைச்சபூர்வைராசார்யைஸ் ஸத்க்ருதாயாஸ்துமங்களம் ॥

---

అఙ్గీకుర్వన్త్వకలుషధియో నిత్యమధ్యాత్మవిద్యా
మాద్యోధర్మస్స్పృశతువసుధా మాశిషఃపారవర్తీ।
దేవఃశ్రీమాన్ జనకతనయాజాని రస్మిన్ప్రబన్ధే
వక్తాశ్రోతావచనవిషయః ప్రీయతాంరామచన్ద్రః॥
அங்கீகுர்வந்த்வகலுஷதியோ நித்யமத்யாத்மவித்யாம்
ஆத்யோதர்ம:ஸ்ப்ருசதுவஸுதா மாசிஷ:பாரவர்த்தீ ।
தேவ:ஸ்ரீமாந்ஜநகதநயாஜாநி ரஸ்மிந்ப்ரபந்தே
வக்தாச்ரோதாவசநவிஷய: ப்ரீயதாம்ராமசந்த்ர: ॥

[இந்த ச்லோகங்களை யநுஸந்தித்த பிறகு ஸ்வாசார்யப்ரப்ருதி பகவத் பர்யந்தமான குருபரம்பரையை யநுஸந்தித்து நிறுத்தல்வேண்டும்.]

அஸ்மத்குருபரம்பராயைநம:.

---

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீஸீதாலக்ஷ்மணபரதசத்ருக்நஸமேத

ஸ்ரீரகுநந்தநபரப்ரஹ்மணேநம:.

# ஸ்ரீமத் வால்மீகிராமாயணம்

## அவதாரிகை.

ஸ்ரீமத் வால்மீகிராமாயணம் அவதரித்த வரலாறு.

ஸ்ரீய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், உயர்வற வுயர்நல முடையனாய், நமக்கும் பூவின்மிசைமங்கைக்கு மின்பனாய், ஞாலத்தவர் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானான ஸர்வேச்வரன், 'ஒண்டொடியாள் திருமகளு நீயுமே நிலா நிற்ப' என்கிறபடியே பெரியபிராட்டியாரோடே கூடத் தெளிவிசும்பிலே, அயோத்தியாதி சப்தவாச்யமான கலங்காப் பெருநகரிலே ஸஹஸ்ரஸ்தூணாதி வாக்கியங்களா லோதப்படுகிற திருமாமணி மண்டபத்திலே, 'சென்றாற் குடையா மிருந்தாற் சிங்காதனமாம்' என்று சொல்லுகிறபடி ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸர்வவித கைங்கரியங்களையும் ஸர்வவித சரீரங்களாலேயனுபவித்து சேஷத்வமே தனக்கு நிரூபகமாகையாலே சேஷனென்றே திருநாமமாம்படியான திருவநந்தாழ்வானாகிற திருப்பள்ளி மெத்தையிலே வானிளவரசாய் வீற்றிருந்து, அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான நித்யர்களாலும் முக்தர்களாலும் நிரந்தர பரிசர்யமாண சரணநளினனாயிருக்குமளவிலும், அப்படியே அந்தமில்பேரின்பத் தடியரான நித்யஸூரிகளோடொக்க, 'ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னிவழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்' என்றபடி, தனது திருவடித்தாமரைகளிலே ஸர்வவித கைங்கர்ய பர்யந்தமான பரிபூர்ண பிரம்மாநுபவத்திற்கு ஸ்வரூபயோக்யதை யுடையவராயிட்டுப் பிறந்திருந்தும், அதனை யிழந்து பிரளய ஸமயத்திலே பிரகிருதியில் உரைமெழுக்குப் பொன்போலே ப்ரக்ஷீணஞானராய், போக மோக்ஷ சூனியராகக் கிடக்கிற ஜீவாத்துமாக்களைக் கடாக்ஷித்தருளி தயமான மனமுடையனாய், மஹதாதி ஸ்ருஷ்டிக்கிரமத்தாலே இவர்களுக்கு ஸ்வசரணகமலங்களைச் சேர்வதற்கு உசிதங்களான கரணகளேபரங்களைக் கொடுத்த விடத்திலும், அவை தம்மையே கொண்டு, ஆறுகடக்கக் கொடுத்த தெப்பத்தை அவ்வாற்றின் நீர் வழியே கொண்டுபோய் ஸமுத்திரத்திற் புகுவார்போல, சப்தாதி விஷயப்ரவணராயிருந்தவளவில், அவர்களுக்கு ஸதஸத்விவேசனார்த்தமாகத் தனது சாஸநரூபமான வேதமாகிய சாஸ்திரத்தைப் பிரவர்த்திப்பிக்கவும், அதனையும் அறியாமை ஐயந் திரிபுகளாலே இவர்கள் காற்கடைகொள்ள, லிகிதமூலமான ஆஞ்ஞையை யுபேக்ஷிக்கும் தேசங்களில் தாங்களே நேராகச்சென்று குறும்பறுக்கும் ராஜாக்களைப்போலத் தமது ஆசார முகத்தாலே இவர்களைத் திருத்திப் பணிகொள்ளவேண்டுமெனத் திருவுள்ளம்பற்றி ஸ்ரீராமாதி ரூபமாக நான்கு மூர்த்தியாய்த் திருவவதரித்தருளினான்.

அவ்விடத்தில், ஸ்ரீராமரூபியா யவதரித்து இராவணனை நிரஸித்துப் பித்ருவசன பரிபாலனாதி ரூபங்களான ஸாமான்ய தருமங்களை யனுஷ்டித்தும், லக்ஷ்மணரூபியாய் இந்திரஜித்தை நிரஸித்து பகவத்சேஷத்வ ரூபமான விசேஷ தருமத்தை யறிவித்தும், பரதரூபியாய்க் கந்தர்வநிரஸனஞ் செய்து பகவத் பாரதந்திரிய ரூபமான மஹாதருமத்தை வெளியிட்டும், சத்ருக்னரூபியாய் லவணாசுரனைச் சங்கரித்து பாகவதசேஷத்வ ரூபமான பரமதரும விசேஷத்தை நிலைநிறுத்தியும் போந்தான்,

# அவதாரிகை.

ஒருகால விசேஷத்தில் அவதீர்ணனான ஸ்ரீயஃபதி அனுஷ்டித்துக் காட்டின தருமவிசேஷங்களும் திருவிளையாடல்களும் உத்தரகாலத்தி லுண்டாகுமவர்களுக்கும் உஜ்ஜீவனங்களாக வேண்டுமென நினைத்து, ஸகலலோகங்களுக்கும் இதத்தை வேண்டுபவனாயும், பகவானாலளிக்கப்பட்ட விபுலமான விசித்திரஞான சக்தி முதலியவைகளாலே யபிஜாதனாயும், அவனது நாபீகமலத்திற் றோன்றியவனாயு மிருந்துள்ள சதுர்முகன், ஸ்ரீராமசரித்திர பவித்திரிதமான சதகோடிப்ரவிஸ்தர மென்பதொரு பிரபந்தத்தை நிருமித்து, அதனை ஸ்ரீநாரதாதிகளைக்கொண்டு அதிகரிப்பித்துப் பிறகு இந்த மத்தியலோகத்திலும் ஸந்ததம் ஸ்ரீராமமந்த்ரத்தையே யனுஸந்தித்துத் தெளிந்த மனமுடையவனான வால்மீகிபகவானையிட்டுச் சுருக்கமாக அந்த ஸ்ரீராமசரித்திரத்தைப் பிரவர்த்திப்பிக்க வெண்ணி ஸ்ரீநாரதபகவானை வால்மீகியினிடம் அனுப்பினான். [இவ்வர்த்தம், 'வால்மீகிநாச யத்ப்ரோக்தம் ராமோபாக்யாநமுத்தமம்। ப்ரஹ்மணாசோதிதந்தச்ச சதகோடி ப்ரவிஸ்தரம்॥ ஆஹ்ருத்யநாரதேநைவ வால்மீகாய நிவேதிதம்॥' என்கிற மாத்ஸ்ய புராணவசநத்தினால் விசதமாகின்றது.]

இப்படி சதுர்முகப்ரேரிதனாய் ஸ்வப்ரயத்தனமன்றியிலே யெழுந்தருளின ஸ்ரீநாரதபகவானை வால்மீகிபகவானும் விதிப்படி உபஸன்னனாய்ப் * பரதத்துவமின்னதென நிர்த்தாரணம்பண்ண வொருப்பட்டு விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீநாரதபகவான், இக்ஷ்வாகு வமிசத்தில் ஸ்ரீராமனாயவதரித்தருளின ஸ்ரீயஃபதியே அநந்த கல்யாண குணகணௌக மஹார்ணவமாய்ப் பரப்ரஹ்மசப்த வாச்யமான பரதத்வமென்னும் அர்த்த விசேஷத்தை முக்கியமாயுட்கொண்டிருக்கிற ஸம்க்ஷேபராமாயணமென்கிற ஒரு கையோலையிட்டுக்கொடுக்க, அவ்வர்த்தத்தை மநநம் பண்ணுமளவில், சதுர்முகப்ரேரிதையான ஸரஸ்வதிதேவி க்ரௌஞ்சமிதுன விருத்தாந்தத்தை வியாஜமாகக்கொண்டு ஒரு சுலோக ரூபமாய் அவனது வதநாரவிந்தத்தில் ஆவிர்ப்பவித்தருளினாள்.

அதனைக்கண்டு மிக்க வியப்புற்றிருக்கின்ற வால்மீகிபகவானுடைய ஸமீபத்தில் சதுர்முகனும் ஸுப்ரஸன்னனாய் ஆவிர்ப்பவிக்க, அவனையும் யதாவிதியாய் அர்ச்சித்து இருமடங்கான ஆச்சரியமுடையராயிருக்கின்ற ஸ்ரீவால்மீகிபகவானைச் சதுர்முகனும் சிறப்பித்து, 'நம்மால் ஏவப்பட்டவளாகியே ஸரஸ்வதி உம்மிடத்தில் ஆவிர்ப்பவித்தாள் காணும். நீர் நமது நாரதமாமுனிவனிடத்தில் கேள்வியுற்றபடியே ஸ்ரீராமசரிதத்தை அதிகமாகச் சுருக்

---

* முதலில்பாலகாண்டத்திலே 'இவ்வுலகத்தி லிக்காலத்திலே ஸகலகலியாணகுணங்களு முள்ளவர்யார்' என்று வால்மீகிவினவ, 'ஸ்ரீராமனே அப்படிப்பட்ட மஹாபுருஷன்' என நாரதர் உத்தரமருளிச்செய்ததாயிருக்க[பாலகாண்டம்10-12-ம் பக்கம் பார்க்க.], பரதத்துவத்தைப்பற்றிப் பிரச்னம்பண்ணினதாகச் சொல்வதெங்ஙனமெனின், அங்ஙனமல்லாவிடின் உள்ளபடிப் பிரச்னமுத்தரமிரண்டும் அஸங்கதமாகிவிடும், ராமராஜ்யத்தில் ஜகத்தெல்லாம் ஸ்ரீராமமயமாயிருந்த தென்று ஸ்ரீமத்ராமாயணமே முறையிடுவதனாலும், ஸ்ரீராமன் வால்மீகி பகவானுக்கு நன்றாய்த் தெரிந்தவரே யாதலாலும், தெரிந்தவிஷயத்தை வால்மீகிகுதூஹலத்துடன் பிரச்னம் பண்ணுவதும், அதற்கு நாரதர் ஆலோசித்து உத்தரம் சொல்ல ஒருப்பட்டதும் எங்ஙனம் பொருந்தும்? ஆகவே, வேதாந்தங்களில் நாநாவிதமாகக் கூறப்படுகிற பரதத்துவம் விஷ்ணுவா, அல்லது ருத்திராதிகளில் ஒன்றா? எனவால்மீகிவினவ, அவரது அபிப்பிராயத்தையறிந்து நாரதபகவான், சக்கரவர்த்தித் திருமகனாகத் திருவவதரித்த ஸ்ரீமஹாவிஷ்ணுவே வேதாந்த வேத்யனான பரமபுருஷனென்றும், பிரம்மாதிகளான மற்றவர்களனைவரும் அவனுக்கு ஆட்பட்டிருப்பவர்களென்றும், தமது அபிப்பிராயம் விளங்க, ஸகலகலியாணகுணங்களும் நிறைந்த வேதாந்தப் பிரதிபாத்யமான மஹாபுருஷன் ஸ்ரீராமனேயென விடைபகர்ந்தன ரெனவறிக.

காமலும் பெருக்காமலும் ஒரு பிரபந்தமாகச் செய்யக்கடவீர்; உமக்கு ஸ்ரீராமாதிகளுடைய சரித்திரங்கள் பிரத்தியக்ஷமாகக் கடவன; உம்முடைய பிரபந்தம் பொய்யில்பாட லாகக்கடவது' என்று அநுக்கிரகித்து அந்தர்த்தானமாக, வால்மீகிபகவானும் பிரம்மாவினது பிரஸாதத்தினால் கிடைத்த விசேஷமான ஞான சக்திகளையுடையவனாகி ஸ்ரீராமசரித்திரத்தைப் பிரத்தியக்ஷீகரித்து ஸ்ரீமத்ராமாயண மென்கிற பிரபந்தத்தை நிருமித்தருளினான்.

இந்த ஸ்ரீமத் ராமாயணத்தின் கதாஸங்கிரஹத்தை பாலகாண்டம் நான்காவது ஸர்க்கத்தில் கண்டுகொள்வது. இஃது, ஸ்ரீராமனது அவதாரம் முதல் பட்டாபிஷேக மளவாக நடந்த சரித்திரம், பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டமென ஆறுகாண்டங்களாகவும், பட்டாபிஷேகத்திற்குப்பின் நடந்த சரித்திரம் உத்தரகாண்டமெனப் பெயர்பெற்ற மற்றொரு காண்டமாகவும், இப்படி ஏழு காண்டங்களாகப் பிரித்து நிருமிக்கப்பட்டு, ஸ்ரீராமபிரானது திருக்குமாரர்களான குசலவர்களைக் கொண்டே அச்வமேத மஹாமண்டபத்தில் சக்கரவர்த்தித் திருமகன் ஸந்நிதியிலே அரங்கேற்றப்பட்டது.

### எல்லாவற்றிலும் ஸ்ரீமத் வால்மீகிராமாயணமே ச்ரேஷ்டமான கிரந்தமென்றது.

வேதமானது பூர்வபாகமென்றும் உத்தரபாகமென்றும் இரண்டு பிரிவினையுடையது; அவற்றில் பூர்வபாகத்தினுடைய அர்த்தநிர்ணயம் பண்ணும்போது ஸ்மிருதிகளைக்கொண்டும், உத்தரபாகமான வேதாந்தத்தினுடைய அர்த்தநிர்ணயம்பண்ணும்போது இதிஹாஸபுராணங்களைக் கொண்டும் தெளியத்தகுவது.

புராணங்களானவை ஸங்கீர்ணம், ராஜஸம், தாமஸம், ஸாத்விகம் என நான்குவிதமாயிருக்கும். சதுர்முகனானவன் கல்பங்க ளென்னப்பட்ட தன்னுடைய தினங்களில், ரஜசும் தமசும் கலப்புண்டிருக்கின்ற ஸங்கீரண கல்பங்களில் ஸரஸ்வதி முதலானோருடைய பாரமியத்தையும், தமோகுணஞ் சூழ்ந்த மனமுடையனாய்த் தாமஸ கல்பங்களில் ருத்திரனது பாரமியத்தையும், ரஜோகுணஞ் சூழ்ந்த மனமுடையனாய் ராஜஸகல்பங்களிலே தன்னுடைய பாரமியத்தையும், தத்வஞானஹேதுவான ஸத்வகுணத்தினாலே தெளிந்த மனமுடையனாய் ஸாத்விக கல்பங்களிலே முமுக்ஷுக்களுக்கு உபஜீவியமான பகவன் மாஹாத்மியத்தையும் பிரதிபாதிப்ப னென்னுமிடமும், ஸ்ரீயஃபதியினது மஹாத்மியத்தைப் பிரதிபாதிக்கின்ற அந்த ஸாத்விக புராணங்களே முமுக்ஷுக்களுக்கு உபாதேயங்க ளென்னுமிடமும், முன் எடுத்தோதின மற்ற ஸங்கீர்ணதாமஸ ராஜஸபுராணங்கள் இவர்களுக்கு அநுபாதேயங்க ளென்னுமிடமும், மத்ஸ்ய கூர்மபுராணாதிகளில் பிரஸித்தம்.

இவற்றில், ஸாத்விக ராஜஸ தாமஸரூபிகளான அதிகாரிகளுடைய, விட்டொழிக்க வொண்ணாத ஸ்வபாவங்களுக்கு அநுகுணமாகப் பற்பல புருஷார்த்தங்களையும் அவற்றினுபாயங்களையும் அவற்றினால் ஆராதிக்கப்படும் தேவதைகளையும் பிரதிபாதிக்கிற ஸமஸ்தபுராணங்களும், நாநாரோகிகளுக்கு நாநாவிதமான ஔஷதங்கள்போலே, வேறு அதிகாரிகளுக்கு அநுபஜீவியங்களேயாகிலும், அவ்வவ்வதிகாரிகளுக்கு உபஜீவியங்களாகையால், ஸார்த்தகங்கள். ஆகிலும், 'அஸார மல்பஸாரஞ்ச ஸாரம்ஸாரதரம் த்யஜேத்| பஜேத்ஸாரதமம்சாஸ்த்ரே ரத்ராகர இவாம்ருதம்||' என்கிற வசனத்தின்படியே ஸமஸ்த சாஸ்த்ரங்களிலும் ஸாராஸாரவிவேசனம்பண்ணி ஸாரதமமான அம்சத்தையே பரிக்கிரகிக்கை பண்டிதனான முமுக்ஷுக்ருத்யம்.

ஆகவே, முன்சொன்ன ராஜஸதாமஸபுராணங்களைக்காட்டிலும், ஸ்ரீய:பதியின் மஹாத்மியத்தைப் பிரதிபாதிக்கின்ற ஸாத்விகபுராணங்கள் உத்கிருஷ்டங்கள். அவைபோலவே ஸ்ருஸ்டி வமிசம் மன்வந்தரம்முதலானவைகளைப் பிரதிபாதிப்பதன்றிக்கே, ஒரு மஹாபுருஷனைப்பற்றின பூர்வசரித்திரத்தை மாத்திரமே பிரதிபாதிப்பவைகளான ஸாத்விக இதிஹாஸங்கள் வேதாந்தத்தின் உபப்பிரஹ்மணங்களில் பிரதானங்கள். இவ்விசேஷத்தைக் கணிசித்தே, குறைந்த உயிரெழுத்துள்ள சொல்லைமுதலில் வைக்கவேண்டுமென்னும் (அல்பாச்தரம்பூர்வம்) என்கிற வியாகரணவிதியை அனுஸரித்துப் புராணத்தை முன்வைத்து 'புராணேதிஹாஸம்' என்றோதாது, (அப்யர்ஹிதம்பூர்வம்) சிறந்ததை முதலில் வைக்கவேண்டு மென்ற விதியை யநுஸரித்து இதிஹாஸத்தை முன்வைத்து 'இதிஹாஸபுராணம்' என்றெடுத்தோதினார்கள்.

இவ்விதிஹாஸங்கள் தம்மிலும், வியாஸபகவானால் செய்தருளப்பட்டதும், வேண்டியஸகலார்த்தங்களையும் பிரதிபாதிப்பதும், ஸகலஸித்தாந்திகளாலும் பரிக்கிரகிக்கப்பட்டதுமாய் ஐந்தாவது வேதமாக விளங்கும் ஸ்ரீமஹாபாரதம் சிரேஷ்டதரம். அது தன்னிலும், அதிவிஸ்தாரதோஷ மில்லாமையாலும், வேதத்தைப்பார்க்கிலும் ஸகலஜன ஸாதாரணமாக அநிஷ்டநிவிர்த்தி இஷ்டப்பிராப்தியாகிய பலங்களைத் தருவதனாலும், சிஷ்டபரிக்கிரஹாதிசயத்தாலும், ஸ்ரீமத் ராமாயணம் சிரேஷ்டதமமாகக் கடவது. இவ்வழியே, மற்ற ராமாயணங்களினும், வால்மீகி செய்தருளின வால்மீகி ராமாயணத்திற்கு விசேஷமறிந்துகொள்ளத் தக்கது. இந்த ஸ்ரீமத் ராமாயணம் ஸ்ரீராமனது சரித்திரமாவதன்றியிலே 'ஸீதாயா:சரிதம்மஹத்' என்றபடி சிறையிருந்தவளேற்றம் சொல்லுகிற பிரபந்தமாகையாலே, ஸீதாபிராட்டியினது சரித்திரமாகிப் பதிவிருதா பிரபாவத்தை வெளியிடுகின்றதுமாம்.

ஸ்ரீமத் ராமாயணம் பாராயணஞ்செய்ய வேண்டியவிதமும் அதிகாரிகளும்.

இவ்வர்த்த விசேஷ கௌரவத்தால் இதரப்ரயோஜனங்களில் அபேக்ஷையின்றியிலே ஸதாசார்யோபதேச பரம்பரையாலே இதனுடைய படனாதிகளில் இழியுமவர்கள் இப்பிரபந்தத்திற்கு உத்தமாதிகாரிகள்; இதில் பிரதிபாதிதமான பகவத்பரத்வத்தை அங்கீகரித்துப் பலாந்தராபேக்ஷையாலிழியுமவர்கள் மத்தியமாதிகாரிகள்; கேவலம் பலாபேக்ஷையொன்றினாலேயே இழியுமவர்கள் அதமாதிகாரிகள்.

இப்படி வேதத்திற்கொப்பான மஹிமையுள்ள இந்த ஸ்ரீமத் ராமாயணத்தை நல்ல சுபதினத்தில் ஸதாசார்யன் ஸந்நிதியில் உபதேசமூலமாகவே பெறவேண்டுமென்றும், இதின்பிரதமபாராயணம் பிரதிதினம் போஜனத்திற்கு முன்பே நியமத்துடன் செய்யவேண்டுமென்றும், இரண்டாவது முதலான பாராயணங்கள் போஜனாநந்தரம் செய்யவேண்டுமென்றும், ஒரு பலத்தை உத்தேசித்துப்படிப்பவர் போஜனத்திற்குப் பூர்வமேபடிக்கவேண்டுமென்றும் சொல்லுகிற இவ்விஷயங்கள் பிரமாணஸித்தமான சிஷ்டஸம்பிரதாயம்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் விளங்குகிற விஷயங்கள்.

ஜாயமான கடாக்ஷம்பெற்று அதனால் ஸ்வரூபஞானமுடையராய், ஆகிஞ்சந்யாதிகளால் உபாயாந்தர மற்றிருக்கிற விலக்ஷணாதிகாரிகளுக்குப் பரமபுருஷார்த்தஸாதனமான உபாயம் சக்கரவர்த்தித்திருமகனாகத் திருவவதரித்த ஸ்ரீமந் நாராயணனே யென்பதையும், புருஷகாரம் பெரிய பிராட்டியா ரென்பதையும், புருஷார்த்தம் அவன் திருவடிகளில் நித்யகைங்கரியம் பண்ணுகையே யென்பதையும், மற்றுமுள்ள ரஹஸ்யார்த்த விசேஷங்களையும் ஆதியோடந்தமாகப் பிரதிபாதித்து மந்த்ரார்த்தத்தை விவரிக்கையால், இதர ப்ரபந்தங்களைக்

காட்டிலும் விலக்ஷணமாயிருக்கிற இப்ரபந்தத்தை தீர்க்க சரணாகதியென்று ஆசாரியர்கள் கொண்டாடினார்கள். இச்சரணாகதியின் மகிமை காகாசுரவிபீஷணாதி விருத்தாந்தங்களிற்போல் ஒவ்வொரு காண்டத்திலும் நன்கு விளங்கக் கண்டுகொள்வது. இது இருபத்துநாலாயிரம் கிரந்தமாய் காயத்திரிவிவரணமுமாகின்றது.

இப்படி ஸர்வசிஷ்ட பரிக்கிரஹமான இந்த ப்ரபந்தத்தில் வெளிப்படையாகவேனும் குறிப்பாகவேனும் கூறப்படாத விஷயமொன்றும் கிடையாது: அஃதெங்ஙனே யென்னில், புருஷார்த்தங்களில் முதன்மையானவைகளாய் ஸகலச்ரேயசுகளுக்கும் ஸாதனங்களான தருமங்களில், பிராம்மணியத்தினது பெருமையும் பிராம்மண தருமங்களும், வஸிஷ்டர் விச்வாமித்திரர் தண்டகாரணியமுனிவர் இவர்களுடைய விருந்தாந்தங்களாலே பிரதிபாதிதங்களாயின. க்ஷத்திரிய தருமங்கள் தசரத ராமாதிகளுடைய அநுஷ்டானங்களால் நன்கு விளங்கின. திருச்சித்திரகூடத்தில் ஸ்ரீராமனுக்கும் பரதனுக்கும் நடந்த ஸம்வாதம் முதலியவற்றால் வைசிய தருமங்களும், அயோத்தியாபுரஜனங்களுடைய குணவர்ணனாதிகளால் சூத்திர தருமங்களும் பிரகாசிதமாயின. இனி, ஸர்வவர்ண ஸாதாரணங்களான ஸத்தியவசனம், மாத்ருசிச்ரூஷை, பித்ருவசனபரிபாலனம், கருணை, வீரம், உடன்பிறந்தோ ரொற்றுமை, பழியச்சம் முதலானவைகள் ஸ்ரீராமாதிகளுடைய அநுஷ்டானங்களாலே வெளியிடப்பட்டன. முதல் மூன்று வருணத்தாருக்கே உரியவைகளான, அக்கினிஹோத்திரம் முதல் அச்வமேத பரியந்தங்களாகிய யாகயஞ்ஞாதி தருமங்கள் விச்வாமித்திர ஸகர தசரதாதிகளுடைய அநுஷ்டானங்களாலே தெளிவாயின. பிராம்மணருக்கு அத்தியந்தம் ஆவசியகமான தத்துவஞானம் முதலானவைகள் பரதனுக்கு ஸ்ரீராமன் செய்த உபதேசங்களாலும், ஜாபாலி லக்ஷ்மணர்களுடைய ஸம்பாஷணை முதலியவற்றாலும் விசதங்களாயின. இப்படிப்பட்ட தருமங்களுக்கு விரோதியான அதருமத்தின் பேதங்களும், அவற்றால் விளையும் துக்கங்களும் ராவணாதிகளுடைய விருத்தாந்தங்களாலே பிரதிபாதிதங்களாயின. நான்குவருணத்தவருக்கும் விதிக்கப்பட்ட திரவியம் ஸம்பாதிக்கிற மார்க்கங்கள், வஸிஷ்ட வாமதேவாதிகளுடைய விருத்தாந்தங்களாலும், தசரத ராமாதிகளின் அநுஷ்டானங்களாலும் ஸ்ரீராமன் பரதனைக்கேட்ட கேள்விகளாலும் வெளியிடப்பட்டன. தருமத்திற்கு விரோதமில்லாத காமத்தையே விரும்பவேண்டுமென்பது ஸ்ரீ ஸீதாராமாதி விருத்தாந்தங்களாலும், அதருமமான காமம் அநர்த்தஹேது என்பது இராவணாதி விருத்தாந்தங்களாலும் பிரகாசிதமாயின. சபரீவிருத்தாந்தாதிகளாலே மோக்ஷரூப புருஷார்த்தம் பிரதர்சிதமாயிற்று. சூக்ஷ்மபுத்தியால் விசாரிக்குமிடத்து இம்மஹாகாவியத்தில் இப்படி இன்னும் அநேகமான விசேஷார்த்தங்கள் விளங்கும்; அவைகளையெல்லாமெழுதப் புகின் அஃது ஒரு பெரிய ராமாயண மாகுமெனப் பயந்து இவ்வளவோடு விடுத்தனம்; அவ்விசேஷங்களை வால்மீக முணர்ந்த வைதிகர் வாய்க் கேட்டுணர்க.

### ஸ்ரீமத்ராமாயணத்தைத் தமிழாக்கியது.

வால்மீகி ராமாயணத்தின் பெருமையை யறிந்து ஹிந்துதேசத்தவர்கள் மாத்திரமேயன்றி மேனாட்டவரான ஐரோப்பியரும் பற்பல பாஷைகளில் மொழிபெயர்த்துப் படித்து ஆநந்தமனுபவித்து வருகின்றனர். அங்ஙனமாக, இஃது ஸம்ஸ்கிருதம்படியாத தமிழ்நாட்டுப் புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் பிரயோஜனப்படாமலிருக்கிற பெரிய குறையைப் பூர்த்திசெய்விக்க வேண்டுமென்று பல வருஷங்களுக்கு முன்னே பலர் பிரார்த்தித்து வேண்டினதன்மேல், எமது இயற்றமிழாசிரியரும், சென்னைத்துரைத்தன வித்தியாசாலைத்

# அவதாரிகை.

தமிழ்த் தலைமைப்புலமை நடாத்தியவருமான உ. வே. திருவல்லிக்கேணி திருமலை ஈச்சம்பாடி - ஸ்ரீநிவாஸராகவாசாரியர் சுவாமிகள் தமிழ்வசனமாயெழுதத் தொடங்கிய இந்தமஹாகாவியத்தை, ஷை துரைத்தன வித்தியாசாலையில் ஸம்ஸ்கிருத பண்டிதராயிருந்த ஏடேரிம்மடி திருமலை லக்ஷ்மீகுமார கோடிகன்னிகாதானம், மேல்பாக்கம் - தாததேசிக தாதாசாரியர் சுந்தரகாண்டம் சிறிதுதூரம் வரையில் எழுதி விட்டுவிட்டார். இப்போது இரண்டொரு வருஷங்களுக்கு முன்னே இராயவேலூர் - அய்யுலுநாயுடு அவர்கள் குமாரர்களில் மூத்தவரான கேசவலுநாயுடு அவர்களுடைய அநுமதியைக்கொண்டு இளையவரான இராயவேலூர் - கன்னைய நாயுடு அவர்களும், இராயவேலூர் - நாராயணசாமிநாயுடு அவர்களுடைய குமாரரான நா-இராமசாமிநாயுடு அவர்களும் இதனைப் பூர்த்திசெய்விக்க வேண்டுமெனப் பெருமுயற்சிகொண்டு கேட்டுக்கொண்டதனால், யாம் இவ்வரிய பெரியகாரியத்தை மேற்கொண்டு, ஸதாசாரிய கடாக்ஷத்தால் எமது சிற்றறிவிற்கு எட்டியவரையில் வால்மீகத்தின் பொருளுணர்ந்து அதற்கு இணங்க, அனைவர்க்கும் எளிதில் பொருள்விளங்கத் தக்க தெளிவான செந்தமிழ்நடையில் உத்தரகாண்டமளவா யெழுதி முடிக்கலாயிற்று. வால்மீக முணர்ந்த வித்வான்கள் இதில் மூலக்கிரந்தத்திற்கு இணங்காத விஷயங்களேனும் வேறு குற்றங்குறைகளேனு மிருக்கக்கண்டு தெரிவிப்பார்களாயின், 'நாண்பெரியோ மல்லோநா நன்றுந்தீதும், நமக்குரைப்பா ருளரென்று நாடுவோமே' என்னும் ஆசிரியருரையைச் சிரமேற்கொண்ட யாம் அவரைப் பேருதவி செய்தோராக மதித்து அப்பிழையை மாற்றிக்கொள்ளச் சித்தமாயிருக்கின்றனம்.

சோபகிருதுஞ கார்த்திகைமீ

கொ - க - ஸ்ரீநி.

செந்திருமால் சேர்காஞ்சிப் பதிக்கணியா முரவோன்
சீர்மஹோ பாத்யாயச் செழுமகுடம் பெற்றோன்
சிந்துவெனக் கலைதெரிந்த சீக்ருஷ்ண தாத
தேசிகனற் சேவடியைச் சிந்தைதனிற் சேர்த்தே
கந்தாடைக் குலத்துதித்த கருதுநர சிங்கன்
காதலனுஞ் சீநிவாஸ ராகவனற் பெயரோன்
நந்தாரும் தாசரதி திருக்கதையைத் தமிழில்
நாவலர்கள் களிப்புறவே நல்கினனிப் புவிக்கே.

